# ஸ்ரீ மஹாபாரதம்

## விராடபர்வம்.



B. இரத்தினநாயகர் ஸன்ஸ்,
நெ. 41, வெங்கடராமய்யர் தெரு,
மிண்ட்பில்டிங் போஸ்டு, சென்னை.

ஸ்ரீ கிருஷ்ணாய நம:

ஸ்ரீ மஹா பாரதம்

# விராடபர்வம்

வசன காவியம்

(திருவுருவப் படங்களுடன்)




இஃது
வித்வான் - தரங்காபுரம்
சண்முகக் கவிராயரவர்களால்
வசன ரூபமாக இயற்றியது.

வல்லை - பாலசுப்பிரமணியம், B.A அவர்களால்
சுத்தப் பிரதியாகப் பரிசோதிக்கப்பட்டு

சென்னை:
B. இரத்தின நாயகர் அண்ட் சன்ஸ்,
அவர்களால் பதிப்பிக்கப்பெற்றது.



[விலை ரூ. ]
Rs 50=00

# ஸ்ரீ மஹா பாரதம்



## விராடபர்வம் - விஷய அட்டவணை

### 1. பாண்டவர் கரந்துறை சருக்கம்



### 2. மற்போர்ச் சருக்கம்

பக்கம்

## 3. கீசகன் வதைச் சருக்கம்

## 4. தக்ஷிண நிரைமீட்சிச் சருக்கம்

## 6. பாண்டவர் வெளிப்படும் சருக்கம்



———

# ஸ்ரீ மஹா பாரதம்



நான்காவது

## விராடபர்வம்

### கண்ணன் துதி

பஞ்சவர்க்குத் துணையான வுரத்தி னானைப்
பாங்குறுபஞ் சாயுதமார் கரத்தி னனைக்
குஞ்சரத்துக் கிடரகற்று மாழி யானைக்
குண்டலியிற் கண்படுபா லாழி யானை
அஞ்சனமா வெனுமெழில்சீர் நடையு ளானை
அமரர்தொழும் அணிதுளபத் தொடையு ளானைத்
தஞ்சமென்றார்க் கருள்செயுந் தாளி னானைச்
சரணடைந்தார் தாரணியில் தளர்வி லாரே.

### சூதபுராணிகர் வாக்கியம்



ஓ சவுனகாதி முனிவர்களே, இவ்வாறு ஆதிபஞ்சகத்தின் மூன்றும் பாகமாகிய ஆரண்யபர்வத்தைக் கூறிய வைசம் பாயன முனிவரை ஜனமேஜய மகாராஜன் பணிந் தெழுந்து, "சுவாமி, பாண்டவர்கள் பிதிர்வாக்கிய பரி பாலனம் பண்ணவேண்டி வனம் புகுந்து தௌமியா சாரியரோடும் பன்னீராயிரம் பிராமணர்களோடும் பாஞ்சாலி சமேத ராய்ச் சூரியபகவானளித்தஅக்ஷயபாத்திரத்திலுண்டாகும்அமுதத்தை அருந்தவர்க் களித்துத் தாங்கள் கந்த மூல பலாதிகளுண்டு காலங் கழித்து வரு நாளில் வேதவியாசர் கட்டளையின்படி அர்ச்சுனன் தவநிலைகொண்டு கைலாசபதியிடத்திற் பாசுபதாஸ்திரம் வாங்கி இந்திரன் பகை களைந்து தேவலோக பட்டாபிஷேகம் பெற்று வந்ததும், திரௌபதி வேண்டுகோளின்படி பீமசேனன் மந்தார பாரி ஜாத மலர்களுக்காக யாத்திரை சென்று ஆஞ்சநேயரைச் சிநேகங் கொண்டு புண்டரீகன் மணிமாலனாதியரை வென்று, குபேரனிடம் சன்மானம் பெற்றுச் சடாசுரனைச் சங்கரித்து நகுஷனுடைய சாபந் தீர்த்து வந்ததும், அதுகாறுந் தருமனாதியர் உரோமசமுனிவராலும் மார்க்கண்டேய முனிவராலும் காலக்ஷேபங் கேட்டுக் காலங்கழித்த தும், சித்திரசேனனாற் கட்டுண்ட துரியோதனாதியரைப் பாண்டவர் மீட்டுவித்ததும், திரௌபதியைக் கைக்கொண்ட சிந்துராஜனை அவ மானப்படுத்தியதும், துரியோதனன் ஏவிய துருவாசமுனிவரின்

ஆசிபெற்றதும், கிருஷ்ணமூர்த்தி சகாயத்தால் நெல்லிக்கனியாலுண்டான ஆபத்தை நீக்கிக்கொண்டதும், யமதருமராஜனுடைய அநுக்கிரகத்தால் நாகக்கொடியோன் காளிமாமுனிவனுற் செய்வித்த மாரண யாகத்தாலுண்டான விபத்தைக் கடந்ததும் இன்னும் அநேக செய்கைகளைச் செய்து வனவாசத்திற்குரிய வருஷம் பன்னிரண்டையும் கழித்த சரிதங்களை அவ்வவற்றின் உபசரித்திரங்களோடு கேட்டு ஆனந்தமடைந்தேன். இப்பால் நான்காம் பாகமாகிய விராட பர்வத்தையுந் திருவாய் மலர்ந்தருள வேண்டும்'' என்று கேட்க, வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினர்.

---

## 1. பாண்டவர் கரந்துறை சருக்கம்

---

### கண்ணன் துதி

நாள நாபனை நாரா யணன்றனைக்
காள மாமுகிற் கண்டன்ன மெய்யனை
வாளை நேர்விரு மாமலர் மங்கையி
னீளு மன்பனை நெஞ்சுள் நிறுத்துவாம்.

கேளும் ஜனமேஜய மகாராஜனே, அரவக்கொடி படைத்த துரியோதன மஹாராஜன் கருத்தையும் அம்புலிகுலத் தோன்றலாகிய தங்கள் பெரியதந்தை உத்தரவையும் நிறைவேற்றவேண்டிப் பாண்டவர்கள் திரௌபதாதேவி சமேதராய் தௌமியாசாரியருடனும் பன்னீராயிரம் பிராமணருடனும் வனவாசம்புரிந்து, கானகத்துண்டான கந்தமூல பலாதிகளாலும் கதிரவனளித்த அக்ஷயபாத்திர அமுதினுலுங் காலங்கழித்து, வெயில்-பனி-மழை காற்று முதலியவைகளைச் சகித்து, இரவும் பகலும் இருடியர்களால் தர்மார்த்த காம மோக்ஷத்திற்குரிய சத்காலக்ஷேபஞ் செய்துகொண்டு பன்னிரண்டு வருடம் பற்றறக் கழித்த பிற்பாடு, தருமநந்தனர் அஞ்ஞாதவாசஞ் செய்வதற்கு ஆலோசிக்கவேண்டுமென்று தாங்கள் தங்கிய வனத்தைவிட்டு அப்பாற் போயிருந்து, தருமதேவதையைத் தொழுது, ''எந்தையே, நாங்கள் நினைத்த காரியந் தடையில்லாமல் நிறைவேறும்படி நச்சுப்பொய்கையில் தேவரீர் வரங்கொடுத்த வண்ணம் இப்பொழுது கைகூடவேண்டும்'' என்றிரந்து, தங்களுடனிருந்த வேதவேதியரை நமஸ்கரித்து, ''பிரமக்யானமுள்ள மேலோர்களே, நீங்கள் இத்தனை நாளும் எங்களுடன் பொருந்தி மெத்த வருந்தி வனவாசம் புரிந்து உபவாசமிருந்தீர்கள். இனிமேல் நாங்களொருவருடம் மறைந்திருக்கவேண்டிய காலம் நேரிட்டிருப்பதால், நீங்கள் யாவரும் ஆசிர்வதித்து எங்களுக்கு விடைகொடுத்தருளவேண்டும்'' என்று உபசரித்துக் கேட்டார். இவ்விதமாகக் கேட்ட முரசக்கொடி முதல்வனைப் பார்த்து வேதியர் விளம்புகின்றார்கள் :—

## தருமராஜன் சோகமுறத் தௌமியாசாரியருந் தம்பியருந் தேற்றுதல்

"ஓ பாண்டவ முதல்வனே, நீங்களெண்ணிய காரியமெல்லாந் திண்ணமாய்க் கைகூடும். இனிமேல் உங்களுக்கு ஒரு தாழ்ச்சியு மில்லை. இன்னுஞ் சில நாட்களில் நீங்கள் வெளிப்பட்டுச் சத்துரு சங்காரஞ் செய்து சகல இராஜ வைபவத்துடன் தரணியாளப்போகின்றீர்கள்" என்ற மங்கள வாழ்த்துடன் ஆசீர்வதித்தார்கள்.

இப்படி ஆசீர்வதித்த மகாத்துமாக்களை நோக்கித் தருமராஜன், "ஓ உத்தமர்களே, இப்போதெங்கட்கு நேரிட்டிருக்கிற ஆபத்து நீங்கி வெளிப்படவும், யதாப்பிரகாரம் உங்களுடன் கலந்திருந்து, இக்காலம் போல் எக்காலமும் உலவாமகிழ்ச்சியைத் தரத்தக்க உசிதவசனங்கள் பேசி நேசித்து விசுவாசித்திருக்கவும் கூடுமோ கூடாதோ? நான் தேடிய புண்ணியவச மெப்படியோ? அஃது அடியேனு லறிந்து கொள்ளுந் தகைமையதன்று" என்று கண்ணீர்பெருக உள்ளமுருகிச் சோர்ந்தார். அப்படிச் சோர்ந்த தருமராஜனைத் தம்பிமாரனைத்து உபசரித்து, ஆயாசமாற்றித் தேற்றிப் போற்றினுர்கள். அப்படித் தேற்றியுந்தேருமல் தியங்கிய சத்தியவானைத் தௌமியாசாரியர் கண்டு, "ஓ யுதிஷ்டிர மகாராஜனே, தைரிய விஜய சாந்த உதார தரும முதலிய புகழ்ப்பிரதாபங்களிலும், சத்திய விரத சவுச ஸம்பத்கர சாஸ்திர விசாரணைகளிலும் பிரபலநீதி நிறைந்த கருணையங்கடலாகிய நீரே விசாரப்பட்டால், மற்று யார்தான் சகிக்கக்கூடும். ஓ நிருபனே, முத்தொழி லியற்றிடு மூவர்க்கானுலும், முற்றுந்துறந்த முனிவர்க்கானுலும், கற்றுத்தேர்ந்த கவீச்சுரர்க்கானுலும், ஆபத்தென்பது வாராமற் போகாது. வந்தால் அதை அநுபவிக்காமல் தீராது. இதற்குத் திருஷ்டாந்தஞ் சொல்லுகிறேன் கேளும்: தேவர்கட் கதிபதியாகிய தேவேந்திரன் சூட்சும ரூபமாய் ஒரு தாமரைத்தண்டினுள் ஒளித்து, வெகுகாலந் தவஞ்செய்திருந்து, பின்பு தனக்கு நல்வினைப்பயன் நேரிட்டபோது வல்லவனுனன். உலகரக்ஷகனுன ஸ்ரீமந்நாராயணன் அதிதியின் கருப்பத்தி லடங்கி, வாமனமூர்த்தியாய் வந்து மகாபலி சக்கரவர்த்தியினிடத்தில் தானமாக மூவடிமண் கொண்டு, திரிவிக்கிரம அவதாரமாய் வானமளாவிச் சேவடியால் மூவுலகையு மளந்து, தன் சிந்தையி லெண்ணியவண்ண முடித்தருளினுன். அக்கினி தேவனுனவன் அவுரவமஹாமுனியின் மனையாளுடைய தொடையில் மறைந்து, நெடுநாளிருந்து, தீவினை தீர்ந்தபிறகு வெளிப்பட்டான். சூரியபகவானுனவன் பசுவின்வயிற்றிலொளித்து, பலபகல் கழித்து, பண்ணவர் முதலிய விண்ணவருங் கொண்டாட மீண்டும் பாரிலுதயஞ் செய்தருளினுன். இவ்விதமாக இன்னு மநேகரும் இப்படியே காலத்திற்குத் தக்க கோலங்கொண்டு, இஞ்ஞாலத்தில் வாழ்ந்து வாழ்நாளைக் கழித்தார்கள். ஆகையால், தீவினையாலெய்துகின்ற ஆபத்தானது யாவரையுந் தீங்குக்குட்படுத்தும். நீங்களும் அப்படியே அஞ்ஞாதவாசந் தொலைத்து, விஞ்ஞான மேலிட நிலைத்து, முன்போலவே இராஜ்யபரிபாலனம் புரியவருவீர்கள்" என்று அன்புட

னுரைத்த புரோகிதர் சொல்லை இன்புடன்கேட்டு மகிழ்ந்து, "எங்கள் வினை எப்படியோ? என்று தியங்கி மயங்கித்தேறிய தருமராஜனை மகாபலசாலியான பீமசேனன் பார்த்து, முகம் வேர்த்து, "ஓ எங்க ளண்ணுவே, கதாபாணியாகிய நானும், காண்டீவதரனுகிய விஜய னும் நகுலசகாதேவரும் உமது கட்டளைக்குக் கீழ்ப்படிந்து இஷ்டப்படி நடந்து வரும்போது, இப்போதும் இனி யெப்போதும் உமக்கென்ன குறை யிருக்கின்றது? தேவரீர் உள்ளங் கலங்கவேண்டிய காரண மில்லை. இப்பவுஞ் சற்றே கடைக்கண் நோக்குவீராளுல், இதுவரைக் கும் பற்பல துன்பங்களைச் செய்துவந்த பகையாளிகளை அடிவே ரறுத்து முடிசாய வீழ்த்தி, மற்ற மன்னர் முடியால்வணங்கக் கெடிஸ் தலாதிபனென்னுங்கீர்த்தி உமக்குண்டாக்கி வைப்போம். சீக்கிரத்தில் உத்தரவு கொடுத்தருளும். ஓ முத்தாரமணிந்த முதல்வனே, தேவரீ ரரசாளும் வேலையை முன்னுடி முடித்துவிட்டு, மற்ற வேலைகளைப் பின்னுடிப் பார்க்கின்ருேம்" என்று துடித்தெழுந் துரைத்தான். தரும ராஜன் கையமர்த்தி, "அப்பனே, எஃதெப்படியாளுலுஞ் சத்திய நிலை யைக் காத்து, தரும முறையைப் பார்த்து, உத்தமமான கீர்த்தியைச் சேர்த்து, உண்மைக் குறியை நிறுத்தவேண்டும். ஆதலால் மெத்த நாள் இல்லை. இன்னுஞ் சிலநாட்களிருக்கின்றன. ஓ க்ஷாத்திரவான் களே, இதற்குள் நீங்கள் ஆத்திரப்படவேண்டாம்" என்று தம்பிமார் களுடன் சாந்தமாய்ப் பேசிக்கொண்டு, இரண்டு நாழிகை வழிதூரஞ் சென்று, மேல் நடக்க வேண்டிய காரியத்தைக் குறித்துத் தௌமியா சாரியார் முதலிய பெரியோர்கள் முன்னிலையில் தம்பிமாரோடு ஆலோசனை செய்யத் தொடங்கினுர்.

## தருமராஜன் தம்பிமாரோடு ஆலோசிக்க அதற்கவர்கள் கூறுதல்

கேட்டீரோ ஜனமேஜய மகாராஜனே, சகல கலைக்கியானங்களை யும் ஐயந்திரிபு அறியாமையில்லாமற் கற்ற தருமராஜன் வையம் புகழு மஹா வீரர்களாகிய தம்பிமார்களை நோக்கி, "ஓ பின் சகோதரரே, கல் லும் புல்லு நிறைந்த காடு மேடுஞ் செறிந்த கருங்கள் மலை யுயர்ந்த இடங்கள் தோறும், நமக்கிருப்பிடமாகப் பொருந்திப் பன்னிரண் டாண்டு பலரு மறியக் கழித்தோம். இனியொருவரு முணராமல் ஒரு வருடந் தொலைக்கவேண்டி யிருப்பதால், நாம் மறைந்திருப்பதற்குத் தகுதியான இடம் யாதோ? அதை முன்னே யோசியுங்கள்" என்று விசுவாசமுள்ள தமையன் கூறவும், இந்திரன் மைந்தனுன அர்ச்சு னன் எழுந்து, தாமரைக் கமலம்போன்ற அவர் தாள்மேற் பணிந்து, "அண்ணு, நமது குருதேசத்திற்குச் சமீபத்திற் பாஞ்சாலதேசம் மச்ச தேசம் சாளவதேசம் விதர்ப்பதேசம் பாகுலிகதேசம் விதேகதேசம் தசார்னதேசம் சூரசேனதேசம் கலிங்கதேசம் மகததேசம்இவைகளெல் லாம் மனேரம்மியமாயிருக்கின்றன. இத்தேசங்களுள் மிகவுஞ்சிறந்தது மச்சதேசம். அஃதேனெனில், அது நீதியு நெறியு நிறைந்து, நில வள நீர்வள முயர்ந்து, நிலையும் பொறையு மிகுந்து, நிலையாய் மும்மாரி பொழிய விளங்குவது; தருமமுங் கருமமுந் தழைத்து, சகல நிதிகளுஞ்

செறிந்தது; பழுதற்ற குடிகளும் படைகளுங் கடைகளுஞ் செழித்திருப்பது மநுநீதி வழியே அஷ்டதிக்களவும் ஆஞ்ஞாச் சக்கரம் போக்கிச் செங்கோல் செலுத்தி, வேதியர் பலரும். வானவர் விற்பனர் மாதவர் சிலரும், மாதுர்ஸ்தானம்போற் பொருந்தி வாழ்வைப் பெறும்படியாக விராடனென்னு மிராஜனுடைய ஆளுகை பெற்றது. ஆதலால் இத்தகைய நன்மைகளுக் கிருப்பிடமான அந்த நாடு சேர்ந்து நமது உருவ மறைத்து, பயமில்லாமற் காலங்கழிப்பதே ஜயமாகும். நமக் கொரு நாளுந் தீங்கில்லை. ஓ எங்கள் நாதனே, வேறொரு நாட்டை விரும்புவோமானால், நமது காரியகாரணங்கள் ஒருவேளை வெளிப்பட்டாலும் வெளிப்படும். இஃதன்றித் துரியோதனனுடைய தூதர்களும், காரியஸ்தர்களும், மந்திரி சாமந்தர்களும், தினந்தோறும் போவதும் வருவதுமாயிருப்பார்கள். அப்பேர்ப்பட்ட நிர்ப்பந்தமான வருத்தம் நமக்கு இந்த விராட நகரத்திலிருக்க மாட்டாது. மேலும் அந்தப் பட்டணத்து மச்சராஜன், பூர்வசம்பந்தப் பொருத்தத்தினாலும், குண விசேஷத்தினாலும், நாம் காட்டில் அநுபவித்த கஷ்டத்தை அந்நாட்டில் ஆற்றிக் கொள்ளும் வகை அநுகூலஞ் செய்வான். மேலும் அஸ்தினாபுரத்தை விட்டு நாம் வனவாசஞ் செய்ய வரும்போது ஜோதிட நூலோ ருரைத்த ஆரூடத்தினாலும், நாம் இந்தப் பேச்சைப் பேசும்போது நல்ல சகுனங் கிடைத்ததினாலும் அடியேனுக் கிந்த நகரத்தின்மேல் ஆசை யுண்டாயிற்று. பரிசுத்த பவித்திர மகத்துவ சுகத்தைத் தருமென்று தோன்றுகிறது. ஆகையினால் என் புத்தியில் தோன்றியதைப் புகன்றேன், உத்தமர் கற்றவர் நற்றவர் பலரும் புகழ்ந்துபேசும் பொன்னுலகமும் பின்னிடும்படியானது இந் நகரத்தின் பெருமை. அப்பால் தேவரீர் சித்தமெப்படியோ? அதனை அறியேன் சிறியேன்'' என்று வணங்கி ''இதைவிட வேறோரிட மில்லை'' யென்றான். மற்ற தம்பிமார்களும் ''இது சரி'' என்று சம்மதங் கூறினர்.

இவ்வாறு அர்ச்சுனன் சொன்ன மொழியையும், அதுவேசரியென்றிணங்கிய மற்றத் தம்பிமார் கருத்தையும், அருளுக்காதாரமான தருமராஜன் கேட்டுத் தீர்க்காலோசனை செய்து, தங்களைக் காண வனத்தில் வந்திருந்த அரசர்களுக்கு இச் சங்கதி தெரியாம லடக்கி, அவர்களையழைத்து, ''இராஜர்களே, இன்னமுமெங்களைப் பீடிக்காநின்ற தீவினைகள் தீரும் வழியைப் பார்க்கின்றோம். நீங்கள் உங்கள் பட்டணம் போய்ச் சேருங்கள்'' என்று விடைகொடுத் தனுப்பிவிட்டு, பரதேசிகளான வனவாசிகளென்னும் பிராமணர்களைப் பார்த்து, ''ஓ சுவாமிகளே! இனி எக்காலம் உங்களை நாங்கள் காணப்போகின்றோம்? தேவரீருடைய திவ்விய சகவாசத்தாற் சென்ற பன்னிரண்டு வருடமுங் கழித்தது பெரிதல்ல. நின்ற ஒருவருடங் கழிப்பது ஒரு யுகமாக இருக்குமாதலால், எளியேங்கள்மீது கிருபை வைத்து ஆசீர்வாதத்தோடும் விடைகொடுத்தருள வேண்டும்'' என்று இவ்விதமான இன்ப வார்த்தைக ளன்புடன் பேசி, அவர்கள் மனங்கனிந் துரைத்த வார்த்தையையும் ஆசீர்வாதத்தையும் பெற்றுக்கொண்டு முன்று

முறை வலம் வந்து முடியுற வணங்கி, "எக்காலு முங்கள் கிருபை எங்கள்மேல் இருக்கட்டும்" என்று உபசரித்து, பிரியப்படாத பிரியத்துடன் அவ்வவர்களி னிடத்திலும் அன்போடு விடைபெற்றுக் கொண்டு நடந்து அப்பால் போவதானுர்கள்.

### பாண்டவரும் பாஞ்சாலியும், பாங்கர் பாங்கியரோடும் தௌமியாசாரியரோடும் விராடபுரம் போகல்

கேட்டீரோ ஜனமேஜய மகாராஜனே, இப்பாற் பாண்டவ ரைவரும் பாஞ்சாலியும் பல கலைக்கியானங்களை யுணர்ந்த தௌமியாசாரியரும் பாங்கர் பாங்கியரும், அன்றிரவு முழுதும் நடந்து, சூரியோதயத்திற்கு முன்னதாகச் செல்வச் சிறப்போங்கிய விராடபுரஞ் சேரவேண்டுமென்று தொலைத்தற்கரிய தூரந் தொடர்ந்தடர்ந்து படர்ந்திருக்கின்ற காடுகள் மலைகள் முதலியவெல்லாங் கடந்து, பருக்கைக் கற்களும் பாலைவனங்களுமுள்ள பலவிடங்களையுந்தாண்டி,வருக்கை-மா-தேக்கு தெங்கு முதலிய நிறைந்த சாலையும், வகுளம்-கோங்கு-மந்தாரை கொன்றை முதலியன வளர்ந்த சோலையுங் குறுகி, அருவிகள் பெருகிய ஆறும், குருவிகள் மருவிய கூடும், ஏரியெதுவாய் நாடும், பள்ளர் வாழும் வீடும், பரந்த மணலார்ந்த திட்டும், பதும மலரார்ந்த குட்டையும், பற்பல பாஷை வேந்தரும் விற்பன விவேக சாந்தரும் நிறைந்த வளங்கள் மிக்க சந்திரவட்டக் குடையினை யுடைய விராடராஜனது மச்சநாட்டெல்லையில் வந்தார்கள். அப்போது பச்சைப்புரவி பூட்டி, ஓராழியச்சுத் தேரினை யோட்டி வருகின்ற சூரியனுங் கிழக்கு திக்கில் எழுந்தான். அன்றிரவு முழுதும் நடந்த பாண்டவரும் பாஞ்சாலியும் புரோகிதரும் இனிமேல் தங்களெண்ணம் பலித்ததெனக் களித்து, மிதமற்ற மீன்கள் முதலையினங்கள் நீராணைகள் நீர்க்குதிரைகள் பொருந்திய தடாகங்களையும், மிளிருற்ற சித்திரங்கள் சிங்கார வனங்கள் நடைபாவிகள் நவமணி மண்டபங்கள் பொருந்திய இடங்களையும், பயிர்ப்புலங்கள் சூழ்ந்த நல்ல நாட்டையும், காவல னிருக்கும் கோட்டையையும், கால்நடை நடக்கும் பாட்டையும், மாட மாளிகைகளுடன் கூடிய மகரதோரண வாயிற்பேட்டையையும், மேகமளாவிய சிகரிகளையும், மாகமளாவிய நகரிகளையுங் கண்டு களிகூர்ந்து, பாதாளம்வரைக்கும் ஆழ்ந்து நிறைந்த ஒரு தாமரைத் தடாகத்திலிறங்கி, நித்தியவிதி முடித்து, அருக்கியங் கொடுத்துச் சூரிய நமஸ்காரஞ் செய்து, வழிநடந்த வருத்தந்தீர ஒரு மரத்தினிழலில் தங்கி, அருள்குடிகொண்ட தௌமியரை நோக்கி, இருகரங்களையுங் குவித்திறைஞ்சி வாழ்த்தி, 'இதுவரையிலும் நிகரற்ற வாழ்வைபெற்ற நாங்கள் இனி நடக்கவேண்டிய முறைமையைக் கட்டளையிட்டருளும்' என்று மேலான நூலாய்ந்த தருமராஜன் கேட்க, நாலாகிய வேதமுணர்ந்த தௌமியாசாரியர் சொல்லுகிறுர்:—

"ஓ சந்திரகுலத்திந்திரனுன தருமநந்தனு, நீங்களறியாத காரியம் நானென்ன சொல்லப்போகின்றேன்? ஆகிலுங் காட்டிற் காலம் கழித்

தது பெரிதல்ல. நாட்டில் ஒரு வருடம் மறைந்திருந்தொழிப்பதே பெரிய காரியம். ஆதலால், நீங்கள் உருவமறைந் துறையுநாளில் சொரூபத்திஞலாவது, பேச்சிஞலாவது, செய்கையிஞலாவது, கொஞ்சமேனும் காணப்படுவீர்களாஞல் மறுபடியும் பன்னிரண்டு வருடம் வனவாசஞ் செய்ய நேரிடும். ஆனதால் உங்களே ஒருவரும் அறியாதிருக்கும்படி மாறுவேடந் தாங்கி, வெவ்வேறு பேர்கொண்டு, குலச்சிறப்புற்ற விராடராஜனிடஞ்சென்று, உங்கள் ஊக்கத்திற்குரிய தொழில் செய்து, அத்தொழிலுக் கிணங்க நடந்து காலங் கழிப்பதை விட வேறு உறுதியில்லை'' என்று வைதிகக் கருத்தரான தௌமியர் சொல்ல, அவருடைய வார்த்தையைக் கேட்ட தருமராஜன் மகிழ்ந்து, ''இவ்வாறு நடத்துகிறதைவிட இன்பம் வேறில்லை'' என்று ஒப்புக் கொண்டார். அவ்வாறு ஒப்பிய தமையன் பாதத்தில் தம்பியர் வீழ்ந்து மதிமருண்டு மயங்கி, ''அண்ணு, நமது குலத்திற்கு முதலாகிய சந்திரனும், நம்மைப்பெற்ற பாண்டு பூபதியென்னு மிந்திரனும், நீரேயல்லது வேறில்லை என்று நாங்கள் வணங்கி வாழ்த்துகின்ருேம். எங்கட்கு ஜேஷ்ட பிராதுருவாய் விளங்கிய சுதந்தரரும், களங்கமில்லா மனத்தினரும், இராஜ பூஜா துரந்தரரும், கெடிஸ்தலாதிபரும், நிரந்தர காருண்யரும், காமக் குரோதாதிகளற்றவரும், தாமப்புனல் மேருவையொத்தவருமாகிய தேவரீர், உமக்குக் கீழ்ப்பட்ட இராஜனிடத்திற்போ யிணங்கி, அவன் மனதின்படி வணங்கி வேலைசெய்வது தகுமோ? ஐயா, ஓ பொய்யாமொழிப் புனிதராகிய தௌமியரே! ஐயையோ! இந்த அநியாயத்திற் கென்செய்வோம்? இவ்வுலகத்தைப் பணுமுடியால் தாங்கும் ஆதிசேடன் போலும் பொருளமுதம் பொழிந்து, கலைக்கியான முதலிய வேதக் கருத்துங் கடந்து, சத்துரு ஜயம்புரிந்து, வெற்றிமாலை புனைந்து, எத்திசையிலுமுள்ள கொற்றவர் பலரும் வந்து பணிந்துகொள்ள முற்றும் பெருமைபெற்று, அருமையுற்ற திருமுடிபுனைந்து, சம்ராட்டு முதலிய சகல சிறப்பும் படைத்து, ஜகத்ரட்சகஞகத் தனியரசு நடாத்திய தரும சொரூபியோ ஏழையரிடத்தி லடங்கி இளைத்தொதுங்கி யிருப்பது? ஆஹா! விதிவலியே வலி'' என்று வாடி வாய்விட்டு அரற்றிஞர்கள்.

### தருமராஜன் தமது கொள்கையைக் கூறுதல்

இவ்விதத் துயரால் துன்பக்கடலு ளாழ்ந்த தம்பிமார்களைத் தருமராஜன் நோக்கி, ''ஓ என்னுள்ளத்திற் கொப்பான சகோதரர்களே, நீங்க ளென்னைக் குறித்து விசாரப்படவேண்டாம். பின்ஞல் இப்படி வருமென்று முன்ஞடி நான், ஜாக்கிரதையா யிருக்கின்றேன். அஃதென்னவெனில், திக்குப்பாலகரி லொருவராகிய தென்றிசைக்கடவுள் எனக்குப் பக்குவமாக அநுக்கிரகித்தருளிய மந்திரமொன்றுண்டு. அம்மந்திர வசத்தால் நான் வேதவேதாங்க முணர்ந்த வேதியஞகி, மச்சராஜனது உச்சிதச் சபைக்குட் புகுந்து, அவ்வரசன் முதலிய யாவரும் எனக் கெதிர்வந் திறைஞ்சவும், நான் அவர்கட்கு ஆசீர்வசனஞ் சொல்லவும் பெற்றிருக்கின்றேன். இஃதல்லாமலும், அவ்வரசன்

என்னை நோக்கி, 'உமக்கிருப்பிடம் யாது? உமது பெயரென்ன? நீர் இவ்விடம் வந்ததற்குக் காரணமேது?' என்று கேட்பானாகில், 'நான் தருமராஜனுக்கு உயிர் நண்பன்; அவர் பன்னிரண்டு வருடம் வனவாசஞ் செய்யச் சென்றபோது நானுங் கூடப்போயிருந்தேன்; இன்னுமொருவருடங் கழிப்பதற்காக இவ்விடம் வந்தேன்; என் பெயர் கங்கபட்டன்' என்றுரைப்பேன். இஃதன்றியும் 'பெரியோர்களியற்றிய அக்ஷரவிலக்ஷணம்-கணிதம்-சங்கிராமலக்ஷணம்-வேதம் - வேதாங்க புராணம்-வியாகரணம்-நீதிசாஸ்திரம்-ஜோதிடசாஸ்திரம்-தருமசாஸ்திரம்-யோகசாஸ்திரம்-போகசாஸ்திரம்-மந்திரசாஸ்திரம்-சகுனசாஸ்திரம்-சிற்பசாஸ்திரம்-வைத்திய சாஸ்திரம்-சொருபசாஸ்திரம்-இதிஹாசம்-காவியம்-அலங்காரம்-மதுரபாடனம்-நிருத்தம்-சத்தபிரமம்-வீணை-வேணு-மிருதங்கம்-தாளம்-அஸ்திரபரிக்ஷை - சஸ்திரபரிக்ஷை - இரத்தினபரிக்ஷை - கனகபரிக்ஷை - இரதபரிக்ஷை - கஜபரிக்ஷை - அசுவபரிக்ஷை-ஆயுதபரிக்ஷை-பூமிபரிக்ஷை-மல்யுத்தம்-ஆக்ருஷ்ணம்- உச்சாடனம்-வித்துவேஷணம்-ஜாலாதி ஜாலம்-மோகனம்-வசியம்-இரசவாதம்-மந்திரவாதம்-கந்தர்வவாதம்-பைபீலவாதம்-தாதுவாதம்-காருடம்-நட்டம்-முட்டி - ஆகாயப்பிரவேசம் - பரகாயப்பிரவேசம் - அதிரிசியம்-இந்திரஜாலம்-மகேந்திரஜாலம்-அக்கினிஸ்தம்பனம்-ஜலஸ்தம்பனம்-வாயு ஸ்தம்பனம் - வாக்கு ஸ்தம்பனம் - சுக்கில ஸ்தம்பனம் - சுவாசஸ்தம்பனம்-கடகஸ்தம்பனம்-அவஸ்தைப் பிரயோகம் முதலிய கலைஞானங்களெல்லா மறிவேன். திக்கெட்டுங் கொண்டாடுஞ் சொக்கட்டானுடும் பக்குவமும் எனக்குண்டு, ஓ விராடராஜனே, நீர் தயவுசெய்து உம்மிடத்தில் நான் இருக்கச் செலவு கொடுப்பீராகில், ஒரு நாளைப்போல் ஒரு வருஷமும் இவ்விடம் விட்டு நீங்காமல் இன்புற்றிருப்பேன், என்று உரைத்து அந்தராஜன் பக்கத்திலிருந்து, அவன் கருத்துக்கிசைந்த தேசவர்த்தமான காரிய காரணங்களைக் காலசமயமறிந்து பேசி, விநோதமான விந்தைகளை நிந்தையில்லாமற் சொல்லி, விதரணையான அரசாட்சியைப் பெருமையுடன் நடத்தி, வேந்தனுள்ளங் களிக்கச் செய்து, சுற்றிலுஞ் சூழ்ந்த வெற்றிவீரர்களும், கற்றவர் முதலிய நற்றவத்தோர்களும், தந்திரி மந்திரி சாமந்தர்களும் உத்தமரிவர் என்று கொண்டாடும்படி மெத்தவும் மேன்மையாகக் காலங்கழிப்பேன், ஓ சித்திசுத்தி பெற்ற தம்பிமார்களே!' என்று ஏழுலகத்திற் கோராழி செலுத்துங் குருகுலக் கோமானாகிய தருமராஜ னுரைத்தருளினர். அவருடைய பெருமித வாக்கியத்தைப் பீமார்ச்சுனர் முதலிய தம்பியர் கேட்டு, நமது தமையனுருக்கு இந்தத் தொழில் தகுந்தகு மென்று சந்தோஷமானார்கள்.

### பீமராஜன் தன் கொள்கையைக் கூறுதல்

அந்தவேளையிற் பொறுமையைப் பூஷணமாகப் பூண்ட தருமராஜன், பீமசேனனுடைய முகத்தைப் பார்த்து, கருணைவெள்ளங் கவிந்து, கனிந்துள்ள முவந்து, கருத்தினுற் பரிந்து கண்ணீர் சொரிந்து, "ஓ நினைத்தற்கரிய பலத்தையுடைய வாயுபுத்திரனே, நீ

அரக்கு மாளிகைவிட்டெழுந்தபோது உரக்கக் கூவிக் கொடும்பகை கொண்டு வந்தெதிர்த்த இடும்பனைக் கொன்றும், வேத்திரகீயத்தி லிருந்த வேதியர்களின் துன்ப மாற்றுவதற்காகப் பகாசுர னுயிரை வென்றும், கிம்பிராசுரனைக் கெடுத்தும், குபேரலோகம் புகுந்து, பவுண்டரீக னுயிரையும்-மணிமால னுயிரையும் வாங்கி, மந்தாரமலர் பாரிஜாதமலர் முதலியவைகளைப் பறித்து வந்ததும், சடாசுரனைத் தாக்கியும். இன்னு மிப்படி போருக் கெதிர்த்தவர்களைப் போக்கியும், இரக்கமில்லாக் கொடியோனாகிய துரியோதனன் அன்னத்தில் விஷங் கலந்தூட்டி, அநேகங் கொடிகளாற் கட்டி ஆற்றுப் பெருக்கத்திற் போட்டகாலையில் நாகலோகம்புகுந்து விஷாமிர்தமுண்டிருந்த உன்னை நாங்கள் ஏழுநாள் வரையிலுந் தேடிப் பட்சிபோற் பறந்து பரதவித் தலைந்த துக்கத்தை எட்டாவதுநாள் வந்து விலக்கியும், அவ்வணங்கா முடியோன் செய்த எத்தனையோ வஞ்சனைகளினின்றும் நீங்கியும், உன்னைத் தனித்துச் செய்ததல்லாமல் எங்களையுங் கூட்டிச்செய்த பற் பல ஆபத்துக்களினின்றும் நம்மைப்பெற்ற தாயான குந்திதேவியா ருடன் எங்களையுங் காத்து இரட்சித்த தாஷ்டிகனே, நீ ஒருவனு டைய நகரஞ்சேர்ந்து, அவனைக் காலமறிந்து தாழ்ந்து, அவனுக்கிசை வாகிய தொழில் புரிந்து, நாம் கழிக்கவேண்டிய நாளைக் கழிக்க அறி வாயோ? நீ ஒருவரிடத்திலடங்கி ஏவற்பணி செய்திருக்கும்படியாய்ப் பாவியான என்னிரு கண் பார்க்கத்தக்கதோ? ஓ படுவினையே!" என்று பரிதவித்துப் பெருமூச்சுவிட்டு, "அப்பா தம்பி, நமது காலபலனறிந்து வேளைக்குத்தக்க வேடம்புனைந்து நாளைப்போக்கத் துணிந்தபோதிலும், நீ ஒருவரை வணங்கி இதம்பேச அறியாயே! இராஜசமயந் தெரிந்து நலம்பெற உறவாடி, நேசவிசுவாசமுற நினைக்க மாட்டாயே! எந்த வேளையில் எத்தொழில் செய்யவேண்டியதோ, அந்த வேளையில் அந்தவேலைமுடித்து அரசனை மனமகிழச்செய்யு மார்க்கங்கற்றிலையே! ஐயோ! பரிசுத்த குலத்தோனாகிய விராடன்புகழவும், அவனைச்சேர்ந்த சபையார் மகிழவும், நாம் அவ்விடத்தில் மறைந்திருப்பதை மற்றவர்க ளறியாதிருக்கவும், அஞ்ஞாதவாசமகற்றவும் வேண்டுமே! நீ எவ்வித மிருக்கப் போகின்றாய்? ஓ என்னிளவலே!" என்று தளர்ந்து இமை கொட்டாமல் ஏக்கமுற்றிருந்தார்.

இவ்வண்ணந் தம்பியைக்குறித்து வெம்பிய அண்ணனைப் புகழ்ப் பிரதாப பூஷணமணிந்த புயவீமன் வணங்கி, "ஓ அண்ணா, தந்தை யிறந்த தளர்ச்சி தோன்றாமற் காத்த தமையனே! தித்திப்பு-புளிப்பு-உவர்ப்பு-துவர்ப்பு-கார்ப்பு-கைப்பு ஆகிய இவ்வறுவகை ருசியுடன் பல விதக் கச்சாயங்கள் பலவிதப் பச்சடிகள்-பலவகைக்கறிகள்-பலவகை ரசங்கள்-பலவகைக் குழம்புகள்-பலவகைப் பாயசங்கள் முதலியவைக ளோடு,புளியோதனம்-எள்ளோதனம்-மிளகோதனம்-ததியோதனம்-பாலோதனம்-சர்க்கரைப்பொங்கல்-அக்காரவடிசில்முதலியபலவகைச் சித்திரான்னங்களும், பலவகைப் பலகாரங்களும் திருத்தமாகச் செய் யக் கற்றிருக்கின்றேன். இந்தச் சுயம்பாகத்தொழிலால் இரத்தக்கறை

நீங்காத வேலாயுதந்தாங்கிய விராடனும் மற்றவர்களுந் திருப்தி யடைந்து, அமுதத்தை இகழ்ந்து, நான்செய்யும் பாகத்தைப்புகழ்ந்து, பாகசாஸ்திரங் கற்ற பக்குவனென் றென்னை மகிழ்ந்து, யாவரும் உப சரிக்கும்படி இருந்து, விருந்து முதலியதும் புரிந்து, எந்தச் சமயத்தில் எது வேண்டியதோ அந்தச் சமயத்தில் ஆச்சுதென்றளித்து, அடுப் புக்கு விறகுவேண்டியபோது மற்றொருவரைக் கேளாமல், ஆகாயமளா விய விருக்ஷங்களைக் கோடரிகொண்டும் பிளக்காமல், என்னிருகைகளி னாலே முறித்து ஏற்படுத்திக்கொள்வேன். ஒருவேளை மலையொத்த திண்புயனாகிய மச்சராஜன் மல்லர்களுடன் சண்டைசெய்ய விடுப்பா னாகில், மற்போர் வல்லவரைச் சொற்பமாயழித்துப் பற்பலவிதப்பரிசும் பெற்று, விற்பன விவேகிகள் மெச்சப் பேரெடுப்பேன். இன்னும், யாளி-சிங்கம்-புலி-கரடி-யானை முதலிய மிருகங்களைப் பிடித்து, இராஜ னுக்கு முன்னே விடுத்து, மாச்சரியமூட்டி ஆச்சரியங்காட்டுவேன். 'உன் பெயர் என்ன?' எனிற் பாலாயனனென்பேன், 'உன் நகர் எது' என்றால், 'தருமராஜன் கீர்த்தியைப் புகழ்ந்து பேசுகின்ற புண்ணிய நகரம்' என்பேன். 'உன் குலகோத்திரமென்ன ?' என்றால் ' அறப் பெருங் கடவுள் மைந்தனாகிய முரசகேதனருக்கு அடிமைசெய்யு மடி யேன் ; அறிவிலாச் சூத்திரன் என்பேன் '' என்று வாயு சேயான பீம சேனன் சொன்னான். அவன் சொன்ன சொல்லைச் சாந்தகுணத் தரும ராஜன் கேட்டு, இருபுயமும் பெருமலைபோ லோங்கி, பசுவானது கன் றின்மேல் வைக்கும் பக்ஷத்திலும் லக்ஷம்பங்கதிகமாய்க் கருணை கூர்ந்து, ''தம்பி, இந்தத் தொழில் உனக்கு உரியதுதான். என்றென் றைக்கும் அன்னத்திற்குக் கருப்பில்லை. இதுகாறுஞ் செய்துவந்த வனவாசத்திலும், நீ இவ்வஞ்ஞாதவாசத்தை வெருப்பில்லாமல் நிறை வேற்றலாம்'' என்று வியந்து கூறினார்.

### அர்ச்சுனராஜன் தன் கொள்கையைக் கூறுதல்

இப்பால் தருமபுத்திரர் தன் பக்கத்திற் சாய்ந்து நிற்கின்ற, சவ் வியசாசி யென்னும் பார்த்தனுடைய முகத்தைப் பார்த்து, சொல் லுதற் கரிய துயரங்கொண்டு, '' அப்பா அர்ச்சுனா, தேவர்களாலுஞ் ஜயிக்கப்படாத காண்டவ வனத்தை யழித்து அக்கினிதேவனுக்கு அவியாயளித்துப் பசி தணித்தனை. மகமேருவுக் கப்பாலுஞ்சென்று விஜயம்பெற்று விஜயனென்று புகழ்ஸ்தம்பம் நாட்டி, அரசர்களளித்த திறைகள் யாவற்றையுங் கொண்டு அடங்கா மறுமன்னரையும் வென்று ஜயத்துடன் மீண்டாய். இஃதல்லாமலும், நான்குவேதமும் நான்முகனும்-நாரணனும்-நாகலோகத்தினர்முதலியோருமறிதற்கரிய தேவாதி தேவனை, திரிநேத்திர தாரியை, ஆதிமத்தியாந்தரகிதனை சேற் கெண்டை போன்ற தடங்கண் வாய்ந்த ஜகதீஸ்வரியுடனே விருஷப வாகனருடராய்த் தரிசனஞ்செய்து உன்னிரு விழிகளும் உள்ளமுங் களித்து ஆனந்த பாஷ்பத்துடன் தொழுது பழுதுபடாத இன்பம் அடைந்தனை. மூலகாரணனான அக்கண்ணுதலாற் பாசுபதமும் பெற் றாய். பிரமாவினாலும், அஷ்டவசுக்களினாலும், அஷ்டதிக்கு பாலக

ராலும், துளபமாலை தரித்த நாரணனாலும், இந்திரனாலும், தேவர்களா லும், பற்பல மந்திரக்கணைகளைப் பெற்றாய். கற்பக நாட்டாருக்கு நெடு நாட் பகைவராகிய காலகேய நிவாதகவசர்களை நொடியிற் பொடியாக முடித்தாய், மானாபரணமும் ஞானாபரணமு மணிந்த மகா பதிவிரதை யான இந்திராணி உன் திராணியறிந்து, சாவாமருந்தாகிய தேவாமிர் தத்தை ஊட்டுவிக்க இன்பமாயுண்டு, தேவேந்திரன் சிங்காதனமேறிச் சிறப்புற்றிருந்தாய். அரவக்கொடி படைத்த துரியோதனனையும் அவன் தம்பிமாரையும் அவர்கட்குரிய தருமபத்தினிகளையும் தாமணி யாகக் கட்டிக்கொண்டு போன சித்திரசேனனைக் கைப்பிடியாகக் கொண்டு வாவென்று நான் சொன்ன வாய் மூடுமுன்னேசென்று, அவனைத் திருப்பிக்கொண்டுவந்து என்முன் நிறுத்திக் கட்டுப்பட்ட யாவரையுங் கட்டவிழ்த்து விட்டாய். மேலும், தேசுடையவரில் அக்கினிதேவன் போலும் தேசராஜர்களில் தேவேந்திரன்போலும், திசையானைகளில் சுப்பிரதீபம்போலும், ஜயகீர்த்தியில் விடையோன் போலு மிருக்கின்றாய். ஓ அநுமத்துவஜமும், அழியா வில்லும், அக்ஷயத் தூணியும், அழகிய தேரும், சுவேதப்புரவியும் படைத்த சுந்தரனே! விசித்திர வில்லாளி யென்னும் விராடராஜனுடைய பகுதியிற்புகுந்து, உன் வேடமாறி வித்வத்திலுயர்ந்த உன்னுள்ள மடங்கி, எத்தன்மையான சிற்றேவல் செய்வாயோ, என் அத்தனே?'' என்று புத்திமருண்டு கண்ணீர்ததும்ப உண்ணீர் வெதும்பக் கரைந்து வருந்தினர். இவ்வாறு வருந்திய தருமராஜரது உள்ளத் தளர்ச்சியை யும் பெருமிதமான தன் மனக்கிளர்ச்சியையும், சற்று நிதானித்து ஆராய்ந்தெண்ணிய சவ்வியசாசி, "ஓ என் அண்ணா, என்னைக் குறித்து எண்ணமுரு திருக்கும்படியாய் அடியேன் ஒரு வாசகஞ் சொல்லுகிறேன். தேவரீர் திருவுள மகிழக்கடவது'' என்று வணங்கிச் சொல்லத் தொடங்கினான்.

"ஓ தருமகுணாலயமே, பூர்வம் யான் தெய்வலோகம் போயிருந்த போது வண்ணப்பெண்ணான ஊர்வசி, அவள் எண்ணத்திற்கிசை யாத என்னைப் பெண்தன்மையிலும் ஆண்தன்மையிலும் இழிந்த பேடித்தன்மை யடையும்படி சபித்தாள், அந்தச் சாபத்தால் தளர்ந்து வருந்திய வாட்டத்தை ஆயிரம் நாட்டமுள்ள அயிராவதத்தன் அறிந்து, அந்த ஊர்வசியினிடத்திற் சென்று, 'அடி பாவி, தேவர்கட் கநுகூலஞ் செய்த செஞ்சிலை விவேகனை நீ இப்படிச் சபிக்கலாமா? ஆ! ஆ! துரோகி, இப்போது நீ இட்ட சாபத்தை விலக்கி என் சஞ்ச லத்தைத் துலக்கிவிடு' என்று வருந்திச் சொன்னர். அவ்வார்த்தை கேட்ட ஊர்வசியானவள் 'நானிட்ட சாபம் பழுதுபடாமல் இவர் வேண்டும்பொழுது வந்து ஒரு வருட மிருக்கவும், வேண்டாமென்ற போது அகன்று போகவுங் கடவது' என்று பிரதிசாபங் கொடுத்திருக் கின்றனள். அந்நாளையில் வந்த சாபம், என் தந்தையான இந்திரன் உபகாரமென்றெண்ணி வந்தேன். இப்போது அந்த ஊர்வசியிட்ட சாபமானது நாம் நாடிய வழிக்கு உபயோகப்பட்டு, நன்மையைத் தரத்தக்கது. ஓ உதிரக்கறை யோங்கிய வேல் தாங்கிய காவலனே!

நான் அப்படியே பேடியுருவமெடுத்து, இம்மச்சராசனிடத்தி லடுத்து, பெண்களுக்குப் பரதநாட்டியம் படிப்பிக்க வல்லவளென்று பகர்ந்து, அவன் அருள்பெற்று ஆடரங்கச்சாலேயி லிருப்பேன். 'உன் பெயர் என்ன?' என்ருல், 'பிரகந்நளே' என்றுரைப்பேன். 'நீ யாரிட மிருந் தாய், என்ருல், 'தீயிற் பிறந்த திரௌபதாதேவிக்கு நடனத்தொழில் நடாத்தினவள்' என்பேன். 'நீ ஏன் இப்படி வந்தாய்' எனின் 'பாண்டவர்களுடன் பாஞ்சாலியும் வனவாசஞ் செய்யப் போன நாளில் நானும் கூடப் போயிருந்தேன். அவர்கள் ஒரு வருஷம் அஞ்ஞாதவாசஞ் செய்வதற்காகச் சென்றதால், நான் தங்களே அடைந்தேன் என்றிசைந்து அவ்வரசனேச் சந்தோஷப்படுத்து வதற்கு என் மனங்குவிந்திருக்கின்றது'' என்ருன். அவன் கருத்தை யறிந்த தருமராஜன் ''இவை யுனக்குத் தக்கவைதான்'' என்று மகிழ்ந்து, பக்கத்தில் நின்ற நகுலனேப் பார்த்துக் கூறுகிருர் :—

### நகுலராஜன் தன் கொள்கையைக் கூறுதல்

''ஓ எந்நாளு மென்னேவிட்டு நீங்காத இளஞ்சிங்கமே, நீ நான் சொன்னபடி கேட்டு நடக்கத்தக்கவனே யல்லது, உன் சுயபுத்தியா யொன்றைத் தொடங்கிச் செய்ய வல்லமையில்லாதவன், மெய்வருந் தும்வேலேயிற் பிரவேசிக்கமாட்டாய்! வியர்வையுண்டாக மேனி கசங் காய்! முன்பின் ஞென்றுமுணராய்! அறியாச் சிறியவனுன நீ, சத்துரு வின் கண்ணுக்குக் கிட்டாமல், மச்சராஜன் தேசத்தில் உருமாறி ஒரு வருடமிருந்து எவ்வாறு காலங்கழிப்பாய் அப்பனே, ஓ அஸ்வாரூட ராஜனே'' என்று தருமராஜன் கேட்கவும், சிவபெருமானுடன் விற் போரும் மற்போரும் புரிந்த சிலேவிஜயன் தம்பியான நகுலராஜன், அமலனுன அண்ணனேப் பணிந்து, கமலமலர்போல் முகமலர்ந்து, ''கருணேக் கண்ணூர்ந்த அண்ணு'' என்று அழைத்து, ''ஓ தருமப்பிரபு வாகிய தயாநிதியே, தேவரீர் அடியேனுக்குப் படிப்பித்த சாஸ்திரங்க ளில் அசுவசாஸ்திரத்தை முக்கியமாயறிந்தேன்; பரிக்ஷையும் தெரிந் தேன். அதனுற் குதிரைகளின் குணமும்-குரலும்- நலமும் - பலமும் - நன்மையும் - வன்மையும் - திறலும் - தீதும் - தேசமும் - வாசமும் - சீரும்-சிறப்பும் - சித்தமும் - உன்மத்தமும் - பேதமும் - அபேதமும் - முகமும் - கண்களும் - சுழியும் - சுத்தமும் - துலக்கமும்-விலக்கமும் - வருணமும் - ஆரோகணமும் - அவரோகணமும் - வட்டமும்-கோண மும்-வளேவும்-வையாளியும்-சிறுநடையும்-பெருநடையும் - சிம்புட்கதி யும்-பிணிகளும்-அவைகட்குக் கொடுக்கு மருந்துகளும் செவ்வை யாகத் தெரிந்திருக்கின்றேன். ஆகையால், அசுவசாஸ்திர அதிபதி யென வேடம் பூண்டு, மச்சகுலாதிபனிடஞ் சென்று, அவனுக்கிச்சை யுண்டாகும்படி இசைந்து, பச்சைப்புரவி தூண்டும் பாகனினு மேலா யிருப்பேன். அவர் என்னூரையும் என் பேரையும் என் சீரையும் நான் வந்தவரலாற்றையுங் கேட்பாராகில், 'குருமரபிலுயர்ந்த தருமராஜனு டைய நாட்டிற் குதிரை நடாத்திவந்த குமரன்யாள். என்பெயர் தாமக் கிரந்தி யென்றிசைத்து, அராபிக் குதிரைகளேயும் தாராளமாய்த்

திருப்பிவிடுத்து, சமயத்திற்குத் தகுந்த சவாரியும் கொடுத்து, எஜமானனைச் சந்தோஷப்படுத்தி, ஆடையாபரண முதலாகிய பரிசுகளும் பெற்று, குதிரைத் தலைவர்கள் கொண்டாடும்படிக் காலங்கழிப்பேன்'' என்றான். அந்தத் தம்பியின் வசனத்தைக் கேட்ட தருமராஜன் மனக் களிப்படைந்து, ''காலத்திற்குத் தகுந்த கோலமாய் நீ கொள்ளப் போகிற தொழில் மெத்தவும் நன்று'' என்று உரைத்து, மன்மதனிலு மிகுந்த வடிவமைந்த சகாதேவனை நோக்கிச் சொல்லத் தொடங்கினார்:—

### சகாதேவராஜன் தன் கொள்கையைக் கூறுதல்

''ஓ அதிபாலியனே, தந்தையான பாண்டுமகாராஜன் மார்பிலும் குந்திதேவி மடியிலும் விந்தகிரி போன்ற என் தோளிலும் வேற்றரசர்களின் தலையிலும் விளையாடி மிதித்து நடைபழகி யுலாவிய உன் மெல்லடிகள் நோவ, செம்பருக்கைக் கற்களுடன் சிவந்த தீப்பொறி கலந்த மலைச்சாரலிலும் வனங்களிலுந் திரிந்து பன்னிரண்டு வருஷந் தொலைத்தும் உன் துன்பம் இன்னும் தீரவில்லையே! ஐயோ! இது நீ முன்னஞ் செய்த தீவினையோ! கன்னெஞ்சனான அன்னவாகனன் இவ்வநியாய எழுத்தை உன் அருந்தலையிற் பொறித்துவைத்தனனே! கார்செறிந்து நீர்சொரிந்த பார்புரந்து தார்புனைந்த பாண்டுராஜனுக்குப்பிள்ளையாகப் பிறந்தும், அருளுற்ற என்போல்வார்க்குத் தம்பியாகச் சிறந்தும், சாஸ்திரக் கலைஞானங்களை யுணர்ந்தும், சாதுசங்கப் பழக்கம் புணர்ந்தும், பழவினை யொழியாது உன்னை வருத்துகின்றதே! ஓ பாலனே! என்னிருகண் சீலனே! புத்தியிற் பிரகஸ்பதியுஞ் சுக்கிராசாரியு நிகரென்று சொல்லும்படியாய் மந்திர சாஸ்திர முற்றும் நீதிநூல் முதலிய மற்றுங் கற்றுணர்ந்த வல்லோனே, நீ எத்தொழில் செய்வாய்? எவ்வாறு சிற்றேவல் புரிவாய்? எவரும் அறியாதிருக்க நீ எந்த வேடமெடுப்பாய்? எப்படி நாளைக் கழிப்பாய்? அப்பா என் இளவலே'' என்று கண்ணீர் சொரிந்து ஏங்கி யிரைந்த தருமராஜனைத் திரிகாலமுந் தெரிந்த சகாதேவன் வணங்கிப் பேசத் தொடங்கினான்:—

''ஓ வையகநாடுஞ் செய்யகோலாடும் ஐயனே, தருமதேவதைக் கொப்பாகிய பசுவினங்களைச் சம்ரக்ஷணை செய்யும் கோபால வேடம் கொண்டு, விராடராஜனிடத்திற் சென்று, பசுக்கள் மேய்ப்போனாகி, அப்பசுக்களுக்கு நேரிடும் - கோமாரி - அடைப்பன் - பொறுமல் - செருமல் - இருமல் - வாய் அசைவு போடாதிருத்தல் முதலிய நோய்களைப் போக்கி, புல்லுள்ள புலத்தில் அவைகளை மேயவோட்டி, நீருள்ள இடத்தில் அவைகளுக்குத் தண்ணீர்காட்டி, நிழலுள்ள தோப்பில் அம் மந்தையைக் கூட்டி மடக்கி, ஆடிக் கறக்கும் பசு, அதட்டிக் கறக்கும் பசு, அணைத்துக் கறக்கும் பசு, பாடிக் கறக்கும் பசு, பழித்துக் கறக்கும் பசு முதலியவைகளைத் தெரிந்துகொண்டு அப்பசுக்களின் தேசம்-வாசம் - குணம் - மணம் - முதலியவைகளையு முணர்ந்து நடத்த அறிவேன். 'உன்பெயரென்ன?' எனில், 'தந்தி

பாலன்' என்பேன். 'யாரிடத்திலிருந்தனை' என்றால், 'பாண்டவர்களாகிய ஆண்டவமாரிடத்திற் பசுமேய்த்துக் காலங்கழித்தேன்' என்பேன். மேலும் நந்தகோபாலன் என்றன் மைத்துனனென்றுரைத்து, அவ்வரசன் சிந்தை களிகூறச் செல்வமாயிருப்பேன்'' என்று சகாதேவன் சாற்றினன். அந்த வார்த்தையைக் கேட்ட தருமராஜன் ''மகாதேவ சம்போ'' என்று பெருமூச்சுவிட்டு, நம்மெல்லோரிலுஞ் சிறந்ததொழில் இவன்பெற்றனனென் றிசைத்து, அவனைத் தனது இருகண்களிலு மொத்தி முத்தமிட்டு, கற்புக்கணியான பாஞ்சாலியின் மதிமுகத்தை நோக்கி விதிர்விதிர்த்து விளம்பத் தொடங்கினர் :—

### திரௌபதாதேவி தன் கொள்கையைக் கூறுதல்

"ஓ அழகுக் காலயமான அன்னமே, ஓ பிறவிச் செல்வமுள்ள பேதையே, அநேகந் தாதியர் ஏவற்பணி செய்யத் துன்பமில்லாமல் இன்பமடைந்த தோகைமயிலான நீ, எத்தொழிலியற்றிக் காலங் கழிப்பாயோ, ஓ இளம்பிடியே'' என்றேங்கிச் சுவாசமேவிட்டிருந்த ஞான சம்பன்னனாகிய தருமராஜனது மனக்குறிப்பறிந்து, பெண்ணிற் சிறந்த பெருந்தகைப் பாஞ்சாலியானவள் கண்ணீருகுத்து, "ஓ புண்ணிய மனமுந் திண்ணிய புயமுமுள்ள வள்ளலே, நான் வண்ணப் பெண் என்னும் வடிவங்கொண்டு, மச்சராஜனுடைய மனைவியிடஞ் சென்று, 'ஆபரண அலங்காரஞ் செய்யவும் கண்ணுக்கு மைதீட்டவும் ஸ்தனத்திற்குத் தொய்யிலெழுதவும் பலவகை மலரெடுத்துத் தொடுக்கவும் பன்னிற முத்தங்களைக் கோக்கவும் கொண்டையிற் பூவேற்றி முடிக்கவும் கொடியிடையிற் பலசேலை யுடுக்கவும் நெற்றியில் விபூதி ரேகை யிடவும் நிறமிக்க சிந்தூரத்திலதம் வைக்கவும் சாந்து சந்தனம் சவ்வாது கூட்டவும், சகலவித கதம்பப்பொடி தீட்டவும், இன்னும் பல்விதமான சின்னங்களுஞ்செய்ய அறிவேன்' எனச் சொல்வேன். 'நீ இங்கு வந்த காரியமென்ன?' என்று கேட்டால், 'உம்மிடத்தில் ஒரு வருட மிருந்து காலங்கழிக்க வந்தேன்' என்பேன். 'நீ யார்' என்றால், 'நான் ஜய விஜய ஜயந்த ஜயசேன ஜயற்பால ரென்னும் ஐந்து கந்தர்வர்களின் பத்தினி; அவர்களைப் பகைத்துப் போராடும் வல்லவர்கள் எங்குமில்லை. எப்பேர்ப்பட்டவர்களும் என்னைப் பார்த்துத் தப்பான எண்ணங் கொள்ளப்போகாது. அப்படித் தாறுமாறான நினைப்புக் கொண்டால், நூறுநூறுகூறாய் வேறு வேறாகி மாய்வார்கள்' என்பேன். 'இப்படிப்பட்ட வல்லவர்கட்கு இல்லாளான நீ வேலை செய்ய வெளிப்படுவானேன்' என்று கேட்டால், 'என் குலத்திற்குரிய நல்லொழுக்கமும், நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு முதலியவைகளும் குறைவுபடாமற் பிரதாபம் பெற்ற பாஞ்சாலிக்குப் பணிவிடை செய்து, மாஞ்சோலைக் குயில்போல் விசுவாசத்துடன் வாழ்ந்தேன். அவ்விடம்விட் டிவ்விடம் வரும்படியான அவசியம் என்னவெனில், நல்வினைப்பயன் பெற்ற அம்மாதுசிரோமணி வல்வினைவசத்தால் வனவாசம் போனபோது, நானுங் கூடப்போயிருந்தேன். இப்போது அப் பூங்கொடி தன் கணவர்களோடு அஞ்ஞாதவாசஞ் செய்யப்போழி

னள். நான் அந்தக் காட்டி லலைந்து விசனமடைந்து உன் நாட்டிற் சில பகல் கழித்து அவர்கள் வெளிப்படும்போது நாம்போய்க் கூடிக் கொள்ளலாமென்று யோசித்து வந்தேன். ஆதலால் உமக்கு என்னைச் சேர்த்து ஆதரிக்க இஷ்டமுள்ளதோ' என்று கேட்டு இன்பமொழி புகன்று, அவள் அன்புடனுரைக்க ஆசையோடிருந்து, சமயோசித வசனங்கள் தக்கபடி பேசி, முன்னிருந்த தாதியரெல்லாரும் நாணப் பட என் வல்லமையைக்காட்டி, அந்தச் சீமாட்டி இச்சைப்படும்படி அணிமலர் சூட்டி, நாளுக்கு நாள் பக்ஷமுண்டாக நடந்து அஞ்ஞாத வாசங் கழிப்பேன்'' என்று கற்புக்கொரு பொக்கிஷம்போன்ற காதலி சொல்ல, அற்புக்கு அருங்கடலாகிய தருமராஜன் கேட்டு, ''ஓ சற்குணக் கடலாகிய அற்புத மின்னே நீ சொன்ன நன்னய மொழி யால் நீ நற்பயனைப் பெறுவாய்'' என்றுரைத்துச் சில தருமங்களைச் சொல்லத் தொடங்கினர்.

### திரௌபதாதேவிக்கு தருமநந்தனர் சில தருமங் கூறுதல்

''ஓ அன்ன நடையும் மின்னலிடையும் பின்னுசடையும் வன்ன வுடையு முடைய மடமானே, என் வார்த்தையைச் சிறிது கேள். என் செந்தேனே, வேதியராயினோர் ஒழுக்கமும் வேந்தராயினோர் தருமநீதியும் மாதர்களாயினோர் கற்பும் வகித்திருக்கின்றனர். அத ஞல் மாதமும்மாரி பொழிகிறதென்றும் அம்மழையினுல் கற்காடுகள் திருந்திப் புற்பூடுகள் பொருந்தி, செந்நெற்பயிர் நெருங்கிச் செகந் தழைத் தோங்குவதென்றும், புண்ணியவான்க ளாயினேர் தவம் புரிகின்றனரென்றும் பெரியோர் புகன்றிருக்கிருர்கள். நீ அந்த நீதியை அறிந்து நெறிமுறை வழுவாமல் நடக்கும் நிலையினை யுடை யவள், ஆகையால் உனக்கு விசேஷித்து நான் என்ன சொல்லப் போகின்றேன்? ஒரு கற்புள்ள மனையாளைக் கலியாணஞ் செய்து கொண்ட கணவனுக்கு விற்பனவிவேக வேதசாஸ்திரங்களும் பற்பல சகுணம் பரவிய பயனும், அன்பும் இன்பமும், அழகும், புகழும், வெற்றியும், புத்தியும், மேன்மையும், பெருமையும், செல்வமும், சீரும் திடமும், தீரமும், குறைவறப் பெருகுமென்று மஹா வாக்கியங்களிற் குறித்திருக்கின்றன. பாதியா ளென்பதே பாரியாளென மருவியதாம். ஆதலால், அம்மனையாள் 'கற்பெனப்படுவது சொல்திறம்பாமை' என் னுங் கருத்திற்கிணங்க நடக்கவேண்டும். அவள் கணவன் கருத்திற்கு மாறுபடுவாளாகில், அம்மாறுபாடு அவள் புருஷனுடைய மெய்த்தவத் தையும், செல்வத்தையும், ஆயுள் முதலிய யாவற்றையும் அழித்து, மீளா நரகத்திற் காளாக்கி விடுமென்று இருக்குவேதத்திற் சொல்லி யிருக்கின்றது, பதிவிரதையுடன்கூடி, இல்லறதருமம் இயற்றி, நல்ல மனதுடன் வாழ்கின்றவர்களுக்குக் கீர்த்தியும் பொருளுங் கிடைக்கு மென்று உண்மைஞான முணர்ந்தோர் உரைத்திருக்கின்ருர்கள். அதற் குத் திருஷ்டாந்த மென்ன வென்ருல், மாதாவாகிய ஸீதாதேவியின் பதிவிரதா மகத்துவத்தால், இராமரானவர் தேவர் முதலிய தண்டகா ரண்ய ரிஷிகளுக்கு அபயங்கொடுத்து, இராவண கும்பகர்ணுதியரை வதைத்துப் பட்டாபிஷேகம்பெற்ற கீர்த்தியைப் பலதரமுங் கேட்டிருக்

கின்றனே. அருந்ததி துதிக்கும் அன்னமே, இப்படிக்கெல்லாமிருந்த போதிலும், 'காவல்தானே பாவையர்க்கழகு' என்னும் கருத்தின்படி முதற்காவல் தந்தை, இரண்டாவது காவல் புருஷன், மூன்றுவது காவல் புத்திரன். இம்மூன்றுகாவலுக் குட்பட்டிருப்பவளே மகா பதி விரதையாவாள். அதுவே பெண்கட்கழகாகும். நாம் அஞ்ஞாத வாசம் பண்ண வேண்டிய இத்தருணத்தில், உனக்கு யாதொரு காவலுமில்லை. ஆனதால் நான் சொல்லவேண்டுவதென்னவெனில், உன் புத்தியைப் பெருங் காவலாகக்கொண்டு, இஷ்டதெய்வத்தை யிடைவிடாமல் நம்பி, நிறையாகிய அழிவின்மையை முறையாய் நிறுவி, இக்காலத்தைக் கழிக்கவேண்டும். உன்னிடத்தே துஷ்டர்கள் கருதிக்கிட்ட வந்தாலும், அம்மூடர்களை நீ பார்த்தபோதிலும், அவர் கள் கண்ணுக்கெட்டாம லகன்று, அந்தக் கொடுமையாளருடைய துர்ப்புத்திக்கும் உமது சத்துருவின் பார்வைக்கும், அகப்படாதிருந்து, இராஜஸ்திரீக்கு விரோதம் வராமல் நடந்து, ஓ பாஞ்சால கன்னி கையே, நமக்கு நற்காலம் வருகிற வரைக்கும் இந்தத் துர்க்காலத் தைத் தொலைத்துவிட வேண்டும்'' என்று பகர்ந்தார். தருமராஜ னுடைய சத்தியமொழியான தருமநீதிகளை உத்தம குணசாலியாகிய பாஞ்சாலி கேட்டதும், "ஐயா, பொய்யாவிரதப் புனிதமூர்த்தியே, தேவரீர் உரைத்த சிலாக்கிய வாக்கியத்தை ஜன்மாந்திர பாக்கிய மென்றும், வேதமொழியென்றும், என் தலைமேற்கொண்டேன். தேவரீர் மொழிந்த தெவ்வண்ணமோ அவ்வண்ணம் நடக்க அடியா ளிருக்கின்றேன். எனக்காகச் சிந்தனைவேண்டாம் ஓ சத்தியவஸ்து வின் தத்துவ நிலையே'' என்று கைகூப்பி, அவர் சரணத்தின்மேல் தாழ்ந்தாள்.

### தௌமியாசாரியர் பாண்டவர்கட்குச் சில நீதிகூறி ஔபாசாக்கினிபெற்றுத் தவத்திற் கேகுதல்

இப்பால் தருமநந்தனர் தௌமியரை நோக்கி, "சுவாமி, அடி யேங்களிழைத்த வினை இப்படியாயிற்று. அரசாட்சிமுதற் பெருமை யும் போயிற்று. நம்மைப்பணிவாரை நாம் பணியக் காலம் வாய்த் தது. இனித் தேவரீர் கட்டளைக்குக் கீழ்ப்பட்டிருந்து, தமது கிருபை யின்படி நடக்கக் காத்திருக்கின்றோம். ஓ பரமரகசிய பதித பாவ னரே'' என்று தருமராஜன் சாற்ற, தௌமியாசாரியர் "ஓ சத்திய சீலனே, நீங்கள் ஆறுபேரும் விராடபூபனை யடுத்து, இதுகாறு மிருந் ததுபோல் இச்சையின்படி திரியாமல், ஒருவருக்குந் தெரியாமல் ஒருவரையொருவர் பிரியாமல் இப்போது இவ்விடத்தில் நிச்சயித் துக்கொண்டபடி வேறு வேடம்பூண்டு, அவரவர்க்குரிய தொழில் களை அலுப்பில்லாமலும், அவசரப்படாமலும் செய்யவேண்டும். அப்படிச் செய்கிற விஷயத்தில், ஒருவன் களங்கமறக் கற்ற கனவானுனாலுந் தனக்கு மேற்பட்ட புத்திமானிடத்தில் ஆலோ சித்து நடக்கத்தக்கதென்று நீதிநூலிற் கூறியிருக்கிறது. நீங்க ளுணராத நீதிநெறி யில்லை. அப்படிக் குணர்ந்து தெளிந்த போதிலும், நான் அறிந்திருப்பதையுங் கொஞ்சசுஞ் சொல்லுகி

றேன். நீங்கள் யாவரும் வெறுப்பின்றி விருப்பமாய்க் கேட்டருளுங்கள்" என்று விரதசிலாக்கிய வேதபுரோகிதர் விளம்பலுற்றனர்.

"ஓ ஐவர்களே, ஜகமுழுதும் ஒரு குடையி லாளுந் தீரனுனாலும், திகாந்தவரையிலும் ஒரு நொடியிற் சயிக்கும் வீரனுனாலும், ஒருவரிடத்திற் சேவகஞ் செய்யப் புகுந்தால் தீரமும் வீரமுமொடுங்கிச் சேவகஞ் செய்ய வேண்டுமென்று பாவக நீதிசாஸ்திரத்திற் பகுத்திருக்கின்றது. ஆனதால், நீங்களனைவரும் மாறுவேடம்பூண்டு விராடனிடஞ்சென்று தொழில்புரியு நாட்களில், உங்கள் பெருமையையும் புகழையும் பேசாமல் மறந்து விடவேண்டும், பூர்வ காலத்தில் துளபமணி பூண்ட ஆண்டவன் ஒவ்வொரு காரியங்களை நிறைவேற்றுவதற்காக, எத்தனை பாடோ பட்டு அவதரித்துக் காரியசித்தி கண்டு, கமலசம்பவன் முதலாகிய தேவர்களுக்கு அருள் செய்திருக்கின்றார். அதுபோல் நீங்களுங் காலங்கருதி, உங்கள் சிறப்பை மறந்து மச்சராஜனிடம் மருவி, ஏவலாளரினும் எளியவராயிருந்து நாளைக் கழிப்பது நலமாகும். ஒருவனிடத்தில் ஊழியஞ்செய்வதும், அரசர்க் கடிமையாவதும், வேறு வேஷங்கொண்டு வேலைக்கமர்வதும், கொடுமை! கொடுமை! இம்மூன்றில், அரசனிடத்தில் உத்தியோகஞ் செய்கின்ற முறைமையும், ஏவல்தொழில் கேட்குந் திறமையும், அரசன் தயவைச் சம்பாதிக்க வேண்டிய நன்மையும் கீர்த்திதேடுந் தன்மையும் உச்சித வார்த்தைகளைச் சபை மெச்சப் பேசு முசிதமும், நான் உணர்ந்தவரையில் உசிதமாக விளம்புகின்றேன், கேளுங்கள் :—

ஓ திங்கள்குலந் தழைக்க வந்தவர்களே, பகைவருடலிற் பரவிய உதிர மாமிசத்தை முனைத்தலையிற் சுமந்த வேலாயுதந் தரித்த இராஜனுனவன் சபைக்கு வருமுன்னமே, தனக்குத் தகுந்த ஸ்தானத்தில் தான் வந்திருந்து, அரசன் வாக்கிலிருந்து வருஞ் சொல்லினுடைய பொருள்நுட்ப மறிந்து, அந்தச் சொல்லின் கருத்தறிந்து பதிலுத்தரங் கொடுத்து, மனமகிழச் செய்தால் அவ்வரசனது பாக்கியங்களெல்லாம் அவனே பெறத்தக்க யோக்கியனுவான். உலகு காவலனுகிய வேந்தனிடத்தில் நாம் வந்தடுத்த அந்நாள்முதல் இந்நாள் வரையிலும் வீணுய்த் துன்பப்பட்டோம். இதனுல் என்ன பலன் கண்டோம்? என்று பலரு மறியத் தூறி, மனவெறுப்போ டொறுத்துக் கொள்ளுகின்ற அவசர புத்தியுடையவர்கள், இனிமேல் இராஜனுல் கிடைக்கப் போகிற பெருமை, புகழ், ஐச்வரியம் முதலிய சன்மானத்தைப் போக்கடித்துக் கொண்டவர்களென்று சொல்லலாம். மன்னன் மாளிகைக்கு மேற்பட்ட வீடும், அவன் சிறப்புக் கதிகமான சிறப்பும், அவன் நாகரிகத்திற் கதிகமாகிய நாகரீகமும், அவன் அலங்காரத்திற்கு அதிகமான அலங்காரமும், அவன் ஆபரணத்திற் குயர்ந்த ஆபரணமும், அவனது சுகந்த பரிமளத்திற்கு மிகுந்த வாசனையும், அவன் வஸ்திரத்திற் குயர்ந்த வஸ்திரமும், அவன் சொல்லிய நீதி பேதிக்கப் பேசுகின்ற துஷ்ட வார்த்தையும், மதிப்பில்லாத மரியாதையும், வணக்க

மற்ற இணக்கமுங் கூடா. இவைக ளொருவேளை அதிகப்பட்டிருந்தால், நல்ல பாம்பின் விஷத்தை நாள்தோறும் அருந்துவதுபோல் நன்மையைக்களைந்து, உயிரழிக்குந் தீமையை விளைவிக்கும். பூபதிக்குரிய புத்திரரானாலும், அவர்களாசைக்குரிய மித்திரரானாலும், அவர்களன்பு மேற்கொண்ட பௌத்திரரானாலும் இனவருக்கமானாலும் ஜனப்பெருக்கமானாலும், வெட்டி ஜயிக்கும் வீரமுள்ள சகோதரரானாலும், அரசனது ஆணைமீறி நீதிவழுவி நடக்கலாகாது. அப்படி நடப்பார்களாகில், அரசன் மிகுதியான கோபங்கொண்டு, மநுநெறி முறைமைக்கு மாருக உயிர்வதை செய்துவிடுவான்.

ஓ பாண்டுபூபதிக்குரிய பாக்கிய சிலாக்யரே, மன்னர்களுக்கு மகிழ்ச்சியைத் தரு மைந்தர்களும், யுத்த முனையில் வெற்றி பெறுஞ் சத்தியையுடைய சுத்த வீரர்களும், செய்யத் துணிந்து, பிரவேசித்த யாதொரு காரியங்களில் ஏதாகிலுங் காரியத்தாழ்ச்சி நேரிட்டு அந்தச் சங்கதி அவ்விடத்திலிருக்கின்ற மற்ற பேருக்குத் தெரியுமாகில், இதை வெளியிற் பிரசித்தப் படுத்தக்கூடாது. திக்கு யானைகளை யொத்த திறம் பெற்றவர்களானாலும், வேந்தனல் முடியாத காரியத்தை நானே முடிக்கிறேனென்று வீரியம் பேசப்படாது. இராஜன் நமக்கு மிகுந்த நேசவிசுவாசமா யிருக்கின்ருனென்று அவனிடத்தில் தனக் கினிமையான காரியங்களைச் சொல்லி முடித்துக் கொள்ளுகிற பக்ஷமானது, அந்த இராஜனை அடுத்திருக்கிற சில பேருக்குத் துன்பத்தை விளைவிக்குமானுல், அது மகா கொடுமை யென்றறிந்து, புத்திமான்கள் ஒருபோதும் அவ்வாறு செய்யத் துணியார். தாங்கள் நினைத்த காரியங்கள் யாதொரு பயனுமில்லா திருக்குமானுல், வித்வசிரேஷ்ட மகத்துக்கள் கூட்டத்தில் அந்தப் பயனில்லாச் சொல்லைப் பகர்ந்து, பழிப்புக்கிடமாகிய இழிவடையப் போகாது. ஆலோசனையி லுயர்ந்த பேரறிவாளர்கள், ஏழை எளியோர் முதலிய யாவரானாலும் அவர்களைக் கடிந்து கறுவி, ‘வெட்டெனப் பேசேல்’ என்று மேலோருரைத்த நீதியை நினைத்துக் கோபங் கொள்ள மாட்டார்கள். வீரமுடைய வேந்தனிடத்தில் உரிமையா யிருப்பவர்களைப் பகைத்துக்கொண்டு, தன் அருமை பெருமை கொடுமை முதலிய ஆணவப்பேச்சால் மனம்வருந்தத் தூறிக் கடின வார்த்தைகள் சொல்லப்படாது. அப்படி விரோதிப்பவர்களானுல், அது, யாவராலு மாற்றப்படாத கூற்றுவனுற் செய்யப்படுங் கொலைத் தொழிலை நாளுக்குநாள் விளைவிக்குமென்று நன்ருயுணர்ந்து, யாவருக்கும் நல்லவர்களாய் நடந்துகொள்ள வேண்டும். தராதிபன் கொலுக் கொண்டிருக்குஞ் சபையில் தாராளமாய் எதிரில் நிற்கப்படாது. அரசனுக்குப் பின்புறத்திலும் நிற்கப்படாது. சிங்காதனத்திலிருக்கும் வேந்தனுக்கு இருபக்கத்திலும் நெருங்கி நின்று, அவனுடைய கண்கள் யாரைப் பார்க்குமோ என்றும், அக் கண்ணேக்கானது கருணை நோக்கோ கலகநோக்கோ வென்றுங் கண்டறிந்து; காலமு மிடமும் கருதி நடக்கவேண்டும்,

மேலும் அரசனுடைய வாக்கிலிருந்து வருகிற வசனத்தைக் கண் சிமிட்டாமற் பார்த்துக் காதுகொடுத்துக் கேட்டு 'எவர்களுக்கென்ன சிலாக்கியமோ, ஏழைகளுக்கென்ன பாக்கியமோ, எதிரிகளுக்கென்ன அபாக்கியமோ' என்று யோசித்துக்கொள்ள வேண்டும். அரசன் அரண்மனையிலுள்ள நன்மை தீமைகளைத் தானறிந்தாலும், ஒருவரால் கேள்விப்பட்டாலும் இராஜ காரியங்க ளெதுவானாலும், மற்றொருவருடன் சொல்லாமல் மறைக்கவேண்டும். உடனே அதை மறக்கவும் வேண்டும். அந்நியர் முதலிய மன்னவர்களால் சண்டை சச்சரவு பொல்லாங்காகிய கட்டுவார்த்தைகள் நேரிட்டுக் கேள்விப்பட்டால், அதைக் கெட்டியாய் விசாரித்துத் தீர்க்காலோசனை செய்த, உடனே தன் எஜமானனுக்குத் தெரியப்படுத்தி மேன்மையைப்பெற்று, அவ்வரசனுக்கு மெய்ப்படப் பொருந்தி யிருப்பதுவே அழகுக்கழகாகிய அணியை யுண்டாக்கும். இராஜஸ்திரீக ளிருக்குமிடத்தில் தனித்துப் போகப்படாது. நாணம்-மடம்-அச்சம்-பயிர்ப்பு என்னும் இந்நான்கு மடைந்த ஸ்திரீகளிடத்திலும், குள்ளனிடத்திலும், கள்ளனிடத்திலும் சிறுபிள்ளையிடத்திலும், ஈனஜாதியானிடத்திலும் சிநேகஞ் செய்யலாகாது. சிநேகம் பண்ணினால், அது உடனே கலகம்நேர்ந்து, அவமரியாதைக் குள்ளாக்கி, உயிர்தண்டனை வரையிலுங் கொண்டு போய் விட்டுவிடும்.

ஓ பரமபுருஷோத்தமரே, உலகமெல்லாந் தொழுதற்கரிய உயர்ந்தோராயினுஞ் சிங்காசனக் கொலுமுக நோக்கிச்சென்றால், அவ்வரசன் தனக்கு மரியாதை செய்திலனென்றும், வாகனங் கொடுத்திலனென்றும், வசனித்திலனென்றும், ஆசன மளித்திலனென்றும், போஜனம் செய்வித்திலனென்றும், வரிசை வண்மை மணியணிப் பணி தந்திலனென்றும், விசனமேற்கொண்டு குரூரப்படலாகாது. ஒரு வேளை அக்கொற்றவனால் சகல வெகுமானமும் பெற்றால் உடல் பூரித்து, தன்னைத்தானே மறந்து மனமகிழ்ந்து கர்வங்கொள்ளப் படாது. அதிக சந்தோஷம் அதிக துக்கந் தருமென்று சாஸ்திரஞ் சொல்லுகின்றமையால், அவ்வரசனாலப்போதே அவமானம் நேரிட்டாலும் நேரிடும். அதைக் குறித்துச் சிந்தை வாடப்போகாது. அரசனால் வந்த நன்மை தீமை யிரண்டையுஞ் சமமாகக் கொண்டு சஞ்சல மில்லா திருந்தவர்கள், எல்லாமுணர்ந்த வல்லவர்களென்று இயம்பத்தக்கவராம். இராஜன் ஒருவர்மீது கோபங் கொண்டு அவன் செல்வங்களைக் கைக்கொள்ளக் கருதிய காரணத்தைத் தாங்க ளறிந்த துண்டானால், அந்தப் பேச்சை யாரிடத்தும் பேசலாகாது. அதைக் குறித்து அரசனையு மேசலாகாது. கார்மேகங் கலந்து பொழிகின்ற மழையிலும், ஊர் வெந்து உலர்ந்து கரிந்துபோகக் காயும் வெயிலிலும், பைசாசு நித்திரை செய்யும் பாதிராத்திரியிலும், கைசாய வீசி மோதுங் கடுங்காற்றிலும், வேந்தன் ஒரு வேலையாக அனுப்புவானானால், தன்னிடத்திற் சொல்லிய காரியமே கண்ணாகக் கொண்டு, தான் போன அந்தக் காரியத்தை முடித்து வர வேண்டுமல்லது வேறொன்றும் நினைக்கப்படாது. இராஜகாரியம் நிறைவேறுகிற

வரையிலும், சோகம் சோம்பல் தேகவருத்தம் பசி இளைப்பு ஆயாசம் தாகம் மனஸ்தாபம் நித்திரை பெருமை அருமை சிறுமை முதலிய ஒன்றையும் பொருளாகக் கொள்ளாமல், மானத்தையும் மன்னன் சொன்ன கட்டளையையும் முக்கியமாகக் கருதி முடிவுபெற நடத்திவரல் வேண்டும். கொலுமுகத்தில் நின்ற ஒருவனை யழைத்துப் பகைவர்மேலனுப்பினுல், அப்பகைவர்குடி கெடும்படி வென்று தங்களரசாட்சியைக் காக்கவேண்டும். அவ்வரசனைத் தங்கள் தங்கள் கண்மணிபோற் பார்க்கவேண்டும். எந்தவேளையும் அரசனைப் புகழ்ந்து பேசவேண்டுமல்லது, எப்போதும் இகழ்ந்து பேசலாகாது.

ஓ அறமாதி புருஷார்த்தங்களை ஆபரணமாகப் புனைந்த அருஞ்சிலரே, உற்ற துணையாகக் கொற்றவன் நேசம் பெற்றிருந்தாலும், அரசன் அவனை உயிர்போல் வைத்திருந்தாலும் அவனது பொன்னைப் பொருளைப் பூமியை நேமியைக் கன்னற்கோற் கள்ளரைப்போற் கைப்பற்றக் கருதலாகாது. கணக்கு முதலிய காரியங்களிலும் மறந்தும் வழுவலாகாது. ஒரு வேளை இராஜன் சந்தோஷமடைந்து, பொன்னை, பொருளை, பூமியை, மாளிகையை, மனையைக் கொடுத்தால் ஆசை அன்புடன் அவைகளைப் பெறத்தக்கது. மற்றோர் உபாயதந்திரங்களாற் கிரகிக்க நினைப்பது, ஆலகால விஷத்தை அமுதென்று நினைத்த ஆசைபோலாகுமென்று, அறிவிலுயர்ந்தோர் மோசம்போகாமற் கிடைத்தவரையிலுந் திருப்தியடைந்து சத்தியதருமந்தவருமலிருப்பார்கள். இஃதன்றியும் 'காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்' 'கரும்புள்ளபோதே நாற்றிக்கொள்' என்னும் பழமொழியை நினைத்து, இந்தக் காலத்திற் சம்பாதிக்காமல் இனி எந்தக்காலத்திற் சம்பாதிக்கப் போகிறோமென்று கைகொண்டவரைக்குங் கொள்ளையடிப்பதற் குடன்படுவோர், கசடர் அகடர் கயவர் குயவர் என்றுரைக்கப்படுவது மன்றி முன்பின்னுள்ள முதலுமிழந்து, முனையு மழிந்து, தேசப் பிரஷ்டத்துவமாவார்கள். கொலுக்கொண்டிருக்குங் கோவிந்தன் சபையில், பொய் புரட்டு பெருமோசம் டம்பம் ஜம்பம் தும்மல் விக்கல் கக்கல் நெட்டை சோம்பல் கொட்டாவி குறுகுறுத்தல் திமிர்விடுதல் முதலாகிய துர்க்குணங்கள் வரக்கூடாது. ஒருவேளை வருமாகில், அந்த இடத்தைவிட்டு அப்பாற்போய்த் தீர்த்துக்கொண்டு வரவேண்டும். களிப்பாகச் செய்யுங் கயப்பாகிய வஸ்துக்களை கனவிலுங் கருதப்படாது. அதை யுட்கொண்டு காவலன் சமூக மேறப்படாது. 'கண்ணாற் கண்டதும்பொய் காதாரக்கேட்டதும் பொய் தீரவிசாரிப்பதுவே மெய்' இதும் முதியோர் மொழியாதலால், யாதொரு காரியத்தையும் நாவடக்காமற் பதறிச் சொல்லப்படாது. அப்படிச் சொன்னவர்களுக்குப் பெருந்துன்பத்தையும் மனுஷப்பதரென்னும் பெயரையும் வருவிக்கும். அரசனுல் நியமித்த குற்றவாளி முதலிய கொலையாளருடன் கூடிக் கலந்து குலவலாகாது. கூடினுல், இவனும் அந்தக் குற்றங்களுக்கு உரியவனுவான். அரசன் கைகொடுத் தழைத்தால் ஆனந்தப்படாமல், அந்தகன் அழைக்கவந்தபோது அவனைக்கண்டு நொந்தது

கின்ற அறிவிலார் உயிர்போலொடுங்கியடங்கி, வாய்பொத்தி வணங்கி வரவேண்டும். அரசனிடம் வரும்போது பூமியதிரத் திடுதிடென்று நடந்து, அலட்சியமாய்ப் பதறி வரலாகாது. 'அடக்கம் அமரருளுய்க் கும்' என்னும் வாக்கியத்திற் கிணங்க மருவிச் சுகம் பெறவேண்டும்.

"ஓ சர்வஜன மனோரதராகிய சத்தியசீலர்களே, வெற்றிவேலேந் திய வேந்தனிடத்திற் கட்டிக்காத்துப் பொருந்தி யிருப்பவர்கள் கொசுகு போன்ற சிற்றறிவுடையவ ராஞலும், அவர்களோ டெதிர்த் துப் பகைத்துக் கொள்ளப்படாது. அவர்கள் பகையானது நல்ல தருணத்திற் கழுத்துக்குக் கத்திபோல் வந்துநேரும். இவ்வரசனிடத் தில் வெகுவாகிய செல்வமும், சுபமாகிய இன்பமும் பெறுகிறதற்காக வல்லவோ எந்நேரமுங் கோள் குண்டினிசொல்லி நயிச்சிகமாக நடந்துகொண்டானென்று அரசனைச் சூழ்ந்திருப்பவர்கள் யாவரும் இகழ்ச்சியாய்ப் பேசிக்கொள்ளும்படி இடங்கொடுத்து, அதனுற் பலவித வளங்கள் சுலபமாய்க் கிடைப்பதானாலும், அறிவினையுடை யோர் அவ்விதப் பழிச்சொல்லுக்கு ஆசை வைக்கார்கள். இராஜன் கொண்டாடிப் புகழ்ந்த போதிலும் பேரறிவாண்மையென்னும் பெருஞ் செல்வப்பெரியோர்கள், வெகுபேர் நம்மை மெச்சவேண்டு மென்று இச்சைகொண்டு, தம்மைத்தாம் மறந்து, ஆணவத்தாற் சிறந்து அகந்தைகொள்ளமாட்டார்கள். பரிசுத்தவான்களாகிய உத்த மர்கள் உலக காவலனாகிய அரசனையும் உபதேசஞ் செய்தருளிய குரு வையும் வித்தியாப்பியாசம் பண்ணிய உபாத்தியாயரையும் முத்தி பெறுதற்குப் பெற்ற பிதாவையும் பத்திசெலுத்துந் தெய்வத்தையும் தந்தையெனச் சிந்தித்து, தினமுமேத்தித் தொழுது வாழ்த்திப் போற்று வார்கள். ஆதலால், நீங்களனைவரும் இவ்வகையான நற்குணங்களைக் கடைப்பிடித்து, விராடராஜனையடுத்து, நாள்தோறுங் குற்றமற்ற ஏவல் தொழிலை முடித்து, அகந்தையற்ற மனத்தினராய்ப் பெருமை பொருந்தி, இன்சொல் விளைத்து, அஞ்ஞாதவாசம் ஒருவருஷமுங் கழிப்பீர்களானுல், அது உங்களிடத்திலுண்டாகிய நல்ல நினைப்புக் குத் துணைக் காரணமா யிருக்கும்" என்று தௌமியாசாரியர் சொல்ல வும், அப்போது பர்வதாகிர்தியாகக் குவிந்த தோளிணையுடைய பாண் டவர்கள் ஜயங்கொண்டதைப் பார்க்கிலு மேலான விருப்பமுடையவர் களாய், பௌரோகிதருடைய மனமகிழ இதனைச் சொல்லலுற்றார்கள் :

"ஓ வேதியர் பெருமானே, காவலனிடத்தில் ஏவல்செய்யு முறைமைகளை எங்களுக் கின்று கற்பித்தருளினீர். ஓ குறைவற்ற தவராஜ சிங்கமே, நீர் உரைத்த திவ்விய மொழிகளை வேதபாடங் கற் குஞ் சந்தைபோலுஞ் சிந்தையுட் கொண்டோம். இனிமேல் நாங்கள் மறைந்துறைந்து ஒருவருடந் தொலைக்கிறவரைக்குந் தேவரீர் தவவேடம்பூண்டு, மாதவர்கள் வாழும் வனமடைந்து மருவத் தக்க தன்றோ ?" என்று செந்தாமரை போன்ற அவரது திருவடியைத் தொழுது போற்றி, இதுவரையிலும் பக்தியுடன் பூசை பண்ணிக் கொண்டுவந்த நித்தியாக்கினியை நெறியோடளித்தார்கள். அதனைத்

தௌமியாசாரியார் அன்போடு கைப்பற்றிக்கொண்டு, பாண்டவர்தம் மைப் பட்சமாய் நோக்கி, அருண்மலர் முகத்தோடு ஆசிர்வதித்து அவ்விடம் விட்டு அப்பாலெழுந்து, மாசற்ற மாதவர் வாழ் வனம் புகுந்து, தேசுற்ற தவத்திற் சீர்பெற்றிருந்தார்.

## பாண்டவர்கள் வில் முதலிய படைகளை வன்னிவிருக்ஷத்தடியிற் பதனஞ்செய்து வைத்தல்

கேட்டீரோ ஜனமேஜய மகாராஜனே, இப்பாற் பாண்டவர்கள் தங்களுக்குந் திரௌபதாதேவிக்கும் பணிவிடை செய்துவந்த பாங்கர் பாங்கியர்களைப் பார்த்து, "நாங்கள் ஒருவருடம் ஒளித்திருக்க வேண்டிய காலம் நேரிட்டபடியால், அதுவரையிலும் நீங்கள் யாவரும் விசனப்படாமல் மான்களுலாவும் வனஞ்சூழ்ந்த பாஞ்சாலதேசஞ் சேர்ந்திருங்கள்" என்று அவர்களுக்கு ஆதரவு சொல்லி யனுப்பிவிட்டு, பெருமையிற் சிறந்த பாண்டவர்கள் மகாலட்சுமி போன்ற பாஞ்சாலியுடன் சிலதூரம் போகையில், தருமராஜன் தன் தம்பியரை நோக்கி, "ஓ என்னருமைச் சகோதரர்களே, நாம் இந்த ராஜன் சார்பிற் சார்ந்து நமது தொழில்களை நடத்து நாட்களில் நமது கரத்திலிருக்கும் ஆயுதங்களை ஒருவருமறியாமல் ஒளித்து வைப்போமாளுல், நம்மைச் சத்துருக்கள் முதலாகிய யாவரும் கண்டுகொள்ள மாட்டார்கள்" என்றுர். அச்சொல்லைக் கேட்ட அர்ச்சுனன் வணங்கி, "அண்ணு! தேவரீர் சொன்னது நியாயந்தான்" என்று வாய்விட்டேங்கியிரைந்து, பெற்றதாயைப் பிரியும் கன்றுபோ லேங்கிப் பதைபதைத்துத் தனது வெற்றிகொண்ட காண்டீபத்தையும், அஸ்திரம் நிறைந்த அக்ஷயத் தூணியையும், சஸ்திரமாகிய மற்ற ஆயுதங்களையும் கஷ்டத்துடன் கழற்றிக்கொடுத்தான். மாருதி மைந்தனாகிய பீமசேனனும் வாரிதிபோற் பொங்கி, சேருதற்கரியகோபங்கொண்டு சிந்தை சோர்வடைந்து,துன்பந்தாங்கி நைந்து, மேகங்கள் வெளுக்கச் சிதைக்கும் வில்லையும், நாகங்கள் பதைக்க வதைக்குங் கதையையும், மோகமும் மானமுமுடைய படையையுஞ் சோபத்துடன் அயர்ந்து மனமுருகித் தந்தான், நகுலசகாதேவ ரென்னுந் தம்பியரிருவருந் தலைவனாகிய தருமராஜனுரை தவருதவர்களாய் பல்லோருங் கவலைகொள்ளும் வில்லாயுதம், வேலாயுதம், வாளாயுதம், தோமராயுதம், சூலாயுதம், கேடயம், அம்பறாத்தூணி முதலிய படைகளை அவிழ்த்துக் கொடுத்தார்கள்.

இப்பால் ஒப்பில்லாச் சித்தசுத்தமுள்ள தருமராஜன் தம்முடைய ஆயுதங்களையும் கூடவைத்து மொத்தமாகச் சேர்த்து, இவைகளை யொருவரும் உணராதிருக்கும் இடந்தேடி வைக்க வேண்டுமென்று யோசித்துச் செழுமையுடன் வளர்ந்து இருளுக் கிருப்பிடமாக வுயர்ந்து தழைந்து கவிந்திருந்த ஒரு வன்னிமரத்தோப்பின் வளப்பத்தைக் கண்டு மகா சந்தோஷங் கொண்டு அதிலிருந்த ஒரு மரப்பொந்தில் இவ்வாயுதங்களை வைத்து, பகைவர் முதலாகிய பலருக்குந்தோன்றாமலிருப்பதற்காக அவைகளை மான்தோலால் மறைத்து மூடிக்கட்டும்படி

பீமசேனனுக்கு உத்தரவுசெய்து, தந்தையாகிய யமதருமராஜன் திருவடியைச் சிந்தித்து வந்தித்து, "சுவாமி, எங்களுக்கு வெற்றியையும் வீரத்தையுங் கொடாநின்ற ஆயுதங்க ளனைத்தையும் இந்த வன்னி விருட்சத்தில் வைத்திருக்கின்றோம். இவைகளை நாளுவது நரனுவது எடுக்கத்தக்கதேயன்றி, மற்று யார் வந்து எடுத்தாலும், இம்மரத்தின் கிளையை யடுத்தாலும், இவைகள் பெரும் பாம்புருவங்கொண்டு, ஆலாலவிடத்தைச் சுவாலா மாலிகையாய் வீசி, வெகுண்டு மேல் விழக்கடவன்" என்று கட்டுரையாகிய உறுதிமொழியால் திடத்த வரத்தைப்பெற்று, அவ்வரத்தைப் பரீட்சிக்கவேண்டி பீமசேனனையழைத்து, "நாம்பத்திரப்படுத்திய படைகளைப்போய்ப்பார்" என்றுரைத்தார். அப்போதே பீமசேனன் போய் அந்த மரத்தின் கிளைமேற் சார்ந்து எட்டியெடுக்கக் கிட்டியபோது, அவ்வாயுதங்கள் உடனே பெரும் பாம்புருவாகி, மட்டுமிதமற்ற கொடுவிடத்தைக் குபீரென்று கக்கி, அழலால் தகித்துத் துரத்துவதாயின, அதைக்கண்ட பீமன் பெருமூச்சுவிட்டு, பொறிபுலன் கலங்கி, புகல்சொலிப்புலம்பி, பொன் போன்ற முகந்திரிந்து இரைந்தகன்றனன். அச்செய்கையைக் கண்ட தருமராஜன் முதலிய யாவருந் துதிக்கைபெற்ற யானைபோல் துயர்நீங்கி மகிழ்ந்து, அவ்வன்னித் தருக்கெதிரே யாவரும் யாமள வேதத்தால் துதிசெய்யா நிற்பச் சத்தக்கன்னியரு ளொருத்தியாய்ச்சங்குசக்கராதிப்படைகளோடெழுந்தருளிய ஒரு மகாகாளியின் திருவடி தொழுது, அவ்விடம் விட்டு நீங்கிச் சில தூரத்திற் கப்பாலிருந்த செந்தாமரைப் பொய்கையைச் சேர்ந்து ஸ்நானம் பண்ணி, நீர் துவட்டி நெடு மயிராற்றி வேதவிதிப்பிரகாரம் மத்தியானக்கடன் முடித்து, அவரவர்கள் தந்தையரின் பதத்துணையைச் சிரமேற்கொண்டு, அத்தந்தையர் வசிக்குந் திக்கு நோக்கித் தண்டனிட்டு "ஓ தென்றிசைக் கடவுளாகிய யமதருமமூர்த்தியே, ஓ வடமேற்றிசைச் செல்வனுகிய வாயுபகவானே, ஓ கிழக்குத் திசைத்தேவாகிய இந்திர மகாராஜனே, ஓ ஆகாயவாசிகளாகிய அசுவனி தேவர்களே, நீங்கள் நாங்க ளெடுக்கவேண்டிய வேடத்திற்குத் தகுந்த உபகரணப்பொருள்களெல்லாம் உதவிசெய்து, சுஜாதிகப் பிரகாசமுந் தந்தருள வேண்டும்" என்று வருந்திக் கேட்டுக் கொண்டார்கள். அவ்வாறே அத்தேவர்கள் தங்கள் தனயர்கட்கு அநுக்கிரகஞ் செய்தருளினுர்கள்.

### பாண்டவரும் பாஞ்சாலியும் வேற்றுருக் கொள்ளுதல்

கேட்டீரோ, ஜனமேஜய மகாராஜனே! இப்பால், தருமபுத்திர மகாராஜன் ஒளிவிடுங் கிரண வுதய சூரியன்போற் சதுர்வேத சம்பன்னனுருவாய் தழைத்த பின்குடுமியும், செழித்த முப்புரி நூலும், கவிந்த வெண்குடையும், பிடித்த தண்டுகமண்டலமும், விபுலப்பட்டஞ்சு வேஷ்டி யுத்தரியமும், காதிற் குண்டலமும், கையிற் பவுத்திரமும், கண்டவர் மதிக்கும் புண்டர நுதலும், கண்ணிற் கடாட்ச வீட்சண்யமும், கரத்தில் ஜபமாலையும், கனிவுறும் வாக்கிற் பனிமொழியாசியும் பெற்று, முனிவரிற் சிறந்த முகவிலாசமு முடையவராயினர். மற்போர்



தருமராஜர் மாறுவேடத்துடன் விராட்ராஜன் சபையில் வீற்றிருத்தல்

வல்லவனுகிய பீமனுனவன் மடைத்தொழிலாளருருவ்மமைந்து, நுதற்கிசைந்த திலதவகையும் செவிக் கிசைந்த திருமணி நகையும், பாக சாஸ்திரப் பேச்சும், சந்தன பாளிதப் பூச்சும், தாழ்ந்த இருகரவீச்சும், சரிகைப் போர்வையின் வேய்ச்சும் உடையவனுய் சிருஷ்டி கர்த்தாவினுலுஞ் செய்தற் கரிய நூதனவேடங் கொண்டான். மண்ணுலகத்தாரும் விண்ணுலகத்தாரும் போற்றி விரும்பும் பவளமலை போன்ற பரமசிவமும், அப்பவள மலைமேற் படர்ந்த பச்சைப் பசுங்கொடிப் பார்வதியாரும் ஆசைப்பெருக்கோடடுத்து முன்னின்று அருட்பார்வையளிக்க, தன்னிலை தவருத் தவத்திலிருந்து, உன்னிய கருவிக ளொருங்குடன் பெற்று, காட்சிகண் டருளிய காண்டீப அர்ச்சுனன், கண்ணுதல் தன்னுடன் கலந்துவிளையாடிய, தன் திருமேனி வாசனையும் நெருங்கலர்க் குழலும், கலகலவென்று கலித்த கைவளையும், உடலைமறைக்கும் உயரரைச் சட்டையும், கருநிறக்குவளை கடுத்த கண்களும், உடுக்கைக்கிணையாய் உற்ற சிற்றிடையும் உயர்ந்த சரிகையோங்கு பட்டுடையும், உலவுஞ் சொகுசாகிய பிடி நடையும், செந்தூரப் பொட்டணி செவ்விய நுதலும், தாளமுங் கோலுஞ் சதங்கையு முடையவனுய், பேடியரிலுயர்ந்த பேருரு வமைந்தான். பின்னவர் இருவரில் முன்னவனுகிய நகுலராஜனைவன், சுலைப்புறத்துங் காதின்புறத்துஞ் சுருள்செய்து கத்தரித்துவிட்ட மயிர்க்குச்சும், வன்னபப்பிச்சமும், முறுக்குமீசையும் கனகமயச் சுருணை கலந்து கட்டிய வண்டிற்பாகையும், நெற்றியிற் கோபியும், கஞ்சுகக் கவசமும், கலகலவென்னுங் குதிரைச்சம்மட்டியும், கதிநடை பழக்குங் கயிறுங் கொண்டு, குதிரைகளி னுடைய குணம்-குற்றம்-கோணம்-வட்டம்-வளைவு-மாறல்-பிணி வரும்விதம் - பிணிதீர்க்கும்விதம்-அவுஷதம் இவைகளனைத்து முணர்ந்த குதிரைப் பாகனைப்போற் குறைவில்லா வடிவெடுத்தான். மகாவிற்பன விவேக சகாதேவனைவன் சிரசில் நிறைந்து பரந்த கொண்டையும் வளர்ந்த தாடியும் கிளர்ந்த மீசையும், செம்மண் வெண்மண் திலகக்காப்பும், கருங்கம்பளமுங் கச்சைப்பையும், கயிறுங்கோலுங் கன்றின் வாய்ப்பூட்டும், காதணிகுழையுந் தாதுதழையும், கந்தைவேஷ்டியும் பெருங்குரல் தாஷ்டியு முடையவனுய், பலகோடி பசுக்களைப் பாதுகாக்குங் கோபாலனைப்போல் வடிவங்கொண்டான். வேலாயுதம்போன்ற கண்ணினளாகிய பாஞ்சாலி தலைவீசி வகிர்ந்து, கூந்தல்விட்டு முடிந்து, நெற்றிக்குச் சுட்டி கட்டி, நீலவிழிக்கு மைதீட்டி, இரத்தினப்பணிகள் பூட்டி, வாசனைப் பொடி கூட்டி, அண்ணல் முதலிய ஐவருங் களிக்க, வண்ணமகளுருவாமெனச் சமைந்தாள்.

### தருமராஜன் கங்கபட்ட ரென்னு மந்தண சிரேஷ்டராய் விராடனுக் காசாரியத்தன்மை பூண்டிருத்தல்

கேட்டீரோ ஜனமேஜய மகாராஜனே, இவ்வாறு இவர்க ளறுவருந் தாங்கள் நிச்சயித்துக்கொண்ட வண்ணம் வெவ்வேறு வேடந் தாங்கி, ஒருவரை யொருவர் பார்த்து உற்சாக மடைந்து மச்சராஜனிடத்தி லொருவருடம் வாழலாமென்று இச்சைமேற்கொண்டு,

அச்சமில்லாதவர்களா யிருந்தார்கள். அப்போது மறுவகன்ற, தரும ராஜன் மனமகிழ்ந்து, பலவித உபாய வளப்பமும் பேசி, "ஓ திற முடையவர்களே, ஊன்நாறும் வேலோங்கிய விராடனிடத்தில் நான் போய்ச் சேர்ந்த பிற்பாடு, நீங்களிவரும் முறையாகத் தனித்தனி வந்து சேருங்கள். நான் அவ்விடத்தி லிருந்தால் என்னை நோக்கி வணங்கி யிணங்கிப் போற்றுதற் கெளிதாயிருக்கும்" என்று விளம்பிக் கிளம்பிய அறக்கடமை நீங்காத அண்ணல், தம் தம்பிமாரும் பாஞ்சாலியும் வாழ்த்திப் பரிதவித்துவாட, தேவர் முதலிய யாவருங் கொண்டாட, மாதவ வேதியர் வடிவங்கொண்டதற் கேற்பக் கங்கபட்டரென்னுந்திருநாமமும் இளஞ்சூரியன்போற் பிரகாசமும் பாற்கடலைப்போல் முப்புரிநூலும் பரந்தமார்போடுயர்ந்ததோளும் வெகுவுலாச முகவிலாசமந்தஹாசமும் சுகந்தவாச மாலையு முடையவராய், விகடதடகரடகட வாரணம்போற் சென்று, மராட-கர்நாட-கன்னட-கிராட-மலைநாடர் முதலியோர் வந்திறைஞ்சும் மணிக்கதவமைந்த வாசலிற்போய்நின்று, வெண்குடை நிழலில் நன்குடன்பொருந்திய விராடராஜனுக் கறிவிக்கச் சொன்னார். அவ்விடத்தில் காவலிருந்த தூதுவர் உடனே அரசனிடத்திற் சென்று தங்கள் வாய்மூடிக் கைகட்டி, "சுவாமி பராக்! யாரோ ஒரு பெரியவர் நமது கொலுமுக வாசலில் வந்திருக்கிறார்" என்றார்கள். அவர்கள் பேச்சைக்கேட்ட மச்சராஜன் உடனே எதிரோடிச் சென்று, ஐம்புல னொடுங்கப் பணிந்து, முகமலர்ந்து, அகங்கணிந்து, கரங்களிரண்டையுங் குவித்துச் சிரத்திற்பொருந்தி, கருத்தில் துதித்துச் சேவித்து நின்றான்.

உடனே கங்கபட்டர் "மங்களானிபவந்து" என்று உபசாரஞ் சொல்லி, இடக்கையை வலக்கையுடனெடுத்து இருக்குவேத சாகையினால் ஆசிர்வசன முரைத்தருளினார். அந்த விராடன் சபையிலிருந்த யாவரும், வந்த வேதியர் பெருமானைக் கண்டு விந்தை யென்றுட் கொண்டு தொழுதார்கள். அந்த வேளையிற் சந்திரவிம்ப பிரம தேஜசு ஜொலித்து மகா சோப்பியமா யிருந்த கங்கபட்டரால் மங்களாசனம் பெற்ற மகாராஜன் அவரை இச்சைமேலான பட்சத்துட னழைத்துப் போய்,வைதிகர்களிருக்கவமைத்த ஆசனத்தில் எழுந்தருளப்பண்ணி, அவர் உபய திருவடிக்கு அருக்கியம்-பாத்தியம்-ஆசமன்னியம்-அபிஷேகம்-வஸ்திரம்-புஷ்பம்-அரிச்சந்தனம்-அக்ஷதை-தூபம்-தீபம்-நைவேத்தியம் முதலிய உபசாரங்கள் யாவும் புரிந்து பக்திசெலுத்திப் பரிந்தேத்திப் போற்றி, வாய்பொத்தி நின்று, "சுவாமி, தேவரீர் யார்? எவ்விடமிருப்பது? இவ்விடத்திற் கெழுந்தருளிய காரணம் யாது? தங்களுடைய நாமதேய மென்ன?" என்று கேட்டான். அதற்குக் கங்கபட்டர் "அதிவீரபக்குவமுள்ள அரசனே, இந்தச் சக்கரவாளஞ் சூழ்ந்தபூமியை ஆஞ்ஞாச்சக்கரஞ் செலுத்தியாளுந் தருமராஜருடன் பழகி யிருந்தேன். அவர் வனவாசம் பண்ணியபோதுங் கனநேசம் பண்ணிக் கலந்து திரிந்தேன். அவர் என்னைவிட் டொருவருடம் பிரிந்திருக்கவேண்டி வந்ததால், நான் உம்மிடத்திற் சிலநாள் கழிக்கலா

மென்று வந்தேன்'' என்று வேள்வியிலுங் கேள்வியிலு மிக்கோனுகிய தக்கோ னுரைக்க, மனுநீதி தவருத மச்சராஜன் கேட்டு, மதியால் மகிழ்ந்து துதியால் புகழ்ந்து, பரவசமடைந்து, தெளிவாகிய அறிவும் அன்பும் ஆசையும் உள்ளக்களிப்பும் ஒளிகொண்டிலங்க, ''ஓ என் ஆண்டவனே, தேவரீர் இந்தப்பட்டணத்திற் கெழுந்தருளிய பிரயோ ஜனமானது நான் ஏழேழு பிறப்பிலுந் தேடிக்கொண்ட நல்வினையின் நலமே யல்லது வேறில்லை. ஆதலால், நாதகீத வேதமுனிவராகிய தேவரீருக்கு, இவ்விடத்தி லெத்தனை நாளைக்கிருக்க இஷ்டமோ, அத்தனை நாளும் அதிபதியா யிருக்கலாம்'' என்று வித்தகவிராடன் புத்தி மேற்கொண்டு சொல்லவும், கங்கபட்டரானவர் அவ்வாறே புநிதமாகிய சிங்காசனத்திருந்து, வேதியர் முதலிய பல மாதவரும் விராடர் முதலிய பல பூதரருந் தொழ பவளச்செபமாலை கரத்திலுங் குவளைத் தொடைமாலை உரத்திலுந் தரித்து இருந்தருளினுர்.

### பீமார்ச்சுனர், பலாயனனும் பிரகந்நளையுமாய் அட்டிற்ருெழிலும் அருநடச்செயலும் ஏற்றிருத்தல்

பின்னுஞ் சிலநாள் சென்ற பிற்பாடு விற்போருக்கும் மற்போருக்கும் இவன்தானென்னும் பலம்பொருந்திய கதாயுதபாணியாகிய பீமனுனவன் தான் தெளிந்த தேவாமிர்தத்திற் கொப்பாகச் சமையற் செய்யும் பக்குவத்தைக் குறித்தும், கல்வியின் திடத்தைக் குறித்துந் தெரிவிப்பதற்கு, ஏகபோகத்திற் கொருவனுகிய விராடன் சபைக்குட் புகுந்தான். அங்கே நாகரத்தினம்போல் நலம்பெற்றிருந்த தருமராஜனைக் கண்டு அவன் திருவடியில் தண்டனிட்டு, ''இம்மண்டலத்தரசே, யான் மடைத்தொழிலுக்குரியவன். கூட்டுக்கறி குழம்புக்கறி குழைக் கறி பொறிக்கறி பச்சடி கிச்சடி முதலிய பலவகைக் கறிகளும், உண்ணல் தின்னல் நக்கல் பருகல் என்னு மின்னுன்கு உணவுகளும், அவ்வவற்றிற் குரிய அறுசுவை நிறைவோ டமைவுறச் சமைப்பேன். ஒரு சமயத்தில் மல்லுங் கொடுப்பேன். ஒரு சமயத்தில் வில்லு மெடுப்பேன். அல்லும் பகலும் நல்லவனுய் நடப்பேன். பலாயனனென்னும் பெயர் பெற்றேன். திரிபுவனத்தில் தேடிப்பார்க்கினும் என் தொழிற் கிணைசொல்ல எத்தொழிலு மிராது. எனக்கிடானவர் எவருமில்லை. சமயபேதத்தால் தருமராஜனுக்கிளைய பீமனென்பவனை விட்டு, உம்மிடத்தி லொருவருட மிருப்பதற்கு உன்னி வந்தேன்'' என்ருன். இவ்வாறியம்பிய பலாயனன்பேரில் இஷ்டங் கொண்டு முகமலர்ந்த விராடராஜன், அவன் தலைமேற் கைவைத்து, பொன்னுரமும் பூவாரமும் இரத்தினுபரணமும் முத்தாரமும் வச்சிர வாகுவலயமும் மரகத மதாணியும் மெல்லிய வஸ்திரங்களும் யானை குதிரை பல்லக்கு முதலிய வாகனங்களும் பெருமையாகக் கொடுத்து, ''ஓ சுயம்பாகி, அரசனிடத்திலிருக்கின்ற உத்தியோகங்களிற் சிறந்தது தாய்போ லூட்டிவைக்குஞ் சுயம்பாகித்தொழில், ஆதலினுல், இன்று முதல் எனக்கும் என் சுற்றத்தவருக்கும் இனிமையுடன் உண்பிக்கும் உரிமையும், இங்குள்ள மடைத்தொழிலாளரனைவருக்குந் தலைமையாம்

அதிகாரமும் உனக்குக் கொடுத்தோம். இந்த வேலையை உன் சொந்த வேலையாகப் பார்த்து, சிந்தை வேறுபடா திருக்கவேண்டும்'' என்று சொல்லி யனுப்பி மிகக் களித்திருந்தான்.

இப்படி வாயுபுத்திரன் சேர்ந்து மடைத்தொழிலில் தலைமைபூண்டிருக்க, மறுநாட் காலையில் அறிவாலுயர்ந்த பிரகந்நளை யென்னும் பேடியானவள் வட்ட வெண்குடையும் மணிமகுடமுந் தரித்த மச்சராஜனிருந்த உச்சித சபையானது சிறக்கும்படி சென்று, முப்புரிநூல் விப்பிரரான கங்கபட்டரென்னும் முதல்வன் பாதத்தில் ஒருக்களித்து வணங்கி, ''ஐயா, எண்டிசையுங்கொண்டாடும்காண்டீபதரனுன அர்ச்சுனனுடைய அரண்மனையிலிருக்கும் பேடியர் அநேகரில் நானொரு பேடி. நாதப்பிரமம் சத்தப்பிரமம் ஒலி ஒத்து தாளம் மேளம் முதலிய யாவையுங் கலந்து, சுரம் சுதி லயை முதலியவை குறையாமற் பாடவும் ஆடவும், நடன சாஸ்திரப் பிரசங்கஞ்செய்யும் பேதைப் பருவப் பெண்களுக்குப் பரதங்கற்பிக்கவும் நான் கற்றிருக்கிறேன்; பிருகந்நளை யென்னும் பெயரினை யுடையேன். உமது செல்வ மாநகரிலிருந்து சில நாள் கழிக்கும்பொருட்டு இங்கு அடைந்தேன் ; என்னை நீர் ஆதரிப்பீரானல், வேதமும் வேள்வியுமுள்ள மேதினியில் உம்முடைய மரபு விருத்தியாகும்'' என்று பேடி வாழ்த்தவும், அவள் வாழ்த்தியதைச் சாஸ்திரமுணர்ந்த விராடராஜன்கேட்டு, ''இத்தன்மையானபேடி இக்கடல்சூழ்ந்த காசினியிற் கிடைப்பது அருமை'' என்று பெருமையாகப் பேசி, அளவற்ற பொன்னுடைகள் பொற்பூஷணங்கள் பரத நாட்டியத் தொழிற்குரிய பலவகைக் கருவிகள் சங்கீத சாஹித்யத்திற்குரிய பற்பல வாத்தியங்கள் இன்னுமுண்டான வரிசை முதலிய வண்மைகளுங் கொடுத்து, ''இன்னுமுனக்கு வேண்டுவனவெல்லாந் தருவேன், என் பெண்ணுக்கு உயிர்ப்பாங்கிபோற் கண்ணுக்குக்கண்ணுயிருந்து, பரதசாஸ்திர முற்றும் பயிற்றுவிப்பாய்'' என்று உத்தரகுமாரத்தியிருந்த அந்தப்புரத்திற் கனுப்பிவைத்தான்.

### நகுலசகாதேவர் தாமக்கிரந்தியும் தந்திரபாலனுமாய்க் குதிரைகளையும் பசுக்களையும் பாதுகாத்து வருதல்

பின்னுஞ் சிலநாள் சென்றபின்பு, அழகில் மன்மதனையும் அறிவிற் சுக்கிரனையும் பழிக்கச் செழித்த நகுலராஜன் போய், விராடனுடைய குதிரைச்சாலைக் கெதிராக நின்றான். அன்று சாயங்கால வேளையில் மின்னலோங்கிய வேல்தாங்கிய விராடராஜன் வண்ணக்குதிரையேறி வையாளி விட்டுக்கொண்டு வந்தான். அப்பொழுது நகுலன் கடிவாளமுங் கம்பியுங் கயிறுங் கிலுகிலுக்கும் கட்டையும் சாட்டையும் பிடித்து பார்த்தபேரெல்லாம் அசுவசாஸ்திரந்தெரிந்த மூர்த்தண்ணியனென்று மதிக்கும்படியாய் நின்ற அப்பரிவல்லவனுகிய நகுலனை விராடராஜன் இச்சைமேற்கொண்டு உற்சாகப் பார்வையாகப் பார்த்துக் கையை நீட்டி, ''ஓ குதிரைச் சம்மட்டிகொண்டு நிற்கின்ற குதிரைப்பாகனே, நீ எங்கிருந்து வருகிருய்? உன் பெயரென்ன?'' என்று கேட்டான்.

இவ்விதங் கேட்கவே நகுலன் அரசனைக் குறுகி, தன் தொழிலுக்குத் தகுந்த மரியாதை செய்து, "அரசனே, பாண்டவரைவரில் நடுப் பிறந்தோனாகிய விஜயனுக்கிளையவனாகிய நகுலனென்பவன் பலதிசையிலும் வெற்றிபெற்றவ னன்றோ? அவனது கீர்த்தியைச் சொல்லவல்லவருமுண்டோ? அந்த நகுலராஜனுடைய குதிரைச்சாலைகளுக்குத் தலைவர்களில் ஏழ்மையாகத் தாழ்ந்துவாழ்ந்தவன் நான்; தாமக்கிரந்தியென்னும் நாமம்புனைந்தவன். யானோ இமையவரும் இவுளியும் இராஜர்களேறுங் குதிரையும் இதுவிதுவென்றறிந்து, அவற்றின் மனமும் வடிவமும் சுழியும் சுத்தமும், நிறமும் திறமும் திடமும் குணமும் மணமும் குலமும் குரலும் வேகமும் கதியும் தேசமும் வீரமும் ரோஷமும் மறுவும் பிறவுமுள்ள மார்க்கமு மறிவேன். அவ் வகைக் குதிரைகளுக்குள்ள தீராப்பிணிகளுந் தீர்ப்பேன். மேலு மவற்றை மண்டலம் கோணம் வளைவு முன்னோட்டம் பின்னோட்டம் நேரோட்டம் முதலிய கதிகளின் வண்ண மோட்டுவேன்; அவற்றை நரி கரி பரி அரி கிரி வேங்கை இவற்றி னடைபெறவுங் காட்டுவேன். தேருக்குப் பூட்டுங் குதிரையும் போருக்கு மூட்டும் புரவியும் பட்டாபிஷேகப் பரிகளும் பார்வேட்டையாடும் பரிகளும் கலியாண வாசியும் கடவுண்மகத் துரகியும் இதுவிதுவென்றறிந்து, அவ்வவற்றின் வாயுவேக மனோவேக சரவேக சாம்பவேக முதலியவை தெரிந்து வகுப்பேன். ஓ சத்துவ குண சாந்தனே, அண்டினோரை ஆதரிக்கும் பாண்டுமைந்தரைவரும் வனவாசம் செய்யச் சென்றபின்பு, உண்டியுமிழந்தேன், உறுதியு மிழந்தேன், உமது கீர்த்தியைக் கேட்டு இவ்விடம் வந்தேன், என்னை யாதரித்தருளும் உத்தமனே" என்றான்.

அந்தப் புரவித்தலைவனது பொய்யாமொழியைக் கேட்டமாத்திரத்தில், துன்னி நெருங்கிய மன்னவர் யார்க்கும் பொன்னுலகோர்க்கும் பூவுலகோர்க்கும் புனிதஞானியர்க்கும் பூசுரர் தமக்கும் விசுவாசநேச மெய்யறிவோர்க்கும் உற்ற கவலையை யொருங்குடன் தீர்க்கும் வித்தக விராடன் மெய்ப்புளகிதனாய், மந்திரிமார்கள் மகிழ்ந்து கொண்டாட, செந்திரு கலைமகள் சேர்ந்து நின்றாட, பொன்னின் குடநிறைந்த தன் பொற்கோபுர வாசலில் வந்திறங்கி, முன்னதாகத் தன்னை வந்து அடுத்திருக்குஞ் சத்தியநெறிபெற்ற தருமராஜன் முதலியவருக்குக் கொடுத்த வெகுமானத்திலும் மூன்றுபங் கதிகமாகக் கொடுத்துச் சம்மானஞ் செய்து, தன்னுடைய குதிரை வல்லவருக்கெல்லாந் தலைவனென்னு முதன்மையுங் கொடுத்தான். இவ்வாறு அசுவங்களை அபிவிர்த்தியாக்கும்படி அமைந்த நகுலராஜனுக் கிளைய சகாதேவராஜன் பின்பு ஒரு நாள் நந்தகோபன் மைந்தன்போல் வேடம்கொண்டு, அசைந்தாடிய செவிகளுக் கிசையச் சூடிய பச்சிலையுடன், புல்லாங்குழ லிசைபாடுந் தடியும், தொறட்டுக்கோலும், கன்றணைக்குங் கயிறும், மாடுகட்டுந் தும்பும், சிக்கக்கச்சமுந் தோள்மேற்கொண்டசைந்து, கீர்த்தி தழைத்த விராடராஜன் சபையைக் கிட்டினான். அவனைக் கண்ட அரசன், "ஓ கருங்கம்பளப் போர்வை யுடைய கானவனே, நீ யார்?" என்று கேட்

டான். அப்போது தருமராஜனேடு சமமா யிருந்த விராடராஜ னைப் பணியாமற் பணிந்து, "ஓ மகாராஜனே, துரியோதனனுடன் சொக்கட்டாடி இக்கட்டடைந்து நாட்டை விடுத்துக் காட்டை யடுத்து வனவாசம் பண்ணிய பாண்டவர்களில், நான் இளஞ் சிங்க மாகிய சகாதேவ ராஜனுடைய பசுக்களைப் பார்த்து மேய்த்துக் காத்து வந்த கோபாலன் யான்; என் பெயர் தந்திரபாலன்" என்றான். அவன் சொல்லைக் கேட்ட விராடராஜன் மகிழ்ந்து, அவனைத் தன்னருகி லழைத்து வேண்டிய வெகுமானங்கொடுத்து, "நமது பசு மந்தைகளை உன் சொந்தம்போற் காப்பாற்றிக்கொண்டிரு" என்று அனுப்பிவிட்டுச் சந்தோஷமுற் றிருந்தான்.

திரௌபதாதேவி விரதசாரணியாய் விராடன் மனைவியை யடுத்தல்

இப்பால் ஓமாக்கினியில் உற்பவித்த திரௌபதாதேவி வண்ணப் பெண் வடிவாகி வந்து, மருமலர் மாலை வாசமேறிய திருமலர் வேலைத் தேசம் வீறிய மச்சராஜனது தோளணைந்த சுதக்ஷிணை இருந்த அந்தப்புரத்தைநாடி, அவ்விடத்திற் காவலிருந்த பாங்கியரை நோக்கி, "யாரோ ஒருத்தி வந்திருக்கின்றாள் என்று உங்கள் அரசிக்குச் சொல் லுங்கள்" என்றாள். அவர்க ளவ்வாறே சென்று தங்க ளரசியை வணங்கி, "எங்களை யாளும் அம்மணி, தேன் நிறைந்த செந்தாமரை மலரிற் பிறந்த செந்திருவுந் தொழுதற்குரியாளாகிய ஒரு பெருமாட்டி இடையசைய விசையாய் நடந்து, நமது தலைவாசலைக் கடந்து வந்திருக்கின்றாள். தாயே பங்கஜாக்ஷி, தேவரீர் கட்டளைப்படி நடக்கக் காத்திருக்கின்றோம்" என்று உபசரித்தார்கள். அந்தப் பாங்கியருரைத் ததைக் கேட்ட பாரமார்த்தியமுள்ள சுதக்ஷிணை மிகுந்த பட்சமுள்ளவ ளாய், தட்சணமே அழைக்கச் சொன்னாள். அந்நேரமே சேடியர்கூடி பாடிக் குயில்போ லோடி, வாடிய மயில்போல் வாசலில் நின்ற மங் கையை நாடி, "நூதனமான மாதனமே வாரும் வாரும்" என்று அன் போடழைத்தார்கள். அவ்விடமிருந்த வண்ணப்பெண்ணானவள் மகா பாக்கியமென்று வந்தாள். அம்மாதின் துடியிடைப் பிடிநடைச் சுந்த ரத்தைக் கண்ட சுதக்ஷிணையானவள் திடீரென் றெழுந்து, செழுமுக மலர்ந்து, கைகொடுத் தணைத்து, பக்கத்திலிருத்திக் குங்கும சந்தன கதம்ப தாம்பூல மஞ்சளாதிகளோடு சுகுண நிறைந்த புஷ்பவஸ்திரா பரணங்களாற் பூசித்து, "அன்னையே, உமது தேசவாசம் யாது? ஏது காரண மிவ்வளவு தூர மெழுந்தருளியது? உமது பெயரென்ன? அடி யாள் அறியச் சொல்லும்" என்று நயமாகக் கேட்டாள். அப்படிக் கேட்ட சுதக்ஷிணைக்கு உபசாரவார்த்தை சொல்லி, "அருட்கண் ணிறைந்த ஆரணங்கே! பாண்டுபூபதியின் குமாரராகிய பஞ்சவர் இந்திரப்பிரஸ்த முதலிய எல்லாவற்றையுஞ் சகுனியாடிய சூதால் தோற்று, காடே வீடாகவும் பட்சிகளே பந்துவாகவும் பன்னிரண்டு வருட வனவாசம் பண்ண, அவர்கள் மருவிய மான்விழி மடந்தையுங் கூடச் செல்ல, நான் அவளைப் பிரியாதிருந்தேன். இருந்தபோது அவர்கள் ஒருவருஷம் அஞ்ஞாதவாசஞ் செய்யவேண்டி மறைய,

நான் பிரியலானேன். என்பேர் விரதசாரணி, சந்தனுதி கந்தகதம்பம் பூசுவதிலும், சேலை மாலை முதலியவை சேர்த்துக் கட்டுவதிலும், பூஷணாபரணங்கள் பூட்டுவதிலும், கூந்தல் வகிர்த்து முடித்துப் பின்னுவதிலும், மார்புக்குத் தொய்யலெழுதி அலங்கரிப்பதிலும், விழிகளுக்கு மைதீட்டுவதிலும் மிக வல்லவளாய் யாவராலும் புகழ்பெற்றேன். உமக்கிச்சையானபடி அழகுண்டாக்கி மனமகிழச் செய்யவேண்டுமென்றெண்ணி வந்தேன். பெண்கள் சிகாமணியே, இன்னுமொரு காரியமியம்பக்கேளும்: யான் என் தாய்வீட்டிற் சஞ்சரித்து உலாவுங் கன்னிப்பருவத்தில் ஜய விஜய ஜயந்த ஜயசேன ஜயபாலரென்னும் ஐந்து காந்தருவரின் காதலி லடங்கிக் கற்புடையவளாயினேன். ஆதலால் என்னை மற்ற மனிதர்கள் நோக்கப்படாது. நானும் மற்ற மனிதர் வதனநோக்கி மகிழவு மாட்டேன். நீர் மாதவமுடைய மதியூகி என்று அறிந்து உமது மாளிகை நோக்கி வந்தேன்'' என்றாள்.

இவ்வாறுகூறிய வண்ணப்பெண் வசனத்தைக்கேட்ட சுதக்ஷிணை திடுக்கிட்டுப் பயந்து, திடத்துட னயர்ந்து, மகிழ்ச்சியாய் விரும்பிப் புகழ்ச்சியாய்த் திரும்பி, '' ஓ பூதேவிபோன்ற சீதேவியே! தெய்வப் பெண்போல் வந்த உம்மைச் செவ்வையாகப் பார்த்துச் சிந்தைமகிழ்ந்தேன். இன்றுமுதல் நீர் என்னிரு கண்களாகவும் எங்களோடு ஒப்பாகவும், வண்ணப் பெண்ணாகவுமிருந்து, என்னுடலுமுயிரு முமதுகாவலாய்க் காத்து, உற்றதாயாகிய நீர் பெற்றதாயெனப் பார்த்து, புகழ்படவாழ்ந்து, நன்மொழி புகன்று, எம்மை நலம்பெற நடத்துவது உமது கடன். அன்றியும், எனக்கு யாதொரு குறைவு நேராதபடி இரட்சித்தருளும் என்னம்மணி'' என்று உபசரித்தாள். இவ்வாறு உபசரித்த பூரண புத்திசாலியான சுதக்ஷிணையைப் பாஞ்சாலி பார்த்து,''அம்மா, அப்படியே யாகட்டும்'' என்று சொல்லி, எந்தெந்தவேளைக் கெப்படிச் செய்யவேண்டியதோ அந்தந்த வேளைக்குத் தக்க அலங்கார நன்மைகளை வெறுப்பில்லாமல் விருப்பத்துடன் விதவிதமாகச்செய்து நாளுக்கு நாள் அதிக விசுவாச முண்டாகும்படி நடந்துகொண்டாள். இந்தப் பிரகாரம் மைதீட்டிய வாள்போல் நீட்டிக்காட்டுங் கருங்கண்ணமைந்த திரௌபதாதேவியுஞ் சந்திரகுல மைந்தராகிய பாண்டவர்களும் உருவமறைந்து, இராஜசின்னங்கள் யாவுந்துறந்து உல்லாசப் பேச்சுரைகள் மறந்து, அஞ்ஞாதவாசத் தொருவருடமுங்கழிக்கச் சிறந்துவருநாளில், மெய்ப்பயிர் விளைத்துப் பொய்க்களை களைந்து தீவினை தீர்த்து நல்வினை சேர்ந்து இராஜ்ய பரிபாலனம் செய்துவராநின்ற விராடராஜனுடைய மச்சநாடானது, நித்திய ஜயமங்களப் பெருஞ் செல்வமும்-மாதமும்மாரியும்-நன்செய் புன்செய்களும் விஞ்சி விருத்தியாயது, இரதகஜதுரக பதாதிகளும் மிஞ்சின, நான்கு வருணத்தவருங் குலாவிக்கொஞ்சினர். அந்நாடு குருநாட்டுக்கொப்பாய்க் குறைவறவோங்கியது, பூவாதமரமும் பூத்து, காயாதமரமும் காய்த்து, பசுபாக்கியம் பாற்பாக்கிய மிகுந்து சுபசோபனங்களுடன் சந்தோஷ சம்பிரமங்கள் அங்கே நிரம்பின.

---

# 2. மற்போர்ச் சருக்கம்

## கண்ணன் துதி

புவியதனைப் பாயலாய்ச் சுருட்டிப்போய்ப் பாதலத்திற் புகுந்த பொற்கண்
அவுணனுயிர் குடித்ததன்பின் னப்புவியை முன்போலுண் டாக்கு மாறு
நவமுறுமொன் பிறைகோட்டுப் பன்றியுருக் கொண்டருளி நாகர்போற்றப்
பவமகற்றி யாட்கொண்டு பாம்பணைமேற் றுயில்கூரும் பரனெங்கோவே.

கேட்டீரோ, ஜனமேஜய மகாராஜனே! நித்திய கலியாண சுப சோபன வைபவநீங்காச் செல்வச் சிறப்போங்கிய விராடபுரத்திற் பாஞ்சாலியும் பாண்டவர்களும்போகபாக்கிய புநிதவினிமையிற்பூரணசந்திரன்போற்பிரகாசித்து, அறுவரும் களங்கரகிதராய்க்கலந்து, கூடுங்கால மறிந்து கூடி, பேசுங்கால மறிந்து பேசி, ஒருவர் கண்ணிற்படாமல் திரிந்து, ஒருவரையொருவர் பிரிந்துறுமற் பொருந்தி தாழ்வற வாழுங் காலையில், மச்சராஜனு மற்றையரும் யானை புலி கரடி சிங்கம் காட்டெருமை கலைமான் முதலிய மிருகங்களுடன் மல்லரைச்சண்டைக்குவிட்டு விதவித வேடிக்கை இச்சையின்படி விளைத்து மகிழ்வுற்றிருந்தார்கள். அப்பேர்பட்ட சமயத்தில், வேலாயுதத்திற்குப் பாலசுப்பிரமணியரென்றும், சூலாயுதத்திற்கு யமதருமராஜனென்றும், வில்லுக்கு இராமனென்றும், சொல்லுக்கு அகத்தியனென்றும், மல்லுக்கு நானே மகாதேவனென்றும், தேசந்திரிந்து சீருற்ற வாசவனென்னும் பேருற்ற மல்லனொருவன் கொலுமுக வாசலில் வந்தான். அவன் எப்பேர்ப்பட்டவனென்றால், அண்டமுகட்டை யளாவிய மெய்யன்; எண்டிசை மட்டு மேந்தியகையன்; வாகுவலயம் வளைந்த தோளன்; வீரகண்டை புனைந்த தாளன்; வாடைக்காற்றை மறிக்கும் வலத்தன்; ஓடைக் களிற்றை யொடிக்கும் பலத்தன்; சிவந்த மயிர் விரிந்த தலையன்; தீர பராக்கிரமப்புய மலையன்; இப்பேர்ப்பட்டவன் தன்னைப் புடைசூழ்ந்த நிழல்போல் ஆயிர மல்லர்களடுத்து வரும்படி சப்தமாப்பூட்டிய ஒற்றையாழித் தேரிணையுடைய சூரியன்போல் உன்னதத் தேரேறி, விருது, டால், கொடி, குடை, ஜயபேரி, டங்கா, பாங்கா, கொம்பு, தாரை பூரி, வீரசின்னம், எக்காளம் முதலிய பல சின்னங்களும் வாத்தியங்களும் விளங்கிப் பிரகாசிக்க, கடல்சூழ்ந்த உலகத்தில் இவனுடன் சண்டைசெய்யத் தக்கவர்கள் யாருமில்லையென்று கட்டியக்காரர் எச்சரிக்கை சொல்ல, பட்டுவான்கள் கொண்டாடிக் கொக்கரிக்க, நவமணிப்பணி மகுடஞ் சொலிக்க, நாகரத்தினத் தனிப்பட்டய மிலங்க, நவமோக மன்மதனிவனென்ன, புவனேசுரர் புந்தியில் மிகவின்ன, இராஜசிங்காதனத்திற் கொலுக்கொண்டிருந்த விராட பூபதியின் சமுகத்திற்கு வந்தான். இவ்வித படாடம்பத்துடன் வந்த வாசவனென்னும் அம்மல்லன் தேசபூஜிதராஜனைப் பணிந்து, "ஓ மகாராஜசிங்கமே, எழுகடல் வளைந்தவட்டாரத்தில் என்னுடனெதிர்த்து மல்யுத்தம்

பண்ணத்தக்க வல்லவரில்லை. நான் அநேக பட்டணங்களில் திரிந்து இராஜராஜாக்களைக் கண்டு, என் சமர்த்தைக் காட்டிப் பொன்பூஷண வாகனாதி வரிசைகள் பெற்றிருக்கின்றேன். இவ்விடத்தில் உமது மகா சபையை நோக்கி வந்தேன். என் வல்லமை சொல்லுந்தரமல்ல'' என்றுரைத்தான். அந்த மல்யுத்தத் தொழில்முறை தெரிந்த விராடராஜன் வந்த மல்லன் கூறிய வார்த்தையைக் கேட்டு, தன் சபையிலிருந்த ஆஸ்தான மல்லர்களை நோக்கி, உதட்டைப் பிதுக்கித் தலையை யசைத்து, புதிதாக வந்த மல்லனுக்குக் கொடுக்கத்தக்க பரிசுகள் கொடுத்து, ''நமது சபையில் நிர்வாகமுள்ள மல்லர்களில்லையல்லவா?'' என்று வாய்விட்டுச் சொல்லமாட்டாமல் மனம்புழுங்கி யிருந்தான்.

### வெளியூர் மல்லனுக்கும் விராடனூர் மல்லருக்கும் யுத்தம்

அந்தச் சமயத்தில் விராடனுடைய சொந்த மல்லர்கள் மனம் பொறுமற் கோபாவேசங் கொண்டு, ''எங்கிருந்தோவந்த மல்லன் இவ் வளவு வரிசைபெற்றுப்போகவும், நாம் வல்லமையற்றவர்களாகிமானக் கேடும் மரியாதைத் தாழ்வுமடைந்து இங்குக் குந்தியிருக்கவும் ஆயிற்றே'' என்றெழுந்து, காரிடிபோற் பேரொலிகாட்டி, காண்டீரவம் போல் ஒரடியாய் நடந்து, ஆக்கிரமித்துப் பராக்கிரமம் பேசி, வியாக்ர மித்து வெகுண்டெழுந்தேகிப் பதைத்துத் துடிதுடித்து, அதட்டிப் புயந் தட்டி, மீசையை மேலெழ முறுக்கி, விழிகள் சிவப்பேற வுருக்கி, புழுங் கிப் பற்கடித்து, புதுமல்லனை வளைத்து, இது நல்ல சமயமென் றிரைந்து, ''எங்களுடன் சண்டைபோடவா'' என்று மறித்து, அவன் பெற்ற ஆடையாபரண வெகுமானங்களில் ஒன்றையும் விடாமற் பறித்து, அரிய மற்போர் நூலில் வகுத்தபடி விற்போர் வாட்போர் வித மெல்லாம் விளைத்து, வேந்தர்கள் முதலிய வெகுஜனங் காணப்பாய்ந்து எதிரோடிச் சண்டை செய்தார்கள். இவ்வாறு ஒவ்வொருவனுந் தனித் தனிச் சென்று அவனோடு சண்டை பண்ணும்போது, தானம் விட்டக லாமல் தத்தியும், தருக்கி யொருவனை யொருவன் மொத்தியும், உட லுடன் உடல்சேர ஒத்தியும், உரத்துடன் உரஞ்சேர எத்தியும், தாளு டன் தாளடித்துத் தத்தியும், தலையுடன் தலைதாக்கிச் சுற்றியும், இட சாரி வலசாரியோடியும், இரைப்பெடுத்து ஒருபுறம்வாடியும், இடைந்து முன்பாய்ந்து கூத்தாடியும், இடம்விட்டிடஞ்சாய்ந்துகூடியும், வச்சிர முட்டியா லிடித்தும், வைரக்கையா லடித்தும், காலுடன் கால்கூட்டி மாட்டியும், கதாயுதந்தனை நீட்டிக் காட்டியும், கருங்கற்பாறையுடன் கருங்கற்பாறை யிடித்துக்கொள்ளுங் காட்சிபோல் மார்புமார்புங்கலங்க மோதி,வாரிவாரியெடுத்துவீசி, நேரோடி வேர்க்க விதிர்க்க மல்யுத்தஞ் செய்தார்கள். அக் காலையில் வெளியூரிலிருந்து வந்த மல்லன்கையால் விராடனூரி லிருந்த மல்லர்களெல்லாரும் எமலோகஞ் சேர்ந்தார்கள். இவ்விதமாக தன்னுறுதியைச் சோரவிடாமல் யுத்தஞ்செய்து, விராட புரத்து மல்லர்களை வீரசொர்க்கத்திற் கனுப்பிய வாசவனென்னு மல் லனை விராடராஜன் நேசவிசுவாசத்துடன் மெச்சி, ஆ! சபாஷ்! நீ மெத்தவும் நல்லவன்! கைமுடக்கிக் குத்தவும் வல்லவன்! என்று



விராட்ராஜன் சபையில் பலாயனன் மற்போர் செய்தல்.

புகழ்ந்து, உயர்ந்த வஸ்திராபரணங்களு மீந்து, விருதுமுடி குடை கொடி இவைகளுடன் பற்பல மேன்மைச் சிறப்புகளுஞ் செய்து விட்டு, போர்புரிந் திறந்த மல்லர்களைப் புதைக்கும்படி உத்தரவு கொடுத்து, தானுஞ் சபையை விட்டெழுந்து, அரண்மனைக்குட்போய் அன்றிரவு விடியுமளவும் நித்திரை பிடியாமல் மெத்தவும் வருந்தி, மறு நாட் காலையில் நித்தியவிதி முடித்து! இராஜகொலுக்கூடத்திற்கு வந்து தனக்கு முன் எழுந்த நளியிருந்த கங்கபட்டர் தாளில் வீழ்ந்து, அவ ரால் சுபமங்களாசீர்வசனம் பெற்று, மந்திரி சாமந்தர் முதலிய மன்ன வர்களுடன் துன்னி யிருந்தான்.

### விராடன் தன் மல்லர் பட்டதையெண்ணி வருந்த கங்கபட்டர் பலாயனன் திறங்கூறி மகிழ்வித்தல்

அந்த வேளையில் வாசவனாகிய மல்லன் வந்து பணிந்து, "ஓ இராஜாதி இராஜபோஜ மகாராஜனே, ஓ பூஜாதுரந்தர புநிதமூர்த்தி, அடியேனுக்குச் செலவுகொடுத்தருளும்" என்று கைதொழுதுநின்றான். அவனைக் கண்ட மச்சராஜன் நேற்று இறந்த தன் சொந்த மல்லர் களின் பரிதாபத்தைப்பாராட்டி, இவனைச்சயிப்பதற்குத் தகுந்த மல்லர் கள் நம்மிடத்தி லில்லாமையாலன்றோ, இவன் இவ்விடத்தி லுண்டான மல்லர்க ளெல்லோரையும் வாரிப் போர் கொடுத்து யாருக்கும் பயங்கர முண்டாகப்பேரெடுத்து ஊருக்குப் போகப்போகின்றான்" என்று மனத் தாங்கலாகப் பேசினான். அந்தக் கருத்தை அண்டையி லிருந்த கங்க பட்ட ரறிந்து, "மாங்குயில் கூவும் வளநாட்டிறையாகிய மச்ச ராஜனே, கேளும்: அரசனிடத்தில் வரிசைபெற்று உரிசைகண்ட வாச னாகிய மல்லனை வெல்லவாவது கொல்லவாவது வேண்டுமானால், பலாயனனென்று நமது மடைப்பள்ளியி லிருக்கிறானே, அவனே யவனை வெல்லத் தகுந்த மல்லன். அவனோ மெத்த நல்லவன், மகா சமர்த்துள்ள வல்லவன்; பூர்வத்தில் தருமராஜனுடைய தம்பி பீமசேன னிடம் இருக்கும்போது, வெகுபேர் மல்லர்களை வென்று, பலாயன னென்னும் பேருங்கொண்டு வெற்றி மாலையும் வெகுமதியும் பெற்றிருக் கின்றான். அஞ்சா நெஞ்சும் உடையவன். அவன் அசுரர்குல கால னென்னும் பலசாலி, அவனு லிவனை யடக்கிப் போடலாமென்று நினைக்கின்றேன்" என்று கங்கபட்டர் சொல்லியதை, அரசன் கேட்டு மகிழ்ந்து, "அப்படியானால் அந்த மடைத்தொழிலாளியை வருவியுங் கள்" என்றான். கங்கபட்டர் உடனே தூதரை யனுப்பி யழைத்து வரச் சொன்னார். அவ்வாறு போய் அழைத்தவர்களைப் பலாயனன் கண்டு, "அடா தூதர்களே, அரசன் அழைத்த காரண மென்ன? முன்னம் அதனை யெனக்குச் சொல்லுங்கள்" என்று கேட்க, தூதர்கள் "ஐயா, யாரோ ஒரு மல்லன் வந்து நின்று, நமது சில்லரை மல்லரை யெல்லாங் கொன்று, அரசனிடம் பல வெகுமானங் கொண்டு, நமக்கெல்லாம் அவமானந் தந்தான். ஆனதால், அவனோடு சண்டைபோடுவதற்கோ அல்லது உம்மைக்கண்டு பேசுவதற்கோ அல்லது வேறு எதற்கோ

உம்மை அழைத்தது அதை நாங்க ளறியோம். அன்றியும், உம்மைக் குறித்துக் கங்கபட்டர் செம்மையாகச் சொல்லி யிருக்கின்றார். அதனை லழைப்பித்ததுபோலு மிருக்கின்றது'' என்றார்கள். அவர்கள் வார்த்தை யைக் கேட்ட பீமசேனன் முகமலர்ந்து அகமகிழ்ந்து, ''இதோ வந் தேன் வந்தேன்'' என்று மகமேருவைச் சக்கரவாளகிரி வளைந்தது போல் இடுப்பிற் கச்சை வரிந்திறுக்கி, அண்டமுகட்டுக்கு முட்டுக் கொடுக்குந் தண்டமொன்று கையிற்கொண்டு, விஷாமிர்தம் புசித்த திடகாத்திர தீர ஜெயசிம்மவீரன் சீக்கிரம் வந்து, சிங்காதனத்திருந்த கங்கபட்டரைத் தொழுது, ''சுவாமி பராக்'' என்று சொல்லி நின்றான். அவ்வாறு நின்ற சுயம்பாகியை விராடராஜன் கண்டு, ''நீ இந்த மல்ல னோடு யுத்தஞ் செய்ய வல்லையோ?'' என்றான். அதற்கு பீமன் ''ஐயா, ஏதோ உமது அநுக்கிரகத்தாலும், அதோ எழுந்தருளி யிருக் கும் பெரியோர்களின் ஆசீர்வசனத்தினாலும் போர்புரிய மாட்டுவேன். தேவரீர் காலதாமத மில்லாமற் கட்டளையிட்டருளும். இதோ ஒரு நொடியில் இவனை ஸ்தானப்பிரஷ்டத்துவ மாக்கி ஸ்நானம் பண்ணி வருகிறேன்'' என்றான். அந்தப் பாகசாஸ்திரப் பலாயனன் சொல்லை விராடராஜன் கேட்டு நகைமுகங் காட்டி, புதுமல்லனை யழைத்து, ''இவனுடன் யுத்தஞ் செய்ய உனக்கு இஷ்டந்தானா?'' என்றான். ''ஆஹா! அதற்கென்ன தடை? ஆனா லொன்று சொல்லுகிறேன், கேளும்: நீர் நல்ல புண்ணிய பூபாலன், உமது சபையி லிருந்த மல்லர்களெல்லாரையும் நான் வீணாய் மடித்து விட்டேன். இவனை கிலும் உம்மிடம் மல்லனென்னும் பேருக் கிருக்கட்டும். இவனு மிறந்து போவானாகில் எனக்கு மெத்த மனஸ்தாபமா யிருக்கும். உம்மைப் பற்றி இவனை மருந்துபோல் வைத்து விடுகிறேன். அந்தோ! இவனது ஊழ்வினைப் பயனால் இவன் நமக்கு விருந்தாக வந்திருக்கின்றான் போலு மிருக்கிறது. நீங்களும் இவன் உயிருக்கு உலைவைத் திருக்கின்றீர்கள். என்பேரிற் குற்றஞ் சொல்ல வேண் டாம். எமனுடனெதிர்த்த வுயிரும், சிங்கத்தைப் பகைத்த யானையும், என்னுடன் போராடவந்த மல்லரும் பிழைத்ததில்லை. ஆகையால், இவன் இன்றைக்கு இறந்து போவான். இவனுக்கு யாராவது பெண்டு பிள்ளை தந்தை தாய் அண்ணன் தம்பி மாமன் மைத்துனன் உற்றார் உறவினர் இவர்களில் யாரேனு முண்டானால், முன்னாடி சொல்லி யனுப்பித் தலைமுழுகிவிடப் பண்ணுங்கள். உங்களுக்கு இவைகளெல் லாஞ் சம்மதமானால் என்னுடன் சண்டைக்கு வரச் சொல்லுங்கள்'' என்று அண்டை யசலைப் பார்த்துக் கண்ணுருட்டிக் கறுத்து விழித்து, மீசைமுறுக்கித் திரித்து, மேனி குலுங்கச் சிரித்து, அண்டமதிர ஆர்ப் பரித்து, கொண்டல் சிதறக் கொக்கரித்து, பீமனுக்கண்டையில் வந் தான். அப்போது அவ்விட மிருந்த கங்கபட்டர் ஒருவர் தவிர மற்ற வர்களெல்லாரும் பயந்து பலாயன னிறந்துபோனானென்று திண்ணமா யெண்ணங்கொண்டு, தியங்கி மயங்கித் தத்தளித்து நின்று விட் டார்கள்.

### வாசவனோடு பலாயனன் மற்போராடி வதைத்தல்

இவர்க ளிவ்வாறிருக்க, காமதகனனுக் கொப்பாகிய பீமன் தன் அண்டையிற் சண்டைக்கு வந்த வீரமல்லனைக் கிட்டினான். உதயகிரி அஸ்தகிரி இரண்டும் நெருங்கிப் போராடப் புகுந்ததைப்போற் பொருந்தி, இருவரும் தோளடித்து, பெருங்குரல் முழக்கிப்பிடித்து, பிரதாபப் பேச்சுகள் படித்து, காலாலுங் கையாலும் பின்னிப் போரிட்டுப் பிடித்து ஒருவரை யொருவ ரடித்தார்கள். ஒருவர் காலை யொருவர் மிதித்தார்கள்; ஒருவரை யொருவ ருதைத்தார்கள்; ஒருவரையொருவர் பற்றினார்கள்; ஒருவரை யொருவர் சுற்றினார்கள் ; ஒருவரை யொருவ ரெறிந்தார்கள்; ஒருவரை யொருவர் செறிந்தார்கள் ; ஒருவரைவிட்டொருவர் பிரிந்தார்கள்; ஒருவருக் கொருவர் பின்னார்ப் பரித்தார்கள் ; மார்புடன் மார்பழுந்த இறுக்கிக் கட்டி யணைத்துச் சுற்றினார்கள். கையை முடக்கி மார்புந் தோளும் துளைபடக் குத்தினார்கள் ; கால் மேலாகி யெழ எற்றினார்கள் ; கைகீழாகி விழச் சுற்றினார்கள் ; புருவம் வாய் மூக்கு காது முதலிய உறுப்புக்களழியச் சிதைத்தார்கள். பொருப்பென்னும் புயங்க ளொடிய இடித்துப் பகைத்தார்கள். ஒருவரை யொருவர் துரத்தி நிறுத்திப் பிடித்தார்கள். ஒருவரை யொருவர் பழித்துத் தெழித்துக் கடித்தார்கள். ஓடி யாடி நாடித் தேடிக் கூடிப் பாடி ஊடி நிலையில் மீண்டார்கள். ஒதுங்கிப் பதுங்கி ஒடுங்கி அடங்கிப் பாய்ந்து காய்ந்து சாய்ந்து வதங்கி வாடினார்கள். இத்தன்மையாக இருவரும் போர் புரிந்ததில், புதுமல்லன் கற்ற வித்தைகளையும் சாகசங்களையும் கைலாவகத்தையும் பீமசேனன் கண்டுகொண்டு, இவ்வளவுதான் இவனிடத்திலிருக்கிற மகிமையென்று தெரிந்து, எதிரிக் கிடங் கொடுத்து ஏழைபோல் நின்றான். உடனே யவனை எதிரிலிருந்த புதுமல்லன் திடீரெனப் பூமியில் குனிந்து குபீரெனப் பாய்ந்து, தொடையிற் கைகொடுத்துத் தூக்கி, தொப்பென்று பூமியிற் குப்புறப்போட்டுத் தோள்மேலேறத் துணிந்தான். அப்போது இடும்பாசுரனையும், பகாசுரனையும் எற்றிக் குத்தி எமலோக மனுப்பி இவ்வுலகத்திற் பேருபகாரியெனப் பெயரெடுத்த பீமன் தன்னுடைய சாகச் சமர்த்தினால் வீராவேசங் கொண்டு, அந்த மல்லன் கையினின்றும் நீங்கி, நிலத்திற் பாய்ந்து பதறி நிமிர்ந்து குதித்து, நிதானமாய் மதித்து, நேருக்கு நேர் சென்று, ஒரு கையை நீட்டி அவனுடலை நெருக்கிப் பிடித்து, மற்றொரு கையால் கழுத்தை மடக்கி யொடித்து, நிலத்தினில் மோதி ஒரேயமுக்காக அமுக்கி, பழுத்த பாலைப்பழம்போற் கொழுத்த கண்கள் பிதுங்கக் கரசரணாதிகளை யொடித்து, உயிரை மடித்து, வெறுப்பில்லாமல் வீசி யெறிந்து, "எங்கே இவன் பின்னால் வந்த மல்லர்?" என்று புயங்கொட்டிப் பார்த்து, கண்கள் பொறியெழ விழித்து முகம் வியர்த்து, ஆர்ப்பரித்து, விறிட்டெழுந்தான். இவ்வாறடங்காத் திடங்கொண்டெழுந்த சுயம்பாகியை விராடன் கண்டு, ஒப்புச் சொல்லுவதற் கிடமில்லாமல் "அப்பப்பா" என்று அயர்ந்து, "இப்பாலென்னவாமோ" என்று பயந்து உடனே முகநயந்து, "ஓ ஜகமகிழுந் திடவானே" என்று புகழ்ந்து

தன்னிரு கரங்களாலு மவனை யணைத்து, பொன்னரிமாலை முதலிய பூஷணங்கள் கொடுத்து, "இனிமே லென்னுடைய போர் முகங்களுக்கு உன்னையன்றி யுற்றதுணை உளதோ? உத்தம பராக்கிரமனே" என்றுபசரித்து, மன்னர் மதிக்க வாணர் துதிக்கப் பன்னற்கரிய பல வரிசைகள் அளித்து, முன்னவ னென்னப் பொருந்திய கங்கப்பட்டரைப் பூசித்து, "சுவாமி, உம்மா லெனக் கிவ்வளவு பெருமை யுண்டாயிற்று" என்று உவந்து வாழ்த்தி, பலாயனனைத் தன்னுடல்போலும் தன்னுயிர்போலும் தன் பொருள் போலும் பக்கத்திலிருத்தி, "இந்த அதிவீர பராக்கிரமனாகிய சுயம் பாகிக் கொப்பாக ஸ்ரீராமனைச் சொன்னாலும் என் காதுக்கினிமையா யிராது. ஆ! ஆ! என்ன சாகசஞ் செய்தான்? என்ன சமர் புரிந் தான்? என்று புகழ்ந்து சந்தோஷமடைந்து சிறப்புற்றிருந்தான். இப்பால் பாண்டு மக்கள் தத்தந் தொழில்களிற் குறைவின்றி அதி ஜாக்கிரதையாயிருந்து விராடராஜன் நடத்தும் மரியாதைகளினால் அந்நியதேசத்தி லிருக்கின்றோ மென்னும் வெறுப்பின்றி, விசனமற்ற சுகஜனங்களுடன் இந்திரப்பிரஸ்தத்திலிருந்து அரசாளுஞ் செல்வ மனுபவிப்பதுபோற் சுகமுற்றிருந்தார்கள்.

இப்படியிருக்குங் காலையில் இச்சங்கதிகளை இந்தப் பட்டணத்திற் கதிபதியாகிய மச்சராஜனுக்கு மைத்துனரும் சுதக்ஷணாதேவியாருக் குத் தம்பியருமான கீசகர்கள் கேட்டு, ஆச்சரியப்பட்டு, தேசங்கள் தோறுஞ் சிறப்படைத்துவந்த வாசவனென்னும் பேர்கொண்ட மல்ல னைத் தங்கள் வாசலிலிருந்த மடைத்தொழில் மன்னன் நாசகால நமன் போலெதிர்த்துக் கொன்றுவிட்டதைக் குறித்துச் சந்தோஷங் கொண் டாடி, நேற்றிருந்த பழைய மல்லரைக் குறித்து இரக்க மடைந்திருந் தார்கள். அன்றுமுதலாகச் சுயம்பாகியாகிய பலாயனனைப் பார்க்குந் தோறும் அவ்வூரிலுள்ளார்க்கும் மற்றவர்களுக்கும் மகாபீதியும் பயமும் உண்டாயின. அவ் விராடராஜனுக்குங் கீசகாதியர்க்குங்கூட வயிற் றிற் பெருநெருப் புண்டாயிருந்தது.

———

## 3. கீசகன் வதைச் சருக்கம்

### கண்ணன் துதி

*அருமறையைக் கவர்ந்துவிரி மகரவா ரிதியினிற்சென் றன்றொளனப்*
*பெருவலிகொள் சோமுகா சுரனைத் தவ்வணைமுன் பிறங்கு மீனத்*
*திருவுருக்கொண் டறமாய்த்தம் மறையையுல கிடைவிரித்துச் சீவர்தம்மைப்*
*பொருவிலரு ளிற்புரந்து புயங்கமீ தறிதுயில்கொள் புனித போற்றி.*

கேட்டீரோ ஜனமேஜய மகாராஜனே, இவ்வாறு பஞ்சபாண்டவ ரும் பாஞ்சாலியும் வித்தியாசம் இன்றிப் பத்துமாதங்கள் கழித்து, மற்ற நாட்களையுந் தொலைக்கவேண்டுமென்று ஒருநாளை ஒரு யுகம்போற்

போக்கி, யாதினுலுஞ் சோர்வடையாமலும் தேகசுகம் பாராமலும் தங்கள் வன்மையைப் பிறருக்குக் காட்டாமலும் ஒரு மார்க்கமாகக் காலங் கழித்தார்கள். அப்படி வருநாளில் ஒருநாள் சுதக்ஷிணையுடன் பிறந்த நூற்றுநாலுபேருக்கு மூத்தவனும், விராடராஜனுக்கு மைத்துனனும், அவன் படைக் கதிபதியும் காமனைப் பழிக்குங் காந்தியும் அளவிடப் படாத ஆண்மையுடையவனுமாகிய கீசகராஜன் தன் சகோதரியான சுதக்ஷிணுதேவியைப் பார்க்கவேண்டுமென்று வந்து அந்தப்புரத்திற் புகுந்து, சிலம்பு புலம்பும் அவள் சீரடியிற் பணிந்து, கன்னமதம் கபோலமதம் பீஜமதம் என்னு மும்மதம்பொழியும் வாரணம்போல் தணிந்து சிலநேரம் வரையிலும் பேசியிருந்து, செலவுபெற்றுச் சிங்கார வனத்தின் வழியாய் வந்தான். அவன் வரும்போது பாண்டவர்களின் தேவியாகிய விரதசாரணியானவள் சோடசகலைகள் நிறைந்த மதி முகம் வியர்க்கச் சொருபவிலாசமும் இந்திரதனுசை ஒத்த பருவ விலாசமும் பிரகாசிக்க, நூலிழைபோன்ற இடைதுவள அன்ன நடையும், வண்ணவுடையும் உடையவளாய் ஆடகலோகத் திறைவனுகிய தேவேந்திரனது நந்தவனத்திற் கொப்பாகிய அந்தப்புரத் தோட்டத்தில் சுகந்த பரிமள மிகுந்த புட்பங்கள் பறித்துக்கொண்டிருந்தாள். அவள் சாயல் கண்டு இளமயிலாட, குரலோசைகேட்டுக் குயிலிசை பாட், அளிமொழிக்கிடைந்து கிளியினம் வாட, அடிப்புற வடிக்கு ஆமை யொளிக்க, பொன்னெளி பார்த்து மின்னல் நெளிக்க விளங்கிய அவ்வணங்கைக் கீசகன் கண்டான்.

### கீசகன் விரதசாரணியைக் கண்டு மோகித்தல்

அப்போது செயற்கையழகின்றி இயற்கை யழகுபெற்ற அப்பாவை யைக்கண்ட கீசகன் ஆசைமேற்கொண்டு மோகசோக மூச்சுமேலிட்டு, காமன் கணையாற் கலக்கப்பட்டு, "ஆ! ஆ! இப்படிப்பட்ட பெண்ணை இதுவரையிலுங் கண்டிலேன். இவ்வுலக மயங்கவந்த மாயையோ? சும்மாவிருப்பவர்மேல் தொடுக்கு மோகனுஸ்திரமோ? திக்குப்பாலகருக்குச் சொக்குப்பொடியோ? பிரம்மா அமைத்த பெருவிசித்திரமோ? கம்மியன் செதுக்கிய கனகசித்திரமோ? அம்மா! யாதொன்று மறிகிலேன்! ஏதொன்றுந் தெரிகிலேன்! தெய்வப்பெண்ணே? தேவரம்பையோ? கந்தர்வர் மானே? கனவிஞ்சையர் தேனே? இவள்யாரோ?" என்று ஐயங்கொண்டு அவள் அண்டையில்வந்து, இருகண்ணிமைக்குந் தன்மையால் துணிந்து காமுகனுகி, சிந்தைவருந்தி நைத்து, நினைந்துநினைந்து மையலால் வெந்து, வாடி வதங்கி மானம் மகிழ்ச்சி பெருமை புகழ்ச்சி யாவு மறந்து, ஐம்புலனும்புரண்டு, அறிவு மருண்டு, "ஓ மோகப்பயிருக்காதாரமாகிய வித்தே! நேசப்பெண்ணரசே! உன் சரித்திரத்தை இன்னவிதமெனக் கேளாத் தரித்திரனு யிருக்கின்றேன். நீ யாரோ? எவ்விடமிருப்பதுவோ! உன்னுயக னெங்கே? நீ என்ன காரியமாக இங்கே வந்தாய்! உன் பெய ரென்ன? உன்மேல் மிகப் பரிவுற்ற என் பேரில் தயைபுரிந்து சொல்லாயோ?" என்று பலவிதத்திலுங்கேட்டான். இப்படியெல்லாங் கேட்டதற்கு ஓர் உத்தரமுஞ் சொல்லாமலிருந்த சித்

திரப்பாவையைப் போன்ற செல்வியைக் கீசகன் மீண்டும் பார்த்து, "ஓ பெண்ணரசி, நான் உனக்கோர் பொருளாகத் தோன்றவில்லையோ? என் சொல் உன்செவிக்கேறவில்லையோ? நான் படுந்துயர் நீ அறியாததோ? உன் காதென்ன கருங்கல்லோ? உன் கருத்தென்ன மகா கடிதோ? உன் நினைவென்ன பெரும் இரும்போ? உன் நெஞ்சென்ன உருக்கெழுகோ? என்னிடம் வார்த்தையாடினால் உன் வாய்முத்து சிந்துமோ? ஆபத்து நீங்காவிட்டாற் பாபத்திற் கிடமல்லவோ? என் பேரிற் கோபத்தை வைக்காதே நான்கொண்ட சோபத்தை தீர்த்தருளும். ஓ சோலைக்கண்ணுறையும் வாலைப்பருவக் குயிலே, நான் ஆலைக் கண்ணுறையுஞ் சோலைக் கரும்பானேன். ஐயோ, என் மனமகிழச் சற்று வசனியாயோ?" என்று பலவாறு பிதற்றியவனாய், அவ்விரதசாரணி பக்கத்தில் தங்கியபாங்கியரைநோக்கி, "அடிதாதியரே, இந்தப் பெண்ணணங்கு யாரடி? இவளுக்கென்ன பேரடி? இவளெந்தவூரடி? இதுவரையிலும் நான் அறியேனடி? நீங்களாவது சொல்லுங்களடி?" என்று கேட்டான். அவர்களவனுக்குப் பயந்து, "ஐயா, இந்த வண்ண மகள் உங்கள் தமக்கையாரிடத்திற் பத்துமாதமாய் வேலைக்கமர்ந்திருக்கிருள்" என்றுர்கள். அந்த வாசகங் கேட்ட கீசகன் ஊழியஞ் செய்ய வந்தவள்தானே யென்று இலேசாக நினைத்து, காமத்தீப் பெருக்காற் கருகி யுருகி, நாணங்கொண் டொடுங்கி முகங்கோணி முன்னின்ற விரதசாரணியின் பாதத்தில் வீழ்ந்து, "ஓ என்னுவியே, நான் மகா பாபியே, என்னைக் கொல்லுவது உன் ஆசை வசநாவியே. ஆதலால் வசந்தகால வண்டைப்போல் உன்வாய்மலரிற் சுரக்குந் தேனையுண்டு, பிரம்மாநந்தங்கொண்டு மேன்மைபெற விரும்புகின்றேன். உனக்குண்டாகிய அழகும், அந்த அழகுக்கேற்ற பருவமும், அப்பருவத்துக்குரிய வுருவமும், அவ்வுருவத்திற் கிசைந்த காந்தியும், அக்காந்திக்குத் தக்க சாந்தியு முண்டாயிருந்தும், உனக்குத் தகுந்த நாயகனில்லாமல் உன் காலம் அநியாயமாய் அகன்றுபோகின்றதே. ஐயோ! ஓ அஞ்சுகமே, இவ்வுலகின்கண் பெண்ணுகப் பிறந்தவர்கள் உன் அழகைக் கண்டு பின் தொடரவேண்டுமே! அலங்கார மென்பன வெல்லாம் உனது அலங்காரத்தைக் கண்டு அலறவேண்டுமே! இவ்வளவு நிறைவுற்றிருக்கு முனக்கு மெனக்கும் என்ன குறைவு? நாம் பேசிக் குலாவிக் கூடுவதே யுறவு. உனக்கு வேண்டுவதான நவரத்தினுபரணங்களும் கட்டுவர்க்கங்களும் பட்டுவர்க்கங்களும் பொன்பாத்திரங்களும் இன்னுமுள்ள பொருள்களுந் தருகிறேன். நித்தியம் உன்னுத்தரவின்படி நடக்கிறேன், மற்றொருவர் முகத்தைநோக்கிலேன். சத்தியம்பண்ணித் தருகிறேன். சற்றேனு மனமிரங்கவேண்டும் தையலே" என்று எத்தனையோ கோடி உபசார வார்த்தைகள் சொன்னுன்.

### கீசகனுக்கு விரதசாரணி புத்திகூறிக் கடிதல்

அத்தனை மொழிகளுக்கும் எள்ளத்தனைப் பேச்சும் பேசாமல் ஒரு மரத்தினேரமாய் மறைந்திருந்து, "ஆ! கீசகா! பாவமாகிய மூட்டையையும் பழிப்பாகிய கேட்டையும் பாசப்பெருங் கோட்டையையும் என்

கட்டித் துள்ளுகிறாய்? ஏழைப்பெண் பாவத்தை ஏன் கொட்டிக்கொள்ளுகிறாய்? இம்மைப்பயனை ஏன் ஒழிக்கிறாய்? மறுமைப்பயனை ஏன் அழிக்கிறாய்? இம்மை மறுமை யிரண்டையும் யோசிக்கவில்லையோ? ஏதோ விபரீதமாய் நினைத்த இந்த வீண் நினைப்பையின்னு மாற்றவில்லையோ? ஐயோ! இஃதுனக் கெந்நாளுந் தொல்லை. நற்குடிப் பிறப்பையும் போற்றிலை. நாடாத காரியங்களை நாடுகிறாய். வீணாகிய சொற்களைச் சொல்லுகிறாய்! அந்தோ! இந்தப்பேச்சு உன்னுடனற்றுப்போகிறதா யிருக்கவில்லையே! அநேகமன்னரும் வெகுவாகிய ஆத்மகோடிகளும் வந்தொதுங்குகின்ற சந்திரவட்டக்குடை நிழலையுடைய விராடராஜனது பெருமைக்கும் அவனது புகழுக்கும் அழிவுதேட ஏற்பட்டாய் போலும். ஓ முடிவுகாலத்தைத் தேடிக்கொண்ட மூர்க்கனே! விவேகமற்ற வெறியனே! மன்மதபாணமாகிய நெருப்புக்குப் பயந்து, மகாபதிவிரதைகளின் வயிற்றெரிச்சலாகிய வடவாமுகாக்கினியில்வீழ்ந்துவாழ் நாளழிந்துமாளப்போகிறாய். அடாபாவி! சிறந்த மரபிற் பிறந்தவர்கள் தங்களுடைய உடலழிந்தாலும், உடலிற்பொருந்திய உயிரொழிந்தாலும், பிறர் மனைவியையும், பிறர் பொருளையும் விரும்பமாட்டார்களே! வாய்புழுக்க வசைமொழி வசனிக்கார்களே! நொய்ய வுரையார்களே! நோவக் கண் பாரார்களே! அவர்களை யன்றோ மிக்கோரென்று துதித்தும், தக்கோரென்று மதித்தும், சாஸ்திரங்களில் பேசியிருப்பது? நீ இழிந்த பிறப்புள்ள ஈனனாகையால் துர்ப்பாஷைகளை ஏறக்குறையப் பேசினாய். அவைகளையெல்லாம் சுதக்ஷணையைப்பற்றி மனம் பொறுத்தேன். அந்தமட்டும் உன் துற்புத்தியை விலக்கி நற்புத்தியைத் துலக்கினால், தொல்லுலகி லின்னுஞ் சிலநாளிருந்து வாழ்வாய். இல்லாவிட்டால் எமலோகஞ் சேர்ந்து நரகத்துள்ளாழ்வாய். என்னை நீ யாரென்று நினைத்தாய். தேவபுருஷர்களாகிய ஐவருடைய காவலி லிருக்கின்றவள். அந்தத் தேவர்களுக்கு முனக்குமிருக்கிற பேதத்தை யோசித்துப் பார். உனது நடத்தையை யிதுவரையிலு மவர்க ளறியார்கள் போலுமிருக்கின்றது. அவர்களி லொருவனாகிய வீரபோஜனனென்னு மேலோனறிந்தானாகில் கண்மூடித் திறப்பதற்குமுன் உன்னுடலை மண்மூடிப் போகச் செய்வான். உன்னுயிர் விண்ணுலகடையும்! அடா காலாந்தகா" என்று காமவேதனைகொண்ட கயவனுக்கெதிரில் நாமம் வேறுகொண்ட நாயகி பேசினாள்.

### கீசகன் விரதசாரணிக்குத் தன் பராக்கிரமங் கூறிப் பிரதாபித்தல்

இவ்வளவு சொல்லியும் அந்த நாசகாலனாகிய கீசகனுக்கு ஆசைநோ யதிகரித்து, சிறிதுங் கூசுதலற்று அவ்வண்ணப் பெண்ணை நோக்கி, "உன்னைப் பார்த்தகண்ணுக்கு மற்றொரு பெண்ணைப் பார்க்க எனக் கெண்ணமில்லையே! நீ என்னிரு கண்மணியே! அதற்கிசைந்த கண்மணியே! அம்மணியி னொளியே! அவ் வொளியிடத்தின் வெளியே! இந்திரலோகத்திற் கொப்பாகச் சந்திரமண்டலத்திற் கப்பாலளாவிய என் மாளிகையைத் தருகிறேன். சகல வநுபவ வதிகாரமுந் தருகிறேன். நான் உனக் கேவல்செய்யவருகிறேன். என்னை நீ நிஷ்டு

ரஞ் சொல்லாமல் என்னிஷ்ட தெய்வம்போ லாண்டருளும். ஓ ஆடக லோகத் தமுதம்போன்ற ஆரணங்கே! உனது அன்புள்ள கருணைப் பார்வையால் எனக்கு விபரீதத்தை விளைத்த காமப்பேயை யோட்டி விடு, நான் கடைத்தேறும்படி தேற்றிவிடு. கலவியமளியி லேற்றிவிடு. உனது சிறுநகை தீயினுற் எனது புத்திமருண்ட மோகவிருளைப் பிர காசிக்கப்பண்ணு, என்னைத் தடுத்தாட்கொள். சரணஞ்சரணம்! அபய மபயம்! ஓ பெண்ணாயகச் செல்வமே! இவ்விதமாக வணங்குகிற வென்னை இன்னானென் றறிந்துகொள். இந்திரன் முதல் யாவரையுந் தந்திரத்திற் சயிக்குஞ் சுதந்திரமுடைய நான், திரிபுவனஞ் சேர்ந் தெதிர்த்தாலும் அபஜெயமடையமாட்டேன். இளமைப் பருவத்தில் மாரன். வளமைச் செல்வத்திற் குபேரன். கல்வியிற் சேடன். நன் மைக்கு வந்தவன். நான் உன் தன்மைக்குத் தகுந்தவன். இந்த மச்ச தேசத்தில் நான் வைத்தது பிச்சை. இந்த நாட்டரசனான விராடனை மேன்மையா யெண்ணாதே. இவனென் தமக்கைப் புருஷனாகையாலும், சிங்காசனத்தி லேறியிருப்பதற்குச் சாவகாசமில்லாமையாலும், இவனை இவ்விடத்திற்கு முடிசூட்டி நிலைநாட்டி ஆள்காட்டிபோல் வைத்திருக் கின்றேன். இவனால் ஒன்றுமில்லை. எல்லா மென்னாலிருக்கின்றது. என் பெயர் சொன்னால் மராட முதலிய கர்நாடகமும் நடுங்கும். ஆதலால் நான் இவனை மதிப்பதுமில்லை. துதிப்பதுமில்லை. என் மகிமையை நீ நன்றாய் விசாரிக்கவுமில்லை.

"ஓ பெண்கள் பெருமாட்டி, உனக்கு எது வேண்டியிருந்தாலும் நீ எப்படி நடத்த வேண்டுவதானாலும், உனது சொற்படிக்கெல்லா முடிக்கக் காத்திருக்கின்றேன். என் பெண்சாதிமார்களும் உனக்கேவல் செய்யப் பார்த்திருக்கின்றேன். நீ வண்ணப்பெண்ணென்னுஞ் சின் னத் தொழிலை விடுத்து, என்னையடுத்து மேன்மையாயிரு. நீ எனக்கு வசப்படுவாயானால், விருஷபத் துவஜராகிய திருநேத்திரதாரியை, பார் வதிபங்கரை, என் பரமேட்டியான பரமசிவத்தைப் பூசித்துப் பிரமோற் சவம் பண்ணிவைக்கிறேன். யான் இதுவரையிலும் பண்ணிய புண்ணி யங்களை யுனக்கே தத்தஞ் செய்கிறேன். உடல் பொருள் ஆவி மூன் றையு முனக்கே யொப்புவிக்கிறேன். உனதாசையால் மோசம் போகி றேன். நான் மெத்தப் பெரிய மனிதன் மகா மேன்மையுற வாழ்ந்தேன். ஆதரவற் றலைந்தேன். ஆசைவலையா லுலைந்தேன். ஐயோ! அறிவுந் தொலைந்தேன். நீ என்னுயிர்க் குறுதியாகியதெப்பம்போற் கைகொடுத் துக் கரையேற்றவேண்டும்! ஓ கலாநிதியே! ஓ நிலாமதியே! ஓ ஜீவசஞ் சீவியே! ஏ தேவ வரப்பிரசாதமே! ஓ கருணைப்பிரவாகமே! ஓ காந்திப் பிரவாகமே; என்னை இந்தருணங் கைவிடாமற் காப்பாயானால் உனக்கு மேலான புண்ணியமுண்டு, இனி நானென்ன செய்வேன? உன் சித்த மென் பாக்கியம், தருமத்தை யெண்ணித் தயவு பண்ணி இனி என்னை இரட்சிக்கவேண்டும். என் மனமோ பதைபதைக் கின்றது. என்னுடலோ துடிதுடிக்கின்றது. என் பொறிபுலன்களோ கலங்குகின்றன. என் புத்திமதிகளோ விலகுகின்றன. நான் பிழைத்த

பிழைப்போ வீணாய்ப்போயிற்று. நான் உழைத்த உழைப்போ பிறர்க்கு நகைப்புண்டாயிற்று. உள்ள முருகுது, உடல் கருகுது, உயிரு மலையுது, உரையுங் குழறுது, ஆ! ஆ! பெண்தெய்வமே! உனது அரவிந்தப் பாதம் நம்பினேன், நம்பினேன், முக்காலும் நம்பினேன்'' என்று வெம்பி விழ்ந்து, அந்த விரதசாரணியின் காலடிப் பொடியில் இவன் தலைமுடி படும்படி தாழ்ந்து கண்டபடி பிதற்றினான்.

## கீசகனுக்கு விரதசாரணி சில நீதியுந் தன்னால் நேரும் உபாதியுங் கூறி நிந்தித்தல்

அப்பொழுது வண்டுமொய்க்குங் கூந்தல் விரிந்த மாதரசி கை நெரித்து, முகத்திற் கடுமைகாட்டி, ''அடா கொலைபாதகா! அநாசார முடையவனே! உத்தம ஜாதியிற் பிறந்தும், உயர்வாழ்க்கையி லிருந்தும், யோசிக்காமற் போனாயே! பாத்திரமில்லாத சூத்திர சாதியாயும், இராஜஸ்திரீகளுக்குப் பணிவிடை செய்பவளாயும் இருக்கிற என்பேரி லாசைப்பட்டு மோசம்போய்ப் பேசுவது உனக்கு நாசகாலமல்லவோ? அடா, ஏழையாகிய எனக்குக் கொடுக்கிறேனென்கிற செல்வங்களை உன் குலத்துக்குரிய பெண்களுக்குக் கொடுத்து, அக்கினி சாட்சியாக அவர்களைக் கலியாணஞ் செய்துகொண்டு கலந்துண்டு அழகாயிருக்கலாமே! அவர்கள் சுகத்தை விட்டுவிட்டு வயிறுவளர்க்க வந்து மாறு வேஷங்கொண்டு, தலையும் பம்பை, உடையுங் கந்தை ஆகிய இக் கோலமான என்னை விரும்பி ஏன் ஆசை கொண்டாய்! அடா, வீணாசைகொண்ட வெம்பாதகா, ஓமகுண்டத்தமுதென்று எண்ணாமற் கலங்குகிறாய். உயர்ந்த பொருளுக்குத் தளர்ந்து ஆசைப்படுகிறாய். அடா துன்மார்க்கனே! புத்திமானாகிய ஒருவன் தான் மணம்புரிந்த மனைவியைத் தனியே விட்டு அந்நிய ஸ்திரீகளை நாடி, அவர்கள் காலடியில் வாடிக்கிடப்பது அழகல்லவே; அக்கினி சாட்சியாகச் செய்த சத்தியந் தப்பினவர்களுக்கு இம்மையில் வாழ்வு மாறும், மறுமையில் நரகமீறும். எப்பிறப்பிலும் பழியும் பாவமும் அபகீர்த்தியு மேறும். ஐயோ! நான் சொல்வதைக் கேள். மறுமாதர்மேல் மையல் கொள்ளுவது அநியாயம். அம் மையலால் விளைவது அபாயம். எந்த வேளையும் அச்சமும் துன்பமும் சேரும். இதுவோ தொல்லை. இன்பமோ இல்லை. அன்றியும் பரஸ்திரீகள் தங்களை விரும்பிய நாயகனுடைய சுகதுக்கத்திற்கு உரியராக மாட்டார்கள். அதேனெனில், தங்களைச் சேர்ந்த சோரநாயக னிறந்தால், அவனுக்கு கருமக்கிரியை முதலாகிய சிரார்த்தங்கள் செய்ய அதிகாரமில்லை. அவள் கருப்பங் கொண்டு பெற்ற பிள்ளையுந் தந்தைவழிக்கிசைந்த கருமச்சடங்குகளைச் செய்யவொண்ணாது. அந்தப் பிள்ளையினால் வம்ச விருத்தியுமாகாது. ஒருவேளை வம்சவிருத்தியானால் தந்தைகுலம் நசித்துப்போம். அபிமானத்தால் வந்த அந்த மைந்தன் தலையெடுத்து மேம்பாடடையான். அவன் எவ்வளவு செல்வம் பெற்றிருந்தாலும், எருமைச்சாணம் எக்கியத்திற் காகா தென்பதுபோலாம். குலத்திற் கொண்டவள் குரங்கானு

லுங் குறைசொல்லுதற் கிடமிராது. வேதவிதியும் நீதிமுறையும் பிச காது. திதி முதலிய பிதிர்க்கடனுக்கும் அதிகாரியாயினன்.

"அடா மூடனே, இவைகளையெல்லாம் ஓதியுணர்ந்த கோத்திரத் தானாகிய நீ, ஜாதியிழந்தவன்போல் அதர்மத்திற் குடன்பட வேண்டாம், என்னை நாடுவதும், இஷ்டமாகத் தேடுவதும், உன் குலத்திற் குரிமையல்லவே, முடவனுக்குக் கொம்புத்தேன் எட்டுமா? மூடனுக்கு என் அன்புதான் கிட்டுமா? ஓ மூர்க்கனே! நானொரு விரதம் பற்றி இவ்விடத்தில் வந்திருக்கிறேன். என் பேர் விரதசாரணி. நீ தப்பு நினைப்புக் கொள்ளாதே. சாக நினைத்துத் துள்ளாதே. பூர்வத்தில் ஸீதையை யெடுத்துப்போய்ச் சிறையில் வைத்து, உண்ணுமல் தின்னுமல் ஊரம்பலமாகி, புத்திரமித்திர பௌத்திராதியுடன் நிர்மூலமாய்ப் போன இராவணன் சரித்திரத்தைக் கேட்டிலையோ? உனக்கும் அதே கதி. உருள வந்ததே தலை விதி. நீ என்ன செய்வாய்? என்னைக் கலியாணம் பண்ணிக் கொண்ட கந்தருவர் ஐவர். அவர்கள் மகாபராக்கிரமசாலிகள். என் விஷயத்தில் தீங்கு செய்பவர்களுடைய தலைகள் பனங்காயைப்போல் உருண்டலைய, ஓங்கிய விற்பிடித்திருக்கின்றார்கள். இந்த இரகசியத்தை நானுனக்குச் சொல்லவேண்டிய அவசியமில்லை. ஆனாலும் விராடன் பத்தினியாகிய சுதக்ஷணையை யடுத்து அவள் அன்னம் புசித்து வருகின்றமையினால், நன்றி குன்றாமற் சொன்னேன். 'கெடுவாய், கேடு நினையாதே' என்றால் 'இன்னமும் கெடுவேன் பந்தயமென்ன' என்பதுபோல என்னை விரும்பி மேன்மேலுஞ் சின்ன வார்த்தைகளைப் பேசுகிறாய். துர்ப்புத்தியைவிட்டுவிடு. வாய்க்கடங்காப் பிடி பிடித்து மண்டையுடைந்து மடியாதே. என்னண்டை யடைந்து துடியாதே. என்னுடன் பேசுவதற்குத் தெய்வலோகத்தாருந் திடுக்கிடுவார்கள். அப்படியிருக்க, நீபயமில்லாமற்பேசினாய், அடபாவி! எனக்குரிய கந்தர்வர் இப்போது இந் நகரத்தி லிருக்கின்றார்கள். அவர்களுக்கு விரோதிக ளில்லை. சில சமயத்தில் விரோதியானவர்கள் ஆகாயத்தில் புதுங்கினாலும், அலைகடல் மூழ்கி யொதுங்கினாலும், பாதலத்தில் மறைந்தாலும், பூதலத்தி லுறைந்தாலும், திக்கு பாலகருடைய பேருதவி பெற்றாலும், நவக்கிரகங்களின் நன்மையுற்றாலும், ஹரிஹரப் பிரம்மாதிகளானபோதிலும், அவர்க ளுயிரை யழிக்காமல் விடார்கள். ஆகையால், நீ என்னிமித்தம் உன் இனத்தாருடன் மடியவேண்டாம். காமபாசத்தினாற் கொழுத்து எமபாசத்தை யிழுத்துக் கழுத்தில் மாட்டிக் கொள்ளக் கருதுவானேன்? அப்பாற் கண்ணீர் சொரிந்து கலங்குவானேன்? எரியும்நெருப்பை எடுத்து முடிவானேன்? கரியவிஷத்தைக் கண்டு குடிப்பானேன்? தன் பலமும் எதிரிபலமும் எண்ணாமல் தவிக்கின்றனையே? அடா சண்டாளா! அப்பால் அகன்று போடா! உன் மனதில் என்னைப் பெரு நெருப்பென்று நினையடா! என்னைக்கண்டால் அண்டக்கூடாத ஆலகாலமு மஞ்சுமடா! என்னை நினைத்தால் யமனு மொடுங்கி யடங்குவானடா!" என்று கெட்டியாய்க் கூவி யெட்டி நடந்தாள்.

### விரதசாரணி சுதக்ஷிணையிடஞ் சென்று கீசகன்செயல் கூற, அவள் சமாதானஞ் செய்ய, அங்கு மவன் வந்து பிடித்தல்

இவ்வாறு அட்டதிக்கும் ஜயஸ்தம் நாட்டிய பட்டாபிஷேகப் பாண்டவர்களின் தேவியால் எசப்பட்ட கீசகன், திடுக்கிட்டுச் சோர்ந்து, அவளையடுத்துப் பின்சென்று, கையால்தடுத்து முன்னின்று "ஆ! ஹா! என் ஆசைக்கனியே! உனக்குரிய கந்தர்வரால் என்னுயிர் போயினும் போகட்டும், என் எண்ணங் கைகூடினுலுங் கூடட்டும். உனது கருணைப் பார்வை என்மேல் நீளட்டும், நீ வேண்டுமென்று நினைத்தால் என்னையுங் காத்து உன்னையு மீட்டுக் கொள்ளலாம். அப்பா லுனது சித்தம், எனது பாக்கியம்"என்று கூறினுன். அக்காலையில் வடிவேற்கண் படைத்த வண்ணப்பெண்ணுனவள் வாய்வரண்டு கோபங்கொண்டு. "இனி இந்தப் பாதகனுக் கெதிரில் நிற்கப்படா" தென்று தா அளங்கனி போன்ற வாயும் முத்துப்போன்ற பல் வரிசையு முடைய சுதக்ஷுணுதேவிக்கு எதிரோடி, நடுங்கிய தேகமும் ஒடுங்கிய உயிருமாய், குருச்சந்திரயோகத்திற் பொழியு மழைபோற் கண்ணீர் விட்டு ஆருத்துயருடன் தேம்பித் தேம்பி "ஓ கடும்கோபக் கண்ணினையுடைய பட்டத்து யானைமேற் பவனிவரும் பார்த்திபன் பத்தினியாகிய தாயே! நமது பூந்தோட்டத்தில் புட்பம் பறித்துக்கொண்டு திரும்பி வரும்போது வீரகண்டை தரித்த உமது தம்பியானவன் சொல்லாத வார்த்தைகளைப் பலவாகச் சொல்லி, பொல்லாத எண்ணங்கொண்டு என்னைத் துரத்தினுன். ஐயோ உம்மிடத்தில் நான் ஊழியஞ் செய்ய வரும்போது, நான் கொண்டிருக்கும் விரதமும், எனக்குக் கந்தர்வரைவராலுண்டாயிருக்குங் காவலும், என்னை இச்சித்தவர்கட் குண்டாகும் இக்கட்டும், இன்னவித மென்று உமக் குறுதியாகச் சொல்லியிருந்தேனே : இப்போது வீணுய் வாணுளழிய வழிதேடிக்கொண்ட உமது சகோதரனுக்குப் புத்திமதிகள் போதித்து, சரச சல்லாப சுரத லீலைகளைச் செய்யுந் தாசிகளை யழைத்து வந்து, அவன் தலைக்கேறிய காமத்தைத் தணித்துவையும், சத்தியந் தப்பாமற் புத்தியா யிருக்கச் செய்யும். உத்தமியாகிய நீர் முன்ஜாக்கிரதைப் படாமற்போனுல், என் ஜாக்கிரதையில் நான் முந்தியிருப்பேன். அதனு லவனுயிர் சிந்திப் போய் விடும். இந்தச் சொல்லை யுண்மையாய் நம்பும், என்பேரிற் குற்றமில்லை. முக்காலுஞ் சொன்னேன். சொன்னேன். சொன்னேன் என்று கூறினள்.

இப்படி வையகம் புகழுந் தைய லுரைத்த சங்கதியைக் கேட்ட சுதக்ஷிணையானவள் கையை நெரித்து, வயிற்றைப் பிசைந்து, சந்திர பிம்ப முகமலர்ச்சி தளர்ந்து, கேகய பட்சிபோற் கொஞ்சிப் பேசுகின்ற சொல்லுங் குழறி, மயிலுக் கொப்பான சாயலு மாறி, அன்னம் போன்ற நடையு மயர்ந்து, கோடையிடியைக் கேட்ட பாம்பென வொடுங்கி, பசலைக் கொடிபோல் வாடி வதங்கி, வெதும்பி விம்மி வியர்த்து, வண்ணமாமகளை யணைத்து, கண்ணீர் துடைத்து, "அம்மா வாரும், கிருபைக்கண் பாரும். என்னருகி லுட்காரும்,

அவன் கெட்டான் கொடிய துஷ்டன். உம்மைத் தொட்டானா? அதற்காக நீர் பயப்பட வேண்டாம். அந்தமட்டும் பாவி கையில் அகப்படாமல் தப்பி வந்துவிட்டதே நான் செய்த பாக்கியம்'' என்று அருமை பாராட்டி, அந்த அழகிய சிமாட்டி விரதசாரணியின் மனந் தேறும்படி சில பேசிக்கொண் டிருந்தாள். அப்போது முன்னந் துரத்திக்கொண்டு வந்த காமாட்டியாகிய கீசகனெனவன் பணிப்பெண் ணுகிய அம்மாலினியைப்பார்த்து, சுதக்ஷிணையைப்பணிந்து, ''அம்மா, உம்மிடத்திற் பிரியமாய்ப் பணிசெய்ய வந்திருக்கிற இந்த வண்ணப் பெண்ணால்என்னுயிர்போவதுதிண்ணம். எனக்கு நேரிட்டசோபத்தை நீக்கி, ஆபத்தைக்காத்து, உமது கோபத்தை மாற்றவேண்டும். அன் னையே, நமது பூந்தோட்டத்தில் இவளைக்கண்டேன், மையல்கொண் டேன். இந்தச்சீதேவி காலில் வீழ்ந்தேன். உடனே இவள் என்னை ஆதரிக்காமல், 'சீச்சீ மூதேவி' என்று முகத்தா லடித்து விடவிடத்துப் பேசினாள். படபட த்தேசினாள். இவளுக்கு நாயகர் ஐந்து கந்தர்வரென் றும், அவர்கள் அந்தகற்கந்தகரென்றுங் கேள்வி. அவ்வந்தகற் கந்தகற்கு அந்தகன் நானென்று உமக்கு நன்றாய்த் தெரிந்திருக்கின்ற தல்லவா? அப்படியே யிருக்கட்டும். நான் இவளை அடைந்து இவ ளுக்குச் சொந்தமான அக் கந்தர்வர் கையால் இறந்துபோனாலுஞ் சுகிர்தமுண்டு. இவளை யடையாவிடில் எப்படியும் நான் யமலோகஞ் சேருவேன். நான் இறந்தால் உமது புருஷனுடைய இராஜாங்க முழுவ தும் பறக்கும்; பகைஞர்கள் மேலிடுவார்கள். பார்த்தோருக்கேலியாம். என்னுடன் பிறந்த உமது தாலிக்கு நித்தியகண்டஞ் சம்பவிக்கும். ஆகையால், நீர் இவளுக்குத் தெரியப்படச் சொல்லி என்னுடன் இணங்கிவாழச் செய்வீரானால், உமது மங்கிலியந் தீர்க்கமங்கிலியமாம். நல்ல செல்வங்களை யநுபவிக்கலாம். இந்த விராடராஜனது அரசாட் சிக்குத் தாழ்ச்சி வராது. நான் இப்போது இவ்விரதசாரணிமேற் கொண்டிருக்கிற மோக தாபத்திற்கு முடிவு என்னுயிரேயன்றி வேறில்லை. இவளைக் கண்டது முதல் எனக்கு மற்றோர் விவகாரத்தி லும், மற்றோர் விநோதத்திலும் மனஞ் சிறிதுஞ் செல்வதில்லை. ஆத லால், நான் இன்னுஞ் சில நாளைக்கிருக்கும்படி கிருபைசெய்தருளுஞ் சகோதரியே'' என்று சுதக்ஷிணை பாதத்தைத் தொழுதான்.

### சுதக்ஷிணை கீசகனைச் சினந்து கண்டிக்க, அவளுக்குச் சில நயபயங் காட்டிக் கெஞ்சுதல்

இவ்வாறு மிகுந்த வணக்கமாகப் பணிந்து வேண்டிக்கொண்ட கீசகன் முகத்தை நெருப்பைப்போற் பார்த்து அவனுக் கிடங்கொடுக் காமல் அதட்டி, 'ஆமடா' என்று கறுவி, ''அடா தோஷி! என்ன பேச்சு சொன்னாய்? அடாபாவி! ஹரி! ஹரி!'' என்று இரண்டு காதை யும் பொத்திக்கொண்டு, ''மானம் பெரிதென்று மதித்தவருக்குப் பிரா ணன் துரும்பென்று மதியூகிக ளெண்ணுவார்கள். புத்தியீனர்களோ பிராணனைப் பொருளாக நினைத்து மானங்கெட வயிறு வளர்த்து, அப் பிராணனைச் சில நாளில் இழந்துவிட்டு, மண்ணுள்ள வரைக்கும் வசை

யினிலழிந்து, விண்ணுள்ளவரைக்கு மிகு நரகிலாழ்ந்து, பல பிறவிக ளெடுத்துத் தாறுமாருயலைந்து விறழிந்து சங்கடப்படுவார்கள். ஐயோ! துரோகி! இந்த சைந்திரியானவள் என்னிடத்தில் வரும்பொழுது தனக்கு மானக்கேடு வராமற் பெற்ற தாய்போற் காப்பாற்ற வேண்டு மென்றும், தன்னையாரேனுஞ் சிந்தித்து நிந்திப்பாராகில் அந்திவண்ண னருளால்தனக்குநாயகராகியகந்தர்வரால் அநர்த்தம் விளையுமென்றும் தாளுெரு காரணத்தின் பொருட்டுச் சிலநாள் கழிக்க வந்திருப்பதாயும் உனக்கு நான் அடைக்கலமென்றுஞ் சொன்னாள். நானும் அவ்வாறே வாக்குத்தத்தம்பண்ணி, விராடராஜன் முதலிய வேந்தர்களாலும்மற்ற மாந்தர்களாலும் பொல்லாங்கு வரவொட்டாமல், பெண்பழி பெண் தோஷம் பேசவொட்டாமல், இதுவரையிலுங் காப்பாற்றி வந்தேன். அடா துரோகி! நீ என் கட்டுக்காவலையு மழித்து, என பெயரையுங் கெடுத்து, எங்களை நடுத்தெருவில் விடுத்து, உனதுயிரை நமனுக்குக் கொடுத்து, விராடராஜனது செங்கோலையுங் கொடுங்கோலாக்கி, நிஷ் டூரத்தாற் கஷ்டப்படு மார்க்கத்தை இலேசாகத் தேடிக்கொண்டாய். அடா தீவினையாளா, இஃது உனக்கழகல்லவே, இஃதோர் அறிவல் லவே! என் சொல்லை நம்பிப் பேசாமற் போய்விடடா தம்பி! இந்தப் பெண்ணணங்குக்குக் கண்ணாளராகிய கந்தர்வர்கள் கருடனுக்குங் காற்றுக்கும் மேலான வேகமுள்ளவர்களாம்; வருணனுக்குந் தேவேந் திரனுக்கும் மேற்பட்ட வல்லமை யுள்ளவர்களாம்; அக்கினியையுஞ் சூரியனையும் பழிக்குங் காந்தியுடையவர்களாம். அவர்களுடைய கோபாவேசத்திற்கு மூன்றுலோகமுந் தாங்கமாட்டாவாம். இந்த விருத்தாந்தங்களை நான் முன்னதாக அறிந்திருக்கிறேன். நீ பிழைக்க மனதுள்ளவனாகில், இப்பெண்மேற்கொண்ட மோகத்தைக் கனவிலு நினையாமல் மறந்துவிடு. மறவாவிடில் வீணே கெட்டழிந்து போவாய். ஆ! பழிகாரா!'' என்று சுதக்ஷிணை கண்டித்துச் சொன்னாள்.

அம் மொழியைக் கேட்ட கீசகன் விந்தையாகச் சிரித்து சிந்தை நொந் துருத்து, ''என் தந்தைக் கொப்பாகிய தமக்கையாரே என் வல்லமை தெரிந்துந் தெரியாமற்போல் பேசுகிறீர். அவ்வளவு பலவான்களாகிய கந்தர்வர் பதினாயிரம்பேர் ஒன்றாகத் திரண்டுவரி னும், என்னோ டெதிர்த்து என்னைப் பகைத்து வெல்வார்களோ? நான் ஒருவருக்குப் பயந்தவனோ? அவர்களைப் பஞ்சுபோலடித்து யமலோகம் நோக்கப் பறக்கவிடுத்து, அவளிதழைக் கடித்து, இன்பரசங் குடித்து, என்னெண்ண முடித்து, உம்மெதிரில் நகைத்து உலாவி விளையாடப் போகின்றேன். என்னைத் துன்பப்பட் டிறப்பாயென்று சொல்லியது உமது பேதைமதியோ? பெரியவளென்று பெயர்வைத்துக் கொண் டீரே, போம் போம்'' என்று நொடித்துப் பின்னுஞ் சொல்லுகிறான். ''நல்லதம்மா, அஃதப்படியே யிருக்கட்டும். நீர் பெண்ணாகப் பிறந் திருந்தும், எனக்குத் தமக்கையெனப் பேர்பெற்றிருந்தும், மணவாழ்க் கையில் நன்றாய்ச் சிறந்தும், பெண்களுக்கு வேண்டிய பிரதான காரி யங்களில் ஒன்றாயினு முமக்குத் தெரியவில்லையே! உலகிலுள்ள பெண்

களின் குணாதிசயத்தையும் அந்தரங்க இரகசியத்தையும் நீ அறியா மற் பேசினீரே! ஸ்திரீகளின் சுபாவகுண மென்னவெனில், கை நிறைந்த பொன்னிலுங் கண்ணிறைந்த கணவனே போதுமென் றெண்ணுவார்கள். அன்றியும், பெற்றவனானாலும், கூடப்பிறந்தவனானாலும், தான்பெற்ற பிள்ளையானாலும், சௌந்தரியமாயிருந்தால் முறை பாராட்டாமல் மோகங் கொள்ளுவார்கள். அழகிலும், இனிய மொழியிலும் பருவத்திலும் உருவத்திலும் சங்கீத சாகித்தியத்திலும் எல்லாராலு மதிக்கத்தக்க நாயகன் வாய்த்திருந்தாலும், அப்படிப்பட்டவர்கள்மேலாசையை விட்டு, அந்நிய புருஷர்கள்பேரி லிச்சைப்படுவது பெண்ணுருவாய்த் தோன்றிய பேதையருக் கியற்கையென்று பெரியோர்கள் கூறியிருக்கின்றார்கள், அஃதெப்படி யென்றால்,

'தந்தையாயினும் விழைவிற் றன்னுடனே யொருவயிற்றிற் சார்ந்தாரேனும்
மைந்தராயினு மிகவும் வனப்புடைய ரெனிலவர்மேல் மடநல் லார்தஞ்
சிந்தைநடந் திடுமதனாற் செய்யமலர்க் கணைவேளிற் செவ்வி வாய்ந்தோன்
பைந்தொடியா ரினிதமரு மகத்தினிடைத் தனிவருதல் பான்மை யன்றே'

என்றும்;

'ஏந்தெழின் மிக்கா னிளையா னிசைவல்லான்
காந்தையர் கண்கவருங் காட்சியான்—வாய்ந்த
நயனுடை யின்சொல்லான் கேளெனினு மாதர்க்
கயலார்மே லாகு மனம்'

என்று மிருப்பதால், ஸ்திரீகள் விவஸ்தை யற்றவர்களென்றும், ஸ்திரீகளை நம்பப்படாதென்றுஞ் செப்பியிருக்கிறார்கள். மேலும்,

'அத்தி மலரு மருங்காக்கை வெண்ணிறமுங்
கத்துபுனல் மீன்பதமுங் கண்டாலும்—பித்தரே
கானார் தெரியற் கடவுளருங் காண்பரே
மானார் விழியார் மனம்'

என்னுந் தன்மையால், நீர் இவளுக் கிப்போது நல்ல புத்திமதியைப் போதித்து, என்னை யடையும்படி செய்யும். இது உமது கடமை'' என்று கெஞ்சினான்.

### கீசகன் சுதக்ஷிணையாற் கடிந்து துரத்தப்பட்டுத் தன் மாளிகை சென்று விரக நோயால் தவிக்க தாதியர் உபசரித்தல்.

இவ்வாறு கெஞ்சிய கீசகனைச் சுதக்ஷிணைநோக்கி, ''அடாபஞ்சமா பாதகா, கொஞ்சமேனும் நாணமில்லாமல், பக்கத்திலிருக்கும் பாங்கிப் பெண்களையும் பாராமல், என்னிடத்தில் இந்தப் பேச்சைப் பேசலாம் பேசப்படாதென்றும் யோசிக்காமல், துணிந்து பேசினையன்றோ? நீ என்ன கதி யடைவாயோ? எப்பாடு படுவாயோ? சைந்திரிமேற் கொண்ட மோகாக்கினியில் தனக்குத்தானே வீழ்ந்திறக்கின்ற வீட்டிற் பூச்சிபோலாவாயோ? நீயுமுன்னைச்சார்ந்தோரும் எவ்வாறுவீர்களோ? பசிக்குப் பனம்பழந் தின்னப் பார்க்காதே: துஷ்ட காரியங்களைத்

தொடங்கிக் கெட்டுப்போனவர்கள் கோடாகோடியுண்டு. அடாமட்டி, என்னுடன் பிறந்தவர்கள் நூற்றைந்து பேரென்னுங் கணக்கு இன்றைக்கொழிந்தது; குட்டாயிருந்த கட்டுந் தளர்ந்தது; காவலழிந்தது; போங்காலமாயிற்று; சாங்காலம் வாய்த்தது. இப்போது உன்னை யிழந்தவளாயினேன். இனி என் தலை வாசலை மிதிக்காதே. எனக்கெதிரில் நிற்காதே. நீ செத்தாலும் நான் உன் முகத்தைப் பாரேன். இந் நிமிடத்திலப்பாற் போடா'' என்று அதட்டினள். அப்பொழுது பாவபுண்ணிய மெண்ணிப்பாராத பாவியாகிய கீசகன் கோபமேலிட்டுக் கொதித்து, கோபதாபத்துடன் தன் மாளிகைக்குப் போனன். அப்படிப் போகும்போதே சுரமும் குளிரும் சோம்பலும் ஏம்பலும் தேம்பலும் திகிலும் கொண்டு, ''ஆ! ஆ! பணிப்பெண்ணான பாதகி! என்னைக் கெடுத்தாயே! பாம்பின் வாய்ப்பட்ட தேரையாக்கினையே'' என்று பரிதாபமடைந்து, மூச்சுத் திணறிப் பதைபதைத்தான். பின் மலரணையிற் படுத்து வெம்பினன்.

அவ்வாறு மலரணையிற் படுத்து வெம்பிக்கொண்டிருந்த கீசகனுக்குப் பணிப்பெண்கள் எத்தனையோவித உபசாரம் பண்ணியும் அத்தனையும் அவனுக்கு வெறுப்பா யிருந்ததால், ''ஐயோ! இந்த மலரணை வெதுப்புதே! வாசனைப்பன்னீர் கொதிக்குதே! சந்தனச் சேறு தணல்போல் தகிக்குதே! பெண்களாகிய நீங்க ளெல்லோரும் ஒன்றுய்ச் சேர்ந்துகொண்டு என்னைப் புண்ணாக்கவோ, அன்றி மண்ணாக்கவோ வந்தீர்கள்! பாலை நிலத்தின் நெருப்பை மெத்தை யென்று பரப்பி வைத்தீர்களே! சிற்றாலவட்டம் பேராலவட்டம் பொன்னாலவட்டம் பூவாலவட்டமென்று விதவிதமாய்ச் சொல்லி வீசுகின்றீர்களே! இந்த ஆலவட்டக்காற்றும், சாளரத்திற் புகுந்து பெரும்புலிபோற் பாய்ந்து வருகின்ற தென்றலும், வாசுகிமுதலாகிய பாம்புகளின் விஷக்காற்றைப்போல் என்னுடலையுமுயிரையும் வாட்டுகின்றனவே! ஓசைப்பட் டொலிப்பதென்ன கடலோ! அந்தக் கடலுக் கென்மே லென்ன அடலோ! இளஞ்சந்திரன் காயுதே! இஃதென்ன வடவைத்தீயின் வாதையோ! கோடைக் காய்ச்சலின் சூரியவேதையோ! இந்த மாலைப் பொழுது வந்ததென்ன காலவிஷக் கறுப்போ! இரவு மூடி எத்தனை காலமாயிற்றே! பொழுதுவிடியாம லிருக்கும்படி பெண்கள் சபித்து விட்டார்களோ! வண்ணப்பெண் முகச்சாயல் வந்து பாயுதே? மதிதானெழுந்து காயுதோ! நித்திரை பிடியாதது சித்தப்பிரமையோ! நெடுமூச்செறிவது மோகச் சிரமையோ! கண்ணெதிர்ப் படுவது கண்டவாதனையோ! கருத்திற் செல்வது காமவேதனையோ! அல்லது அவள் கடைக்கண் சோதனையோ! அம்மம்மா! அவள் குரலோ குயிற்போல் கூவி யேசுவது! அவள் மொழியோ கிளிபோல் தூறிப் பேசுவது! என்னை மோகப்பேய் பிடித்துத் தலைசுற்றி யாட்டுதே! காமசோகபாசங் காலனூருக் கோட்டுதே! அடி தோழிகளே, அங்கே பேசுவதாரடி? பஞ்சவர்ணக்கிளியோ! கொஞ்சும் பணிப்பெண்ணளியோ! அவ்விடத்திலசைந்து நடப்பது அன்னமோ! இவ்விடத்தி லிசைந்து நடப்பது

விரதசாரணியாகிய சொன்னமோ'' என்று பலவாறாக அன்றிரவு முழு
தும் பிதற்றிக்கொண்டு அவன் பட்டபாடு மற்று யார் படுவார்கள்? ஓ
ஜனமேஜய மகாராஜனே, இவ்விதமாக விபரீதம் விளைந்த சமயத்தில்,
ஊழியப்பெண்கள் அனைவருஞ் சேர்ந்து ''ஐயோ! ஈதென்ன அநியா
யம்'' என்று பயந்து சந்தன பாளித குங்கும பங்கஜ பராகங்களைக்
கலந்து அவன் தேகத்தில் தெளித்து, தாமரைக்கொழுந்து முத்துச்
சரம் வாழைக்குருத்து முதலிய சீதளவஸ்துக்களினால் படுக்கை விரித்
துப் பக்குவம் பண்ணினார்கள்! அத்தனையு மவனுக்கு ஒத்துக் கொள்
ளாமல் மெத்த வருத்தப்பட்டு, ''ஐயோ எரியுதே! மேனிபொரியுதே!
கண்ணீர் சொரியுதே! கைகால் கரியுதே! கண்க ளிருகுதே! கருத்து
மருளுதே! கட்டுவிட்டுப் போகுதே! தட்டுக்கெட்டு மாறுதே! நாவும்
உலர்ந்ததே, நாபியும் வறண்டதே! செவியு மடைந்ததே! சிரசும்
உடைக்குதே'' என்று கதறிக்கொண்டிருக்கும்பொழுதே பேச்சடங்கிப்
போயிற்று.

### கீசகன் மரணமூர்ச்சை யடையக்கண்ட தாதியர் சுதக்ஷணைபால் முறையிட்டு விரதசாரணியை அனுப்பும்படி பலாத்காரஞ் செய்தல்

அப்போது பக்கத்திலிருந்த பத்தினிமார்களும் பாங்கியரும்
பார்த்து, ''ஆச்சுது, ஆச்சுது, பெருமூச்சு வாய்ச்சுது, பேச்சும்
போச்சுது, பிழைமோச மாச்சுது'' என்று காச்சு மூச்செனக் கதறி,
இனிமேல் நாம் சும்மா விருப்பது காரியமல்ல வென்று பதறி, ''பாவி
படும்பாடு இவ்வண்ண முடிந்ததே'' என்று கண்ணீர் விட்டழுது
தெய்வத்தைத் தொழுது, ''இவன் நினைத்த நினைப்புப்பழுது, ஆதலால்
இது சொற்பமாகப் போகத்தக்கதல்ல'' என்று பற்பலவாகப் பேசி, அப்
பால் யாவருந் தங்கள்பேரிற் பழிசாராமல் எஜமானிக் கறிக்கையிட
வேண்டுமென்று கால்பதற வோடி, இராஜபத்தினியாகிய சுதக்ஷணை
யைப் பணிந்து, ''ஓ குலக்கொடியே! தேவரீர் கோபித்துக் 'கொண்ட
கடுமையினாற் கூசாமற் சென்ற கீசகராஜன் படுக்கைமேல்' விழ்ந்து,
காமத்தீயாற் கருகி, மோகக் காற்றால் மொத்துண்டு, பித்தலும்பிதற்றலு
முடையவராய்ச் சிந்தைவாடி, தியங்கி வருந்தி, தலையெடுக்க மாட்டா
மல் தன்னை மறந்து, ஆரட்டலும் புரட்டலுங் கொண்டு அயர்ந்து
போய் விட்டார். எங்களாற் கூடிய மட்டும் உபசாரம் செய்து
பார்த்தோம். ஏதேதும் தேறுவதாய்க் காணோம். இனிக் கரை
யேறுவாரென்று கனவிலும் நினைக்க வேண்டியதில்லை. ஆனால்
உடன்பிறப் பென்னுங் கருணை பெருகி, அதனால் உமதுள்ள
முருகி ஜீவகாருண்யஞ் செய்ய இரங்குவீராகில், இன்னுஞ் சில
நாளைக்குக் கீசகராஜ னிருப்பாரென்று ஒருவாறு எண்ணலாம்,
நமது வாழ்க்கையாம் வரிசையும் குறைவுபடாமற் கண்டு மகிழலாம்;
எங்களைப்போன்ற ஏழைக்குடும்பங்களும் காலங்கழிக்கலாம். அப்படிக்
கில்லாவிட்டால், கீசகருக்கு நேரிட்ட கெடுதி வெளிப்பட்ட வுடனே
பகைவர் மேலிடுவார்கள். நானாவித விரோதங்களும்விளையும். அதனால்

நமது மச்சநாட்டின் வட்டமும், பச்சைக் கொடி நாட்டிய பட்டமும் போம். அப்பால் உங்களை யண்டிய நாங்கள் பிச்சையெடுத்துப் பிழைக்க நேரிடும். ஓ கொச்சை மொழிமானே, இனிமேல் வினைசெய லெப்படியோ அறியோம்'' என்று கையைநெரித்துக் கண்ணீர்விடுத்து, சுதக்ஷிணையின் கால்மேற் படுத்துக் கதறிப் பதறி யழுதார்கள்.

அப்படிக் கண்கலங்கிய பாங்கியரைச் சுதக்ஷிணை பார்த்து, ''சங்கதி யென்னடி'' என்று கேட்டாள். அப்போது அவ்விடம் நின்ற தோழியர் ''அம்மா, பின்னையொன்று மில்லை. நம்மிடத்து வந்திருக்குங் கருங்குவளைக் கண்ணுளாகிய வண்ணப்பெண்ணென்னும் நுண்ணிடையாளை எப்பாடுபட்டாகிலும் வசப்படுத்திக் கீசகரிடம் அனுப்புவீராகில், அவர் கொண்ட வெறியுங் கடுங்காதற்குறியும், தனக்குத் தானே தணிந்துபோய்விடும். போன பிராணனு மீளும்; அவர் மனைவியர்களு மங்கிலியத்தோ டிருப்பார்கள். இப்படிப்பட்ட ஆபத்து எப்பொழுதும் வந்ததில்லை. இப்போது நேரிட்ட இந்தத் தத்துக்குத் தப்பிப் பிழைக்கும்படி நீரே சாந்திசெய்யவேண்டும். ஓ ஏந்திழையே, இந்த வேளை நீர் இரங்காமற் போனால், இப்பவோ இன்னுஞ் சற்று நேரத்திலோ, பொழுது விடியுங் காலத்திலோ, கீசகருயிர் போகும்போ லிருக்கின்றது. ஊழியராகிய எங்கள்மேல் தோஷஞ் சொல்லவேண்டாம். எங்களால் உபசரிக்க வேறு வழியுமில்லை'' என்று பாங்கியருரைத்த பசப்பு வார்த்தையைச் சுதக்ஷிணை கேட்டு, ''ஓ தோழிமார்களே, ஆசைப்பட்ட பாவியாவது வேறு பெண்கள்மே லாசைப்படலாகாதா? ஐயோ! மோசம் வந்ததே! கந்தர்வர் காவலி லடங்கிய தெய்வப் பெண்ணை நான் எப்படி வசப்படுத்தி யனுப்புவேன்? அப்படிச் செய்வது நன்மையல்லவே! ஒருவேளை யனுப்பி வைத்தால், மோகாந்தகனாகிய பாவி மேல்விழுந்து தொந்தரை செய்வானாகில் இந்நாடும் நகரமுங் குலமுங் கோத்திரமுங் குடியும் படையும் குன்றிப் போய்விடுமே? நானென்ன செய்வேன்? ஓ என் சகிமாரே, கெடுவழியிற் பிரவேசிக்கலாகாதே! என் மனதிற்குச் சஞ்சலமென்னுந் தணலை மூட்டினீர்களே!'' என்று முகத்திலும் வயிற்றிலும் அறைந்துகொண்டு, கலாப மயில்போ லசைந்து கலங்கினாள்.

அப்பொழுது வஞ்சகனாகிய கீசகனுடைய தாதிமார், இராஜ வஞ்சியை நோக்கி, ''அம்மா, நீரேன் அஞ்சுகிறீர்? பெண்ணென்பவரெல்லாரு மொன்றே. நாமெல்லாரும் ஸ்திரீயினமேயன்றி வேறல்ல, மானமென்பது யாவருக்கு முண்டு, கீர்த்தி அபகீர்த்தி எவர்கட்கு முள்ளதே. இந்த விஷயத்தைக் குறித்து உமக்கும் உம்முடைய நாயகருக்கும் பொல்லாங்கு நேரிடுமாகில், எங்களுக்குத் துன்பமுந் துயருமில்லாமல் போமோ? நீங்கள் நன்மையா யிருந்தாலல்லவோ எங்களுக்குச் சவுக்கியமுண்டு. நாங்கள் கீசகர் பக்கத்தில் நீங்காம லிருக்கும்போது, வேறு வித்தியாசம் விளையுமென்று நினைக்கின்றீரா? அப்படி நினையாதீர். எங்களுயிரை விட்டாலும் விடுவோமேயொழிய, அபகீர்த்திக் காளாகமாட்டோம். அவருடைய அக்கிரமத்

துக் கிடங்கொடுக்கமாட்டோம். எங்கள் பேச்சை நீர் சத்தியமாய் நம்பும். நாங்கள் செய்யப்போகிற தந்திரத்தைக் கேளும். இந்த விரத சாரணியை யழைத்துப்போய் அவர் முன்னே நிறுத்தி, இவளைச் சுற்றிலும் நாங்கள் நின்றுகொண்டு 'இதோ வந்தாள் வண்ணமாது' என்போம். இச்சொல் அவர் செவியில் விழுந்தவுடனே மோகினியைக் கண்ட முனிபோ லெழுந்து, இவளுடைய கால்மேற் பணிந்து 'கண்ணே பெண்ணே' என்று புலம்பிக் கதறுவார்: காமவேதனையாற் பதறுவார், அண்டையி லிருக்கின்ற நாங்கள் அவரைத் தடுத்து, 'ஐயா, உமதுடம்பு கசங்கி அசங்கியப்பட்டிருப்பதினுல் ஸ்நானஞ் செய்து, சந்தனம் புனுகு சவ்வாது பனிநீர் சாந்து கதம்பம் கலவை இவைகளைத் திமிர்ந்து, போஜன முண்டு, தாம்பூலந்தரித்து, ஆபரண அலங்காரத்துடன் அடுத்து பழவர்க்கங்களும் பட்டுப் பட்டாவளியும் புஷ்பச்செண்டுங் கொண்டுவந்து இந்தப் பெண்ணுக்குக் கொடுத்து, உல்லாசப்படுத்திச் சல்லாபமாய்ப் பேசும்' என்ற அந்த வல்லாளன் புத்தியை மாற்றி, ஆளைப் பூமேலேற்றித் தேற்றி, உடனே இந்தச் சைரந்திரியை உம்மிடத்திற் கனுப்பிவிடுகிறோம். அம்மா, பெரு நெருப்பில் ஈ மொய்க்குமா? இரும்பைச் செல்லரிக்குமா? எள்ளளவும் வித்தியாச மெண்ணுதீர்'' என்று உறுதியாய்ச் சொன்னுர்கள்.

இவ்வாறு ஸ்திரமாய்ப் பேசிய சேடியரை சுதக்ஷிணை பார்த்து, ''ஆமடி பெண்களே, நீங்கள் சொல்வது பக்குவந்தான். இவ்வாறு நடந்தால் எவருக்குந் தோஷமில்லை. ஒருவேளை கரைபுரண்ட வெள்ளம் அணை கடந்து போனுலெப்படி? நீங்கள் தானென்ன செய்வீர்கள்? நான் பாவியாய்ப் பழிகாரியாய்விடுவேனே! அன்றியும், கட்குடியன் காமுகன் பொய்யன் பொருமைக்காரன் புருங்கூறுபவன் கள்ளன் ஊராருடமைக் குலைவைத்திருப்பவன் வறியன் மூடன் முதலியவர்களுக்கு, சத்தியம் சவுசம் ஆசாரம் சாந்தம் தன்மை உண்மை ஆணை ஆக்கினை முதலியவைகளி லொன்று மிராதே! இப்படிப்பட்ட மூடர்கள் சற்றும்யோசிக்கமாட்டார்களே! மோகக்காற்றுங்காமத்தீயும் முடுகி வரும்பொழுது கைகொண்டு மறிக்கப்போமோ? அஃது வேறொன்ருற் கட்டுப்படுமோ?'' என்று தருமந்தவருத சுதக்ஷிணையானவள் சொல்லும்போது, அந்தக் கீசகனிடத்திலிருந்து வேறு சில தாதியரோடிவந்து, ''ஐயோ! அம்மா! எப்படி என்செய்வோம்! ஓமைப் படிந்த கண்ணுளான மதனரதியே, உன்பேரி லாணைப்படிக்குக் கீசகர் முடியப்போகிருர்! காலங் கிட்டிவிட்டது! ஜாலம் பண்ணுமல் இந்தச் சைரந்திரியை யனுப்பிவிடும் ஆபத்திற்குப் பாவமில்லை. இத்தருணத்தில் நீர் அவரைக் காக்கவேண்டும். இந்தம்மாள்பேரில் அவர் கைப்படவொட்டாமற்செய்து, இவள் பதிவிரதா தருமத்தைக்காப்பாற்றி, உங்கள் சத்தியமுங்கீர்த்தியுந்தழைக்கப் பார்க்கின்ருேம். இல்லாவிட்டால்அவர் கொண்டிருக்கிற மோகலாகிரி எம்மனேரால் தீர்க்கத்தகுந்ததாயில்லை. நாங்களுபசரிக்குந்தோறும் அவர் கொண்டிருக்கிற விரகதாபாக்கினியானது அழலில் நெய்சொரிவதுபோல் அதிகரிக்கின்றது. ஆதலால் விரைவிற் கிருபைபுரியும்'' என்று பல்லைக்காட்டிக் கெஞ்சினுர்கள்.

## சுதக்ஷிணை விரதசாரணியை வருந்திப் பணிந்து கீசகனைக் கண்டுவரும்படி கேட்டுக்கொள்ளுதல்

இவ்விதமாக அத்தாதியர் பட்டபரிதாபத்தைப் பார்த்த சுதக்ஷிணையானவள் காலகதியாற்கருத்து மயங்கி, ஊழ்வினை வசத்தால் உணர்வுமழிந்து, "அந்தோ! அடபாவி கீசகா! பாசாவேசங்களாகிய ஐம்புலாதிகளின் சேட்டை யறிந்து கேட்டையொழிந்து தேறித்தெளிந்த பாக்கியவான்களின் வாக்கியங்களைக் கற்றும், யோக்கியமாகக் கேட்டும், இன்னும் தெளியாமற் போயினையே! மன்மத வேதமார்க்க மகிமையும் பார்த்திலேயே! கேடுவரும்போது மதிகெட்டுவரு மென்பது போல், நாசம் வரும்போது ஞானமும் உண்மையுங்கெட்டு, எல்லா நன்மையும் விட்டுப்போமே! மழைக்காலயிருட்டானலு மந்தி கொம்புவிட்டுக் கொம்பு பாயுமா? புலி பசித்தாலும் புல்லைத் தின்னுமோ? சிங்கஞ் சிறுத்தாலும் பங்கப்படுமோ? சிறு சிங்கமானலும் யானை மாமிசமன்றி வேறுமாமிசந் தீண்டுமோ?" என்றழுது, 'தானுடாவிட்டாலும் தன் சதையாடும்' என்னும் பழமொழிக்கிணங்கச் சகோதர பாசத்தால் வியாகூலப்பட்டு, நெஞ்சு புண்ணாய்க் கொட்டிய பஞ்சுபோற்படிந்து, கண்மாரிசொரிந்து தன்னருகிலிருந்த பணிப்பெண் கால்மேல்வணங்கி, "ஓ பதிவிரதாசிரோமணி, திருந்திய குலத்திற்பிறந்து அருந்ததியிலுஞ் சிறந்த தேவரீர் சிறிது கடைக்கண்ணருள் செய்வீராகில், எங்கள் செங்கோலும் வாழ்வும் நீதியும் நெறியும் சீருஞ்சிறப்பும் குறைவுபடா. தேவரீர் கிருபைசெய்யாவிட்டால், எங்களரசுரிமை முதலிய யாவும் அழிந்து போய்விடும். நீர் ஆமென் றொப்புக்கொண்டால் நாங்கள் பிழைப்பதற் கிடமுண்டாம். நீர் ஒப்புக்கொள்ளாவிடில் நாங்களடியோடு அழிந்து போகும்படியாய் நேரிடும். ஓ பூரணச்செல்வியே, நான் பேசப்போகிற வசனத்தைப் பொறுமையுடன் கேட்டருளும், என்னுயிர்க்குயிராகிய துணையே, எனக்குத் தம்பியென்று பிறந்த வம்பன் அறிவிலாச்சிறுவனுகையால் மனவுறுதியில்லாமல் மதனவெறி யேறிப்போனுனும்; மதி மயங்கிப் பிணமானுனும். இதுவரையிலும் உயிர் இருக்கிறதோ இல்லையோ வென்று தாதியரோடிவந்து சேதி சொன்னுர்கள். மூவாசையொழிந்த முதியோர்களையும் பெண்ணுசைவிடாது. பிரபஞ்ச மாயையென்பது இதுதான். நான் மகா பாவியானேன், நீர் என்பேரிற் கோபியாதிரும். உமது விரதங்குறையாதிருப்பதற்குத் தாதியர்மெத்தப் பிரயாசைப் படுவதாக எனக்குச் சத்தியஞ் செய்திருக்கிருர்கள். அப்படிச் சொன்னபோதிலும், படாடம்பனுன கீசகன் அடாத காரியமாக உம்மை நாடி ஆசைப்பட்டது அநியாயம். ஆகிலும் உம்மை வேண்டிக்கொள்ளுகிறேன். ஆபத்துக் காலத்திற் கிரங்கி, அடியேன் முகத்தைப் பார்த்து, என் மனச் சஞ்சலத்தையும் அவன் படுகிற துன்பத்தையும் போக்கும் வகையை நீர் யோசிக்கவேண்டும். உமது கற்புக்கும் பழுது வராமல், என்னையும் புநிதவதியாக்கி, அவனும் பிழைக்கும்படி கிருபைசெய்தருளும். நீ இவ்வளவு ஜீவகாருண்யம் வைத்து எங்களை இரட்சிப்பீராகில், உமது குலமும் கோத்திரமும்

குணமும் நீர் கொண்டிருக்கின்ற நோன்பும் குறைவுறாமல் மேன் மேலும் விருத்தியாகும். உலகுள்ளமட்டும் உமது மகத்துவம் நிலைநிற் கும். எங்கள் நூற்றைந்துபேரையும் பெற்று வளர்த்த தாயென்று நாங் கள் கொண்டாடுவதுமன்றி, உலகத்தாரும் புகழ்ந்து மகிழ்ந்து வாழ்த்து வார்கள். தினமுந் திருவிளக் கேற்றிவைத்து, எங்கள் குலதெய்வ மென்று உம்மைக்கும்பிடுவேன். ஓ தீனரக்ஷகி, உமது பத்தினித் தவத் திற்குப் பங்கம் வரும்படியாகப் பார்க்கமாட்டேன். நான் உம்மை நம்பி னேன். எனக்கொருவருந் துணையில்லை' என்று சொல்லி, "கதியில் லாத அடியாளுக்கு உமதிரண்டு பாதமே கதி" என்று பணிந்து, இரண்டு காலையும் பிடித்துக்கொண்டு, "அம்மா, துணிந்து நானொரு யுக்தி நினைத்திருக்கின்றேன். அது உமது சித்தத்திற் கெப்படி யிருக் குமோ தெரிகிலேன். சிறியாளாகிய என் மொழியைச் சிந்தையிற் கொண்டருள வேண்டும். அஃதென்னவென்றால், நாசகால வழியை நாடி மோசம்போய்க் கிடக்கின்ற கீசகனிடத்திற்கு நீர்போய், வாசப்பூ மாலையுந் தேனும் உன் தமக்கை வரிசை யனுப்பினாளென்று கொடுத்து வருவீரானால், என்னிஷ்டம் உம்மைவிட் டெப்பொழுது மகலாது" என்று அதிக வருத்தத்தோ டுரைத்தும், இந்த உத்தமியை யனுப்புவ தற்குச் சற்றும் மனமில்லாதவளாய்க் கவலைகொண் டிருந்தாள்.

இத்தன்மையாகச் சொல்லிய விராட மனைவியைக் கற்பிற்கனி யாகிய பாஞ்சாலியானவள் நோக்கி, "என்னை யாதரிக்கத் துணிந்த அன்னையே, உம்முடைய தம்பியாகிய கீசகன் அற்ப விஷயத்திற் காசைப்பட்டுப் பூந்தோட்டத்திலிருந்து என்னைத் துரத்திக்கொண்டு வந்தபோது, நீர் கடுமையாகப் பேசிய வார்த்தையாற் கொல்லத்தக்க பகைகொண்டு போனான். அவனுடைய கருத்து உமக்கு நன்றாய்த் தெரிந்திருந்தும், அந்த இடத்திற்குப் போவென் றெவ்வாறு சொல்லு கிறீர்? அவனிடத்திற் கென்னை யனுப்ப நினைப்பது, உமது மேலான புத்திக் கழகல்லவே. நான் உம்மிடத்தில் வந்தடுத்தபோது என்பேரி லொருவர் காதல் கொள்ளப்படாதென்றும், கொண்டால் உடனே உயி ரிழக்க வேண்டுமென்றும் முன்னமே சொன்னேனே! அப்படியே குறைவு வராமற் காக்கிறேனென்று வாக்களித்து, அதுமுத லிதுவரை யிலுந் தளர்ச்சியின்றிக் காத்து, இப்பொழுது அந்தச் சண்டாளனிடத் திற் கனுப்புவதற்கு எப்படியுமது மனமொப்பியதோ அறியேன். அப் படியே யாகட்டுமென்று உமது வார்த்தையைத் தள்ளாமல் நான் அங்கே போவேனாகில், அந்த வண்டன் என்னைக் கண்டவுடனே காதல்மீறிக் காமமேறிக் கைகலக்கத் துணிவானே! அப்போது நான் கண் கலக்கப் படுவேனே! அப்பால் விருதாவாய் அநர்த்தம் விளைந்து போமே! 'மறந்து செத்தேன் பிராணனே வா' என்றால் வராதே! ஆத லினால் அவனிடத்திற் கென்னை யனுப்புவதை நிறுத்தி, வேறெந்த வேலைக் கனுப்பினாலும் உமது சொல்லுக்குத் தடைசொல்லேன். இந்த வேலையிலென்னை விலக்கிவிடும். என்னைப்போல் இன்னும் அநேக தாதியரிருக்கின்றார்கள். அந்தச் சௌந்தரியவதிகளிற் சிலரை யனுப்பு

வது உத்தமமா யிருக்கும். என் மர்மத்தை யுமக்குச் சொன்னேன். அப்பால் உமதிஷ்டம்'' என்று சைரந்திரி சொல்லினள். இவையனைத்துங் கேட்ட சுதக்ஷிணை மீண்டும் வணங்கி, ''ஓ விதரணைசாலி, உம்மைக் கண்டு ஆசைப்பட்டு, உயிரழிந்ததைப்போல் உறக்கங்கொண்டு படாதபாடுபடுகிற பதிதனுக்கு மற்றொரு பெண்ணைக் கண்டு பேச இச்சை யுண்டாமோ? அப்படி யல்லவென் றனுப்பினாலும் உம்மேற் கொண்ட மோகம் மற்றொரு பெண்ணால் மாறுமோ? உமதுருவங் கண்டாலும், உமது இன்சொற் கேட்டாலும், இறக்க வழி பார்க்குங் கீசகன் எழுந்திருப்பானென்று சொல்லுகின்றார்களே! ஓ என்னிஷ்டமே, நீர் பட்ட கஷ்டத்தோடு என் கஷ்டமாய்ச் சென்று திரும்புவது மகா பாக்கியம். அதனால் நீர் நீடூழி வாழ்வீர். எங்களையும் நிலைபெறச் செய்வீர்'' என்று போற்றினாள்.

### விரதசாரணி கீசகனிடஞ் செல்ல அவன் தொடக்கிட்டலும் அவள் ஓடி விராடன் சபையில் அபயம் புகுதல்

இவ்விதமாக வணங்கிப் போகத்தகாத காரியத்திற்குப் போகச் சொல்லிய சுதக்ஷிணையைப் பேரறிவாலும் பிசகா மொழியாலும் பெருமைவாய்ந் துயர்ந்த பாஞ்சாலி பார்த்து, ''ஓ மேதினி போற்று மாதரசே, நீர் கொடிய பாதக னிமித்தமாகக் குரூர வார்த்தையைக் கூசாமற் சொன்னபடியால், உமது சொல்லைத் தள்ளக்கூடாத தாக்ஷண்யத்தின் பொருட்டுப் போகின்றேன். பின்னை லென்ன கெடுதி விளையுமோ? அதைக்குறித்து நீ என்னைக் கேட்கவேண்டிய தில்லை. ஓ அன்னமே, சொன்னேன்; சொன்னேன்; சொன்னேன்; முக்காலுஞ் சொன்னேன். என்னை வெறுக்காதேயும். அப்பால் இக் காரியத்தில் இதுவரையுந் தழைத்து விளங்கிய சுற்றத்தாருக்கும், மற்றையோருக்கும் மெத்த வருத்த மேலிடும்போ லிருக்கின்றது. 'விநாசகாலம் விபரீதகோலம்' என்பதை யோசிக்காமல், காலாநுகூலத்திற்குத் தகுதியாய் நீரும் இப்படிக் கட்டளையிட்டீர். அப்படியே நான் போய்வருகிறேன்'' என்று சொல்லி 'வினையின் பயனே பயன்' என்றெழுந்து, முத்துபோற் கண்ணீரை முகஞ் சோரவிட்டு, வாசப் பூமாலையுந் தேனுங் கைக்கொண்டு, அந்தப்புர வாசலுக்கு வெளியே வந்து நின்று, தேவேந்திரன் வாயுதேவன் எமதருமராஜன் அசுவனி தேவர்கள் ஆகிய இவ்வைவரையுந் தியானித்து, எஜமானி உத்தரவைக் கடக்கக் கூடாமையால் நாசகாலக் கீசகன் வாசஸ்தலத்தை நாடிப் போனாள். 'கேட்டீரோ ஜனமேஜயமகாராஜனே, இந்தப் பாஞ்சாலி விரதசாரணியென்று வேஷங்கொண்டு சுதக்ஷிணையிடத்துக்கு வந்தபொழுது கந்தர்வரைவர் தனக்குக் கணவரென்றும், மற்றவர் தன்னைத் தீண்டப்படாதென்றும், கண்ணெறிட்டுப் பார்த்தவர்கள் வெண்ணீறாய்ப் போவார்களென்றும், ஒரு தரத்திற்குப் பத்துதரமாகச் சொல்லியும், மகா புத்திசாலியாகிய சுதக்ஷிணாதேவி நீதிநெறி கெட்ட கீசகனிடத்திற்கு இந்த அம்மாளை யனுப்பினாள். இதற்கு ஆசானுபாகுவைப் பெற்ற அம் மச்சராஜன் மனைவியிடம் யாதொரு தோஷமு

மில்லை. ஜன்மாந்திர வினைவசத்தால் வந்த அனுபவத்தை யாரும் அநுபவித்தே யொழிக்க வேண்டும். அனுபவியாமல் வெல்ல வல்ல வர்கள் யாருமில்லை. முன்னம் பீமன் கையால் அழிந்தவர்கள் போக, இன்னுமிக் கீசகனு முடியவேண்டிய காரண மிருப்பதினால் பாஞ் சாலியைப் பார்த்து அவன் ஆசைப் படவும், அவள் அவனிடத்திற்கு இந்த உத்தமியை அனுப்பவும், சமயத்திற்குத் தக்கபடி தாதியர் சொல்லவும் நேரிட்டன. மேல்நடந்த விருத்தாந்தத்தையும் கேளும். இப்பாற் புட்பமாலையுந் தேனுங் கொண்டு சென்ற திரௌபதாதேவி முந்தி நினைத்துவந்த ஐந்து தேவருடன், சூரியன் குபேரன் வருணன் உருத்திரன் மகாவிஷ்ணு விநாயகன் சண்முகன் பிரமன் முதலான தேவர்களையும், உருத்திரை மகாலட்சுமி சரஸ்வதி இத்தியாதிதேவதை களையுந் தனக்கு வந்து வழித்துணையாக வரும்படி வருந்தித் துதித்து, சத்துருசங்காரஞ் செய்யும்படி வந்தித்து வேடன் வீசிய வலைக்குள் அகப்படப்போகின்ற மான்போற் கண்களிரண்டு மிரண்டு வெருண்டு, நான்கு புறமுந் தேங்கிப்பார்த்து விதிர்விதிர்த்து மெய்சிலிர்த்து, இராஜ வீதியாகப் போய் அந்தக் கீசக னரண்மனையிற் புகுந்து, தூக்கமும் ஊக்கமும் விட்டு மெய்ம்மறந்து அன்னபானாதிகள் கசந்து அவஸ்தை யாலுள்ளுடைந்து விரதசாரணியைப்போல் தனக்கெதிரில் உருவெளித் தோற்றங் கண்டு நாவறள வாய்பிதற்றிக்கொண்டு கண்டபடிக்கெல் லாம் புரண்டுருண்டு கிடக்கின்ற பேயனைக் கண்டாள்.

அப்பொழுது கீசகன், தனக்கு அகாலமிருத்துவாகப் பூங்காவில் நேரிட்ட மங்கையை நினைத்து, புன்சிரிப்பாக நகைத்து, "இதோ என் பேரிற் பாசங்கொண்ட ஆசைப்பெண் வந்தாள்; என் ஆத்மாவை இரட்சிக்கும் அமுதசஞ்சீவி வந்தாள்! ஜீவகாருணி வந்தாள்! தேக போஷகி வந்தாள்! ஜீமூதமான அஞ்ஞான கேவலத்தைப் போக்கும் ஞானசொருபி வந்தாள்! சித்தசன் தொடுங்கணையை வெற்றிகொள்ள வந்தாள்! ஆசைக்கடலுள் அழுந்திய நான் ஆதரவாகப் பற்றி நீந்திக் கரைசேருவதற்கு அமுதகொங்கைக் குடங்கொண்டு வந்தாள்! என்னை அடிமை கொண்டாளுமங்கை வந்தாள்? இருநிதிப்பொக்கிஷச் செல்வி வந்தாள்! பட்டாபிஷேகத்தேவி வந்தாள்! என் சீமாட்டிவந்தாள்! என் கண்ணாட்டி வந்தாள்!" என்று சரசசந்தோஷச் சைகைகாட்டித் தலை யாட்டி, "இன்று எனக்கு நல்ல காலம்; என்னுடைய சிறுகுடியில் நல்லவர்கள் திருவடி பெயர்த்தருளப் பெற்றேன். ஓ சைந்திரியாகிய தனமே, தேவரீர் செங்கமலப் பாதமுஞ் சிவக்க நடந்ததோ! அடிசேடி மார்களே, ஓடி வாருங்கள்! ஓடி வாருங்கள்! நான் பிறந்த பிறப்பு இன்றுதான் பயன்பட்டது. இதோ என்னெண்ணப் பெண் வந்தாள். இவர் வந்து எந்நேரமாகிறது? ஒதுங்கி நிற்கவேண்டிய காரண மென்ன? உபசாரஞ்செய்து உள்ளே யழையுங்கள். வாசங்கலந்த பனி நீர் கொண்டுவாருங்கள். ஸ்நானம் பண்ணி வையுங்கள். பத்தரை மாற்றுப் பசும்பொன்னாற் சித்தரித்த உந்தரியப் பட்டுடுத்துங்கள். இந் திர வன்னப்பட்டு-மேகவன்னப்பட்டு-வெண்பட்டு-செம்பட்டு-இவை

களா லமைந்திருக்கிற சேலையைக் கும்பிட்டுக் கொடுங்கள். முத்து மாலை மோகனமாலை ஆணிப்பொன்மாலை அலர்ந்தபூமாலை மாணிக்க மாலை வச்சிரமாலை மரகதமாலை முதலிய மாலைகளா லலங்கரியுங்கள். புநுகு சவ்வாது கதம்பம் கஸ்தூரி பனிநீர் அத்தர் சந்தனாதிகளைப் பூசுங்கள். மதுமாமிச பக்ஷணக் கச்சாயங்களும் கனிவர்க்கங்களும் இச்சையானமட்டுந் தின்னக் கொடுங்கள். வழி நடந்துவந்த இளைப் பாற்றுங்கள். ஓ விரதசாரணியென்னு மின்னே! என்பேரி லன்பு வருவதற்கு இத்தனை காலஞ் சென்றதோ? வாரும் வாரும். என் மஞ் சத்தி லுட்காரும். வாடிப்போன என் முகத்தைப் பாரும். உம்மை நாடி வந்த மோகத்தைத் தீரும். இதனாலுமக் கதிகப்புண்ணியஞ் சேரும். ஓ இன்பரசமே! ஓ இனிய சுகமே!'' எனப் புலம்பி, மூடிய கண்ணை விழித்துப் பாராமலிருக்கின்ற மூர்க்கனைப் பாஞ்சாலி பார்த்து "நம்மைக் கண்ணிற் காணாதபோதே கண்டபாவனையாகப் பேசிக் கலங்குகின்ற லோபியானவன், எதிரிற் கண்டால் என்ன செய்வானோ'' என்று மனங்கலங்கிப் பெருமூச்செறிந்து, இந்தப் பாதிராத்திரியி லிவ னைப் பார்ப்பதைப்பார்க்கிலும் பொழுதுவிடிந்தபின்பு காணலாமென்று அழகிய பூஞ்சோலை நெருங்கிய ஓர் தடத்திற் புகுந்தாள். அக்கால் ஒருகாலுள்ள தேரைக்கூட்டி, மின்னற்கொடி நாட்டி, பரிமாவேழும் பூட்டி, படர்ந்த விருட்கூட்டங்களை யோட்டி, உதயகிரியி னுச்சியில் நீட்டி, கதிர்க்கிரணங்களைக் காட்டி, முக்காலும் அருக்கியமேற்குஞ் சூரியனை எக்காலுங் கொண்டுவருவதுபோல் மெதுவாய் வராமல் அக்காலையி லவசரத்துடன் கிழக்குத் திசையில் அருணன் கொண்டு வந்தான்.

இவ்வாறு முருக்கம்பூப்போன்ற சூரியோதயங் கண்டவுடனே செருக்கி யெழுந்த சேவலாதிப்பட்சிகள் கண்விழித்து, தறுதலைக் கீச கன் பிதற்றிய சங்கதிகளைச் சகிக்கமாட்டாமற் சங்கடப்பட்டுப் பரத வித்துத், தியங்கித் திட்டுவதுபோல் இறக்கைகளினால் வயிற்றிலடித் துக்கொண்டு கூவிப் பறந்தன. தடாகமென்னும் பெண்ணானவள் திரௌபதாதேவியின் சஞ்சலத்தைப் பார்க்கமாட்டாமற் கண்களைச் சுருக்கிக் கண்ணீர் பெருக்கிக் கையை விரிப்பதுபோல், கருங்குவளை முதலிய புட்பங்கள் குவிந்து தாமரைமலர்கள் தேன்சொரிந்து விரிந் தன. மகா பாவியாகிய கீசகனை இகழ்ந்துபாடுவதுபோல் வண்டுகள் ஓலமிட்டன. இத்தன்மையாகிய காலத்தில், தெங்கு மா கோங்கு பலா கமுகு முதலிய மரங்களோங்கும் வனஞ்சூழ்ந்த ஒரு பொய்கை யினிடத்திற் பாஞ்சாலி இழிந்து, கைகால்களைக் கழுவிக்கொண்டு, நித்தியவிதி நிறைவேற்றி, சூரியனுக்கு அருக்கியம்விட்டு, இருகரங் களையுங் கூப்பி,

"உலகெலாம் விளங்கு மொருபெருஞ் சோதி
சர்வ சாட்சி தனிப்பரம் பொருளே
பாவமும் புண்ணியமும் பரிக்கும் பரிதியே
புத்தியுஞ் சித்தியும் பொருந்துமா தபனே

சத்துரு ஜெயந்தரு மித்திர வெயிலோய்
உத்தம குணமுஞ் சுத்தமும் வீடும்
வித்தகக் கல்வியும் மேம்படு செல்வமும்
பத்திசெய் வோர்கட் கித்தனை பேறுங்
பாலித் தருளும் பாப ரகிதனே
எந்தையயே போற்றி இரவியே போற்றி
சுந்தரச் செங்கதிர்ச் சுடரே போற்றி
ஆயிரக் கிரணத் தலரியே போற்றி
இருள் வலி யொழிக்கும் இன்னே போற்றி
தினகர வெய்யோய் தினமணி போற்றி
பங்கய பதங்கப் பரிதியே போற்றி
பனிப்பகை பானுப் பகலோய் போற்றி
மித்திர விருச்சிக விண்மணி போற்றி
சுந்திர பானு திவாகர போற்றி
அண்ட யோனி அரியமா போற்றி
அருக்க னனல யருணனே போற்றி
சுதக்ஷ்ணை தேவியின் சொற்பிச காமல்
கீசகன் தன்பாற் கிட்டுமே மைக்கு
துன்பங் கெடுதி துயரமெய்தாமல்
இன்பங் கொடுத்தா ளென்றூ மொளியே
உன்னைத் தொழுதேற் குறுக ணில்லாமல்
இந்நகர் மன்னற் கிடர்வினை யாமல்
விராடன் தேவி விசன முறுமல்
என்குல தெய்வமா யென்று மிருந்து
தன்மங் காத்தருள் சத்திய மணியே
சரணஞ் சரணஞ் சவிதா சரணம்
தருண நதருணம் சான்ரேய் சரணம் தாரணி சரணம்

என்று தோத்தரித்துப் பிரதக்ஷண தண்டஞ் சமர்ப்பித்து, பூமியைத் தொட்டு நெற்றியிற் பொட்டிட்டு, அப்பூமாதேவி முதலியோரை வழிபட்டு ஜலம்புரோக்ஷித்து, சங்கற்பஞ்சொல்லி, தற்சனி வைத்துச் சற்றுநேரமிருந்து தக்க மந்திரத்தால் ஆசமனய முடித்துக் கொண்டு கரையேறி, காமவிகாரத்தாற் கன்றி வருந்திய கீசக னிருந்த கெடுமனை கிட்டி, நமனை யெதிர்த்த உயிர்போல் மெலிந்து "ஐயா, உம்முடைய தமக்கையார் தந்த பூவுந்தேனும் இது" என்று கொடுத்து அவன் மாறுத்தரஞ்சொல்லு மளவும் வேறோர் புறத்தி லொதுங்கி யிருந்தனள். அந்த வேளையிற் கீசகன் கதி யெப்படி யிருந்ததென்றால், ஆருத மோக நெருப்பால் நீறாய்வெந்து வெதும்பி, தலைவிசிறி, நிலைதவறி, மதிபதறி, விதிகுறுகி, மேனிகருகி, மெலிந்து, ஊனுமுருகி யுலர்ந்து, செந்தாமரைக்கொழுந்தும், இளவாழைக்குருத்தும் யானைத்தந்தப் பலகையும் அனிச்சந்தளிரும் அலர்ந்தமலரும் அணையாகப் பரப்பி அதன்மேற் படுத்திருந்த அவனை நோக்கியபோது கட்டையுடன் முட்டை கலந்தடுக்கி, அதன்மேற் சுட்டெரிக்க நீட்டி

வைத்த பிணம்போலத் துலங்கினன். இஃதன்றியும், தாதியர்சந்தனம் பாளிதம் குங்குமம் பனிநீர் முதலியவைகளைத் தெளித்துக்கொண்டிருந் ததைக் கண்டபோது அப்பிணத்துக்குச் சமயதீக்ஷை விடுவித்துக் கல சச் சலமிறைக்குங் காட்சிபோலிருந்தது. மேலும் அவனைச் சுற்றிலும் வாசனை வத்திகளைத் தாதிப்பெண்கள் வைத்திருந்தார்கள். அஃது கரு மக்கிரியை செய்வதற்குப் புத்திரனில்லாதவர்கள் பெண்கள் கையில் தர்ப்பையளித்துக் கொள்ளிநாட்டுவதைப்போல விருந்தது. இவ்வாறு செய்த சயித்தியோபசாரத்தினலுந் தணியாமல், "ஐயையோ!" என்று ஓங்கியிரைந்து ஏங்கிய கீசகனுக்குப் பக்கத்திலிருந்த பாங்கியர் பலரும் ஆலவட்டம் தாலவட்டம் மயில்விசிறி குயில்விசிறி குறுவேர்விசிறி சிறுவேர்விசிறி பட்டுவார்விசிறி வெட்டிவேர்விசிறி தந்தவிசிறி சந்த விசிறி முதலியவைகளாலுபசரித்தார்கள். அவர்கள் வீசிய விசிறிக்காற் றினல் கூசி மெய்குலைந்து "ஓ தோழிகளே, ஈதென்ன ஊழித்தீக் காற்ருே! அல்லது ஆழித்தீக் காற்ருே! என்னுயிரைக் கொள்ளையாட வந்த கூற்ருே! ஆஹா!! என் ஆன்மா அயருகிறதே" என்று அவச் சத்தமிட்டான். அப்பொழுதே அவ்விடமிருந்த பெண்கள் ஆத்திரப் பட்டு பூவாரம் பொன்னுரம் புனுகாரம் சந்தனுரம் சந்திராரம் முத்தாரம் என்னுமிவைகளை விஸ்தாரங்கொண் டுத்தாரஞ் செய்தார்கள். அவை கள் அவன் சரீரத்திற் பட்டவுடனே "பள பள மள மள" வென்று பொரிந்து, நீறுநெருப்புமாய் வெந்துபோனதினல் தளதளவென்று தக் காளிப் பழம்போற் கொப்புளமெழும்பக் குப்புறப் படுத்தான்.

இஃதன்றியும் காமனேய் கலந்த கலக்கத்தாற் சந்திரனைத் தூஷித்து, சமுத்திர கோஷத்தைக் கோபித்து, தென்றலைச் சீயென் றேசி, வரிச்சிறைக் குயிலை இருபிறப்பென்றுபேசி, கிள்ளைமொழியைக் கடிந்து, கடகடவென்று புரண்டு, கிடைகொடுக்காமல் உடையுடுக்கா மல், உணவெடுக்காமல், கன்னியை விரும்பி, அன்னியனுய் வெம்பி, நாற்புறமும் நன்ருய்ப்பார்த்து, மெத்தைமேல்வீழ்ந்து தத்தளிக்கா நின் ருன். அப்போது அப்பாதகன் ஜன்மாந்திரத்திற் செய்த தவங் கைகூடி யதுபோல், தாழ்ச்சியில்லா வண்ணமடந்தையைக் காட்சியாய் முன் னிற்கக் கண்டான். அவளைக் கண்டவுடனே "நான் பண்ணிய புண் ணியம் பலித்தது" என்று கக்கட கக்கட நகைத்து, பக்கமாய்ப்படுத்து திடுக்கென் றெழுந்து, தீர்க்கமாய் வீழ்ந்து, சரணஞ் சரணம் இது நல்ல தருணந் தருணம். என் மாதவம் வந்தது! என் வழித்துணை வந் தது! என் இஷ்டதெய்வம் வந்தது! நான் கும்பிட்ட தெய்வம் வந்தது! என் பிராண சஞ்சீவி வந்தது! பேசப்பிரசம்பெருகுங் குமுதமிதோ வந் தது! என்னகத்துயிர் வந்தது! மோகவித்து வந்தது! போக முத்து வந் தது! என் கண்ணின் பாவை வந்தது! என் முன் வண்ணப்பூவை வந் தது! ஓ ஆபத்திற்குதவு மணங்கே வாரும்! ஓ தாகத்தை தணிக்கும் தயாரசமே வாரும்! என்னருகிலுட்காரும்! வறண்டுபோன என் மண் டைக்குந் தொண்டைக்கும், சுருண்டுபோன நாக்குக்கு மூக்குக்கும், பசையுண்டாகும்படி மதுர வார்த்தையைப் பொழியும்! என்னையிறுகக்

கட்டிச் சேரும்! கைப்பாகிய என் வாய்க்குக் கனிவாய் முத்தந் தாரும் என் பவம் போக்கடிக்க வந்த பதமே! என்னை விட்டுப் பிரியாதிருக்க வேண்டும் நிதமே! நான் உனக்குச் சதமே!'' என்று நிலத்திற் குப்புற் றிருந்த தலையை நிமிர்த்தி, எக்களிப்பிட் டெழுந்து, முன்பின் பாராமல் விரதசாரிணியை தொட்டணைக்கக் கிட்டினன்.

இப்படி மீளாநரகத்திற் காளாகிய கீசகன் காமவிகாரத்தினாற் பேய்போலோடிவருவதை விரதசாரணிகண்டு,''ஆ! அடா சண்டாளா! அடா துரோகி! என்னைத் தொடாதே, என்னை யொருவருந் தீண்டப் படாதே! வீணாசைகொண்டு வாணாளை யொழிக்காதே! நெருப்பிலழுந் திய புழுப்போற் சாகாதே! விளக்கில் வீழ்ந்த விட்டிற் பூச்சிபோல் வேகாதே! மறுமாதர்மே லாசைப்படாதே! மையல் மோகத்தால் நாசப் படாதே! காமப்பேயாற் கண்கலங்காதே'' என்று கடுஞ்சொற்களால் கண்டித்தாள். அவ்வாறு கண்டித்துந் தேறுதவனாய், ''தேடிய மருந்து சிக்கியதுபோற் கிடைத்த தேவியே! என்னுவியே! நான் மகா பாவியே! பெருகிய காமாக்கினியா லுருகி வாடுகிற நான், நூறுயிரம்பேர் தடுத்தாலும் உன்னை விடமாட்டேன். துறட்டுக் கெட் டாப் பழம் வாய்க்கெட்டும்போது, அப்பழத்தைச் சுவைக்காமல் விட்டு விடுகிற மூட னுண்டோ? ஓ தோகையே!'' என்று துரத்தினன். அதனால் நீங்காத் துன்பங்கொண்ட பாஞ்சாலியானவள் பயந்து, உடல் வியர்த்து, கொலைவேடனைக் கண்ட கலைமானைப்போற் சேலை குலைய, மாலை யலைய, கமலமுகம் வாட, கண்ணீர் பெருகியோட, கருங் கூந்த லாட, கலைமான்க ளோட, குடல்குலுங்க, குலைநடுங்க, விட விடென் றேடினள். அவ்வாறேடிய பாஞ்சாலியானவள் நவமணி பிழைத்த கதிர்முடி தரித்த விராடராஜன் கொலுவில் வந்து, தரும ராஜன் முதலிய யாவரும் பார்க்கும்படியாய் ''அபயம் அபயம்'' என் றலறி வாடிய கொடிபோல் வதங்கி வீழ்ந்தழுதாள்.

### விராடன் சபையில் அடைக்கலம் புகுந்த திரௌபதியையும் அவளைப் பிடிக்க நெருங்கிய கீசகனையுங் கண்டு ஆக்ரமித்த பீமனைத் தருமர் அடக்குதல்

கேட்டீரோ ஜனமேஜய மகாராஜனே, அந்த விராடபுத்திரர், கங்க பட்டர் வந்த நாள்முதல் உதயத்திற் சபைசேரும்படியாய் வழக்கப் படுத்திய பிரகாரம், மகாஜனங்களுடன் கூடியிருந்த மநுகுலத்தோன்ற லாகிய மச்சராஜனும் மந்திரிமார் முதலிய சாஸ்திரிகளும், தேம்பி யழு கின்ற தெரிவையைக்கண்டு, கவலை மேற்கொண்டு கருத்து வேறு பட்டு ஒன்றுந் தோன்றும லிருக்குஞ் சமயத்தில், காமப்பிணியாற் கலங்கிய கீசகன் சோமவதனத் திரௌபதியைத் தொடர்ந்து பிடிக்கத் துணிந்து அங்கெய்தினன். அந்தச் சமயத்தில் மகாலட்சுமிபோன்ற மாதரசியைப் பற்றுவதற்கு நீட்டிய பாதகனாகிய கீசகன் கைகளிரண் டையும், சூரியபகவான் அநுக்கிரகத்தாற் சுழற்காற்றைப்போல் தோன் றிய ஒரு கிங்கரனவன் தடுத்துச் சேர்த்துப்பற்றி, கிறுகிறெனச்

சுழற்றி விறுவிறென விட்டெறிந்துபோனான். அதனாற் கைவீச்சோடு கடுகிய கீசகன் பெருமூச்செறிந்து பிரமித்து, மன்னர் நகைக்கக் குப்புற விழுந்து, பின்னுந் தேறிப் பிடிக்கவெழுந்தான். பின்பு தானிருக்கு மிடத்திற்குந் திரௌபதி யிருக்கு மிடத்திற்கும் வெகுதூரமென்று கண்டு தலை கவிழ்ந்து, உடல் குனிந்து வெட்கி, சந்தடி காட்டாமல் வந்தவழியே ஓடிப்போனான். அவ்விடத்தில் நடந்த அதிசயத்தைக் கண்டயாவரும் "திக்கற்றவருக்குத் தெய்வமே கதி" என்று சிந்தை நைந் துருகித் திகைத்திருந்தார்கள். அப்பால் அச்சபையில் வந்து விழ்ந்தழுத அவ்வேழைப் பெண்ணின் அலங்கோலத்தையும், தொட்டிழுக்க வந்த தன் மைத்துனனது துராக்கிரமத்தையும், அதனால் தனக்கு நேரிட்ட நிந்தையையும் விராடராஜன் யோசித்து, அவ் விடமிருந்த பெரியோர்களையும் இராஜராஜர்களையும் மந்திரி பிரதானி முதலிய மதிவல்லோரையும் பார்த்து, "ஓ விற்பத்தி யுடையவர்களே, துர்ப்புத்தியுடைய இக்கொடிய கீசகன் முறைதப்பி நடந்ததைப் பார்த்தீர்களா?" என்று ஆத்திரப்பட்டு, அவனுக்கு நற்புத்தி சொல்லி அவன் செய்த வேலைக்குத் தகுந்த தண்டனை விதிக்கத் தன்னாற் கூடாமையால், அக் கீசகனுடைய திடதைரிய பராக்கிரம திக்கு விஜயத்தைக் குறித்துப் பயந்து சிந்தித்திருந்தான். அந்தக் காலத்தில் இராஜசபையில் நின்ற விரதசாரணியானவள், "ஐயோ! இஃதென்ன அநியாயம்? ஓ தெய்வமே! தெய்வமே!" என்று விசனப்பட்டாள். அப்பொழுது அவ்விடத்தில் நிறைந்திருந்த வெகு ஜனங்களுள் தானுமொருவனாக வந்திருந்த பீமசேனனாகிய பலாயன னென்பவன் மனவருத்த மடைந்து, அஞ்சிக் கெஞ்சி பஞ்சுபோற் பறந்து ஓடிவந்த பாஞ்சாலியையும் அவளைப்பிடிக்கவந்த கீசகனையும்பார்த்து, பஞ்சேந்திரியங்களும் பதறத் துடிதுடித்து, ஆசாரவாசல் முகப்பி லிருக்கின்ற பெருந்தருவைப் பிடுங்கி யடித்துக் கீசகனையும் விராடனையும் ஒருமிக்க முடித்துவிடுதற் கெண்ணினான். அப்பொழுது தம்பியாகிய பீமன் எங்கே பதறுகின்றானோ வென்று அதுவே நினைப்பாகப் பார்த்துக் கொண்டிருந்த தருமராஜன் அவனது கோபக்குறிப்பையும் எண்ணத்தையும் அறிந்து கொண்டு, "அப்பா பலாயனா, நீ மடைப்பள்ளிக் கெஜமானனாகையாற் காய்ந்த விறகு எங்குண்டோ வென்று உயர்ந்த மரங்களைக் கண்ணோட்டமிடுவதுபோல் காண்கிறது. நீ இப்பொழுது பார்க்கிற விருட்சம் அவசரத்திற்கு விறகாகமாட்டாதே; இதைக் காயவைத்துக் கொள்ளலா மென்று கருதினாலும் இன்னும் இரண்டு மாதஞ் செல்லாமல் உலராதே! முக்கியமாய் விறகு வேண்டியதாயிருந்தால் தகுந்த மனிதருடன் காட்டுக்குப் போய் நீ நினைத்த மரங்களை வெட்டி உன்னிஷ்டப்படி முடித்துக்கொள்ள வேண்டுமேயன்றி, இவ் விராடராஜன் சபையில் விளையாநின்ற மரத்தை அவசரப்பட் டழிக்கக்கூடாதே! மிகுந்த பலசாலியாகிய உனக்கு எதுவும் லட்சியமில்லை. ஆதலின், இப்பட்டணத்திற்குப் புறம்பிற் சென்று, வேண்டு மரங்களை வேருடன் கெல்லிக் கொண்டுவந்து எளிதாக எரிக்கலாம். இங்கிருக்குந்தருவானது அநேகபக்ஷிகளுக்கு ஆதார

மாயும், நமது வாழ்நாளுக்குதவியாயும், குளிர்ந்த நிழலைக் கொடுத்துக் கொலுமுகத்திற் கழகாயிருக்கின்றது. ஐயோ, இம்மரத்தைப் புத்திமான்கள் குறைக்க நினையார்கள். பச்சைமரத்தை வெட்டலாகாதென்று பெரியோராற் சொல்லப்பட்டிருக்கின்றது. என்ன ஆபத்து வந்தாலும் பாபத்திற்குப் பயப்பட வேண்டுமே'' என்று சொல்லித் தமது காலாற் பூமியைத் தேய்த்தார். அவர் இங்கே விறகின்மேலேற்றி வெளிப்படையாகச் சொல்லியவற்றின் பொருள், பரோபகாரியாகிய விராடனைக் கொல்லாமற் கீசகனைக் காட்டிற் கொண்டுபோய்க் கொல்ல வேண்டுமெனக் குறிப்பால் விளக்கியதால், அதையறிந்துகொண்ட பீமசேனன் சிறிது நிதானித்து, ''ஓ ஓ! இவர் இங்குத் தடையானாரே'' என்று உடலெங்கும் பதறி எழுந்த கோப வேகத்தை யடக்கி, திரௌபதிக்கு நேர்ந்த விபத்தையெண்ணிச் சிறிதும்ஆற்றமாட்டாதவனாயிருந்தான்.

### திரௌபதி இராஜசபையிலுள்ள விராடனோடும் பெரியோர்களாலுஞ் சில தருமங்கள் கூறி முறையிட அவர்கள் தேற்றுதல்

இவ்வாறு பீமசேனன் கொண்டிருக்கும் ஆற்ருமையையும் அவனை யடக்கிய தருமபூபதியினுடைய கருத்தையுங் குறிப்பாயறிந்து கொண்ட பாஞ்சாலியானவள் தனக்கு நேரிலிருந்த விராடராஜனை நோக்கி, ''ஓ மகாராஜனே, நல்லொழுக்கத்தை முற்றிலும் ஒழுகவிட்ட கீசகன் துன்மார்க்கமாய் என்னைத் தொடர்ந்து தொட்டிழுக்க வந்தது நீதிதானோ? சாஸ்திரங்களைப் படித்தும் சாதுஜனசங்கத்தை யடுத்தும், தன்னுயிர்போல் மன்னுயிரைக் காத்தும், பரதாரஞ் சோதரமெனப் பார்த்தும், பாவபுண்ணியமின்னவென் றறிந்தும், அடைக்கலம் புகுந்தோரை யாதரித்தும், தேவதா பக்திகள் ஆசாரிய பக்திகள் செலுத்தியும், குலமுறை பிசகாமல் நடத்தியும், ஏழைகள் மனது நோவாமலிரங்கியும், படை குடி கூழ் அமைச்சு நட்பு அரண் இவ்வாறினையுமுடையவனாகியுஞ் செங்கோல் செலுத்துஞ் சீமானாகிய நீர், உமது மைத்துனருடைய துர்ப்புத்தியை விசாரித்து எனது உள்ளக் கலக்கத்தை மாற்றி ஆறுதல் சொல்லி ஆதரியாதிருப்பது உமதரசாட்சிக் கழகாகுமோ? ஓ நீதிபரனே, நெறிமுறை யறிந்த நிருபர்கள், தம்மை யண்டினோர்களைத் தம் மக்களைப்போற் காக்கவேண்டுமென்று தரும சாஸ்திரஞ் சொல்லி யிருக்கின்றதல்லவோ? ஓ தயாநிதியே, வலியவனாகிய ஒருவன் எளியனை யடித்தாலும், ஒருவன் பொருளை யொருவன் அபகரித்தாலும், வம்பு வார்த்தைகளை வழங்கினாலும், அவைகளை அரசன் விசாரித்துத் துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனம் பண்ணவேண்டுவதுண்டோ, இல்லையோ? அவ்வாறு விசாரியாத கொடுங்கோல் மன்னன் இருந்தென்ன? ஓ உத்தமனே, உயர்ந்தோர் முதலிய சர்வ ஜனங்களுந் துர்ச்சோபம் - துர்ப்பயங்கரம் - துர்மரணம் - துர்வியாதி முதலிய பீடைக ளடையாமல், சத்சிநேகம்-சன்மார்க்கம்-சற்குணம் சதாயு முதலிய நன்மைகளைப் பெறும்படிக்கல்லவோ அரசனுக்குச் சிங்காசனப் பட்டாபிஷேகஞ் செய்வது? அவ்வாறு பட்டங் கட்டிக் கொண்ட அரசன் ஆக்கினையா லல்லவோ வருண நான்கும் வரிசை

தப்பாதிருப்பது? பூர்வத்தில் ஒரு பாதம் சந்தனக்குழம்பிலும் மற்ெருரு பாதம் அக்கினிப் பிழம்பிலும் நாட்டி அரசாட்சி புரிந்துவந்த சக்கர வர்த்திகளின் சரித்திரத்தைக் கேட்டறியீரோ? ஓ தருமாத்மாவே உமது தேவியாருக்குப் பணிவிடை செய்து பிழைக்கவந்த ஏழையாகிய என்னை இக்கோலஞ் செய்து பங்கப்படுத்திய கீசகனைத் தீர விசாரியா மற் போவீராளுல் எனக்கு வேறுகதியே யில்லை. உமது திடத்தைத் தெரிந்து கொண்ட பாதகன் இனி யென்னை யெங்கும் பிழைக்கவொட் டான். எல்லாந் தெரிந்த பெரியோருக்குச் சொல்லா லுணர்த்துவது யாதொன்றுமில்லை. ஓ தோன்றலே, இவ்வுலகத்தில் தவஞ்செய்வதும் யாகம் புரிவதும் தீர்த்தமாடுவதுந் தெய்வந் தொழுவதும் பெரிதல்ல. அபயம் என்று வந்து அடைக்கலம் புகுந்தவர்களை யாதரிப்பதுவே தருமங்க ளெல்லாவற்றினுஞ் சிறந்ததென்று சதுர்மறைப் புரோகிதர் பிரம்மசூத்திரத்திற் சாற்றி யிருக்கின்றனர். அதற்குந் திருஷ்டாந்தங் கேளும்:-முற்காலத்திலொருநாள்பிரம்மாவினுடைய சபைக்குத்தேவேந் திரன்போனுன். அவனைக்கண்ட பிரமதேவன் சந்தோஷித்து, "ஓ இந் திரனே, சொர்க்கமத்திய பாதலத்தோர் நடத்துகின்ற தர்மாதர்மங்கள் உன்னுதீனமாயிருக்கிறபடியால், நீ தருமசூக்குமமறிந்து நடத்தவேண் டியதாயிருக்கிறது. நீ அவ்வண்ணம் நடத்தாவிடில், இந்தப் பூலோ கத்தார் செய்யும் பாபங்களிற்பேர்பாதி யுன்னைப் பிடியாமற்போகாது. அப்படிப் பிடித்த பாபங்களை நீ நீக்கிக்கொள்ள வேண்டுமானுல், பற் பல அதர்மஞ் செய்கிறவர்களை உடனே அழித்துவிடவேண்டும்" என்ருர்.

இப்படிப் பலவாருகிய அதர்மஞ் செய்யும் பாவிகள் யாரென்று தேவேந்திரன் கேட்க, 'வேதவிதியும் நீதிவழியும் உலகநடையுந் தப்பி நடந்தவர்கள்தான்பாவிகள். இவர்களில் நன்றிகெட்டவர்கள், அடைக் கலம் புகுந்தோரை யாதரியாதவர்கள் ஆகிய இருவரையும் மகா பாவி கள் எனப்படும். ஆதலின், இக்கொடிய அதர்மிகளை வச்சிராயுதத்தால் மண்டை கிழிய மோதி, பண்டு செய்த பாபங்களைப் போக்கித் தருமத் திற் பிரவேசிக்கப் பண்ணுவாயானுல், அவர்கள் செய்த புண்ணியங்க ளிற் பேர்பாதி யுனக்குச் சேரும். நீ மூவுலகிற்கு முதற்பதியோனுகை யால், இந்தக் கருமசூக்குமத்தை யுமக்குச் சாற்றினேன்' என்ருர். அந் தச் சதுர்முகன் மொழியைக் கேட்ட இந்திரன் பூலோகத்தில் வந்து துஷ்டர்களைச் சிக்ஷித்து, சிஷ்டர்களை இரக்ஷித்து, புண்ணியம் பெரு கப் பொருந்தி வாழ்ந்திருந்தானென்று பெரியோருரைக்கக் கேட்டிருக் கிறேன். ஓ விராடராஜனே, உன் மனைவியாரிடத்தில் வந்து சேர்ந்த அந்நாள்முதலிந்நாள் வரையிலும் இத்தன்மையாகிய துன்பம் நானறி யேன். இன்று என் பொல்லாதவினையால் வல்லாண்மைக்காரக் கீசகன் இக்கொடிய எண்ணங்கொண்டான். அவன்தானப்படி நினைத்தாலும் ஜகந்தாங்கிய நீரும் பேசாதிருந்தது என் தீவினைதான். ஐயா, உம் மிடத்தி லிப்பேர்ப்பட்ட குணமிருக்குமானுல், அரசாட்சி எவ்வாறு நடக்கும்? உம்மை யார் மதிப்பார்கள்? உம்மை யார் துதிப்பார்கள்?

உம்மை யார் அடுப்பார்கள்? வருந்தி வந்தவர்களின் துன்பத்தை மாற்றிக் காக்கவேண்டியது உமது கடமையல்லவா? நீர் அவ்வாறு செய்யாமற்போனால், சாஸ்திரப்படி உமக்கு மோக்ஷங் கிட்டாதே. ஓங்கிய நரகமும் உம்மை விட்டு அகலாதே. அதிலும் பேதைப் பெண்கள், நாதனற்றவர்கள், முடவர், ஊமர், செவிடர், குருடர், பிணியாளர், தரித்திரர் வேசிகள் முதலானோருக்குத் தந்தையும் அரசனாகையால், அவர்களைத் தன் பிராணனைப்போலாதரிக்கவேண்டும். பார்த்திபனே, நான் அநாதையாயிருக்கிறேன். நீர் என்னை நிராதரவு செய்யாமல் இரட்சிக்கவேண்டும்'' என்று சைரந்திரி சொன்னாள்.

இவ்வாறு சைரந்திரியாகிய விரதசாரணி மொழிந்ததை விராடராஜனறிந்து, ''ஓ மங்கையே நான் கீசகனை விசாரிக்கவில்லையென்று கிலேசப்படுகிறாய். உனக்குமவனுக்கும் நேரிட்ட நேசமும், நீ அவன் வீட்டிற்குப் போன காரணமும், உன்னைத் துரத்திவந்த விசுவாசமும், இன்னதென்று எனக்குத் தெரியாமையால், ஒருதலை வழக்காகத் தண்டிப்பது உத்தமமல்ல. எதையுங் காரண காரியந் தெரிந்துகொண்டு தீர்க்க விசாரணை செய்யவேண்டும். ஆயினும் உனக்கு வந்த தீங்கு ஒருவாறாய் விலகிப்போனதினால், நீ இந்த வேளை மனம்பொறுத்துக்கொள்'' என்று வாய்குளிரப் பேசினான். அவனது இன்சொல்லைக் கேட்ட பாஞ்சாலியானவள் விராடராஜனுக்கு மனோதைரியமில்லையென்றுணர்ந்து, ''ஐயா, நீர் சத்தில்லா வசனஞ் சொன்னீர். நான் உற்றது உரைக்கிறேன் கேளும். அடியாளுக்குக் கந்தர்வர் ஐந்துபேர் கணவர். அவர்கள் பராக்கிரமசாலிகள், ஒப்பற்றவர்கள்; விற்பன விவேகிகள். அவர்கட்குப்பகைவரில்லை. யாருக்காயினும் அழிவுகாலம்நேரிடில், அவர்களவர்கட்குச் சத்துருவாய்த் தோன்றி அழிவார்கள். அக் கந்தர்வர் வருகின்ற தேரோசையும், அவர்கள் கைக்கொண்டிருக்கின்ற வில்லோசையும், எட்டுத்திக்குப் பாலகரையும் திடுக்கிட்டு விழிக்கச் செய்வதுமன்றி, சக்கரவாளமுடிமட்டும் உக்கிரமாகவுடைபட்டுத் தத்தளித்தாடப்பண்ணும். அவர்களை யண்டினோருக்கு வேண்டிய பாக்கியங்களுண்டாம். அப்பேர்ப்பட்ட மகாபுருஷர்களை மாலையிட்டு மருவிவாழுமென்னை, இப்பேர்ப்பட்ட கேலிக்கிடமாக்கிவிட்ட கீசகனுக்கு நாசகாலங் கிட்டியதென்பதற்குச் சந்தேகமில்லை. ஐயோ! இரும்பை நசுக்கிப் பொடிக்குஞ் சம்மட்டியடியானது நெருப்புக்கும் படுவதுபோல், உம்மையெங்கே மாட்டிக்கொள்ளுகிறதோவென்னுந் துக்கத்தால் இவ்வளவுதூரஞ் சொல்லி யழுகிறேன்; ஐயா மச்சராஜனே, இத்தியாதி வல்லமைபெற்ற கந்தர்வர்கட்கு மனைவியாகிய நீ, என் தேவிக்கு வேலை செய்ய வருவானேன் என்றால், வீணைப்பயனை வெல்லவல்லவரில்லாமையால் என் நாயகர் ஐவருந் தீவினைவசத்தால் தங்களுருமாறியிருக்கின்றார்கள். அவ்வாறிருந்த போதிலும், 'கடுகு சிறுத்தாலுங் காரம் போகாது' என்பதுபோல் அவர்கள் தீரவீரம் மாறினவர்களல்லர். இப்போது இவ்விடத்தில் நடந்திருக்கின்ற கலகத்தை அவர்களுமறிந்திருப்பார்கள். தடையின்றி எங்குஞ்சஞ்சரிக்கும் நெஞ்சுரமுள்ளவர்கள்தமக்

குத்தாமே சங்கதி தெரிந்துகொள்ளுஞ் சக்தியுடையவர்கள். இந்நேரம் இவன் பிராணனுக்கு முடிவுதேடி உலைவைத்திருப்பார்கள். அதிலும், மண்ணாளும் வேந்தன் வாய்பேசாதிருந்தால், பெண்ணாகிய நான் போவது எவ்வாறு? ஓ புநிதனே, நான் ஒருவரையும் நோவவேண்டிய தில்லை. பூர்வத்தில் தேடிக்கொண்ட வினையையே நோகவேண்டும்'' என்று பொருமி விம்மிப் புலம்பி, ''ஓ சபை நிறைந்த புண்ணியவான்களே, சத்திய தருமமென்றும், அசத்திய தருமமென்றும் இரண்டுண்டு, அவ்விரண்டினுள் சத்தியதருமமே முக்கியம். இச்சத்திய தருமம் எவ்விடத்தில் விளங்குகின்றதோ, அவ்விடத்தில் மகாலட்சுமியுடன் மாயோனிருப்பார். அந்த ஸ்ரீயப்பதியிருக்குமிடத்திற் கிளர்ச்சியுஞ் சத்துருஜயமு முண்டாம். அசத்திய தருமம் எவ்விடத்திலிருக்கின்றதோ, அவ்விடத்தில் மூதேவி குடிபுகுவாள். மூடர் உறவு எய்தும். அன்றியும், அவ் அசத்திய தருமமுடையோர் கொடுநரகிற்காளாய்த்தளர்ச்சியுற்று, அல்லலும் அருந்துயரு மடைவார்களெனச் சுருதி முறையிடுகின்றது. ஆகையால், மக்களைப்பெற்ற நீங்களாயினுங் கவனித்து, தருமத்தை யநுசரித்துப் பொதுவாய்ப் பேசப்படாதோ? 'அரசனெவ்வழி குடிகளவ்வழி' என்னும் வாக்கியத்தை நிலைநாட்டினீர்களோ? நீதிநெறி யற்றீர்களோ? ஐயோ! இந்த நீணிலத்தில் நான் பெண்ணாகப் பிறந்த பெரும்பிழை யாதோ தெய்வமே!'' என்று தளர்ந்து வாடினாள். அவ் வழகிய மாதின் தளர்ச்சியைச் சபையிலிருந்த சகலரும் பார்த்து, கீசகனையும்விராடனையும் நிந்தித்து,விரதசாரணியின்பதிவிரதாதர்மத்தைச் சிந்தித்து, பெண்ணிலக்கணம் பூரணமாக அமைந்திருக்கின்ற பெருந்தன்மையை நிதானித்து, ''இந்த அம்மாள் நல்ல குடிப்பிறப்பாகக் காண்கிறது. தேவபுருஷ சம்பந்தம்போலத் தோன்றுகிறது. குணம் மணம் குரல் வசனம் முதலியவற்றை நோக்குங்கால், பதுமினிஸ்திரீயாயிருக்கின்றாள். இத் தன்மையாளாகிய உத்தமிகள், நினைத்தகாரியங்களெல்லாஞ் சித்தியாகாமற் போகா. இந்தப் புண்ணியசாலியைச்சாதாரணப் பெண்களைப்போல் எண்ணப்படாது. கெட்டமதியுள்ள கீசகன் துஷ்ட நினைப்பினால் தொடர்ந்த மூடத்தனமானது, அவன்பிராணமுடிவுக்கோ, அல்லது யாது காரணத்திற்கோ, ஏதும் தெரியவில்லை. பூர்வஞ் சீதாதேவிக்குக் கஷ்டம் நேரிட்டாற்போல் இம்மாது சிரோமணிக்குங் கஷ்டம் நேரிட்டதல்லவா?'' என்று தங்கள் மனதைத் தாங்களே தேற்றிக்கொண்டு, ''அம்மா, சும்மாயிரும், விசனப்படாதீர். உமக்கு நல்லகாலம் இந்த விராடபுரத்திலேயே வரப்போகின்றது. உமக்குக் கெடுதி நினைக்கும் பாதகர்கள் விரைவி லழிந்துபோவார்கள். நீர் யாதொன்றுக்கும் அஞ்சாதீர்'' என்று சொல்லி வாழ்த்தினார்கள்.

### திரௌபதியைத் தருமராஜன் கடிய, அக்குறிப்பறிந்து சபையை நீங்கிச் சுதக்ஷிணையிடஞ் சென்று கூற, அவளு மற்றையருங்கேட்டு அவலித்தல்

அக்காலையில் இவற்றையெல்லாம் பார்த்து உள்ளே மாச்சரியமும் வெளிக்கு ஆச்சரியமுங்கொண்டிருந்த கங்கபட்டரானவர் அத்திரௌபதியைப்பார்த்து, ''ஓ சைரந்திரி என்னும் பெயர்பெற்ற பெண்பாவாய்,

பெண்களுக்குரிய நாணம் மடம் முதலிய நாற்குணங்களு மாறி, இராஜ சபை யேறி, அத்துமீறிப் பேசுகின்றாய். நீ மிக அநியாயக்காரி. தரும பதியாகிய விராடபூபதி மகா தயாநிதி; சத்தியவாக்கியர்; சாதுசங்கப் பழக்கமுள்ள யோக்கியர்; சகலவித சம்பத்துமுடைய பாக்கியர்; சதுர் வேத மோர்ந்தவர்; தநுர்வேதந் தேர்ந்தவர்; மநுமுறை கற்றவர்; மக்களைப்பெற்றவர்; நடுவு நிலையாக விசாரிப்பார்; பக்ஷபாத மிராது. நீ யஞ்சாதே, அவசரப்படாதே. இந்த மச்சராஜன் விசாரியாமற்போனு லும், உனக்குரிய கந்தர்வர் அவசியம் விசாரிப்பார்கள் என்று உன் சொல்லினாலேயே விளங்குகிறது. நீ இந்தச் சபையில் ஆத்திரப்பட வேண்டாம். எஜமானன் கட்டளையைப் பரிபாலிப்பதே முக்கிய தருமம். சாந்தகுணமே தகுந்தபூஷணம். பெண்ணாகப் பிறந்தோருக்கு அடக்க மிருக்கவேண்டும். ஆதரவற்றவர்க்கு அரசனே தெய்வமென்று நம்பி வாயடங்கி ஒடுங்கிப் போகவேண்டும். அல்லது தாங்களெவ்விடத்தில் வேலை செய்கிறீர்களோ அந்த விடத்திற்சொல்லி அவர்கள் மூலமாக விசாரணைக்கு வரச்செய்யவேண்டும். அப்பொழுது உன் மனக்குறை எப்பொழுது மில்லாமல் நீங்கும். இப்பொழுது நீ அந்தப்புரம்போய்ச் சேர்'' என்று உரைத்தார். அவர் கருத்தைத் தெரிந்துகொண்ட மங்கை யானவள் அங்கைகுவித்து, புத்தியென்றுபோற்றி, சுதக்ஷிணையிடத்திற் போய்ப் பெருங்காற்றில் அலைந்த முருங்கைபோற் சுருங்கி ஒடுங்கிநின் ருள். இவ்வாறு ஓய்ந்துநின்ற மாலினியை அரசன்பத்தினி பார்த்து, ''அம்மா, கருங்குவளை நெருங்கிய கண்களும், வெண்டாமரை போன்ற முகமும், சண்பகப்பூவனைய மூக்கும் முல்லையரும்பைப் பழிக்கும் பல் லும், அமுதமாகிய சொல்லும், கொவ்வைக்கனிக் கொப்பான இதழும், ஆகிய இவைகளெல்லாம், இராகுவினால்தீண்டப்பட்ட சந்திரன்போற் குறைந்து, வதங்கிய உடலும் வாடிய நடையுமாய் வருவானேன்? கண்ணீர் சொரிவானேன்? போன இடத்தில் பொல்லாங் குண்டோ? அப்படிக் கேதாகிலு முண்டானால் இப்பொழுதே சொல்லும். நான் இராஜனிடஞ் சொல்லித் தப்பாமல் தண்டிக்கிறேன்'' என்று கேட் டாள். அப்படி அன்புடன் கேட்ட சுதக்ஷிணையைத் திரௌபதா தேவி பார்த்து, ''அம்மா கைவிரலாற் கண்ணைக் குத்தி விட்டு 'யார் குத்தினார்கள்? குத்தியதற்குக் காரணமென்ன?' என்று கேட்பது ஆச்சரியத்தின்மே லாச்சரியம். ஆ! ஆ! என் நிர்வாக முதலிய யாவற் றையும் முன்னாடிச் சொல்லியிருந்த என்னை உமது தம்பியினிடத்திற் கனுப்பிவைத்து, பின்னாலொன்றுந் தெரியாதவர்போல் துடிதுடித்துப் பேசுகின்றீரல்லவா? ஆயினும் பெரிதல்ல. உமது வார்த்தையின் வண்ணம் புட்பமுந் தேனுங்கொண்டு போய்க் கொடுத்தேன். அந்தக் கீசகன் என்னைக் கண்டவுடனே எழுந் தோடிவந்து, என் கையி லிருந்த மாலையையும் மதுவையும் வாங்காமல், என்மேல் விழுந்து ஈர்ப்பதற் கெண்ணினான். நான் அந்தப் பாதகன் கையி லகப்படாமல் தப்பியோடி, விராடராஜன் சபையிற் போய் விழுந்தேன். அப்பா லென்னைத் தொடர்ந்துவந்த பாவி எப்பாடுபட்டானோ நானறியேன்'' என்று சொல்லி இரு கண்களிலும் நீருகுத்து உருகி யழுதாள்.

இவ்வாறு உருகி யழாநின்ற விரதசாரணியின் துக்கத்தையுஞ் சோபத்தையுஞ் சுதக்ஷிணை நோக்கி, "அம்மா அந்தப் படுபாவி என் தம்பியானாலும் மகா பதிவிரதையான உமது சித்தத்தைச் சிதையப் பண்ணியபடியால், மகா துஷ்டனானான். 'தாய்க்காகாத பிள்ளை ஊர்க்காகாது' என்பதுபோல், உனக்காகாத அவன் எனக்குமாகாமற் போவான். உனக் கொருநாளுங் குறைவில்லை. ஓ பங்கமில்லாத தங்கமே, காமி-வாமி-வெறியன்-முறியன்-வறியன்-சிறியன் இவர்களுக்கு மட்டுமரியாதை, கட்டுத் திட்டம், ஈனமானம், விதிவிலக்கு, விவேக முதலியன இல்லை. இவர்கள் நன்மையினால் வசமாகமாட்டார்கள். விருத்தியாகவு மாட்டார்கள். அவர்களுக்குச் சவுக்கடியே தெய்வம். ஆதலின், முறைகெட்ட மூடனாகிய கீசகனைக் கொல்ல வேண்டுமென்னும் நினைப்பிருந்தாற் சொல்லும். விராடராஜனுடன் கலந்துபேசி வேலையை முடிக்கச் செய்கிறேன். உமதெண்ணத்தை எனக்கு உணர்த்தும்" என்று சுதக்ஷிணை கேட்க, அம்மொழியைக் கேட்ட விரதசாரணியானவள், "அம்மா, ஏதோ என்னுடைய கர்மானுபவம் இப்படி யிருந்தது. இராஜசபையி லிருந்தவர்கள் நகைப்பதற் கிடமுண்டாயிற்று. திக்கற்ற எனக்குத் தெய்வமிருக்கின்றது. 'அடாது செய்பவர் படாது படுவர்' என்னும் பழமொழி யுண்டு. அது பழுது படாது. என் விஷயத்தில் அபராதியாகிய கீசகன் கந்தர்வரைவராற் கால்சாய்ந்து போவான். எனக்குரிய நாயகர்கள் இன்றைக்கோ நாளைக்கோ வரப்போகின்றார்கள். அப்போது இவன் செய்த அக்ரமமனைத்தும், இவன் தலையோடு போமோ அல்லது இந்தத் தரணியோடு போமோ? நான் யாதொன்று மறியேன். ஓ அன்னையே, நான் உம்மை வந்து அடுத்து, உம்முடைய உப்புந் தண்ணீரும் புசித்து, ஒரு குறைவு மின்றிக் காலங் கழித்து வந்தேன். என்றால், உமக்கு ஒரு குறைவும் இல்லாதிருக்கும்படி என்னிஷ்ட தெய்வத்தைப்பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறேன்" என்று வண்ணமகள் கூறினாள். அப்பெண்ணின் வார்த்தையைக் கேட்ட சுதக்ஷிணையானவள் கண்ணீர் விடுத்து, அவள் கண்ணைத் துடைத்து, விம்மி மெலிந்து, "நம்மி லொருவனாகிய தம்பி, வெம்பி விழுங்காலம் வந்ததே! புத்திர மித்திராதியரை இழந்துபோக நேரிட்டதே!" என்று கலக்கமுற்று மிகவும் ஏக்கங்கொண் டிருந்தாள். இப்படித் துக்கப்பட்ட சுதக்ஷிணையாகிய வண்டுவிழியாளுக்குப் பண்டுதொட்டுத் தொண்டுபுரிந்து அண்டையில் நின்ற பெண்டுக ளெல்லோரும் ஒன்றுகூடி, மாலினியைக் கண்டு மதிமருண்டு, "ஐயோ கண்டகனாகிய கீசகன் பண்டைவினையால் பொன்றுங் காலத்தைத் தேடிக் கொண்டானே! அது பெருந்தீயைப் போல் மூண்டுவிட்டதே! விராடராஜனுக்கும் விதண்டையான வியாகூலம் விளைந்ததே! இந்த மோசத்திற்கு நாம் தப்பிப்பிழைக்கும் வகையெப்படி?" என்று எண்ணமிட்டுக்கொண் டிருந்தார்கள்.

இப்பால் பாஞ்சாலியைப் பிடிக்கவந்த கீசகன், திரௌபதியிடத்து ஆதித்தன் அனுப்பிவைத்த கிங்கரனால் விசியெறிய வீழ்ந்து, மிகவும்

தாழ்ந்து, ''நாம் வாழ்ந்தவாழ்வு இதுவோ?'' என்று மனமெலிவடைந்து தாஷடீகந் தளர்ந்து மோக சமுத்திரம் வடிந்து, சிந்தை தெளிந்து, மயக்கமாறித் தன் மாளிகை போய்ச் சேர்ந்தான்.

### தருமநந்தனர் சில குறைபாடுகளைக் கூறி விராடனைக் கடிய அவன் சபைகலைவித்து அந்தப்புரஞ் சேர்தல்

இவனது நிலை இப்படியிருக்க, அச்சமில்லாதிருந்த மச்சராஜன் கொச்சைமொழியாள் கேட்ட கேள்வியினுல் நாணமடைந்து சபையிலுள்ளோர் பேசியதன் விவகாரத்தாழ்வையும் கீசகன் தேடிக்கொண்ட நாசத்தையும் தன் மனதுட்கொண்டு, மைத்துனனைக் கொல்லுந் திறந் தனக் கில்லாமையாற் புல்லியர்போற் பொருமலுற்றிருந்தான். இத் தன்மையிலிருந்த விராடராஜனை வேதவிதியும் நீதிவழியுந் தெரிந்த கங்கபட்டர் பார்த்து,

''பூதல மாண்மையாற் புரக்கு மன்னவர்
தீதொழில் புரிஞரைத் தண்டி யாரெனில்
நீதியுஞ் செல்வமு நிலைபெறுங் கொலோ
ஏதிலர் தமரென இரண்டு பார்ப்பரோ.''

''ஓ சாந்தகுண வேந்தனே, ஆண்மையுடன் அரசாட்சிசெய்யும் அரசர்கள் துட்டரைப் பிடித்துக் கொட்ட மடக்காவிடில், அப்பட்டணத்துச்செல்வமும் இராஜநீதியும் நிலைபெருவாம். புகழ்ப் பிரதாபமுங் கைகூடாது. செங்கோற் செலுத்துந் திறமையுடையவர்கள் விவகார திசையிலே தன்னவன் பிறன் என்னும் பக்ஷபாதம் பார்க்கப்போகாது, வயிறு வளர்ப்பதற்கு வந்து உம்முடைய மனையை யடுத்துக் குற்றேவல் செய்து ஜீவனம் பண்ணுகிற ஓர் ஏழைமேல், மச்சராஜன் மைத்துனன் இச்சை வைத்தானென்பது வசையோ அன்றி இசையோ? இது பெரிய மனிதனுக்குள்ள நேயமா? ஒரு பெண்ணைத் துரத்தி வந்தது ஞாயமா? சுத்தவீரனுயிருப்பவன் கொடுமை நினைத்தது தர்மமா? நீர் சும்மா இருந்துவிட்டது மர்மமா? இது-கீழ்மக்கள் செய்கையல்லவோ? அக் கீசகன் தன்னைவிடப் பிரபஞ்சமில்லையென்று, உம்மை மதியாதிருக்கிருன். உமது துரைத்தனத்தில் இப்பேர்ப்பட்ட கெடுதியைச் செய்து கெலித்துப் போனுன். இவனுக்கு எதிர் ஒருவருமில்லை; அப் பணிப்பெண்ணுக்குத் திக்கு ஒருவருமில்லை. அப்படிக் கிருந்தபோதிலும், எல்லோருக்கும் பொதுவில் தெய்வமொன் றிருக்கின்றதல்லவா? பாவபுண்ணியங்களைப் பார்க்குந் தருமதேவதையானவள் சற்றேனுஞ் சகிக்கமாட்டாளே! அரசன் அன்றே கொல்லும். ஆனுல் தெய்வமோ நின்று கொல்லும். உலகமாயையொழித்த ஞானியையுந் தீவினை தொடராது விடாது. தருமத்திற்கு விரோதமான காரியம் எப்போதுங் கழுத்தறுப்பென்பது கதையிலுங் கேட்டறியீரோ? பெண்ணிச்சை என்று சொல்லும் இது, சகல ஆத்மகோடிகளுக்குஞ் சகஜமா யிருக்கிறது. அவ்வா றிருப்பினும், இலைமறைவோ காய்மறைவோ என்றிருந்து தராதரமறிந்து, காலம் இடந்தெரிந்து, 'காற்றடித்தது தாழைபூத்தது' என்

னுங் கற்பனைபோல் அநுபவிக்கவேண்டியது; அப்படிக்கில்லாமல், அதுவே உற்பனமாய்க் கண்டவிடத்திற் கண்ணுங் கருத்துஞ் செலுத்திப் பெண்டாசை கொண்டு பிதற்றித் தவிப்பது துன்பத்திலும் பெருந் துன்பமாய்ச் சேருமே. ஐயோ! நீர் இதுவரையிலும்பெற்ற மகிழ்ச்சியும் புகழ்ச்சியுங் கெட்டுப்போகுமே! இனி இகழ்ச்சிக் கிடமாகுமே, இறைவனே'' என்று கங்கபட்டர் சாற்றினர்.

இப்பால் விராடராஜன் இங்ஙனமுரைத்த கங்கபட்டர் வாக்கியமும் விரதசாரணிக்கு நேரிட்ட அபாக்கியமும் அதனல் தனக்குவந்த சிலாக்கியமும் தன்னிரு காதுகளையுந் துளைத்து உருவிப் போனதினுற் களைத்து, புத்தியு மிளைத்து, சிங்காசனம் விட்டெழுந்து, திருமனைக்குட் புகுந்து, தியங்கி, திகைத்து, மயங்கி, மலைத்து, பிரக்ஞைதப்பி யிருந்தான். அந்தக் கொலுமுகத்திலிருந்த பீமன் நெருப்பினும் அதிகமாய்ப் பொங்கி, பொறி சிதறக் கண்களையுருட்டி விழித்து, நறநறவென்று பல் லைக்கடித்து, கையைத் தேய்த்து முறுக்கி மோதி, முகத்தைச் சுளித்து விராடனைப் பழித்து, விண்ணும் மண்ணும் வேகக் கலகலவென்று சிரித்து, குகைக்குட் புகுஞ் சிங்கம்போல் மடைப்பள்ளியிற் புகுந்தான். பின்பு தருமராஜனும் மற்றத் தம்பிமாருந் தங்கள் காலத்தை நினைந்து வருந்தி, தங்கள் தங்கள் இடம்போய்ச் சேர்ந்தார்கள். வெற்றிவேலேந்திய விராடராஜன் படுக்கை பொருந்தாமற் புரண்டு,''அழிவில்லா அரசுக்கு அனர்த்தம்வந்ததே!'' என்று பழிகாரக் கீசகனை வெறுத்துக் குறுகுறுத்து, தன் தீவினையை யொறுத்து. இனி நாம் முடிபொறுத்திருப்பது எப்படி?'' என்று ஏங்கியிருந்தான். மகாலட்சுமிக் கொப்பாகிய சுதக்ஷணுதேவியானவள் துன்பமடைந்து, ''எப்படி விளையுமோ? என்ன நேரிடுமோ? நமது செல்வங்கள் எவ்வாருகுமோ?'' என்று திகிலடைந் திருந்தாள். அந்த மச்ச நாட்டில் மருவிய நான்கு வருணத்தவருந் தங்க ளுயிரின்மேலும் உடலின் மேலும் இச்சை விட்டு அச்சமோ டிருந்தார்கள். ''ஓ அரசனே, இக் கொடிய செய்கைக்கு யார்தான் விசனப்படார்கள்?''—என்று வைசம்பாயனர் சொல்லி வரும்போது சந்திரகுலத்தோன்றலாகிய ஜனமேஜயமகாராஜன் மனஸ்தாபப்பட்டு, இஃதென்ன பாவமென்றேங்கி, பக்கத்திலிருந்த தக்கமனைவியான வபுஷ்டாதேவியுட னெழுந்து பணிந்து,— சுவாமி, மகா பதிவிரதையாகிய பாஞ்சாலியம்மனுனவள், அந்த துன்மார்க்கக் கீசகனைச் சபித்துத் தன் மகத்துவத்தை நிலைநாட்டி வரிசைப்பெறப் படாதோ? ஏன் சும்மா விருந்தாள்? மானங் கெடுங் காலத்தி லில்லாத மகத்துவம் மற்றொரு காலத்தில் இருந்தென்ன போயென்ன? அந்தக் கீசகன் எம்மாத்திர மனுஷன்? எவ்வளவு பலமுள்ளவன்? எந்தக் குலத்திற் பிறந்தவன்? சுதக்ஷிணைக்கும் இவனுக்கும் சகோதர சம்பந்தம் எவ்வாறுண்டாயிற்று? இவனுக்கு விராடன் அடங்கியிருக்க வேண்டிய காரணமென்ன? அந்த விவரங்களை யெல்லாம் எனக்கு அறிவிக்க வேண்டும், புண்ணியனே—என்று கேட்க, வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினர்.

## கீசகன் வரலாறு

கேளும்,ஜனமேஜயமகாராஜனே! பிரம்மசிருட்டியிலுண்டான பிரபஞ்சத்திற் பிராமண ஸ்திரீக்கும் க்ஷத்திரியனுக்கும் பிறந்தோர்களைச் சூதகுலத்தாரென்று சொல்லுவார்கள். அந்தச் சூதகுலம் க்ஷத்திரிய குலத்திற்குத் தாழ்ந்ததென்றும், வைசியருக்கு உயர்ந்ததென்றும்,ஜாதி நூலிற் சொல்லியிருக்கின்றது. அப்படிக் கிருந்தபோதிலும், அதுமுதல் இதுவரையிற் சூதகுலத்தில் க்ஷத்திரியர்கள் சம்பந்தம் பண்ணிக் கொண்டிருக்கிறார்கள்.க்ஷத்திரியகுலத்திற் சூதகுலத்தாருக்குச்சம்பந்த மில்லை. இந்தப் பரதகண்டத்திற் கேகயராஜ னொருவ னிருந்தான். அந்தக் கேகயராஜன் இராஜகன்னி யென்பவளை விவாகம் பண்ணிக் கொண்டு லோகப்பிரசித்தனாய் வாழ்ந்தான். அவனுக்கொரு பெண் பிறந்தாள். அந்தப் பெண்தான் இந்தச் சுதக்ஷிணை. இவள் பிறந்த பின்பு வேறு பிள்ளைக ளில்லாமையால், இந்தச் சுதக்ஷிணாதேவியைப் புஷ்பச்செடிபோல் அருமையாக வளர்த்து வந்தார்கள். இப்படி யிருக்கையில் இவள் தந்தையாகிய கேகயராஜன் ஆண்பிள்ளை பிறக்க வேண்டுமென்னும் ஆசையால் மாளவதேவி யென்பவளை இரண்டாவது மணம் புரிந்து கொண்டான். அவள் கருப்பத்தில் நூற்றுநான்கு பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களில் இந்தக் கீசகன் தான் மூத்தவன். இவன் சிங்கபலனென்றும் பாணனென்றும் பேர் வாய்ந்தவன்; மகா பலசாலி. இப்படியிருக்க, விராடராஜனுடைய முதற்பெண்சாதியாகிய சுரதை யென்பவள், சதானீகன் சங்கன் வராகன் வராககேது என்னும் நால்வரைப் பெற்று வைத்து இறந்து போனாள். பிற்பாடு இவன் இந்த சுதக்ஷிணையைக் கலியாணம் செய்து கொண்டான். இவள் வயிற்றில் உத்தரன் உத்தரை என்னும் ஆணும் பெண்ணும் ஒரு பேறாய்ப் பிறந்தார்கள். இவ்விராடராஜனுக்கு முதலில் பிறந்த அபிமான புத்திரன் சுவேதனென்பவ னொருவன். இவர்க ளியாவரும் குழந்தைகளானபடியாலும், விராடன் தம்பிமார்கள் பதின்மர் திடந்தப்பினவர்களாகையாலும், விராடனுடைய மச்சதேசஞ் சகல வளங்களும் உள்ளதாகையாலும், இவ்விராடராஜனுக்குச் சத்துருக்கள் அநேக ரிருந்தார்கள். அதனால் விராடன் சித்தங்கலங்கி, இந்தச் சுதக்ஷிணைக்குத்தம்பியாகிய கீசகன் சத்துரு சங்காரனென்று கேள்விப்பட்டு, அவனை வருவித்துத் தனக்குதவியா யிருக்கும்படி கேட்டுக் கொண்டான். அதற்குடன்பட்ட கீசகன் உபகீசகர்களாகிய தன் தம்பிமார்களுடன் இந்த விராட புரத்தை யடுத்து, சேனாதிபதிப்பட்டம் பெற்று திக்கு விஜயம் புரிந்து, சகல காணியாட்சிக்குந் தானே சுதந்திரனானான்.

இப்போது நான் சொன்ன கீசகர்கள் யாவரும் பூர்வ ஜனனத்திற் காலகேயர்க ளென்னுங் கந்தர்வர்களா யிருந்தவர்கள். பாணனென்பவன் முதலாக அந்த நூற்றுநான்கு பேர்களும் வாமகாரிகளாகவும் காககாரிகளாகவும் சாமவேதியர் சாபம் பெற்றுப் பூமியிற் பிறந்தார்கள். பாணனென்னுஞ் சிங்கபல கீசகனானவன் அஸ்திர சஸ்திரங்களுக்குரிய சாஸ்திரங்களை அப்பியாசித்து, பதினாயிரம் யானை

களின் பலம் பெற்று பகைவரைக் கொன்று, பலரையும் வென்று விராடபுரத்தரசை நிலைநிறுத்தி வைத்தான். இவனைப் பகைத்தெதிர்த்த திரிகர்த்த தேசாதிபன் தசாரண தேசராஜன் கஜேருக தேசாதிபன் மாளவதேசபோஜன் யவனதேசராஜன் புலிந்தநகர்த்தலைவன் கோசல தேச முதல்வன் அங்கராஜன் வங்கதேசன் கலிங்கராஜன், தக்கண தேசாதிபன் நிடததேசாதிபதி இவர்கள்முதலானோர்களும், கிராதகுலத் தலைவர்களும் இவனுடன் போர்புரிந்து வெல்ல மாட்டாமல், தேரழிந்து வில்லொடிந்து, இனிச் சாகிறபரியந்தம் இவனுடன் சண்டைக்கு வருவ தில்லை யென்று சபதம் பண்ணிக்கொண்டு, ஊர்முகமா யோடிப் போனார்கள். அதனால் இவன் அநேக வெற்றிபெற்றவனாய், மதிமந்திரி யொப்பப் புத்திகற்றவனாய், இத்தேச முழுவதுந் தனக்குச் சுவாதீன மாக்கிக்கொண்டு, தனக்கொருவரும் நிகரில்லாமல் யதேச்சையாக இருக் கின்றான். எல்லா மர்மங்களுந் தெரிந்தவனாகையால் இவனுக்கு விரா டன் அடங்கியிருக்கின்றான். இதனாலேதான் திரௌபதியைத் துரத்தி வந்த துராக்கிரமத்தைப்பற்றி யொன்றுங் கேளாமற்போனது. அஃதன் றியும், 'திரௌபதியம்மன் கீசகனைச் சபிக்கக்கூடாதா?' என்று வினு வினீரே அதற்குக் காரணஞ் சொல்லுகிறேன் கேளும். தனக்குரியகண வர்கள் கண்குத்திப் பாம்புபோற் பிரத்தியக்ஷமாகப் பார்த்திருக்கும் போது தான் சபிப்பது தருமமல்லவென்றும், சூரிய நமஸ்காரஞ் செய்த சுகிர்தத்தினால் தனக்குத் துன்பமில்லாமற் போயிற்றென்றும், எப்படி யும் பீமன் தப்பாமற் கொல்லுவானென்றுந் தைரியங்கொண்டு, சபிக் காமல் விடுத்தாள். ஓ வெண்கதிர் குலத்தோனாகிய வேந்தனே! நீர் கேட்ட சங்கதியைச் சந்தேகமறச் சொன்னேன். மேல்நடக்குங் கீசக னுடைய அழிவையுஞ் சொல்லுகிறேன் கேளும்—என்று வைசம்பா யனர் ஸ்ரீவேதவியாசரைச்சிந்தித்து வந்தித்துச் செப்பத்தொடங்கினர்.

### திரௌபதி மடைப்பள்ளியிற் சென்று பீமனைக் கண்டு தன் குறைகூறி வெறுத்துக்கொள்ளுதல்

ஓ ஜனமேஜயமகாராஜனே, இப்பால் மாதமொன்றுக் கொவ் வொருவராக மகாமேருவை வலம்வருகின்ற துவாத சாதித்தர்களில், அந்த மாதத்திலுதயமான மித்துருவென்னுஞ் சூரியன் சதாதிரௌபதி யம்மனாற் பூசிக்கப்பட்டவ னாதலால், திரௌபதாதித்தனென்று பேர் பெற்றான். அவன் விரதசாரணிக்கு விளைந்த துன்பத்தைக் குறித்து அச்சூரிய குலத்தோனாகிய கீசகனை வெறுத்து, அவன் குலதர்மத்தை விட்டு வழுவினானென்னுங் கோபத்தினால் விஸ்தாரமுள்ள தன் கிர ணத்தை ஒன்றுபடக் கூட்டி, அஸ்தமன கிரியில் தேரோட்டி, மேற் றிசைசிவக்க நாற்றிசையுவக்கச்சாய்ந்து சமுத்திரத்தில் தோய்ந்தான். அக்கால் அந்நகரிலிருந்தோர் யாவரும் அடிவயிற்றில் வடவாமுகாக்கி னியைக் குடிவைத்துக்கொண்டு, பகீரெனத் திகிலடைந்து, நித்திரை விட்டு, நினைவுங்கெட்டு, நெட்டுயிர்ப்பெறிந்து, உயிராசை துறந்து உறக்கமற்றிருந்தார்கள். சுதக்ஷணாதேவியிடத்திலிருந்த திரௌபதா தேவியானவள் தீராத்துயரத்தினாற் சிந்தைவருந்தி, கண்கலங்கிக்

கவலைகொண்டு, ஜபதப ஸ்நான போஜனுதிகளுந் துறந்து, எண்ணுது மெண்ணி, ''நமது புகழுக்குப் பழுதுவந்ததே'' என்று நெருப்பிலிட்ட மெழுகுபோல் நெஞ்சமுருகி, ஏக்கமேலிட்டு, தூக்கங்கொள்ளாமல், நடுராத்திரியில் வெளிப்பட்டு, தருமராஜனுடைய சரணுரவிந்தத்தைத் தியானித்து, காவலாளிகளின் கண்ணிற் படாமல் மடைப்பள்ளிக்குட் சென்று, வெண்பட்டு மெத்தைமேற் சயனித்து நித்திரை பிடியாம லிருக்கின்ற பலாயனனைப் பார்த்து, ''ஓ வருஷகாலத்து விருஷபம் போன்ற மன்னனே, என் மானத்தையழிக்க நினைத்த கீசகனை வாட்டாமல் மெய்ம்மறந்து உறக்கங்கொள்கின்றீரோ? கவலையுள்ளவர்க்குக் கண்ணுறக்கம் வருமோ? நான் பட்டபாட்டைப்பார்த்திருந்த நீர் கொஞ்சமேனும் படபடப்பின்றி முற்றிலும் மறந்துவிட்டீரோ? நல்லது எழுந்திரும் எழுந்திரும்'' என்றுள். இவள் வருவதற்கு முன்னமே எண்ணமிட்டுக் கண்ணை மூடிக் கொண்டு கலவரத்திலிருந்த பீமசேனன் திடுக்கென்றெழுந்து, ''ஓ பேதையே, நாம் ஓரினத்தாரென்று ஒருவருக்குந் தெரியக்கூடாதே. அதை யோசிக்காமல் நீ இப்படியும் வரலாகுமோ'' என்றுன்.

அந்தச் சொல்லைப் பாஞ்சாலி பொறுக்கமாட்டாமற்பதைத்து''ஆ! ஆ! நீர் சொல்வது நன்ருயிருக்கின்றது. நான் எவ்வளவோ பரதவிப் போடு குறைசொல்லிக் கொள்ள வந்தால், வந்த காரியத்தைப்பற்றி யோசிக்காமல் யாரோ? எவரோ? ஏனே? தானே? என்பவனைப்போல் அலக்ஷியமாகப் பேசுகிறீர். வெகு நேர்த்தி! வெகு நேர்த்தி! பாஞ்சால புத்திரியாயும் பாண்டவர்களுக்குப் பத்தினியாயும், இந்திரப்பிரஸ்தத்திலிருந்த என்னை அஸ்தினுபுரத்திற் கழைத்துவந்து, நூறு துட்டரை வெளியிட்ட தேவியை எனக்கிட்டமான மாமியென்று அவள் கிட்ட வைத்துப்போய், சொக்கட்டானுடித் தோற்று திக்கெட்டுமுள்ள துரா துரைகள் நிறைந்த சபையில் துச்சாதனன் என்னை மற்கட்டியிழுத்து வர, கர்னன் துரியோதனன் முதலிய பலரும் இகழ்ந்து துர்ப்பாஷைகள் வழங்க, அதனல் என் அங்கம் பங்கப்படும்போது பீஷ்மர் துரோணர் கிருபர் விதுரர் திருதராஷ்டிரர் முதலியவர்கள் ஊமைபோலிருக்க, நீங்களைவரும் ஆமைபோலிருக்க, ஆபத்பாந்தவனும் ஆதிமத்தியாந்த ர்கிதனும் ஆதிமூலப்பொருளும் அநந்த கல்யாணகுணனும் யதுகுல முதல்வனுமாகிய ஜநார்த்தனன் சன்மானத்துடன் என் மானங்காத் தருளினர். நீங்கள் அந்நாளிலிருந்த தன்மைபோலவே இந்நாளிலும் இருக்கப் போகின்றீர்களென்று முன் ஜாக்கிரதைசெய்ய முழுராத்திரியில் வந்தால், என்னை ''ஏன் வந்தாய்'' என்று கடிகின்றீர். நான் பிறந்த அகத்திலும் புகுந்த அகத்திலும் அதிகச் செல்வமாய் ஓராயிரஞ் சேடியர் புடைசூழ்ந்து ஊழியஞ்செய்ய வாழ்ந்திருந்தேன். உங்களுடைய வீரமில்லாத சாந்தத்தினல் இப்போது கற்களும் முற்களு முள்ள கானகமெங்குந் திரிந்தலைந்து, கசங்கி வருந்தி, காய் கனி யருந்தி, பன்னிரண்டுவருஷங் கழித்தேன். இது போதாமல் இன்னும் ஒருவருஷம் அஞ்ஞாதவாசஞ் செய்வதற்கு உருமாறி வேறு

பெயர்கொண்டு, என்னிருகைகளுங் கன்றி என் மெய்யொளியுங் குன்றச் சிற்றேவல் புரிந்து வருங்காலேயில், கொடிய கீசகனுனவன் இவ்வித அவதிப்படுத்தினுன். பூமண்டல முழுதும் புகழ்பெற விளங்கிய தருமராஜனுனவர் வைதிக வேடம்பூண்டு ஒருமார்க்கமாயிருக்கின்ருர். திரிபுவன கண்டக ஜயசிகாமணியாகிய விஜயன் பேடியுருவெடுத்து, நாடகத் தொழிலடுத்து, ஆடல் பாடல் கொடுத்து, மூடுமுக்காடிட்டுக் கொண்டிருக்கின்ருர். நகுல சகாதேவர்களிருவரும் வெளியில் தத்தமக்கேற்ற தொழிலில் அமைந்திருக்கின்ருர்கள். இவர்களிடத்திலெல்லாஞ் சொல்லிக் காரியமென்ன? ஒரு இலாபமுமில்லே. எனக்குரிய ஐவரில் என்னெண்ணப்படி நிறைவேற்ற உம்மைவிட மற்றெருவரா லாவதில்லே. எனக்கு உற்ற துணை நீரே. வாயாற் கூறிய சபதத்தையும், மனத்தால் நினைத்த குரோதத்தையும், முன்பின் பாராமல் முடிக்கத் தக்க பலசாலி நீராகையால், உம்மிடத்தில் என் குறையை முறையிட்டுக் கொண்டேன்'' என்ருள்.

### பீமன் திரௌபதியைத் தேற்றிக் கீசகனைக் கொல்வதற்கான ஒரு சூழ்ச்சியை சொல்லி யனுப்புதல்

ஓ மகாராஜனே, இவ்வாறுகூறியபாஞ்சாலியின் மொழியைப்பீமன் கேட்டு வெடுக்கென் றெழுந்து, காரண காரியங்களை யோசித்து,

''பொறையெனப் படுவதாடவர் தமக்குப் பூணெனப் புகலினும் பொருந்தார்
முறையறப் புரிந்தா லக்கணத் தவர்தம் முடித்தலை துணிப்பதே முழுப்பூண்
நறைமலர்க் குழலார் தமக்குமெய் யகலா நாணமே நலஞ்செய்பூ ணெனினு
நிறையுடைப் பெரும்பூ ணமளிவாய் நாண நிகழ்வுரு நிகழ்ச்சியே யன்ரே''

''ஓ மாதே, புருஷர்களுக்குரிய ஆபரணம் பொறுமை; ஆயினும், நீதி வழுவிய நிர்மூடரைக் கணப்பொழுதாயினுந் தாமதியாமற் குப்புறத் தள்ளி புதைத்து, தலேபிளக்க மிதித்து, கீர்த்தியை நிலேநாட்டுவதே சிறந்த ஆபரணமாம். கலனிறைந்த மங்கையருக்கு நலனிறைந்த ஆபரணம் நாணமென்பதுதான். ஸ்திரீ புருஷர்கள் கூடுங்காலத்திலும் அந்நாணம் நீங்காமற் சரசஞ்செய்து அநுபவிப்பதே, பொற்பூஷணங்களிற் சிறந்த நற்பூஷணமாகும். இப்படியிருக்க, எனக்குப் போதுமான பலமிருந்தும், என்கைக்குத் தக்க கதாயுதமிருந்தும், என் தம்பி தனஞ்செயனுக்குச் சாற்றற்கரிய சௌரிய பராக்கிரம மிருந்தும், அவன் கையில் திரிலோகத்தையும் வெல்ல வல்ல காண்டீப மிருந்தும், என்ன இலாபம்? அஸ்தினுபுரத்திற் சகுனியுடன் சூதாடித் தோற்றபொழுதும் உன்னைத் துச்சாதனன் இழுத்து வந்தபொழுதும், இராஜசபையில் மானபங்கம் பண்ணிய பொழுதும், துரியோதனன் கர்னன் முதலியவர்கள் வம்பு வார்த்தைகள் பிதற்றிய பொழுதும், ஆற்றக்கூடாமல் உடல் பதறி யெழுந்த எங்களை ஆத்திரப்பட வேண்டாமென்று அடக்கிய அண்ணுவானவர், இப்பொழுதும் இந்த விராடன் சபையில் உன்னைத் துரத்திவந்த கீசகனைக் கொல்ல எண்ணிய என் கோபக் குறி தெரிந்து, சமிக்ஞையாகப் பேசி ஜாடைகாட்டித் தடுத்து விட்டார்.

இவர் என்றென்றைக்கும் இத்தன்மையாகவே இருந்தால், எங்கள் மானமுங் கெட்டு ஈனமும் பட்டுப் போவோ மென்பதற்குச் சந்தேக மில்லை. ஆதலால், ஓ நல்லாய், இப்படி எங்களைச் சமயத்தில் மீறவொட் டாமற் சங்கடப்படுத்திவருந் தருமராஜனாலுண்டாகியமனஸ்தாபத்தை யும் துரியோதனாதியரால் விளைந்திருக்கின்ற கோபத்தையும் இந்தக் கீசகன்பேரிற் காட்டி, என் கீர்த்தியை நிலைநாட்டி, யானைமத்தகத் தைப் பிளக்குஞ் சிங்கம்போற் பாய்ந்து, அவனுடலை வாட்டிக் குட லைப் பிடுங்குகிறேன். இனிமேல் இவன் விஷயத்தில் யார் குறுக்கிட்டா லும் நான் உடன்படப் போகிறதில்லை; இவனை உயிருடன் விடப் போகிறதுமில்லை. இவ்வுலகத்தில் அற்பர்களுடைய மனைவிமார்க ளெல்லோரும் அதிக சவுக்கியமடைந் திருக்கும்போது, விற்பனர்களா கிய எங்கள் பத்தினியான நீ மெலிந்து விசனப்பட வேண்டிய விதி யென்ன? நல்லது ஆகட்டும். வல்லவர்க்கு வாழ்க்கைப்பட்டும் இப்படி வ்ருத்தப்படுகின்றோமே யென்று நீ சற்றும் மனமிளைக்க வேண்டாம். ஓ மாதரசி, முன்னாளில் தீவினை வசத்தால் அகஸ்தியருக்கு அன்புடைய பத்தினியாகிய லோபாமுத்திரை யென்பவள் கணவ னுக்குப் பணிவிடை செய்து, ஆகாரம் நித்திரையின்றி நெடு நாள் கஷ்டப்பட்டு, பிற்பாடு நல்வினைவயத்தாற் சுபமுஞ் சுக முங் கீர்த்தியும் பெற்றாள். இதன்றியும் சர்யாதிமகாராஜன் பத்தினி யாகிய சுகன்னியானவள் சவுனகமஹா முனிவருக்குச் சிசுருஷை செய்து, சில நாள் வருத்தப்பட்டு, பலநாளும் பாக்கியத்துடன் வாழ்ந்து, கண்ணியம் பெற்றுப் புண்ணியலோக முற்றாள். பீம ராஜன் மகளாகிய தமயந்தியானவள் பிள்ளைகளைப் பிரிந்து, புருஷனையும் நீங்கித் தனியளாய்க் காட்டில் அலைந்து, கரும்பாம்பின் வாய்ப்பட்டு, வேடனால் வெளிப்பட்டு, சிறியதாயார் வீட்டில் போய்ச் சேர்ந்து அங்கே குற்றேவல் செய்துகொண்டிருந்து, கொஞ்சநாளைக் குள் தாய் தந்தையரை யடுத்து, பின்பு தூதுவிடுத்துப் பிரிவுற்ற நாயக னைக் கண்டுகூடித் தன் சேயோடு மகிழ்ந்து சிறந்து வாழ்ந்திருந்தாள். இவ்வாறு எத்தனையோ கோடி இராஜஸ்திரீகள் படாதபாடும்பட்டுக் கற்புக்கோ ரிடையூறுமின்றிப் பதம்பெற்றிருக்கிறார்கள். ஆகையால், தேவர்களாலும் நல்வினை தீவினையை அனுபவித்தே தீர வேண்டும். இப்பொழுது நமக்குண்டாகிய துன்பம் இன்னும் முப்பது நாளைக்கு மேல் இன்பத்தை விளைவிக்க காத்திருக்கின்றது. ''பட்டவர் பதத்தி லிருப்பார்கள்'' என்னும் பழமொழி யறியாயோ? அப்படிக்கிருந்தபோ திலும் இந்தப் பகையை எந்தவிதத்திலுஞ் சீக்கிரத்தில் நானே முடிக் கிறேன். ஓ பாக்கியவதியே, அஞ்சவேண்டாம்'' என்று பீமசேனன் சொல்லித் தேற்றினான்.

இவ்வார்த்தையைப் பாஞ்சாலிகேட்டு, ''ஐயா கதாபாணி, முரசக் கொடி முதல்வனாகிய தருமராஜன் உமது குறிப்பை யறிந்து கோபமே லிட வொட்டாமல் தணித்தாரென்று மனக்குறை வேண்டாம். நம் முடைய பகையாளி நிச்சயித்த பன்னிரண்டு வருடமுங் கழித்து, ஒரு

வருடம் அஞ்ஞாதவாசஞ் செய்யும்படியாக இந்த விராடபுரத்திற்கு வந்து கொஞ்ச நாளாயிற்று, இன்னுஞ் சிலநாள் ஒருவரும் அறியாம லிருந்து காலம்போக்க வேண்டும். இதற்குள்ளாக நம்மை யாவரேனுங் கண்டாற் பகை வெல்ல வந்த நற்காலந் துர்க்காலமாம். பின்பு பழைய படி வனவாசம் பண்ணவரும். அதனுல் உங்கள் சீரும் சிறப்புஞ் சபதமும் பலவீனப்படும் என்று நினைத்து உம்மை அவசரப்பட வொட்டாமல் அடக்கினர். இஃதல்லாமலும், அவர் காலதேச வர்த்த மானந் தெரிந்த புத்திமானுகையால், உமது வெகுளியைக் கண்ட வுடன் அதனை அடக்கினர். அது கடமை தான். அதனுல் அவர் பேரில் தோஷமில்லை. இந்தப் பஞ்சையாகிய கீசகன் என்னைக் கொஞ்சமாக நினைத்தான். அப்போது அவனை நான் பார்த்து, "அடா பாவகாரி! அடா துரோகி! உனக்குக் கேடுகாலம் நேரிட்டது. எனக்குக் கந்தர்வர் ஐந்துபேர் கணவர்கள்; மிகுந்த திடவான்கள்; சத்துருவை வீரசொர்க்கஞ் சேர்க்கும் விஷயத்தில் மகாவல்லவர்கள். மித்துருவான வர்களுக்கு உத்தமகுணமுள்ள நல்லவர்கள். எல்லாமறிந்தவர்கள். பொல்லாங் கொழித்தவர்கள். எங்கு மிருப்பவர்கள். நீ செய்த தீமை கள் அனைத்தையுந் தெரிந்து கொள்ளத்தக்க ஞானமுள்ளவர்கள். சொல்லாமற் சொல்லிக் கொல்லாமற் கொல்லத்தக்கவர்கள். நீயும் உன் குடும்பமும் நீருகாதீர்கள்" என்று பலநீதிகளையும், பழமையாய் நடந்திருக்கின்ற சில சேதிகளையுஞ் சொன்னேன். அந்தக் கீசகன் நான் சொல்லியவற்றை அலட்சியஞ் செய்து, 'போ ; போ ; அவர்கள் எப்பேர்ப்பட்ட கந்தர்வராஞலும் என் முன்னிற்பார்களோ?' என்று ஏசித் துரத்திக்கொண்டு வந்தான். அந்தப் பதிதன் உமக்கு முன் எதிர்ப்படுவானுனல், என்ன பாடுபடான்? கருடனது நிழற்பட்ட பாம்புபோற் கெடுவான். என் மனம் பற்றி எரிகிறது. அந்த நாசகா லக் கீசகன் வந்த வழி போனவழி தெரியாமல் நொந்தழியும்படி நீர் பிரவேசிக்க வேண்டும். ஆனுல் ஆத்திரப்படாதேயும். இன்னும் இரண்டொருநாள் காலதாமதஞ்செய்து இவனை முடித்தால், விரதசார ணிக்கு அன்பர்களாகிய கந்தர்வர் கீசகனைப் பிடித்துத் துடிதுடிக்க அடித்து முடித்துவிட்டார்களென்று பேசிக்கொள்வார்கள். அப்போது உம்மேற் சந்தேகங் கொள்வதற் கிடமிராது. ஆகையால் உமது யுக்திக்கு இசைந்தபடி பார்த்துக்கொள்ளும்" என்று திரௌபதி சொன்னுள்.

அந்தக் கற்புடையாள் வார்த்தையைக் கேட்டு, "ஓ பாஞ்சாலி, கீசகனைக் குறித்துக் கிஞ்சித்தேனும் நீ யோசிக்கவேண்டாம். அவன் என்றைக்கு உன்னைத் தொடர்ந்தானே அன்றைக்கே அழிந் தானென்று நம்பு. உன்னிஷ்ட மெப்படியோ, அப்படியே அவ னுயிரை நஷ்டப்படுத்தி விடுகிறேன். ஆனுல் இப்பொழுது விடியற் காலமாயிற்று. இனி நாம் வந்த காரியத்திற் பிரவேசித்தால், அஞ் ஞாதவாசம் இரகசியம் வெளிப்பட்டுப் போய் விடும். தருமபுத்திரர் சித்தத்திற்கு மெத்த வருத்தஞ் சம்பவிக்கும். அன்னமே, நீ முன்

னமே சொன்னவண்ணம் எண்ணித் துணிவது கருமமாதலால், இன்றிரவு முழுமையும் நாளைப்பகல் முப்பது நாழிகையும் பொறுத்து நாளை யிரவை எதிர்பார்த்துக்கொண்டிருக்கின்றேன். நீ யந்தச் சுத க்ஷணை மாளிகைக்குப் போய்விடுவாயானால் அந்தத் துர்ப்புத்தியுள்ள கீசகன் நாளைக்காலையே உன்னிடத்திற்கு வந்து, இறுமாந்து "ஓ விரதசாரணி, இப்போது என்ன சொல்லுகிறாய்? நான் உன்னைத் துரத்திவந்தபோது என்னை யார் கேட்டார்கள்? என்னை யார் தடுத்தார்கள்? எனக்கும் எதிரியில்லை, உனக்குந் திக்கில்லை" என்று சொல்லித் தாராளமாய்க் கிட்டிப் பேசுவான். அவனை நீ பார்த்த வுடனே அன்புள்ளவளைப்போல் அரைக்கண் பார்வை நாட்டி, அதி மோகமுக நயஜாடை காட்டி, ஆசை விநய அபிநயம் புகட்டி, மோக விஷத்தை அவன் முடிமேலேற்றி, உன் கற்புக்கு மாத்திரம் பழுதில் லாமல் அந்தக் கயவனுடன் கலந்து பேசி, விராடபுரத்திற்கு மேற்கி லிருக்கும் மாஞ்சோலை சூழ்ந்த வசந்த மண்டபத்தில் நாளை இராத்திரி பத்துநாழிகைக்கு அவனை வரும்படியாகப் பக்குவப்படுத்திக்கொள்" என்று யுக்திசொல்லித் திரௌபதியை அனுப்பிவிட்டு, தான் நெய் வார்த்த நெருப்பெனப் பொங்கி முகம்வேர்த்து, நித்திரை பிடியாமற் சித்தம்பிரமித்து, தான் குறித்த காலவளவைக் கருதி, பகலிரவென்று பாராமற் சுடச்சுட வேலைமுடிவதற் கில்லையே யென்று மனக்கலக்கங் கொண்டு, படுக்கையில் மல்லாந்தெண்ணமிட்டுக் கொண்டிருந்தான், தருமராஜனுக்கிளைய சத்திய விரதனும், கருமலைபோல் வளர்ந்த இரு புஜமுள்ளவனும், பதினாயிரம் யானைபலம் பெற்றவனுமாகிய பீம சேனன்.

### பாஞ்சாலி வழக்கப்படி நந்தவனத்திற்குச் செல்ல, அங்கே மீண்டும் கீசகன் வந்து வேண்ட, அவனை பீமன் குறித்த இடத்திற்கு வரச்சொல்லி மீளுதல்

இத்தன்மையா யிருந்த பீமனிடத்தில் விடைகொண்டு சென்ற விரதசாரணியானவள் சுதக்ஷணையின் மாளிகைக்குப்போய், பொழுது விடியுமளவும் ஒருவிதமாய் முகஞ்சுளுக்கிக்கொண்டிருந்தாள். அப் படிக்கிருந்த பாஞ்சாலியின் மனோதுக்கத்தைப் பரிகரிப்பதுபோல் ஒளி யைக் கூட்டி இருளையோட்டி கதிர்க்கிரணங்களை நீட்டிக்கொண்டு சூரியன் உதயமாயினான். அழகிய உதயகிரியிலெழுந்த ஆதித்தனைக் கண்ட சைரந்திரியானவள் வழக்கப்படி காலைக்கடனை முடித்து சுத க்ஷணாதேவிக்கு மலரெடுத்துத் தொடுத்துக் கொடுப்பதற்காகப் பூஞ் சோலைக்குட் புகுந்தாள். அப்போது, இராஜஸ்திரீயாகிய சுதக்ஷணை முன் தன்னை நிந்தித்த நிர்ப்பாக்கியத்தால் மனம் வருந்திப்போன கீச கன் தன் தமக்கையைச் சந்தித்து மன்னிப்புக் கேட்டுக்கொண்டு வரு வோமென்றுநினைத்து, மந்தமாருத முலாவிய நந்தவனத்தில் வந்தான். அவன்வந்தவழியிற்சந்திரவுதயம்போற் கொந்தலர் பறித்துக்கொண்டு நின்ற கோதையானவள் அவனைக்கண்ட மாத்திரத்தில் அந்தகனைக் கண்ட ஆன்மாவைப்போல் நடுங்கி, தெளிந்த ஜிதேந்திரியர்களைப் போல் உடனே தேறி, மனந்தளாமல், சங்கடப்படாமல், தள்ளாடி

ஓடாமல், தவித்துவாடாமல், சற்றும் அச்சமில்லாமல், தலைகுனிந்து, தன்காற்புறவடியைப்பார்த்து, நிமிஷத்திற்கொருதரங்கீசகன்முகத்தை நோக்கி, சற்றே புன்சிரிப்பாக நகைத்து, அவனது துர்ப்புத்தி படருவதற்குத் தானே கொழுகொம்பாகி, பீமனிடத்திற் பேசிக்கொண்ட சங்கேதப்படி நிறைவேற்ற வெண்ணினள். அப்போது அவ்விடத்திற் கற்புநிலைதவருமற் பொற்பதுமைபோலிருந்த மாலினியைப் பழி வழிக்கு வந்த முழுமூடன் பார்த்து, சந்திரனைக்கண்ட சமுத்திரம்போற் பெருகி, சந்திரகாந்தக் கல்லைப்போலுருகி, செல்வத்தைக் கண்ட தரித்திரன் போல மகிழ்ந்து, கல்விப்பொருளிற் கற்பனையலங்காரக் கவிதை மேற்கொண்ட கனவான்போல் முகமலர்ந்து விழிகுளிர்ந்து, அவள் கால் முதல் தலைவரைக்கும் இமையாமற் பார்த்து, தன் அறிவுகெட்டு, அற்பபுத்திமேலிட்டு திக்கு நோக்கிக் கும்பிட்டு, இதனைப் பேசுவதாயினன் :—

"ஓ விரதசாரணி, எனக்குப் பிராணாதாரம் நீயன்றி வேறில்லை. நான் சொல்லப்போகின்றதை நன்றாய்க் கேள். இந்தப் பட்டணமும் இந்நாட்டு வளப்பமும் விராடனுடைய வாழ்க்கையும் என் தமக்கையாரது மங்கிலிய சூத்திரமும் இதோ நான் என் இடக்கையில் மூடி வைத்திருக்கிறேன். என் கையை விரித்துவிடுவேனானால், அவைகளெல்லாந் தூர்வாசர் சாபத்தாற் சமுத்திரம் போயழுந்திய தேவேந்திரன் செல்வம்போ லாய்விடும், என்னை என்னமோவென் றெண்ணாதே. முன்னமே என் வல்லமை யாவுஞ் சொல்லி யிருக்கிறேன். உன்னை நான் துரத்திவந்தபொழுது யாரென்னைத் தடுத்தார்கள்? எவர்கள் என்னருகில் வந்தார்கள்? விராடராஜனாவது ஏனிப்படி செய்தாயென்று கேட்டானா? உனக்காகிலும் உதவி ஒத்தாசை செய்தானா? ஒன்றுமில்லை. ஆதலால் இன்னும் நான் உனக்குச் சொல்ல வேண்டுமா? இந்த வேலை என்னையல்லாமல் இன்னொருவன் செய்திருப்பானானால், இந்நேரம் அவனை எமலோகத்திற் புழுவாய்த் துடிக்கச் செய்வேன். எல்லோரும் என் காலில் விழ்வதனாற் சகலமு மெனக்கே சொந்தமென்று உனக்குத் தெரியவில்லையா! இந்த விராடனுக்கு நான் கட்டிவைத்திருக்கின்ற பட்டத்தை இப்பொழுதே உனக்குக் கட்டி உன்னைப் பெண்ணரசியாக்கி வைக்கிறேன். வேண்டுமானாற் பிரத்தியக்ஷமாகப் பார். இஃதன்றியும் உன்னைக் காக்குங் கந்தர்வ ருண்டென்று பேதை மதியால் நம்பிப் பெருமோசம் போயிருக்கின்றாய்! என்னைப் பேசாதும் பேசிக் கருக்கின்றாய். வீண்கர்வங் கொண்டிருக்கின்றாய். இப்பேர்ப்பட்ட நிலையில் உதவிசெய்ய வராதவர்களை உனக்கு உரியவர்களென்று எண்ணலாமா? அவர்கள் பண்டவாளத்தையும் பக்ஷத்தையும் கண்டுகொண்ட நீ இனி வேறு பேசப்போமா! அற்ப கந்தர்வர் பேச்சு அவலமாய்ப் போச்சு. நான் யாருக்கு மடங்காதவன். யார் படைக்குந் தோற்காதவன். என்னைக் குறித்து இன்னமென்ன சொல்லப் போகின்றாய்? உன் எண்ணந்தான் என்ன? அடி வண்ணமகளே, ஒரு வேளை என் பேரிற் குற்றம் எத்தனையோ இருக்கலாம். சிறியோர் செய்த பிழை

யைப் பெரியோர் பொறுக்க வேண்டுமென்று புண்ணியவான்கள் பேசியிருக்கின்றார்கள். அந்த வார்த்தைக்கு விக்கினமில்லாமல் மன்னித்து, என்னை இரட்சித்துப் பொறுமையுடன் ஆதரிப்பது உன் கிருபைக்குரிய கடன்'' என்று தன் இருகரத்தையுந் தலைமேற் குவித்துச் சேவித்து, ''உன் கல் மனம் இளகி என் கருத்துமுற்றக் கனிவாய் திறக்கவேண்டும்'' என்று காலில் விழுந்தான்.

இவ்வாறு பரதவித்துக் காலில் வீழ்ந்த கடும்பாவியை மாலினி பார்த்து, முகநயத்துடன் முறுவலுங் காட்டி, நாம் நினைத்த காரியம் இன்றைக்கு நிறைவேறுமென்று மாயச்சாயல் மயக்கநோக்கம் வஞ்சனைப்பேச்சு முதலிய மார்க்கங்களினால் வசனிக்கத்தொடங்கி ''வாரும் கீசகராசனே, நான் உம்மைத் தடுத்ததும் விரகதாபப்பட விடுத்ததும் உமது மனம் வருந்தப் பேசியதும் ஏனென்றால், எனது மேலான மரபினாலும் நல்லொழுக்கத்தினாலும் நான் கொண்டிருந்த விரதத்தினாலுமேயன்றி வேறல்ல. நீர் என்பேரில் ஆசைப்படுமுன்னமே நான் உம்மேற் பாசங் கொண்டிருந்தேன். அஃதல்லாமலும். நீர் என்மேல் வைத்த மோகம் நிலையானதோ? நெறியானதோ? வேறொரு பெண்ணைக் கண்டாற் பின்வாங்குமோ? மனதேங்குமோ? என்னவோ? ஆதலால் ஆண்பிள்ளைகளின் புத்தி சபலமாமேயென்று சோதிக்கு நிமித்தமாக, இஷ்டமில்லாதவள்போல அபிநயித்தேன். என் மெய் தொட்டிருந்த கந்தர்வர் ஐவரும் என்னைக் கைவிட்டனரெனத் தெரிகிறது. இனிக் காரியமில்லை. என்மேற் காவலுமில்லை. ஓ வீரியவானே! நிராதரவான என்னைத் தராதர மறியத்தக்க நீர் அபேக்ஷித்தபொழுதே, நான் புனிதவதியானேன். என்னைப் பெண்டாள நினைத்த உமக்கு சீக்கிரத்தில் மேலான பாக்கியமுண்டாம். என்னால் உமக்கு விளைந்த வருத்தமும் இன்று கூண்டோடு போய்விடும். பெண்களின் குண மறிந்திருந்தும் வீணே இத்தனை தூரம் பிரபலப்படுத்தி வைத்தீர். நீர் காணாது கண்டு கருதி மோகித்ததும், வீணாசை கொண்டு விருதாப்பழி சுமந்ததும், நான் நாணாது நாணி நலிய வாதித்ததும், நீர் என்னைப் பிடிக்க வந்ததும், நான் இராஜசபையிலோடி விழுந்ததும், ஊர் நாடெல்லாஞ் சிரிக்க உடம்பெடுத்ததும், ஏதோ நம்மிருவருடைய கால வித்தியாசத்திலேற்பட்டனவென்று கருதவேண்டும். போனது போகட்டும். இவ்வுலகத்தில் ஆலால விடத்தையும் ஆவிபறிக்கு மந்தகனையும் ஆற்றையும் பெருங்காற்றையும் வேங்கைப் புலியையும் அறிவில்லா மூடரையும் ஒருவாறு நம்பலாம். சேலைகட்டு மாதரை க்ஷணமும் நம்பப்படாது. அஃதெவ்வாறெனில், இந்திரன் முதலாகிய இமையோரேவந்து ஆடையாபரணந் தந்து ஆசைப்பட்டாலும், ஸ்திரீகள் தாங்கள் கொண்டமையலை வெளிப்படுத்தாமல், ஆசையற்றவர்போல் முகத்தைச் சுளித்து, முடுக்காய் முறுக்கி, ''ஏன் என்னைப் பார்க்கிறாய்? நானென்ன வேசியா? தாசியா? உனக்குத் தங்கை தமக்கைகளில்லையா? எங்கள் வீட்டார் கண்டாற் சும்மாவிடுவார்களா?'' என்று தலைகுனிந்து கலகலவென்று கண்ணீர் சொரிந்து, சிறுநகை காட்டி, குறுவியர்வு வழித்தெறிந்து மாராப்புத் துணியை பத்துதர மிழுத்திழுத்துச் செறுகி, வாயை

மூடிக் கையை நெரித்து, கால்கடுக்க நிற்பானேனென்று தனக்குத் தானே பேசிக்கொண்டு, அப்பாற் சிலதூரம்போய் இப்பால்வந்து எட்டிப் பார்த்து, ஒரு பக்கத்தி லொதுங்கித் தலையை நீட்டிக் காட்டி மறுபடியு மறைந்து, மறுபடியுங் கிட்டி, உறவுகொண்டு மகிழ்ந்து திரிவர். இது பெண்களின் கெட்ட சுபாவம். இப்பேர்ப்பட்டவர்களின் மனதை எப்படித் தெரிந்துகொள்ளலாமென்றால், அந்நியப் பெண்டுகளாவது தாதியர் முதலிய வேலைக்காரிகளாவது குழந்தைகளாவது கிட்ட நின்றால் அவர்கள் பேரில் விழுந்தும் வல்லிக்கொடிபோல் துவண்டு வளைந்தெழுந்தும், பிள்ளையை அணைத்துக் கொஞ்சி முத்தாடியும், புஷ்பத்தைப் புன்சிரிப்போடு முகந்தும் பெருமையாக டம்பம் பேசியும், விருதாவாய் ஒருவரை யேசியும் சொற்பமான பேச்சுகளை ஓயாமற் சொல்லியுங் கூசுவர். நாயகன் அவர்களைப் பார்த்தால் நிலத்தை நோக்குவர்; நாயகன் அவர்களைப் பார்க்காதபோது தலையெடுத்துப் புருஷனை நன்றாய்ப் பார்த்து நாணி நகைப்பர். இன்னும் அநேக ஜாலதந்திரங்கள் செய்வர்; இவைகளால் அவர்களைத் தெரிந்து கொள்ளலாம். இந்தக் குறிப்புகளை யெல்லாம் வேறுபாடில்லாமற் சரசநாயகன் தெரிந்து, மேளத்திற்குத் தகுந்த தாளம் போட்டு எண்ணத்தை முடித்துக் கொள்ளுவான். மற்றவன் கண்டாற் சங்கதியறியாமல், இதெப்படிப் போமோ? என்ன வாமோ? என்று பயந்து ஓடிப் போவான். ஆதலாற் பெண்கள் கொண்ட புருஷ விரகமானது லோபியர் பொருள்போல் அழுந்தி யிருக்கும். ஆண் பிள்ளைகள் கொண்ட மோகமானது கல்லாதான் கற்ற கல்வியைப்போல் வெளியாய்ப்போம். இந்தக் கிரியந் தெரியாமல் அவசரப்பட்டவர்கள் பலனடையார்கள். நீரும் அவ்வாறே ஆத்திரப்பட்டு விட்டீர். இப்பொழுதானென்ன? உமது இஷ்டத்தை என்னிஷ்டப்படி முடிப்பதினாற் பாபமில்லை. உமக்குள்ள காமவெள்ளத்தைக் கடந்து கரையேறுவதற்கு வழிகாட்டுகிறேன். நீர் கள்ளமில்லாமல் வாரும். எத்தனைவித சாகசங் கற்றிருந்தாலும் உள்வீட்டிற் கரணம் போடலாகாது. என் கணவராகிய கந்தர்வர் ஒருவேளை இந்தச் சேதி தெரிந்து வந்துவிட்டால் உம் முயிரும் போம். என் தலைமயிரும் போம். அன்றியும், நேற்று என்னை துரத்திய உம்மை இந்நாட்டிலுள்ள பெண்களும் புருஷர்களும் இராஜன் முதலிய அனைவரும் நன்றா யறிந்தவர்கள். லோகப்பிரசித்தி யாயிற்று. அப்படியிருக்க, நாமிருவரும் இன்றைக்கு உறவாடுவதைப் பார்த்தால் பழிப்பார்கள். உம்முடைய தமக்கையாகிய சுதக்ஷணைக்குத் தெரிந்தால் என்னைச் சுத்தமாய் நம்பமாட்டாள். இதுவரையிலும் நாம்பிழைத்தபிழைப்பு பேயின் பிழைப்பாய்விடும். அநேக பொல்லாங்குகளும் விளையும், நல்லதல்ல. ஓ சந்தனமணித் தோளனே, நீர் இன்றிரவிற் பத்து நாழிகைக்குமேல் வருவீரானால் உன்னிஷ்டப்படி முடியும்'' என்று பாஞ்சாலி சொன்னாள்.

அந்தத் தேன்மொழியானது கீசகன் காதிற் புகுந்து அமுததாரைபோல் விரகாக்கினியை ஆற்றியபோது, வெளியெழும்பிப் போகவழி

பார்த்திருந்த பிராணன் நிலைத்து, இளைத்தவுடம்பும் பூரித்துத் துன்பங்கள் நீக்கி, இன்பஞ் செழித்தேறத் தேகபரவசமடைந்து, மோகஞ் சிறந்து, "ஓ மேகங்கண்டாடுமயிலே, இப்போ தல்லவோ உன் சொல்லாகிய ஆபரணம் என் காதிற்கணியாயிற்று. இந்தக் கர்ம பூமியில் உடலெடுத்தபயன் இன்றுதான் லபித்தது. தீயபலன் தீர்ந்து நான் நற்பலனுற்றேன்; என் பாவங்கள் யாவும் பறந்தோடிப் போயின. நான் இதுவரையிலும் பண்ணிய புண்ணியம் இன்று ஈடேறியது. என் பாக்கியமே பாக்கியம். நான் பிழைப்பதற்குத் துணைக்காரணமான உன் வாக்கியமே வாக்கியம்"என்று வாய்ப்புதைத்துக் கைகட்டி, மெய்யொடுங்கிப் பணிந்து, "ஓ என்னிஷ்ட காமியத்தை நிறைவேற்றிய ஆவியே, பாவியாகிய என்னை எவ்விடத்திற்கு வரும்படி கட்டளையிட்டருளுகின்றீர் ?" என்று கேட்டான்.

"வாரும் ரசிகனே, விராடராஜனது கோட்டைக்கு மேலண்டையிலிருக்கின்ற மாஞ்சோலையில் குயில்கள் கூவவும் மயில்களாடவும் கிளிகள் கொஞ்சவும் அளிகள் மிஞ்சவுமாகி, மகா அலங்காரமாகப் பளிங்குக் கற்களாற் கட்டிய வசந்தமண்டபத்தில் வந்து சேரும், நீர் வருமுன்னமே நான் வந்திருக்கிறேன், இப்போது நான் சொன்ன இடம் சந்தடியற்ற தனியிடமல்லவா ?" என்று விரதசாரணி வினவினுள். அம்மொழியைக் கேட்ட கீசகன் கூறுகிருன் :—

"ஆ! ஆ! என் கண்ணே! அதுவே எனக்குத் தகுந்த இடம் தேவரீர் திருவாய்மலர்ந்த வண்ணஞ் சீக்கிரம் வருகிறேன். உமது திருமேனி புழுதிபடிந்து அசுத்தமா யிருக்கிறதென்று கூச்சம் வேண்டாம். உமக்கு நல்ல நல்ல ஆபரணங்களும், விலையேறப் பெற்ற வஸ்திரங்களும், புநுகு சவ்வாது கதம்பம் கஸ்தூரி அத்தர் பனிநீர் முதலிய பூச்சுவகைகளும், புட்பச்செண்டுகளும், பரமான்னமும், பலகாரங்களும், பழவர்க்கங்களும் பஞ்சவிடய தாம்பூலங்களும் என் தலைமேற் சுமந்துகொண்டு வருகிறேன். நீர் அவைகளை யங்கீகரித்து என் கோரிக்கையை ஈடேற்றவேண்டும். ஓ கோமளமே, ஓ என் குலதெய்வமே! ஓ சித்தசன் கொலுக்கூடத்திற் கமைந்த பொக்கிஷமே! என் பிராணனை உமக்கே ஒப்புவித்தேன். இதைவிட வேறே உபசாரஞ் சொல்ல அறியேன், அடிமைச் சிறியேன். என் உயிருள்ள மட்டும் உம்மை நான் பிரியேன். மறுமாதரை நோக்கேன். என்பேரிற் கிருபை வைக்கவேண்டும்" என்று செலவு பெற்றுக்கொண்டு "காளவிடத்தைத் தாகத்திற்கு உட்கொள்ளக் கருதிய தரித்திரன்"போற் கீசகன் சென்று, இந்தச் சூரிய னெப்பொழுது தொலைவானென்று அந்தகன் பாசந் தன்னைக் கலக்கவிருக்கும் அஸ்தமனத்தை நாடியிருந்தான்.

### திரௌபதி பீமசேனனைக் கண்டு நடந்தவிதம் கூற, அவனவட்குச் சில திட்டங் கூறியனுப்புதல்

இப்பாற் கொலை செய்யுங் கூர்வேல்போன்ற கண்ணுளாகிய பாஞ்சாலி சுதக்ஷிணை மனைக்குப் போய்ப் பூமாலைகளைத் தொடுத்தளித்து,

பூசுவனவுங் கொடுத்து, அவள் உத்தரவின்பேரில் மடைப்பள்ளிக்குச் சென்று, மதகரி பீமனைக் கண்டு, "நாம் பேசிக்கொண்டபடி அவனை இசையச்செய்து கொண்டேன். அப்பால் தெய்வச் செயலெப்படியோ" என்றாள். அந்தத் திரௌபதியை பீமசேனன் பார்த்து, "ஓ காதலி, நீ ஏன் கவலைப்படுகிறாய்? ஒருவேளையந்தக் கீசகன் வராமற்போவானாகில் நான் போய்க்கொல்லுகிறேன். அஞ்ஞாதவாசத்தவனைக்குளிவ்வூரார் அறிவார்களேயென்று யோசிப்பாயானால் இந்த விராடபுரத்திலுண்டாகிய ஆண் பெண் எல்லோரையுங் கொன்று துரியோதனனுக்குச் சேதி தெரியாமற் பண்ணுகிறேன். ஒருவேளை துரியோதனனறிந்து பெரும்படை கொண்டுவந்து, அஞ்ஞாதவாசம் பூர்ணமாய் நிறைவேறாமற் குறைபட்டுக் கெட்டுப்போனபடியால் மறுபடியும் பன்னிரண்டு வருடம் வனவாசம் பண்ணவேண்டிய நிபந்தனைப்படிக்குப் போகவேண்டுமென்று புகன்றானாகில், அப்போதே யந்தத் துரியோதனனையும் அவனைச்சேர்ந்த மற்றவர்களையுங் கொன்று பள்ளத்திற்புதைத்து, அஸ்தினாபுரம் விராடபுரம் உபலாவிய முதலிய பதிகளுக்கெல்லாந்தர்மராஜனை அரசனாக்கி, எல்லாருங் கொண்டாட எங்கும் பிரக்கியாதியாயிருப்பேன். சண்டிபுரண்டாற் காடுகொள்ளாதென்னுஞ் சங்கதி அறியாயோ? சமுத்திரந் தடையாயிருப்பது கரையினாலேயா, சத்தியத்தினாலேயா? ஓ பாஞ்சாலி, நீ யாதொன்றுக்கும் பயப்படவேண்டாம்போ" என்றனுப்பினன்.

அவ்வாறே செலவு பெற்றுக்கொண்ட திரௌபதியானவள் பீமசேனனைப் பார்த்து, "ஓ கெடிவீர சிங்கமே, அங்கம் பங்கப்பட்டழியப் போகின்ற கீசகன், என் சொல்லை நம்பி யெப்படியுந் தப்பாமல் வருவான். நீர் இன்று இரவு அங்குச்சென்று, ஜாலஞ் செய்யாமல் சந்தடி காட்டாமல் வேலையை முடிக்கவேண்டும். வேந்தனே, இப்படியாக இதனை நடத்திவிட்டால், சாந்தமூர்த்தியாகிய தருமராஜனுடைய சித்தங் களிக்கும்; மற்ற தம்பிமார்களுக்குஞ் சந்தோஷமுண்டாகும்; சுதக்ஷணையும் மற்ற ஸ்திரீகளும் ஆதிமுதல் விரதசாரணி சொல்லி வந்த வசனம் நிஜமான தென்பார்கள். உங்கள்மீது சந்தேகமில்லாமற் போய்விடும். இந்தச் சொல் வெளிப்படுமாகில், நமதெண்ணமெல்லாமழிந்து போய்விடும்; அன்றியும் 'பதிவிரதையைக் கருதிய பாவியாகிய கீசகன் பாழாய்ப்போனான் பார்த்தீர்களா?' என்று உலகிலுள்ள பதிவிரதைகள் அப்போது மகத்துவமாய்ச் சொல்லிக்கொள்ளும்வார்த்தைகளுங் கெட்டுப்போம்; 'பாண்டவர் அஞ்ஞாதவாசம் பண்ணும்போது, தவணையொருவருஷங் கடப்பதற்கு முன்னே வெளிப்பட்டு விட்டார்கள். சொற்சோர்வு பட்டார்கள், பஞ்சவர் பேச்சுப் பஞ்சுபோலாயிற்று' என்று யாவரும் நகைப்பதற் கிடமாய்விடும்; நீங்காப்பழிச்சொல் நிலையாய் நிற்கும். ஆகையால், நீர் மனம் பொறுத்து, அவசரப்படாமல் ஆடம்பரங் காட்டாமல், யாருமறியாமல், அடக்கமாய் முடிக்கவேண்டும்" என்று கூறினாள். அந்த மொழியைக்கேட்ட பலாயனன் சிந்தை மகிழ்ந்து, 'நல்லது அப்படியே யாகட்டும். நீ மாத்திரம் பிறரறியாமல்

விரைவாய் அவ்விடம் வந்து சேர்' என்று தலைவாயில் வரையிலும் வந்து விடைதந்து, இந்தச் சூரிய னெப்பொழுது அஸ்தமனமாவா னென்பதாய்ச் சிந்தை வருந்தி தியங்கி யிருந்தான்.

### திரௌபதியும் பீமசேனனும் கீசகனுக்குக் குறித்தவிடஞ்சென்று அவன் வரவுக் கெதிர்பார்த்திருத்தல்

இவ்விடத்தில் திரௌபதியானவள் சுதக்ஷிணைக்கு வேண்டிய சித்திரான்ன விதமும் திவ்வியமணக்குழம்பும் கச்சாயவர்க்கமும் கதம் பப் பொரியலும் ஆகிய அறுசுவையுண்டிகளையும் சுயம்பாக பீம னிடத்தில் வாங்கி வந்து கொடுத்து, வழக்கப்படி வேடிக்கையாக விளை யாடி, சந்தனுதி கந்தந் திமிர்ந்து சிந்தைநோயற்ற செல்வியைப்போற் கபடமில்லாமல், யாருடனும் கலந்துறவாடி, களங்கரகிதமாய்க் காலம் பார்த்திருந்தாள். அப்படி யிருக்கும்போது, எட்டுத்திக்குங் கெட்டழிந் தோடிய இருளெல்லாந் திரளாகச் சேர்ந்து, தங்கள் பகையாகிய சூரி யனை வெல்லவந்தவாறுபோற் சூழ்ந்துகொண்டன. அவ்விருளைக் கண்டு பாபத்திற்குப் பயந்தோடும் பாக்கியவான்களைப்போல் புண்ணி யப் பொருளாகிய வெய்யோன் மேற்றிசை புகுந்து அஸ்தமனகிரியை அணைந்தான்.

அக்காலத்தில் அளவிறந்த ஆசையை அடைத்து வைத்திருந்த கீசகனுனவன் தான் மோசம் போவதறியாமல், வண்ணப்பெண்மேற் கொண்ட மதவிகாரத்தினுல் வாசநீரில் தோய்ந்து, பூஜாவிதி முடித்து, போஜனமுண்டு, இளைப்பாறவுஞ் சமயமில்லாமல், சந்தன-குங்கும-சிந்துர-பாளித-கந்த-கதம்ப மிகுந்த-சுகந்த நிறைந்த, மகரந்த மலர் மாலையும், நவமணி பதித்த அழகிய ஆபரணமும், சித்திரத் தெழுத்தி னிற் பிரித்த இரத்தினக் கொத்து முத்து வைத்திழைத்த சரிகைகள் சுற்றிய வஸ்திரமும், கொத்துச் சரப்பணியும், இரத்தினமுருகும் முத் திரை மோதிரமும், அஸ்தகடகம், விசித்திரமகுடம், சுத்த பவித்திரம் முதலிய ஆபரணங்களுமணிந்து, வாசத்தாம்பூலமுண்டு, திரௌபதா தேவிக்குப் பற்பல பண்டு பலாதிகளும் கொண்டு, கறுத்த இருளிற் காலால் வழிதேடி, அந்தகனிருக்குந் திக்கு நோக்கிச் செல்வதுபோல் அந்த மாலினி சொன்ன வார்த்தையை மெய்யென்று நம்பி, மாஞ் சோலையி லிருக்கிற வசந்தனுக் கிசைந்த மண்டபத்தை நாடி ஓடி வந் தான். இவ்விதமாக வந்த கீசகனுடைய பிராணனென்னும் பனியைக் கெடுக்கப் புகுந்த சூரியன்போன்ற பாஞ்சாலியானவள் இரவு தோன் றியவுடனே விரைவில் ஸ்நானஞ் செய்து, நித்திய ஜபமுடித்து சூரி யன் முதலிய தேவர்களைத் தொழுது, அந்தப்புரம் விட்டுப் புறப்பட்டு, சத்துருக்க ளுயிரையுஞ் சமையல் வேலைகளையும் இம் என்பதற்குமுன் முடிக்கா நின்ற செம்பொன்மலையை நிகர்த்த தோளும் வீரகண்டை தாங்குந் தாளும் உடைவாளு முடைய பீமசேனனிடத்திற்குப் போய், "விரைவிற் புறப்படும்" என்ருள். அவள் சொல்லைக்கேட்ட பீமசேனன் எந்த வேளையில் எந்த வேட மெடுக்க நினைத்தாலும் அவனிஷ்டப்

படிக்கு அமைய வரங் கொடுத்திருக்கும் எமதருமராஜனருளினுற் சகலாபரண அலங்கார சௌந்தரியப் பெண்ணுருவெடுத்து, கையில் அள்ளிக்கொள்ளத் தக்கதாய்க் கலந்த நள்ளிருளில் மெல்லச் சென்று, 'கீசகக்கள்ளன் வருவானோ? வாரானோ?' என்று கவலைகொண்டு, கனகமயவுசித சிகரமாடமுடைய பளிங்கு மண்டபத்தை அடுத்து, தெய்வப் பெண்ணான திரௌபதா தேவியை அவ்விடத்தி லொளித்து, வண்ண மகள் போலாகிய தன்னுருவத்தைத் தூணில் மறைத்து, கண்சிமிட்டாமற் காட்டுவழிமேல் நாட்டம் வைத்திருந்தான்.

### கீசகன் விரதசாரணி வேடம் பூண்டிருந்த பீமனைச் சந்தித்தல்

அந்த வேளையிற் செத்த பிணமானது மெத்தப் பணிபூண்டு வருவதுபோலும், யாக்கியத்திற் கிசைந்த நெய்யை நக்கிப் புசிக்க வரும் நாய்போலும் வருகிற கீசகன், உயர்ந்த மாமரச்சோலையிற் சாந்தினுல் மெருகிட்ட தாவள்யமான வசந்த மண்டபத்தைக் கண்டு, "கெண்டையங் கண்ணு ளிங்கு வந்தாளோ? தனியாக வரப்பயந்து நின்ருளோ? வந்து என்னைக் காணுமையாற் சென்ருளோ? மறைந்திருந்து மனஞ் சோதிக்கின்ருளோ? என்னவோ? அவளெண்ணம் அறியேன். வாசப் பூ மலர் மேனிமானே! ஓ என்னுசைக் கோரணியே! மதுரத்தேனே! ஓ மன்மதன் படையை வாட்டவந்த துணையே! ஓ மாதவத்தை அழிக்கு மலர்விழிக்கணையே!" என்று கூவிக்கொண்டு வந்த கீசகராஜனை ஆஜானுபாகுவினையுடைய தண்டதரனுகிய பீமன் கண்டு, வெட்கங் கொண் டொதுங்கும் பெண்களைப்போல் அந்தத் தூண்மறைவி லொதுங்கித் தலையை நீட்டி, சந்திரபிம்ப முகங்காட்டி, இன்னும் பற்பல அபிநயங்களால் அவனைப் பேய்போ லாட்டினுன். அப்போது அடங்கிக் கிடந்த காமத்தீயைத் தொடங்கச் செய்த சிமாட்டியை அந்தக் கீசகன் கண்ணுருவக் கண்டு பெண்ணுருவெனச் சிந்தையுட் கொண்டு, குனிந்து நேராக அத்தையலின் கால்மேற் பணிந்து, "என் இன்பக்கனியே வாராய் எனக்கு உன் இனியமுத்தந் தாராய். கும் மென்றிருக்கிற இவ்வனத்து, என்னை யொருபொருளாய் மதித்து, என் பேரி லிஷ்டம் வகித்து, இத்தனைதூரந் தனித்து, கால்வருந்தத் தக்கதாக வரும்படி பொருத்திவைத்த தவம் யாருடையதோ? இத் தலம்புரி தவமோ? என் குலம்புரிதவமோ? ஓ வலம்புரிக் கழுத்தினையுடைய மாதே! அறியேன்! அறியேன்! நான் வரக் காலதாமதமாச்சு தென்று கோபங் கொள்ள வேண்டாம். ஓ! ஓ! பருவரதியே, காம வெறி யேறிக் கருத்தழிந்து போன நான் மானுபிமானம் பாராமல் உம்மைத் துரத்திவந்து மனக்குறை விளைத்தேன். அப்பிழை பொறுத்து எளியேனை ஆண்டருள்வீர்" என்று நலம்பொலி மணிமுடி நிலம்பட வீழ்ந்து, மறுபடியு மெழுந்து, "அன்னமே" என்று புகழ்ந்து, செங்கைக ளிரண்டையுஞ் சிரமேற் குவித்து, அவள் முகத்தைப் பார்த்து, "மனோரஞ்சித மயிலே! மாங்குயிலே! ஓ புனல் படிந்து புகைபரந்து புநுகளைந்து பூவணிந்து புள்ளுறைந்து பொங்கு மங்குலைப் பொருந்தி, கங்குலைத் திருத்தி முடித்த குழற் பூங்கோ

தையே! ஓ குழலிசைக்கினிய மொழிபல பயிலும் பேதையே! உமக்குத் தீது நினைத்த மகாபாவி நானாகையால் தேவரீர் தீர்க்க வைரம் வையாமல், அதனால் உமதுளம் நையாமல், என்னை யாட்கொள்ள வேண்டும். இந்தக் கடுமையான காட்டில் கொடிய கயவர் மனம்போற் கறுத்த இருட்டில், அடியேன் நிமித்தம் நாடிவந்து காத்திருக்கின்ற உமக்கு நானென்ன உபசாரஞ் செய்யப் போகிறேன்? நீர் கிருபை வைத்து நடத்த நினைத்த உதவிக்குப் பிரதியுதவி புரிய வகையறியேன். ஓ என்னிசைக் கண்ணே! இனிமேல் நானென்ன செய்வேன்? ஆகிலும் பதிலுதவி செய்வதற்கு ஒருவகை யிருக்கின்றது. அஃதென்னவெனில், என்னுயிரை உமக்கு ஒப்புவிப்பதுதான் உயர்ந்த கைம்மாறு. இதைவிட வேறு விதியில்லை. இப்போதுந் தமக்கு வேண்டிய வஸ்துக்களெல்லாம் இதோ கொண்டு வந்திருக்கின்றேன். தயையுடன் அங்கீகரித்துக்கொள்ளும். ஓ தருணி! தவனை தப்பிய என்னைத் தாங்கிக்கொள்ளும் ஏன் சும்மாவிருக்கிறீர்? ஐயோ! பொழுது அநியாயமாய்ப் போகின்றதே! அநேக போஜன வஸ்துக்கள் ஆறி அலண்டு போகின்றனவே! வாய்திறந்து கொஞ்சம் பேசப் போகாதா? ஓ பஞ்சவர்ணக் கிளியே, அஞ்சிய என்னை ஆதரிக்கப்படாதா? எஞ்சிய வென்னை ஈடேற்றப்படாதா? தித்திப்பான உமது பேச்சு என் செவிக்கேறுங்காலமாச்சு. ஓ தெய்வப் பெண்ணே! நீர் இப்படி மர்மமா யிருந்தீரானால் மன்மதனால் நொந்து வெந்துபோன நான் கடைத்தேறுங்காலமெதுவோ? நீர் எனக்கிசைந்து இவ்வளவுதூரங் கிட்ட வந்திருந்து ஒட்டாமலெட்டியிருப்பது என்ன பாவமோ? உத்தம ஸ்திரீகட்குள்ள சுபாவமோ? எதுவும் உமது கருணைக் கெதிர்நிற்க மாட்டாதே. தழைத்திருக்குந் தோப்பில் தனித்திருக்கும் நாமிருவருங் கொஞ்சி விளையாட வேண்டாமோ? என்னிஷ்ட தெய்வமும் அஷ்டைஸ்வரியமும் உம்மையன்றி வேறொன்றுமில்லை. உமது காலடியழகுக் கீடுபடாத என் பெண்சாதிமார்களின் தேகத்தையும், அவர்கள்மேல் உண்டான மோகத்தையும் இன்று துறந்தேன்! இதுவே சத்தியம். என் சொல்லே நித்தியம் ஆ! பத்தினி'' என்று அழைத்து அவளுக்கு நேர்சென்று நின்று, ''ஆ! ஆ! நீர் முந்திப் பேசலாகாதோ? பேசினால் கோபமோ? அல்லது மனஸ்தாபமோ? ஓ பெண்ணரசே'' என்று பலவாறாகிய பஞ்சைப் பாட்டுகளைப் பாடினான்.

### பீமசேனனுக்கும் கீசகனுக்கும் யுத்தம்

அவன் பிதற்றிய மொழிகளைக் கொஞ்சநேரம் வரையிலும் கேட்டிருந்த பீமசேனன் தன் முகத்தைக் கீசகனுக்குக் காட்டாமல் தூணில் மறைந்து, ஒரு பக்கத்திற் கொருபக்கந் திரும்பி, அவனைப் பார்க்கப் பார்க்க மனமுறிந்து, ஆணவமல முதலான அஞ்ஞான விருள்மூடிய ஆசாரவீனர் வாசாகைங்கரியஞ்சொல்லி ஊர்மெச்சப் பால்வார்த்துண்பதுபோல் உலகமெச்சச் செய்கின்ற படாடம்ப பூஜா விதியின் புன்பயனால் அப்பூஜை செய்பவரையும் அவர் கால்வழியையும் நாசமாக்க நகைக்குங் கடவுள்போல் நகைத்து, கோபாக்கினியாற் கீசகனைக்

குறித்து வெறித்துப் பார்த்தான். அக்காலையிற் கீசகன் கௌரவமாய்ச் சிரித்து, "ஓ வண்டுலாவு மலர்க்குழல் மாதே! என்மேலன்புவர இத்தனை நாழிகை சென்றதோ? இப்போதுதான் மனதிரங்கியதோ? இவ்வளவு தயவு போதும்" என்று தன்னிரு கரங்களாலுந் தாவி, "ஓ என் பிராண மோக்ஷகாரணி!" என்று தழுவினன்.

தூணில் மறைந்திருந்த பீமன் கீசகன் கைக்குச் சிக்காமல் யானைத் துதிக்கைபோன்ற தன்னிரு கைகளையும் அத்தூணுக் கிருபாலு நீட்டி, முறைவழுவித் துறைதப்பித் தழுவ நீட்டிய கீசகன் கைகளிரண்டையும் பற்றிக்கொண்டு நெருக்கினன். நெருக்கவே கீசகன் செந்தேள் கொட்டித் திகைப்பதுபோல துடித்து, உதட்டை மடித்து, "ஈதென்ன ஆச்சரியம்? விபரீதமாய்த் தோன்றுதே! பெருமோசம்போற் காணுதே! நாமெண்ணிய வண்ணமகளானல் அவளுடைய உள்ளங்கை தாமரைப் புட்பம்போல் மிருதுவாயிருக்குமே! இந்தக் கை கல்லினுங் கடிதாகக் காணுதே! இந்தப் பிடி எமலோகத்திற் கிழுத்துக்கொண்டு போக வந்த காலதூதரால் கழுத்திற்கிடுங் கத்திரிக்கோல்போலு மிருக்கிறதே! இது யார்செய்த மாயமோ! அவள் தேடிய உபாயமோ! என் ஆத்மாவுக் கபாயமோ! ஒருவேளை நம்மை நம்பவைத்து மோசம்பண்ணியிருப்பாளோ! ஏறவிட் டேணியை வாங்கும் புன்னெறியரைப்போல் செய்ய நினைத்தாளோ! நமது தமக்கையினிடம் அண்டிப் பிழைக்கவந்த அநாதையானவள் வஞ்சனை விரோதம் மனதில் வைப்பாளா! கொஞ்சமேனும் நன்றி நினையாளா! எனைச்செயும் வினைச்செய லெப்படியோ வறியேன்! ஆகிலும் ஸ்திரீகளை நம்பலாகா தென்பது பெரிய பேச்சு! அந்தச் சொல்லை யோசிக்குமிடத்தில் எல்லாப் பெண்களும் மோசமுள்ளவர்களா யிருப்பார்களோ? சிலவேளை நாம் கொண்ட மோகசோகத்தினுற் புத்தி மருண்டு சக்தி மாறியதோ! நம்மை இவ்விடம் வரச்சொன்ன காதலி இவளோ, அல்லது இன்னுமெவளோ? இதை நன்குய்ச் சோதித்தறிவோம்" என்று தனக்குள்ளே கலவரங் கொண்டு, "அடி என் கையைப் பிடித்த தையலே, நீ சரசமாய்ப் பிடித்த என் கையைச் சற்றே விட்டுவிடடி, நீ பிடித்த பிடிப்புக்கு இளையாதிருக்கிற என் பிராணவலுவைப் பாரடி, உன் பலத்திற் கென்பலம் ஒன்பதுமடங்கு உயர்ந்ததடி, உன்னை நான் அடிபிடியென்பதாய்ப் பேசுகிறேனென்று நீ ஆயாசப்படாதே, அடி என்னிரு கண்ணே! அடி என் காதலிப் பெண்ணே!" என்று தன் கையைப் பிடுங்கினன்.

இவன் எத்தனையோ பாராக்குக்காட்டி அசப்பில் தன் கையை யிழுத்தபோது ஜாக்கிரதையி லிருந்த பீமன் தான் பிடித்த பிடியை விடாமல், வலக்கையை நீட்டி இடக்கையை யிழுத்து, இடக் கையை நீட்டி வலக் கையை யிழுத்து வலித்து தூணுடன் தேய்த்து, பின்பு சரேலென்று ஒருபக்கமா யிழுத்து, அவன் இரு கரங்களையுஞ் சேர்த்துத் தன் ஒருகரத்தாற் பற்றிக்கொண்டு, மற்றொரு கரத்தினுல் மொத்தியும், குத்தியும், கிள்ளியும், நிமிண்டியும், பிசைந்தும், பிரமிக்கச்

செய்து, "இது சரசக் குத்து. இது கலவிக் கிள்ளு" என்று சொல்லி ஒவ்வொரு கிள்ளுக்கு அள்ளுச்சதை துள்ளும்படியாகவும், ஒவ்வொரு குத்துக்கு உழக்குரத்தம் பீறிடும்படியாகவுஞ் செய்து, அவன் தேகத்தை வருத்தி அளவற்ற தீமைகளைப் புரிவதானான். அப்போது கீசகன் சகிக்கமாட்டாமல் வாய்விட் டிரைந்து, நாடாத்திசையு நாடி, வாடாத முகமும் வாடி, எண்ணாத எண்ணமு மெண்ணி, தேகமெல் லாம் வியர்த்து, "சூரசம்மாரச் சுப்பிரமணியக் கடவுளோ? இராக்ஷச வைரியாகிய மகா விஷ்ணுவோ? என்று நிலவரம் விண்டு, கலவரங் கொண்டு, வகைதப்பி மாட்டிக்கொண்ட தன் கைகளைத் தன்னாற் கூடியமட்டுஞ் சாகசஞ்செய்து வாங்குவதானான். அப்போது அந்த பீமசேனன் மின்னொளிபோல் விளங்கி, கீசகனுடைய இரண்டு கை களில் ஒன்றை விட்டுவிட்டு, மற்றொரு கையைப் பிடித்த பிடி தளராம லிறுக்கி, விறுவிறென்று சுழற்றி, விசைக்கயிற்றை இழுப்பதுபோல் அவனுடைய தலைமயிரைப்பற்றி யிழுத்து, நான்கு திசையிலுங் கரகர வென்று சுழற்றி மேலே தூக்கிக் கீழே தாக்கி வீசினான். அப்போது கீசகன் பெருமூச்சு விட்டெறிந்து, "ஐயோ! ஆண்டவனே! பெண்ணென் றெண்ணிய எண்ணம் போச்சுதே! இப்போது இது பேயுருவாய் வந்து வாய்ச்சுதே! இனிப் பிழைக்கும்வழி யெப் படி? இந்த வேளையில் அஞ்சி இளைப்போமானால் நாம் தப்பமுடியாது. நாம் இவனை முந்தி முடித்துவிட்டாற் பிந்தி அந்தப் பெண்ணுடன் கூடிப் பேசிக்கொள்ளலாம். இவனைப் பிராணனுடன் விடப்போகாது" என்று விரைந்தோடி வந்தான்.

ஓ மகாராஜனே! இந்த மட்டுங் கிரகசாரம் விட்டதென்று போகா மல் விரைந்து ஓடிவரவே, வந்த கீசகனை பீமன் மடக்கிப் பிடித்தான். அப்பிடிப்பைக் கீசகன் சடுக்கென்று தட்டினான். தட்டிய கீசகன் தலையிற் குட்டினான். குட்டிய பீமன் முகத்தில் கீசகன் குத்தினான். குத்திய கீசகன்மேற் கொதித்தெழுந்துகுதித்து அவன் முகத்தில் தாக்கி னான் பீமன். தாக்கிய பீமனைக் கீசகன் தடுத்துப் பிடித்தான். பிடித்த கீசகனைப் பீமன் புரட்டிப் பூமியிற் சாய்த்தான். சாய்த்த பீமனைக் கீசகன் காலால் தளைந்தான். தளைந்த கீசகனைப் பீமன் புரட்டி யுதைத்துத் தள்ளினான். தள்ளிய பீமனுக் கிளையாமல் பின் னுங் கீசக னெழுந்து, முன்னம் பேசிய ஆணவமும் நாணமும் மான மும் விடாமற் மற்போர் கொடுக்க வந்தான். அவ்வேளையில் பீமன் ஆக்கிரமித்தெழுந்து, எதிரியின் தோள் மேற் கோடையிடிபோல் இடித்தான். அவ்விடியைப் படியத் தாங்கிய கீசகன் "இவனை முடி யப்பார்ப்பேன்" என்று விடியற்காலத்துக் காக்கைபோற் கதறி, அக் குத்துக்குப் பதிற்குத்து குத்தினான். அவன் குத்திய குத்தை மக மேருவையொத்த தோளில் தாங்கிய பீமசேனன் தத்தளிக்காமல், முகஞ்சுளித்துத் தன் கைவிரல்களை மடக்கி, அக் கீசகன் மார்பு கிழிய வும், அவன் தலையெழுத்து அழியவும், முதுகெலும்பு நொறுங்கவும், பழுவெலும்பு முறியவும், தலைஓடுஉடைந்து இரத்தந் ததும்பி வழியவுந்

தாக்கினான். அந்தத் தாக்குதலை மேற்கொண்ட கீசகன் ஆர்ப்பரித்துக் கனைத்து, வீரங்கொண்டு சுழன்று, இரு கைகளையு முடக்கி இலகுவு கொண்டெழுந்தான். எழுந்தவன் கண்களிரண்டுங் கொழுந்தென வதங்கி வாடும்படி பீமன் தட்டிவிட்டு, குலத்திற்குப் பழுது தேடிக் கொண்ட கீசகனைத் துன்னி, தன் காலால் அவன் காலைப் பின்னி அப்பின்னலோடு சேர்த்து தூக்கியெடுத்துத் திரௌபதியை யழைத்து "தீரா மோகங்கொண்ட விகாரசொருபனைப் பார்" என்றுகாட்டி, சுழற் காற்றி லகப்பட்ட துரும்புபோலுங் காற்றுடிபோலுங் கறகற வெனச் சுழற்றிக் கொக்கரித்து போர்ச்சிங்கம்போற் பூரித்துபூமியிலெறிந்தான். பீமசேனனால் எறியப்பட்டு வீழ்ந்த கீசகன் காமவின்பத்தைக் கட்டுடன் மறந்து, சோமகுலந் துலங்கப்பிறந்த பாண்டவர்களில், இவன் பீமசேனனென்று அறிந்து, துன்பநிறைந்து, "ஐயையோ! இவனை இந்தமட்டும் விட்டுவிட்டு 'என் ஓட்டத்தை நீ பிடிக்கமாட்டாய் போடாபோ' என்று ஓடலாமென்றால், இவன் நம்மை என்றும் பிராண னுடன் விடப்போவதில்லை. நாம் இதுவரையில் பிழைத்த பிழைப் புக்கு பழுதுவந்ததுபோம். நம்மை யாருஞ் சட்டைபண்ணார்கள். குட்டுக் கெட்டுப்போய் விடும். ஆகையால் இவனை ஒருகை பார்ப்போம். நமக்கு நல்வினைப்பயன் கைகூடுமானால் இவனை நமனுலகஞ் சேர்ப் போம். ஆகாமற்போனால் இவனிடத்தில் நமது உயிரைத் தாரை வார்ப் போம்" என்று எழுந்து விரைந்து, கந்துயாய்ந்து, பீமன் தலைமயிரைப் பிடித்துக் கைவிரலாற் சுற்றி, கரகரவெனச்சுழற்றி, நிலைக்கிடையாகத் தள்ளி, தன்னிருகாலாற் புரட்டிப்புரட்டி உதைத்து, அவனுடலைத் தேய்த்து, மழுங்கிய திரண்ட கற்றூண்போலாக்கி, உள்ளங்காலிரண் டும் இரத்தவெள்ளம் காண மிதித்து, அவன் தேகம் சிவக்கச் சீறி அறைந்தான். இவ்விதமாகக் கீழே வீழ்த்தி மோதிப் பிடித்து மாறி யடித்து மொத்துகின்ற கீசகன் வசத்தில் வகைமோசமாய் மாட்டிக் கொண்ட வாயுகுமாரனைப் பாஞ்சாலி கண்டு பரதவித்து, "ஐயையோ! பாவம் பெரிதோ? புண்ணியஞ் சிறிதோ? சத்தியங்குறைவோ? அசத்தி யம் நிறைவோ? ஓ தேவர்காள்! ஓ வனதேவதைகாள்! பீமராசனுக்குப் பொல்லாங்கு நேரிட்டபிற்பாடு இம்மேதினியில் நானும் பிராணனுட னிருக்கவேண்டுமா? அவருக்கு முன்னே என் உயிரை மாய்த்து விடுகிறேன். ஐயா முதலையைக்கொன்று மூரியானையைக் காத்த முதல்வனே!" என்றழுது பரிதவித்தாள்.

அப்போது இந்தத் திரௌபதாதேவியின் விசனவசனமானது பீமன் காதில் நுழைந்தது. அதனால் அவனுக்கு வீரசன்னத மேறி, மேலாள் கீழாளாகப் புரட்டிக் கீழாள் மேலாளாகக் கண்ணுருட்டி, "ஓ பாஞ்சாலி, அஞ்சாதே. உயிர்விட மிஞ்சாதே, பதறாதே, இதோ நான் பிழைத்தேன்" என்று தேக ஆயாசந் தீர்ந்து, பிராணனைத் திரணமாக மதித்து, நீருண்டு வேகங்கொண்டெழுந்த மேகம்போலிரைந்து பூமியில் தோய்ந்து, குபீரெனப் பாய்ந்து, கீசகனைப்பற்றிக் கிறுகிறெனச் சுற்றி வானத்தி லெறிந்தான். ஆகாயத்திற்போன கீசகனையவன் வாயுவை

ஸ்தம்பித்துக் கேசரிமார்க்கத்திற்கிளம்பி,விறுவிறெனச்சுழன்று, பீமன் தலைமேற் குதித்து, அவன் கழுத்தைக் கெட்டியாகக் கட்டிக்கொண்டு தொங்கினன். அப்படித் தொங்கிய கீசகனை பீமசேன னெடுத்துக் கொண்டு, அவன் இருகரங்களையுந் தன்னொரு கரத்திலடக்கி, ஆளை இழுத்துக் கீழே போட்டு மடக்கி வயிற்றைமிதித்து, வாயிலுமுதைத்து பக்கப்பற்கள் பதினைறையும் உதிர்த்தான். பீமனடித்த இடியினுற் கீச கன் வாய்கிழிந்து,கெடுநிணைப்பழிந்து, பல்லெல்லாம் பதர்போற்பறந்து போயின. அப்படிப் போயும் பொக்கைவாய்க் கீசகன் புறங்கொடுக்கா மல் உரங்கொண் டோங்கி, மரங்களைப் பிடுங்கி வரிசைகள் தொடங்கி ஞன். பீமனும் அவனை விடாமல் தொடர்ந்து, வேண்டிய மரங்களை வேருடன் களைந்து, விதம் விதமான போர்புரிந்து வீரவெறி கொண் டாடினன். இப்படி ஒருவரையொருவர் விடாமல், இடம்வலம் வருதல் கெடாமல், இருவரும் அடிகள் படாமல், ஆயுதமென்பது எடாமல், அடிக்கடி முதுகு கொடாமல், சோகதாபந்தொடாமல், சூக்ஷாதிசூக்ஷமமா யொட்டி நடத்திய யுத்தத்தையும், அவர்கள் மனேதிடத்தையும், தேகாபிமானம்விட்டு அமர்புரிகின்ற திறத்தையும் சொல்வதற்கு ஆதி சேஷனுலு மாகாது. ஜனமேஜயராஜனே, இவ்விதமாக இருவருந் தங் கள் தங்களுடைய முழுப்பலங்களைக் காட்டி மாருமற் போராடிவரும் போது, பொழுது விடியப்போகிறதே; நமது பூர்வோத்திரம் வெளிப் படுமே என்று பீமன் துடித்து, "இவனை விரைவில் முடித்து விட வேண்டும்" என்று நினைத்து, பங்கப்படா சிங்கமானது அற்ப மிருகத்தை அமுக்குவதுபோல் அந்தக் கீசகனை அமுக்கி, காலிரண்டையும் மேலாகத் தூக்கி, பூமியில் தாக்கி அவன்மீ தேறி, அமுக்கி உட்கார்ந்து, மார்புந் தோளும் வயிறும் பிடறி யும் வலியெடுக்கக் குத்தினன். அவன் குத்திய குத்தைச் சிங்க பலம் பெற்ற கீசகனுனவன் திரஸ்கரித்து, அதையொரு வரவு செல விற் வைக்காமற் காலால் அவன் கழுத்தை மடக்கி, இரு கைகளையுந் தரையில் தேய்த்து, வாயுகுமாரன் தலையோடு நெரியத் தாக்கினன். அந்தக் கீசகன் அறைந்த அறையானது பீமன் தலைமேல் வீழ்ந்த காலையில் அரை நாழிகை வரையிலும் அறிவு மயங்கி, நெருப்பில் நெய் விட்டதுபோல கோபங்கொண் டோங்கி கருப்பைக்குட் கட்டுப்பட்ட சிசுவைப்போற் கீசகனை அசையவொட்டாம லடக்கி, ஒரே அழுத்தாக அழுத்தி அவன் தலைமயிரைக் கெட்டியாய்ப்பிடித்து,வச்சிராயுதத்தால் மாட்டுவதுபோல் கையை முடக்கி நகங்களை நீட்டிமுட்டி அடிக்கொப் பாய் அவன் உச்சியிற் குட்டினன் பீமன். அதனுல் கீசகன் தலை கிழிந் தது; மலசலாதிகள் வழிந்தது; காதில் உதிரம் பொழிந்தது; அந்தக் கரண வாதனையால் அவன் பதறி, மரண வேதனையினுற் கதறி, ஆவி யழிந்து புவிமேற் சாய்ந்தான்.

### பீமன் கீசகனுடலைப் பேய்ப்பதிபோற் சிங்காரித்து திரௌபதிக்குக் காட்டல்

இப்படி அழிந்து சாய்ந்து மண்மேற்கிடந்த விராடன் மைத்துன னைப் பீமசேனன் அந்தமட்டில் விட்டுவிடாமல் வாரிப்பிடித்து, மார்



பீமன் கீச னைக் கொன்று அவனுடலைப் பேய்ப்பதுமை டாற் சிங்கார்த்துத்
திரௌபதிக்குக் காட்டல்

பொடிய இடித்து, கையை முறித்து, காலைக் குறைத்து, மெய்யைச் சுருக்கிக் கையாற் பிசைந்து, மாவிளக்குப் போடுவதுபோல் மாமிசத்தைத் திரட்டி உருண்டையாக வைத்து, அந்த உண்டையின் பேரில் மீசையுங் கண்களும் விரிந்த வாயும் பரந்த முகமுமுடைய தலையை நாட்டி, தன் தலையை யாட்டி, பணிப் பெண்ணுக்காகக் கொண்டுவந்த வஸ்திராபரண வலங்கார புட்பங்களை யெல்லாஞ் சூட்டி, பண்டுபலாதிகளை அதோடு வந்த தலைவாழை யிலையிற் படையற் போட்டு, கந்த கதம்ப கஸ்தூரிகளை வாரி இறைத்து, இவ் வுலகத்திலுள்ள பூசாரிகள் பேயோட்டிப் பதிபோடச் சிங்காரிக்கும் பொம்மை முகம்போலமைத்து, இந்த வேடிக்கையைத் திரௌபதிக்குக் காட்டி, "காமப் பேயோட்டிக் காட்டுப் பூசை போட்டுப் பேய்ப்பதி சிங்காரித்திருக்கின்றேன் பார்" என்று சொல்லுவோ மென்பதாக நினைத்து, காயும் கனியும் பூவுமா யிருந்த ஒரு பெரிய மரத்தைப் பிடுங்கிக் கசக்கி, தீயெழத் தேய்த்து, பூபூவென்று நெருப்பெழ வாயினாலூதி, பக்கத்திலிருந்த காட்டைக் கொளுத்திவிட்டு எங்கும் ஜோதியா யெரியச் செய்து, திரௌபதியை யழைத்து "கற்பினிலுயர்ந்த பத்மினிப் பெண்ணே! உன் கால்மேல் வீழ்ந்த கடையனைப் பார், கயவனைப் பார்; காமக் களிப்போடாடிய பேயனைப் பார்" என்று காட்டினான். அதை வேலுஞ் சேலும் விழியா யமைந்து பாலுந் தேனும் மொழியாய்ச் சமைந்த அப்பங்கயப் பெண்ணணங்கு பார்த்து, தனது வயிறும் வாயும் மனமும் பதறிக் கதறிய வாட்டமொழிந்து பீமசேனன்பேரில் நாட்டமா யிருந்தாள்.

---

கேட்டீரோ ஜனமேஜய மகாராஜனே! அவரவர் தேடிய வினைப் பயன்களை அவரவரநுபவித்தே தீரவேண்டும், ஒரு காரியத்தைப்பெற எண்ணினால் நினைத்தபடி அடைவது அரிது. எண்ணிய வண்ணம் எவர்களும் பெறவில்லை. எண்ணம் முன்னுக்கு வராது. தெய்வ பல மிருந்தொருவேளை முடிந்தால் முடியும். சிங்கபலம் பெற்ற கீசகன் பாஞ்சாலியினளவில் நினைத்த பொல்லாங்கானது, நாமெல்லோரும் நாவாற் பேசப்படாத பாபகாரியமாதலால், அதனால் வந்த மிதமற்ற பலனை உடனே அவன் அனுபவித்தான், அதைப்பற்றி நாம் பேச வேண்டிய அவசரமில்லை. இப்பால் வாயு சுதனாகிய பீமசேனன் அக்கினியிற் பிறந்த அணங்கை நோக்கி, "உனக்குப் பகையான கீசகன் ஒருவகையாய் அழிந்து போனான். உன் விஷயத்தில் யாராவது மன்மத கோலாகல மயக்கத்தைக் கொண்டார்களானால், அவர்களு மிப்படியே அநுபவிப்பார்கள். நீ ஒன்றுக்கும் அஞ்சாதே, இனி நாம் இவ் விடத்திலிருக்கத் தகாது. பொழுது விடியுமுன் போய்விட வேண்டும்" எனப் பின் இருவருங் காட்டை விட்டுப் புறப்பட்டு மச்சநாட்டை நோக்கி வருகையில், வழியில் ஒரு தாமரைக் குளத்திலிறங்கித் தேக பரிசுத்தஞ் செய்துகொண்டு, தீர்த்தமருந்த, தெய்வபிரார்த்தனை செய்தார்கள். அப்பால் பீமன் சுதக்ஷணை அரண்மனைக்குப் போகும்படியாகத் திரௌபதியை அனுப்பிவிட்டுத் தான் மடைப்பள்ளிக்குப் போய்

மலரணைமேற் படுத்து, நித்திரை வாராமற் குத்துக்கா லிட்டுக்கொண் டிருந்தான்.

### உபகீசகர்கள் இரவிலடவிச்சந்தடிகேட்டு ஐயுற்று வந்து தமையனுக்கு நேர்ந்த சம்பவங் கண்டு அழுதல்

இப்படியிருக்க மடலவிழ்ந்து, இதழ் பரந்து, மலர் விரிந்து, மதுநிறைந்து, மணமுறைந்து, தளிர்தழைந்து, தலைசெறிந்து, கிளைமிகுந்து, மிகவுயர்ந்து, இருளடர்ந்து, கொடிபடர்ந்து, காய் சொரிந்து, கனியுதிர்ந்து, கதிர்மதி நுழையாக் களிப்போடிருந்த அம் மாந்தோப்பில் பீமராஜனுங் கீசகராஜனும் பேசிய வோசையும் கைக்குத்தின் முழக்கமும், மண்டபத்திலுண்டான எதிரொலியும், மரங்களைப் பிடுங்கி மாட்டிய ஆர்ப்பும், சத்தமடங்கிய இருபது நாழி கைச் சமயமாதலால் விராடபுர முதலிய சுற்றுக் கிராமங்களிலும் கேட் டன. கேட்டும் ஜனங்கள் அப்போது இராக்கால மானதினாலும் நித் திரை மயக்கத்தாலும் எப்பொழுதும் யுத்தம் இல்லையென்றிருந்த மந்த புத்தியினாலும், காட்டின்கண்ணெழும் ஓசையாயிருப்பதினால்விசாரிக்க வேண்டிய அவசிய மில்லாமையினாலும், தாங்கள் வாழுநாட்டில் யாதொரு கலவரமு மெண்ணாதவர்களாய் யயர்ந்து நித்திரை செய்தார் கள். ஆனால் முன்னமே கலவரங் கொண்டிருந்த கீசகன் தம்பிமார் கள் இந்தப் பேரோசையைக் கேட்டு, படுக்கைவிட் டெழுந்து, உப் பரிகை மேலேறிப் பார்த்து, அந்தச் சத்தம் வருகிற வழியை யுற்றுக் கேட்டு, தங்கள் அண்ணன் நினைத்த எண்ணமும், வண்ணப் பெண் வகித்த வயிற்றெரிச்சலும், ஊரார் பேசிக்கொண்ட பேச்சும், தங்களைச் சந்தேகத்திற் கொண்டு வந்துவிட, அதனாற் சிறிது அச்சப்பட்டு, கீசகன் படுக்கை விட்டைப் பார்த்து, அவன் அவ்விடத்தி லில்லாமை யாற் பாங்கியர் முதலாகிய பணிப்பெண்களைக் கேட்டனர். அவர்கள் இன்றிரவில் பத்து நாழிகைக்கு ஸ்நானம் பண்ணிச் சர்வாலங்கார சம் பிரமராய் மேனிமினுக்கி வெளியே போனாரென் றுரைக்க, அம்மொழி கேட்ட உபகீசகர்கள் பரதவித்து, "சரிதான், சரிதான், நமது சுதக்ஷ ணைக்குச் சாந்து சந்தனாதி மலர் முதலியனவும் புனைந்துவந்த தெய்வப் பெண்ணின்மேல் இச்சை வைத்தமையால், அதுமுதல் அன்னத் துவேஷங் கொண்டு, தனக்குரிய போகமாதரையும் விண்டு, மன்மதன் கணையா லுடைந்து, பாகொத்த மொழியாளாகிய அப் பணிப் பெண்ணைத் தொடர்ந்தும், தன்னெண்ணம் பயன்படா மையாற் சோகமேலிட்டுத் தூக்கமுங் கெட்டுத் துயரமா யிருந்தவன், தான் கொண்ட விரகவெப்பந் தணிவதற்காக மாமரச்சோலை வசந்த மண்டபத்திற்குப் போனவனாக வேண்டும். அந்த வேளையிற் வண் டருமலர்க் கொண்டையை யுடைய சைரந்திரியானவள் ஏதோ ஒரு காரியார்த்தமாய் அவ்விடத்திற்கு போயிருக்க வேண்டும். பிரசண்ட வேக மதயானை போன்ற கீசகன் அவளைக் கண்டு ஏதடா நமக் குடன்படாதவள் இவ்வளவு தூரம் வந்திருக்கிறாள்? இந்த இருட்டில் தனித்து வருவதற்குக் காரணமென்ன? என்று சற்றேனும் யோசனை

பண்ணுமல், ஆசையை நிறைவேற்றக் கருதினவனுக வேண்டும். இதற்கு முன்னுல் அவளைத் துரத்திச் சின்ன பின்னப் படுத்திய செய்தியை அவளுக்குரிய கந்தர்வ ரைவர்கட்கு அவள் தெரிவித் திருந்தவளாக வேண்டும். அவர்கள் அவ்வாறே வசந்த மண்டபச் சோலையில் வந்திருந்தவராக வேண்டும். இவனுடைய பொல்லாத வினைவசத்தாற் போர்மூண் டிருக்கவேண்டும்''—என்று தங்களுக் குள்ளே நிச்சயித்து இதனைப் பேசுவதானுர்கள் :—

ஓ சகோதரர்களே! இனி நாம் சும்மா இருக்கலாகாது. சிக்கிரம் போய்ப் பார்ப்போம். அப்படி பார்க்குமிடத்தில் நிந்தைக் குடன்பட்ட நிஷ்டூரன் உயிரோடிருப்பானுகில், வந்திருக்குங்கந்தர்வருடன் முந்திப் போர் விளைத்து அவர்களைக் கைப்பிடியாய்ப் பிடித்துக் கண்கலங்கப் படுத்துவோம். ஒருவேளை கீசகன் நாசமடைந் திருப்பானுகில், அவனைப் பறிகொடுத்து நாம் உயிருட னிருந்து மானமில்லாமல் வாழ்வது மரியாதையல்ல, கூடப்பிறந்த தோஷத்திற்காக அந்தக் கந்தர்வருடன் போராடி, அவன் மடிந்த விடத்திலேயே நாமு மடிந்து போவோம். இதைவிட உறுதி வேறில்லை—என்று தம்பியர் யாவரு மொன்ருய்க் கூடி, கண்ணிற் கனற்பொறி யெழ விழித்து கடகடவென்று பல்லைக் கடித்து, விடவிடவென்று வில்லைப்பிடித்து, மடமடவென்று பல ஆயு தங்களுங் கொண்டு, தடதடவென்று விரைந்து வந்து கசந்த மனம் போற் கருகிய இருட்டில் வசந்தமண்டபத்தைச் சேர்ந்து, சங்குச் சுண் ணந் தடவித் திங்களொளிபோற் பிரகாசிக்கும் அம் மண்டபத்திற் கொழுந்துவிட் டெரியுங் கோடமூல் வெளிச்சத்தினுல், அழிந்து, சிதைந்து-அரைந்து-திரைந்து - திரண்டு - உருண்டு மொத்தாகாரமா யிருந்த மாமிசத் திப்பையின்பேரில் தமையனுடைய தலைமாத்திரம் அழியாமலிருக்கக் கண்டு, திக்கென்று வயிறெரிந்து, திடீரென்று கீழே வீழ்ந்து வாடி வதங்கி, வயிற்றைப்பிசைந்து, கைகளை நெரித்து, செய்வ தென்னென்று வெம்பித் தேம்பி, விம்மி விழித்து மண்டபத்தைச் சுற் றிப்பார்த்து, ஒருவரையுங் காணுமல் வாய்விட்டமுது, முகத்திலுந் தலை யிலும் மோதிக்கொண்டு புலம்பினுர்கள். பின் அண்ணனுடைய கால் கை முதலான அவயவங்களொன்றுங் காணுதவர்களாய்ப் பிண்டா காரமா யிருக்கும் பேருடலைக் கண்டு, ''ஓ! ஓ! ஈதென்ன விந்தை? இது வரைக்கும் இகலற்று வாழ்ந்த எங்களுக்கு நேரிட்டதே நிந்தை! அள விறந்த பல பராக்கிரமங்க ளமைந்த நமது ஜேஷ்டனை இப்படிக் கொன்ற பேரெவர்களோ? இவனைக் கொல்ல வல்லவருந் தொல்லுலகி லுளரோ? இவனைக் கொன்றவன் மானிடனல்லன். தேவப் பிறப்பா யிருக்கவேண்டும். வேருெரு பிறப்பில் விளைந்தவனுனல், கழுத்தை முறித்து வயிற்றைக் கிழித்து கைகால்களை யொடித்துக் கசக்கி நையக் குத்தி மொத்தையாகச் செய்வானு! ஐயோ! தன்னிஷ்டப்படிக் கெல் லாம் இன்பமநுபவிக்க வசதியிருக்கப் பிச்சைக்குப்போவானேன்! வசந் தப்பித் துர்மரண மடைவானேன். இருக்கட்டும். ஆனுல்தானென்ன? அவனெப்படிப்பட்ட தேவனு யிருந்தபோதிலும் இவன் அவன் கையா

லிறக்கமாட்டான். ஏதோ சூதுவிளைத்துத் தீது செய்து விட்டார்கள். ஆ! ஆ! என்ன ஆச்சரியம்? ஐயோ! அந்தப் பெண் மோகத்தாலும் இவனது தீவினை வசத்தாலும் வீணுய் மாண்டானே'' என்று மார்பிலடித்துக்கொண்டு, மண்மேல் விழ்ந்து புரண்டு ''மானம் போச்சுது. வையகத்தார் பழிக்கும்படி ஈனமாச்சுது. ஆஹா! தெய்வமே!'' என்று கலங்கிக் கதறி இதனை யோசிப்பதானுர்கள்—

உபகீசகர் சுதக்ஷிணையிடஞ் சென்று தமையன் செயல்கூற,
அவளதுகேட்டு நடத்த வேண்டுவதுணர்த்தி யனுப்புதல்

ஓ சகோதரர்களே! இவனிப்படி அழிந்ததைப் பிறரறியாம லடக்கம் பண்ணிவிடவேண்டும். பிறரறிந்தாற் பெருமோசம் வந்து விடும். ஆனதால் நமது சுதக்ஷிணைக்குமாத்திரந் தெரிவித்து அவள் கருத்தின் வண்ணம் நடந்து கொள்வோம் என்று நினைத்து, அவளிடத்திற்குச் சென்று தங்கள் தலையில் அடித்து மோதி வீழ்ந்து அவள் பாதத்தில் தாழ்ந்து, ''ஓ மாதரசி நாம் வாழ்ந்தவாழ்வு இன்றோடொழிந்தது! நமது வண்ணப்பெண் மோகங்கொண்ட அண்ணன் விண்ணுலகேறினுன். இனிமேல் நடத்துங் காரியங்களுக்கு நாங்கள் ஆலோசனை செய்யவந்தோம்'' என்றுசொன்னுர்கள். அச்சொல்லை அந்தச் சுதக்ஷிணைகேட்டு, ''ஐயையோ! தெய்வமே!'' என்று அலறி, தம்பிமாரைத் தழுவி நின்று, கொம்பிலாக் கொடிபோலத் துவண்டு, தரைமேலுருண்டு, தலையிலடித்துக்கொண்டு, பெருமூர்ச்சை யடைந்து, பதறி யெழுந்து, ''அடா பாவி! எங்களைத் தெருவில் விட்டாயே! வாழ்ந்த வாழ்வு இவ்வளவுதானு? உன்மேற் பாய்ந்து சாய்ந்தது மன்மத பாணந்தானு? அதனுலேயா நீ மரணமடைந்தாய்? ஐயோ! அப்பா!'' என்று உடல் தளர்ந்து உயிருலைந்துஊசலாடி, ''ஓசகோதரர்களே! நான் எவ்வளவோசொல்லியும் பாவி கீசகன் கேளாததனு லழிந்தான். அந்நிய ஸ்திரீகளிச்சையாயுளழிக்குமென்று மோகநிவாரணநூலில் மொழிந்திருந்தும், அதைப் பலகாற்கண்டுங்கேட்டும், காலாந்திரத்தினுற் கதிசேர்ந்தானே ஐயோ! அடா கீசகக்களிறே!'' என்று கண்ணீர் வடித்து, அவனது, புஜபலகாரியங்களைப் படித்து, ஒருவருமுணராம லொப்பனையிட்டழுது, ''கீசகனிறந்தானென்னுங் கேள்வி பாரராஜர்களுணர்ந்தாற் படை யெடுத்துப் போர்தொடுத்து இப்பட்டணத்தை அபகரிப்பார்களே! என் நாயகனுக்கு மெனக்கும் இந்த நடத்தைவைத்தானே! நடுக்கடல் துரும்பானேமே! நடுத்தெருப்புழுதி யானேமே! அடடா! துட்டனே!'' என்று பட்டப்பகலில் தோன்றிய சந்திரன்போல் முகத்தொளி மழுங்க ''ஓ என் சகோதரர்களே! நானிந்த வார்த்தையை உங்களுடைய மைத்துனராகிய விராடராஜனுக்குப் பக்குவமாய்ச் சொல்லிவிடுகிறேன். நீங்கள் சீக்கிரத்திற் சென்று, அண்டையயலா ரறியாமல் அடக்கம் பண்ணிப் போடுங்கள். பரப்பில் விடாதீர்கள். பழிப்புக்கிடம் பண்ணுதீர்கள். பதருதீர்கள். என்னைப் பரதேசியாக்கிப் போடாதீர்கள். நமக்கு நான்கு திக்கிலும் பகைவர்களிருப்பதினுற் கீசகனுயிருடனிருக்கின்ருனென்னுங் கெடியைக் காட்டி, அவனுக்குச் செய்யவேண்டிய கடன்களைச்

செய்து தீர்த்து விடுங்கள்'' என்று உறுதிகள் சொல்லி யனுப்பிவிட்டு, உள்ளம் நடுங்கி யொடுங்கி, வெள்ளம்போற் கண்ணீர் விடுத்து, பூமி மேற்படுத்து, ஓ தெய்வமே என்று தேம்பித் தொழுது, துக்கமற்றவள் போல் பக்கத்திலிருப்பவர்கட்குத் தெரியாமல் விக்கி யிருந்தாள்.

### உபகீசகர்கள் தமையனைத் தகனஞ்செய்யவரும் வழியில் விரதசாரணியைக் கண்டு ஐயுற்றுமுடுக்க, அவள் அலறிக் கூவுதல்

இப்பால் அந்தச் சுதக்ஷணை சொன்ன வண்ணம் அண்ணனைத் தகனஞ் செய்வதற் கெண்ணிய தம்பிமார் நூற்றுமூன்று பேரும் பிரேதத்திற்கு வேண்டிய சல்லா-சாதரா சால்வை-சந்தனக்கட்டைகள்-ஸ்நான திரவியங்கள்-முதலிய சகலமுங் கொண்டு, தமக்கை யரண்மனையிலிருந்து சுருக்கிற் குறுக்குவழியாய் வருவதானார்கள். அப்போது பீமசேனனை விட்டு வரா நின்ற வண்ணப்பெண்ணைத் தாங்கள் கண்ணிற்கண்டு வழிமறித்து நின்று. அவள் பேரில் அடங்கா மனஸ்தாபங்கொண்டு, ''மனோதிடமுடைய தமையன் மாளுவதற்கு இவளே காரணமல்லது வேறில்லை, நாமெண்ணியபடி இவளே முடித்துவிட்டு எங்கேயோ போயிருந்து இப்போது வருகிறாள். இதற்கு யாதொரு சந்தேகமுமில்லை. அவனிவள்மேல் வைத்த ஆசையும், இவளவனைக் கெடுத்த மோசமும், அடியோடு நாசமாகும்படியாய் இவளையு மவனுடன் சேர்த்துக் கொளுத்திவிடுவது உத்தம தர்மம். இம்மையிற் கலந்தெரிந்தால் அம்மையிலும் எம்மையிலும் பிரியாவிடையாயிருப்பார்கள். ஆகையால் இவளைக் கூசாமற் பிடியுங்கள்''—என்று நான்கு திசையிலும் பரந்து நாய்போல்வளைந்து, மான்போல் மருண்டுசெல்லும் பாஞ்சாலியைத் துரத்தினார்கள். அக்கால் வனவேடர்போன்ற உபகீசகர்களைக் கண்ட சைரந்திரியானவள் எப்பேச்சும் பேசாமல், அல்லலடைந்து ஆவிபறியக்கத்தறும் அன்னம்போற்பதறி, பொறிபுலன்சிதறி, கைகாலுதறி விரைவிலோடி, ''ஆ! எனக்குகாவலாகிய கந்தர்வர்களே! யமதூதரைப்போற் சில துஷ்டர்களடுத்து என்னைப்பிடித்து, நெருப்பிலிட்டுக் கொளுத்தும்படி நிச்சயித்தார்கள். அதனாற் கொழுகொம்பில்லாக்கொடிபோல் துவளுகிறேன். என்ன செய்வார்களோவென்றுவாடுகிறேன். இப்பாவிகள் வசப்பட்டு ஆவியழியுந் துன்பத்தைப் பார்க்கிலும், என்னில் நானே என்னுயிரை யொழித்து விடுவது இன்பமென்று நாடுகிறேன். இந்தப் பஞ்சைகள் கையிலகப்பட்டுப் பரதவிக்கு முன்னே, அஞ்சேலஞ்சேலென்று நீங்களைந்து பேரு மோடிவாருங்கள். இந்த ஆபத்து வேளையில் வந்தென்னைக் காப்பாற்றுங்கள். மலைகளை மண்ணாக வாட்டும் உங்கள் புஜபலத்தைக் காட்டுங்கள். அந்தத் துன்மார்க்கனை முடித்ததுபோல் இந்தக்கயவர்களையும் வாட்டுங்கள். மனோவேகத்திலும் கடுக வோடிவந்து இவர்களை யமலோகத்திற் கோட்டுங்கள். ஓ ஜய விஜய ஜயந்த ஜயசேன ஜயற்பாலனென்னு நாமங்களையுடைய எனது நாயகர்களே!'' என்று அஞ்ஞாதவாச முதலில் நேமித்துக்கொண்ட சங்கேதப் பெயர்களைச் சொல்லிக் கூப்பிட்டாள்,

## பீமசேனன் திரௌபதி கூச்சல்கேட் டோடிவந்து, உபகீசகர் நூற்று மூவரையும் வதைத்தல்

அவள் கெட்டியாய்க் கூவிய ஓசையை மடைப்பள்ளியிலிருந்த பீமசேமன் கேட்டு, அதிவேகங்கொண்டெழுந்து ஏதோ பிரமாதம் விளைந்ததென்று இடையிற் கச்சையை யிறுக்கி வரிந்து, தொடையி லிரத்தந் துடிக்கப் பரிந்து "இதோ வந்தோம்; மனந்தளரேல் மனந்தள ரேல்" என்று பேரிடி போலிரைச்சலிட்டுக் கொக்கரித்து, மகா எக்களிப் புடன் எதிரிலிருந்த மரங்களைப் பிடுங்கி, விறுவிறெனச் சுழற்றி, கையொடு கையறைந்து காடுகலங்கக் குதித்து வழியிலகப்பட்ட நீண்ட விருக்ஷங்களெல்லா மளமளவென்று நெறிந்துமுறிய மிதித்துக் கொண்டுவந்தான். அவனுலாரவாரிப்புண்டாகிய திசையையும்-மரங்கள் முறியும் விசையையும்-உபகீசகர் பார்த்து, உடனே முகம் வேர்த்து தங்களுக்குள் தயங்கி, தைரியமில்லாமல் மயங்கி, "ஆ! தம்பிகளே! இவளிரைந்து கூவியபோது இதோ விரைந்து வந்தோ மென்று ஒரு பேரொலி கேட்டது. அவ்வோசை யடங்குவதற்கு முன்னே பெருங்காற்று புறப்பட்டது, மரங்கள்யாவும் மடமடவென் றொடிகின்றன. பூமி கடகடவென்றுருடுகிறது. இவளுக்குரிய கந்தர்வர் துணைவருகிருற்போலு மிருக்கிறது. நமது தமையனையடித்து முடித்து விட்டிப்பொழுதுதான் போகிறவர்கள்போலுங் காண்கிறது. நம் முடைத் தமையனை இக்கேடு கண்டவர்கள் நம்மை யெளிதில் விடார் கள். இனி என் செய்வோம்?" என்று பயந்து, உடல் பதறி நடுங்கி, கட்டழகமைந்த விரதசாரணியை விட்டுவிட் டோடிப் பிழைப்பதே மேலென்று யோசிக்குமுன்னமே காலபாசச் சூலங்கொண்ட கால னைப்போலும் ஆலகால விடம்போலும் பீமன் வந்து புகுந்து விளாசு வதானுன். அப்போது புத்தித்தாழ்வாற் பிராணனைப் போக்கடித்துக் கொண்ட கீசகன் தம்பிமார்கள் சுற்றியோடி விலகினுர்கள். அவர் களை பீமன் கொத்துப்போற் சேர்த்து வளைத்து, பத்துபேர்க் கோரடி யாயடித்து, ஒருவருந் தப்பிப் பிழைக்காதபடி, அவரவ ரெலும்பை யொடித்து மேலுலகிலேற்றினுன். அந்த உபகீசகர், சகோதர வாத் சல்லியந் தப்பாமலும் தமையனைப் பிரியாமலும் அவன் போனவழியே இவர்களும் போனுர்கள். கேட்டீரோ ஜனமேஜய மகாராஜனே!

> "பண்ணிய வினைகளின் பயன லாதுதா
> மெண்ணிய கருமமற் றியாவ ரெய்தினுர்
> திண்ணிய கீசகர் செய்த தீங்கவர்
> புண்ணிய மானதாற் புகல்வ தென்கோலோ."—

ஆதலால் யாவருக்கும் வினையின் வண்ண முடியுமேயன்றி, தம்மிச்சையி லொன்று மாவதில்லை. கீசகன் செய்துகொண்ட புண்ணி யங்கள் இப்படிக்கிருந்ததால், அவைகளுக்கு யார் என்ன செய்யலாம்? துவளுமிடையும்-சுவர்னப்பட்டுடையும்-அன்னநடையும் - அணிபூஞ் சடையும்-கற்புடைமையாங் கவின் சீருடைமையுமுள்ள விரதசாரணி

யின்மேல் விருப்பம் வைத்த கீசகனைப் பீமசேன னழித்தபோது அவன் ஒருவருமறியாமல் உபாயத்திலொழிந்தான். உபகீசகர் மடிந்த போது, பொழுது விடியுஞ் சமயமாகையினலும் விராடபுரத்தைச் சமீபித்த இடமாகையினலும் அவர்களாலுண்டான பேரோசையினல் ஊராரறிந்து, உறக்கந் துறந்து, காற்ருய்ப் பறந்து, கலங்கிப் பயந்து, ''சரிதான்; சரிதான்; வண்ணமாதுமீ தெண்ணங்கொண்ட திண்ணியனுகிய கீசகனை அந்தப் பெண்ணுக்கிசைந்த கந்தர்வர் வந்து கொன்ருர்களாக்கும். அவனுக்காகப் பரிந்து அவன் தம்பிமார்கள் ஒன்றுகூடி வந்து சண்டை விளைத்து நிற்க, அந் நூற்றுமூன்றுபேரையும் அவர்கள் வென்ருர்களாக்கும். ஆகிலுந் தேவஸ்திரீயை மனிதன் நாடுவது தீங்கு, தேவர்களுடன் மனிதரெதிர்த்துச் சண்டை செய்வது அத்தீங்கிலுந் தீங்கு. தன் பலமும் எதிரி பலமும் எண்ணுமற் சண்டையிட்ட கீசகர்களில் ஒருவரும் பிழையாமல் விண்ணுலகுற்ருர்கள் போலும்'' என்று பட்டணத்திலுள்ள யாவரும் பற்பலவிதமாகப் பயந்து கழித்துப் பேசிக்கொண்டார்கள்.

### பீமசேனன் திரௌபதிக்கு ஜயைசரிதங்கூறித் தேற்றுகிருன் : பின் இருவருந் தமதிருக்கையை அடைதல்

இவ்வாறு உலகம் நடுங்கி யொடுங்கும்படி அன்றிரவு கொன்றதல்லாமல், உபகீசகர்களாகிய மற்ற நூற்று மூவரையும் ஒரே மூச்சிற் கொன்று, அங்குள்ள நாய் நரி பேய் பிசாசம் காக்கை கழுகு கூளி காளி முதலியவற்றிற்கு விருந்தாக்கிவிட்ட சுயம்பாகியாகிய பீமசேனனும் பாஞ்சாலியும் அவ்விடம் விட்டுத் திரும்பும்போது, வாயுகுமாரன் திரௌபதியை யணைத்து, ''ஓ வண்டரு மலர்க்கூந்தல் வாய்ந்த மாதே, கற்புடைய மாதர்க் கெப்போதும் ஆபத்து நேரிடாது. ஒரு வேளை தீவினைப் பயனல் நேரிட்டால், சூரியனைக் கண்ட பனிபோலகலும், மேலும் நற்குண நற்செய்கைகளை யுடைய பதிவிரதைகள் தாங்களெப்படி நினைத்தாலுமுடியும். அதற்கொப்பாக ஒரு கதை சொல்லுகிறேன், கேள் :—

பூர்வத்தில் இமயபர்வத இராஜகுமாரியான பவானியிடத்திற் பணிவிடை பண்ணிக் கொண்டிருந்த ஜயை என்னும் பெயரினை யுடைய தெய்வப் பெண்ணெருத்தி, இந்தப் பூலோகத்தில் வாழு மாதர்களுடைய இல்லறதர்ம மெப்படியோ வென்று சந்தேகங் கொண்டு பார்வதியாரைக் கேட்டாள். அதற்கு அவ்வம்பிகையார் அந்தப் பெண்ணைப் பார்த்து, 'நான் சொல்வதினு லுனக் கநுபவமாகாது. நீ போய்ப் பூமியிற் பிறந்து, இல்லற தர்மத்தைக் காட்சிப் பிரமாணமாகக் கண்டு அநுபவித்துவரக் கடவாய்' என்று சொல்லி அநுக்கிரகம் பண்ணினுர். அவ்வாறே அந்த ஜயையென்பவள் மண்ணிற் பிறந்து வளர்ந்து சிறந்து வருங்காலையில் தேவரத னென்றெருமுனிவன் தனக்கு உபசாரஞ் செய்வதற்கு உத்தமகுணசாலியான பத்தினி யொருத்தி வேண்டுமென்று தேச முழுமையுந் தேடித் திரிந்து

வாடி வருந்தி வரும்போது ஒரு அக்கிராரத்தி லிருந்த இந்தப் பெண் ணைக் கண்டு, கன்னிகை யென்றுணர்ந்து, இவளது பதிவிரதா குணத் தைச் சோதிக்கவேண்டுமென் றெண்ணிப் பெரிய இராக்ஷத ரூபங் கொண்டு, கோரமா யெதிர்சென்று நின்று, அவளைப் பருந்து தூக்கும் பாவனைபோல் தூக்கிக்கொண்டு, மகா ஆரணியத்திற்போய் நூறு யோசனை விசாலமுள்ள தாமரைத் தடாகக் கரைமேல் வைத்து வெகு வித சந்தோஷ முண்டாக்கி, பற்பல கனி - தேன் - கிழங்குகளுங் கொடுத்து, உற்பலம்-தாமரை-மல்லிகை முதலிய புட்பங்களு மளித்து சரசமாய்ப் பேசி, தன்னுற் கூடியமட்டுந் திருத்தி, நயபயங் காட்டிப் பொருத்திப் பார்த்தான். அவள் எந்த விதத்திலு மயங்காமல் திடச் சித்தமா யிருந்தாள்.

அப்போது இராக்ஷத ரூபங்கொண்ட முனிவன் தன் கையிற் பிடித்திருந்த கோலால் அவளைக் கீழே தள்ளி, பலவந்தம் செய்ய ஆரம்பித்தான். அவள் அதற்கு மஞ்சாமல். தன்னிரு கைகளையும் தலைமேற் குவித்து, ''ஓ தரும தேவதையே, நான் இதுவரையிலும் மனோவாக்குக் காயங்களினுல் வழுவுதல் முதலிய பழுதுகளில்லாமற் கற்புடைமை காத்து, ஒப்புவமை யில்லாதிருந்தேன். இப்போது இந்த இராக்கதன் கை என்மேற் படுமுன்னமே அற்பமாகிய என் னுடலங் கருங்கல்லாய் போகக்கடவது'' என்று கூவினள். அவ் வாறு உரக்கக் கூவினவளை அவ் விராக்கதன் அதட்டி வெருட்டிப் பயங் காட்டி, மீண்டும் மேல்விழுந்து தழுவப் போனுன். அப்போது அவள் கல்லாய்ச் சமைந்தாள். அவளுக்கு நேரிட்ட அபாயத்தைக் கண்ட முனிவன் இராக்கத ரூபத்தை விட்டுப் பழைய வடிவெடுத்து அவளுடல் கல்லாகியதைத் தடுத்து, தான் அதுவரையிலுந் தேடிய தபோ மகிமையை அதனுக் கீடாகக் கொடுத்து, அவளைத் தன் வாழ்க்கைத் துணை நலத்திற்குரிய மனைவி யாக்கிக் கொண்டு தன்னுச்சிரம மடுத்து, அறம் - பொருள் - இன்பம் - வீடு என் னும் நற்பயன்களையுந் திறம்பாமலடைந்து, இல்லற வாழ்க்கை யித்தன்மையதென்று யாவரு மறியச் செய்தான். ஓ பாஞ்சாலச் செல்வி, நல்லவர்களுக் கொருநாளும் பொல்லாங்கு வராது. வந்தா லும் நிலையிராது. பின்னுல் நன்மை யுண்டாகும். ஆதலால் எப் பேர்ப்பட்ட ஆபத்துக்கள் வந்தாலும் அதற்கஞ்சி விசனப்படலாகாது. இப்போது உனக்கு நேரிட்ட கஷ்டநிஷ்டூரங்களுக்காகத் துக்கப் படாதே. இன்னுஞ்சிலநாட்களுக்குள் நமக்குநல்லகாலம் வரும்'' என்று நயந்து பேசி சுதக்ஷிணையிடத்திற்கவளை யனுப்பிவிட்டுத் தானொரு தடாகத்திலிறங்கி ஸ்நானம் பண்ணி நித்தியவிதிகளை நிறைவேற்றிக் கொண்டு, வெளியே போய்வந்த செய்தி ஒருவருமுணரா திருக்கும்படி யாய் மடைப்பள்ளிக்குப் போய்விட்டான்.

இந்தப்பிரகாரம் பீமசேனன் போக, திரௌபதியானவள் பொழுது விடிந்து போயிற்றே என்று பயந்து ஒடுங்கி யொதுங்கி, வாடி வதங்கி, ''நம்மை யார் பார்ப்பார்களோ! என்ன நினைப்பார்களோ! என்னவென்

றேசுவார்களோ? நாம்போகிற வழியில் யாரேனுஞ் சந்திப்பார்களோ? ஏதோ? என்னமோ?'' என்று அச்சத்துடன்போய்ச் சுதக்ஷிணதேவியி னரண்மனைக்குள் புகுந்தாள், என்று வைசம்பாயனர் கூறினர்.

அதைக்கேட்ட ஜனமேஜயராஜன் பரிந்துநோக்கி, ''ஓ சுவாமி உபகீசகர் கையிலகப்பட்ட பாஞ்சாலியைப் பீமசேனன் வந்து விடுவிக் காமற்போனல் உபகீசகர் தங்கள் தமையனேடு சேர்த்துக் கொளுத்தி விடுவார்களே. ஆ! ஆ! அந்த உத்தமிக்கு என்ன ஆபத்துவந்து நேர்ந் தது! என்று சொல்லிப் பரிதாபித்தான். அதுகேட்ட வைசம்பாயனர் ''ஓ மதி மரபுதித்த மன்னர்பிரானே, கேளும்: ஸ்ரீ கிருஷ்ணபகவா னுடைய கடாக்ஷவீட்சண்யத்தினுலும், தருமபுத்திர மகாராஜனுடைய சத்தியநித்திய தவத்தினுலும், பாஞ்சாலியினுடைய கற்பினுலும், அப் படிப்பட்ட பொல்லாங்கு நேரிடாது. ஒருவேளை நேரிட்டாலும் அவ ளுக்குத் தந்தையாகிய அக்கினிதேவன் தான்பெற்ற பெண்ணைத் தானே கொளுத்துவானு? தானே சுட்டெரிப்பானு? அப்படி நேரிடுங் காலையில் தருமதேவதையும் அதற்குச் சகாயப்படுமா? தர்மந்தலைகாக் காமற் போமா! ஓ சந்திர குலாதிபனே!'' என்று சந்தேகந்தீர்த்து மேல் நடந்த வர்த்தமானங்களையும் சொல்லத் தொடங்கினர்.

### விராடனுஞ் சுதக்ஷிணையுங் கீசகர்க் குரிய கடன்களை முடித்து திரௌபதியைத் தெய்வம்போல் போற்றி வருதல்

இப்பால் ஜகத்தை மறைத்துப்போர்த்த கறுத்த இருள்திரைக் களங்கத்தை இரவியானவ னிந்திர திசையினின்று மெழுந்து இகல் கொடு விலக்கி நிலத்தை விளக்கி, உதயகிரி முடிமேலேற்றிய மணி விளக்கைப்போல எட்டுத்திசையும் பிரகாசிக்கப் பிரபைவிட் டொளி காட்டினன். உடனே அன்றிரவில் நடந்த யுத்த விபரீதமுஞ் சத்தப் பிரதாபமும் விராடபுரமெங்குப் பரவி, ஆயிரங் கிரணத்திலு மதிகமாய் விரிந்து மச்சநாட்டுள்ள ஜனங்களெல்லோருங் கோட்டைக்கு மேற் புறத்தடைந்து வனத்தில் மாண்டுகிடக்கிற உபகீசகர்களையும், அவி யாமலெரிகிற மாஞ்சோலையில் ஆயி மகம்மாயிக்குப் பூசைபோடச் செய்த பதியலங்காரம்போ லிருக்குங் கீசகன் தலையையுங்கண்டு விச னங்கொண்டு, பயந்து ஓட்டமாயோடிவந்து, விராடராஜனுக்குச் சொல்லி வெறுப்படைந்தார்கள். இதற்கு முன்னமே கீசகனழிந்த செய் தியைத் தன்பெண்சாதி சொல்லக்கேட்டு வருந்தி, 'ஐயையோ! ஓ! கன்னியன்னமே! இனி நானென்ன செய்வேன்? என் தோள்வலி போச்சுதே'' என்று துடித்துக் கண்ணீர்வடித்துப் படுக்கைவிட்டெழப் பலமற்றவனுய்ப் பரதவித்துக் கொண்டிருந்த அப்பார்த்திபன் செவி யில் 'உபகீசகர்களுமுயிரொழிந்தார்கள்' என்றுரைத்தவுடனே இடிமே லிடியும் அடிமேலடியும் எய்தியவாறுபோ லிறங்கி யுறைந்து, விரைந் தெழுந்து, கொலுச்சாவடியிற் கூடிய தூதர்களைக் கூவி, ''என் மைத் துனரிறந்த காரணகாரியங் கண்டறிந்துவாருங்கள்'' என்றனுப்பினன். அரசன் ஆணைப்படியே அவர்கள் போய்பார்த்து, சிதைந்து வதைந்த

கீசகரைக்கண்டு, ஆச்சரியமுமாச்சரியமு முள்ளவர்களாய் வந்து அரசன் திருமுகத்தைப் பார்த்து "ஓ இராதிராஜனே, பராக்; கீசகராஜனுடன் உபகீசகராஜரும் பறந்து உலக வாழ்க்கையைத் துறந்து மண் மேற்கரந்து இறந்துபோனார்கள். அவர்கள் பேரு மிறந்துபோயிற்று. அந்தப் பிணங்கள் அலங்கோலமாய்க் கிடப்பதைநோக்கி இந்தப்பட்டினத்து ஜனங்களெல்லோரும் பயங்கொண்டு வெளிவரமாட்டாமல் வெம்புகின்றார்கள். இந்தவிபரீதமெல்லாஞ் சைரந்திரியென்னும் பெண்ணால் விளைந்ததன்றி, மற்றொருவராலுமல்ல. அந்தப் பாக்கியசாலி இன்னுஞ் சிலநாளிவ்விடத்தி லிருந்தால், இவ்வூரிலுள்ளோர் யாவருஞ் சாகாமற் போகார்கள். ஓ தருமசீல தயாளுவாகிய தராபதியே, இப்பால் தாங்களே யோசிக்கத்தக்கது" என்று சொல்லிச் சரணஞ்செய்தார்கள். அன்னவர்களுரைத்தமொழியை விராடராஜன் யோசித்து மந்திரிகளுடன் கலந்து வார்த்தையாடி, "ஓ என் மித்திரர்களே, நீங்களுங்கள் தந்திரயுக்தியினாலும் மந்திரசித்தியினாலும் அந்தக் கந்தர்வரைக்கண்கலங்கப்பிடிப்பதற்கான உபாயந்தேடி, விற்படைவேற்படையோங்கியவீரர்களை விடுத்து மற்புயவலி மிகுந்த என் மைத்துனரை அற்பமா யெண்ணிப் பிராணனை வாங்கிய துஷ்டர்களை எப்படியாவது கைப்பிடியாகப் பிடித்து என் சொற்படி விரைவில் வரச்சொல்லுங்கள்" என்று பற்கடித்துப் பகர்ந்து, இறந்துபோன மைத்துனருக்குச் செய்யவேண்டிய ஈமக்கடன் முடித்து, "இனி யென்ன மோசம் வருமோ" என்று ஏக்கமேலிட்டுத் தூக்கம் பிடியாமலிருந்தான்.

இவன்செய லிவ்வாறாக, நேற்றிரவில் நடந்தசங்கதிகளைப் பாண்டு மக்கள் ஐவரும் பாஞ்சாலியுந் தனித்தோரிடத்திற் சேர்ந்து இருந்து வார்த்தையாடி, "அஞ்ஞாதவாசஞ் செய்யவந்த நமது அவதிநாளாயிற்று. இன்னுமுள்ள கொஞ்சநாளுந்தொலைந்தால் வெறுப்பாயெடுத்த இவ்வேடத்தை விடுத்து, விருப்பாம் பழைய வேடமெடுத்து வெகு ஜனங்களுங் காண வெளிப்பட்டுப் பேசவேண்டிய சேதிகளை யெல்லாம் பேசிக்கொள்ளலாம். அதுவரையிலுஞ் சந்தடிபண்ணாதிருப்போம்" என்று பேசிக்கொண்டு விற்பன விவேகிகளாகிய அவ்வேந்தர்கள் தங்கள் கற்பனைத்தொழிலிற் பக்குவமாக இருந்து காலங்கழித்து வந்தார்கள். அதுமுதல் விராடராஜனும் சுதக்ஷணையும், புறம்பிலுண்டான சுற்றத்தாரும், மற்றையரும் அந்த விரதசாரணியிடத்தி லதிகமாய் நெருங்கவும்-வேடிக்கையாய்க் கொஞ்சவும்-வினோதமாய்க் குலாவவும் போ வாவென்று வாய்ப்பேச்சுப் பேசவும் பயந்து, அவளா லாகவேண்டிய வேலைகளைத் தாங்களே செய்துகொண்டு, "அம்மா தாயே, 'நீ சும்மாவிரு' என்று உபசரித்து, எங்களுக்கு உயிர்த்துணையாயிருந்த கீசகன் உன்மே லாசைவைத்து மானமாதிகள் கெட்டு மாண்டார். நீ எங்கள்பேரில் யாதொரு குற்றம் குறை வையாமல், கோபதாபஞ் செய்யாமல், உனக்குக் காவலாகிய கந்தர்வரிடத்திற்சொல்லி எங்களை இரக்ஷிக்கும்படி பிராணபிச்சை தாரும். நீ எங்களுக்குப் பக்கத்துணையிருந்து காப்பாற்றும்" என்று உபசாரம்பண்ணிப் பொன்னைப் போற்று

மாறுபோற் பூசித்து வந்தார்கள். அந் நகரிலுள்ள நான்கு வருணத்தவருந் திரௌபதியம்மனைக் கண்டால் எதிர்சென்றோடித் தீர்க்கதண்டனிட்டு, மரியாதையுடன் பாதபூசைபண்ணிமஞ்சள்-குங்குமம்-கந்தம்-கதம்பம்-அக்ஷதை-முதலியவைகளைச் சாத்தி, தூபதீபங்கொடுத்து, வணங்கி, வாய்க்குற்றம் கைக்குற்றம் வரப்போகின்றதென்று வயிற்றில் வாள்கட்டிக் கொண்டவர்போற் பயத்துடன் மதித்துத் துதித்துச் சன்மானம் புரிந்து,தெய்வோபசாரம் இராஜோபசாரம்போல் பல உபசாரங்களையுஞ் செய்துவந்தார்கள்.பாஞ்சாலியும் இந்தப்பூனை அந்தப்பாலைக் குடிக்குமா என்பதற்கிணங்க, "ஓ ஐயன்மீர்! ஓ அம்மைமீர் எனக்கென்ன தெரியும்? நானென்ன அறிவேன்?" என்று கூறிக்கொண்டு சுதக்ஷணைக் கிணையாய்ப் பொருந்தி அமர்ந்து வாழ்ந்திருந்தாள்.

### விராடராஜன் கீசகனிறந்ததைக் குறித்து விசனப்பட தருமபுத்திரர் தேற்றி ஆதரவு கூறுதல்

திரௌபதாதேவி இவ்வளவு பூஜிதையோடுமிருக்க, கீசகர் நூற்று நால்வரும் ஈடழிந்து நாடொழிந்து கேடுகண்டதைக் குறித்து மச்சராஜன் பெருமூச்சுவிட்டுக் கிலேசமுற்று, "இந்நாள் வரையிலும் இந்த இராஜ்யத்திற் கிடையூறுவராமற் காத்துச் சேனாதிபதித்துவ விசாரணையுஞ் செய்து எனக்குத் திகிலுந் தீங்கு மில்லாமல் தனது சொந்தம் போல் பார்த்துவந்த என் மைத்துனன் மாண்டானே! அந்தோ! இனி நான் எப்படிப் பகைவரை வெல்லுவேன்? இறைகேட்டனுப்பும் முறைமையுடைய வேந்தர்க்கு இல்லையென்றெப்படிச் சொல்லுவேன்? எங்கும் விரோதிகளாய்ப் படைகொண்டு சண்டை செய்ய வருவார்களே! அப்படி வருபவர்களுக்குக் களைபறித்த பாவனையாயிற்றே! கோட்டையைப் பிடித்த கொள்கைபோ லாயிற்றே! என்னிடத்தில் வைத்த மதிப்பு முதலிய கௌரவமும் இன்றோடு ஒழிந்ததே! நமது கீசகனுக்குச் சமானமான பலசாலியைச் சம்பாதித்துச் சேனாதிபதியாக்க வேண்டுமே! தெய்வமே" என்று மனக்கவலை யுற்றிருந்தான். அந்தச் சமயத்தில் அவன் பக்கத்திலிருந்த கங்கபட்டர் மச்சராஜன் மனதைத் தேற்றி, வாய்ப்பிதற்றலைமாற்றி, "ஐயா துஷ்டக் கீசகர்களுடைய நஷ்டத்தைப்பற்றிக் கஷ்டப்படுகின்றீர்! நீர் யாதொன்றுக்கும்அஞ்சவேண்டாம். படுபாவியான கீசகன் பட்டதே உமதிஷ்ட தெய்வானுக்கிரகமென் றெண்ணிக்கொள்ளும். இனியுமக்கு நல்லகாலம். அந்தக் கீசக னின்னு மிருப்பானுனல், சத்திய வாக்கியமும் சகல பாக்கியமும் யோக்கிய சிலாக்கியமும் ஒன்றுமில்லாமற் பாழாய்ப் போய் விடும். இதுவரையிலும் உம்மைப் பிடித்திருந்த ஏழரைநாட்டுச் சனி விட்டுப் போயிற்று. துஷ்டதுரோகியை நினைத்து துன்பப் படாதீர். நமது மடைப்பள்ளி மல்லனை விட வேறு சேனாதிபதியும் வேண்டுமோ? இனி உமக்குப் பகைவரென்பாரு மில்லை. உம்மைப் பகைத்துவந்து பிழைப்பாரு மில்லை. உமது சத்திய சவுசவாசார விரதம் உற்ற துணையாயிருந்து, மேலான சம்பத்தை உமக் குண்டாக்கி வைக்

கும். நீர் சஞ்சலப்பட வேண்டாம், ஓ சாந்தகுணனே'' என்று தரும சொருபன் உரைத்துச் சமாதானப்படுத்தியபோது, விராடராஜன் வேதியர் பெருமா னுரைத்த புத்தி கேட்டு, மிக்க மகிழ்ச்சி கொண்டு மேன்மையோடிருந்தான். அந்நியமாதர்மேல்வைத்த ஆசாபாசத்தால் மோசம் போய்த் தம்பிமார்களுடன் கீசகன் பட்டானென்று தேசா தேசமெல்லாம் பேசிக் கொண்டார்கள்.

---

## 4. தக்ஷிண நிரைமீட்சிச் சருக்கம்

### கண்ணன் துதி

மந்திரஞ்சேர் சமதக்னி ரேணுகையாற்
பரசுரா மப்பேர் பெற்று
மைந்தனெனத் தோன்றிமறை யோர்க்கிடர்செய்
தறநெறியை மாய்த்த வேந்தன்
தொந்தமுறுங் குலமுழது மறச்செருத்தம்
மறையோர்க்குத் துணையாய் நின்று
சிந்தைமகிழ்ந் துலகாண்டு பாற்கடலுட்
டுயின்றவனென் சிந்தை யானே.

ஓ ஜனமேஜய மகாராஜனே, பாண்டவர்கள் அஸ்தினபுரத்திற் சொக்கட்டானடித் தோற்றுத் திரௌபதியோடு பன்னிரண்டு வருஷம் வனவாசஞ் செய்யப் புகுந்து, காடாக்கினியோங்கிய காட்டிலும் காளவிஷாக்கினி தங்கிய பாலை நிலத்திலும் வடவாமுகாக்கினி வந்து குடிகொண்ட மலைச்சாரலிலும், திரிபுராக்கினி சிவந்த பருக்கைக்கல் மேட்டிலும் மதனக்கினி மலர்ந்த மடுக்கரை குளக்கரை நதிக்கரை கவிலுந் திரிந்து, மழை-பனி-காற்று-வெயில் முதலாகிய வருத்தங்களை யும் பொறுத்து அலைந்த சரித்திரத்தை முன்னமே சொன்னேன். பின் பவர்கள் ஒரு வருஷம் அஞ்ஞாதவாசங் கழிக்க வேண்டி உருமாறி விராடராஜனிடஞ் சென்று, தங்கள் தங்கள் புத்தி சாதுரியத்திற்கேற்ற நாமமுந் தொழிலுங் கொண்டு, வாசவ னென்னு மல்லனையுங் கீசக ரென்னும் புல்லரையும் வதைத்துச் சகலரும் போற்றச் சிறந்திருந்த சரிதத்தை இப்போது சொன்னேன். இனிப் பஞ்சவரைக் காட்டி லோட்டிவிட்டு, வீரகண்டைதாங்கிய தன் பாதத்திற் சத்துருக்களெல் லாரும் மித்துருவாய்ப் பணிந்து கப்பணங் கட்டிவரப் பொற்பணி முடி பூண்டு, எப்புவனங்களுக்கும் ஏகசக்ராதிபதியா யிருந்து துரைத்தனஞ் செய்து வரா நின்ற பாப இருதயம் படைத்த துரியோதனராஜன் அச்ச மில்லாச் சேனைகளுடன் மச்சநாட்டைப் பகைத்து, இச்சையின்படிக் குப் பசுமந்தைகளைக் கொள்ளையிடலாமென்று கொச்சை மதியால் வெட்கங் கெட்டு நின்றதால் வந்த சண்டையைச் சொல்லுகிறேன் கேளும்:—

### துரியோதனன் பாண்டவரிருக்கை யறியத் தூதரை யேவ அவர்கள் சென்றுய்ந் தவலித்து வருதல்

ஓ மகாராஜனே! மராடமன்னர் முதலிய யாவரும் வணங்கும் விராடமன்னனிட மேவி இணங்கும் பாண்டவர்கள் அஞ்ஞாதவாசஞ் செய்து வருநாளில் சகல வளமைகளும் பொருந்தி நிலைமை பெற்ற இருபுறத்திலும் அலையெறிந்தொதுக்கிய பொற்சன்னங்களும் நவ மணிக் குப்பைகளும் இராசிராசியாய்ப் புரண்டு பிரகாசித் திருக்கின்ற கங்கைவள மோங்கிய குருநாட்டுக் கதிபதியான துரியோதனராஜன் அஸ்தினுபுரத்தை யாண்டுவருங்காலத்தில், ஒருநாள் 'வஞ்சச்சூதினுல் தோற்றுப்போன குந்திதேவியின் பிள்ளைகள் இன்னும் வனவாசஞ் செய்யவேண்டி யிருக்குமா? அல்லது அஞ்ஞாதவாசம் பண்ணப் போயிருப்பார்களா? அவர்கள் நாட்டை விட்டுக் காட்டுக்குப் போன நாளைக் கணக்கிட்டுப் பாருங்கள் சம்பிரதிகளே' என்றான். அவ் வரண் மனைக் கணக்கரில் பெரியராயசக்காரனெழுந்துவணங்கி, 'ஓ இராஜாதி இராஜபரமேஸ்வரா! இராஜமார்த்தாண்ட! இராஜவுத்தண்ட! இராஜ கெம்பீர! இராஜப்பிரபுடீக! இராஜதுரந்தரா! பராக்! ஆண்டவ னுத்தர வின்படி பாண்டவர்கள் வனவாசங் கழித்து அஞ்ஞாதவாச முக்கால் வாசியுந் தொலைத்து விட்டார்கள்'' என்றான். அந்த மொழியைக் கேட்ட அரவகேதனன் சிந்தை வருந்தி, மிக அவசரத்தோடு அருகில் நிறைந்திருந்த சாரணர்களை யழைத்து, ''தூதரே! பாண்ட ருறைந் திருக்கும் பதியையும் அவர்கள் கொண்ட மாறுவேடத்தையுங் கண்ட றிந்து நமக்கு வெளிப்படுத்துவீர்களானுல், உங்களுக்குக் கோடி திர வியமும், குதிரை யானை தேர் குடை கொடி பட்டு பட்டாவளி இரத்தின பரணம் சிவிகை அருகு தீவட்டி ஜெயபேரி பங்காவத்தியம் கிராமம் பூமி முதலாகிய வெகுமதிகளுங் கொடுப்பேன். நான்கு திக்கிலும் நன்றாய்த் தேடிப் பார்த்து வாருங்கள்'' என்று சந்தன தாம்பூலங் கொடுத்து விடுத்தான்.

அரசன் சொல்லை நம்பி அநேக தூதர் புறப்பட்டுச் சபை மெச்சும் படி வெகுமதி பெறவேண்டுமென்னுஞ் சந்தோஷத்தால் வானமளா விய மதில் வளைந்த கோட்டைகளும் மாடமாளிகை கூடகோபுரமுள்ள பட்டணங்களும், கிராமங்களும், துருவங்களும், நதி-குளம்-ஏரி-தடா கம்-ஓடை-கயம்-கால்வாய்களும், வாழை - கமுகு - கரும்பு - தேங்கு- வருக்கை முதலிய விருக்ஷ வளம் பெற்ற நாடுகளும், சுரை-புன்னை- தாழை-கரும்பு முதலிய அடர்ந்த மணல்மேடுள்ள கழிக்கரையை யும், பற்பல வழிக்கரையுந் தேடி, பாண்டவர்களின் காலடிச் சுவ டுண்டோ வென்று நாடி, நாலுதிக்கும் பிரிந்தவர்கள் கூடி, வேசாறி வாடி, நாமெல்லோரும் அதிர்ஷ்டமற்றவர்களென்று தங்களைத் தாங் களே நொந்துகொண்டு அஸ்தினுபுரத்திற்கு வந்து சேர்ந்தார்கள். அப்போது சூரிய புத்திரனுகிய கர்னன், சௌபலராஜ குமாரனுகிய சகுனி, பரத்துவாசதநயன் துரோணச்சாரி, சிவன்காதலன் அசுவத்தா மன், சரத்துவந்த மகாரிஷி சந்ததியிலுதித்த கிருபாச்சாரி, சந்தநு நந்

தனுகிய பீஷ்மர், பச்சை முதலிய ரத்னுபரணமும் வெட்சி மாலையும் புனைந்த திரிகர்த்தன், வியாசன்வழித் தோன்றலாகிய விதுரன், குரு குலாதிபதியாகிய திருதராஷ்டிரன், இன்னுமுள்ள பலதேச ராஜரும் மந்திரி சாமந்தருந் தந்திரி சாளுவருஞ் சூழ்ந்திருக்க, சந்திரனை விட்டகலாத தாரகாகணம்போல் தம்பிமார் மொய்த்திருக்க, முடிமன்னர் முறைமையுட னிணங்கிக் கப்பணஞ் செலுத்திக் கால்மேல் வணங்க, முடியர் கூற, பட்டுவர் புகழ, துஷ்டர்கள் தாழ, கவிவாணர் துதிக்க, இசைவாண ரிசைக்க, மறையவர் ஆசீர்வதிக்க, பரதநாட்டியப் பாவையராட, சுரதசங்கீதத் தோகையர் கூட, வெண்சாமரை போட, வீரர்கள் எதிரோட, வெண்பட்டுக்குடை நிழற்ற, செம்பத்மராகத்தாலமைந்த வீரசிங்காதனத்தின்மீது மத்தியானச் சூரியன்போல் வேந்தனை சுயோதனராஜன் வீற்றிருந்தான்.

அக்கால், வினைப்பயனுக் கேற்ப விதியை மதியாகக் கொண்ட வேந்தனிருந்த கொலுமுகத்திற் பாண்டவர்களைத்தேடி இளைத்துவந்த தூதர்போய் நின்று தீர்க்க தண்டனிட்டு, "ஓ நந்தியாவட்டை மாலை புனைந்த நாதனே, கொன்றை மாலை யணிந்த பரமசிவனுக்கு வலக் கண்ணுகிய சூரியகிரணங்கள் பாயு மிடங்களிலும், அந்தச் சருவேச்வரனுக்கு இடக் கண்ணுகிய சந்திரப்பிரகாசம் பரவு மிடங்களிலும், ஆதிபராபரனுடைய நெற்றிக் கண்ணுகிய அக்கினிதேவன் பொருந்து மிடங்களிலும், காலகண்டன் தாளருள் கண்ட காலனுடைய கரும பாசஞ் செல்லு மிடங்களிலும் புகுந்து, சோர்வில்லாம லாராய்ந்து பார்த்தோம். எங்கும் பாண்டவரைக் காணுமற் பங்கப்பட் டிங்கு வந்தோம். ஓ பார்த்திபனே! தங்கள் சமூகத்தில் நாங்களுண்மையாய்ச் சொல்லுகின்றேம். ஆண்டவனருளாற் பாண்டவர் மாண்டே போயினர். இதற்குச் சந்தேகமில்லை. தேவரீரிடத்தில் யாங்கள் தவணை வைத்துக்கொண்டு போன நாள்முத லிதுகாறுந் தேடித்தேடி, எங்கள் காலகள் வாடி, வீணுய்க் காலம் போக்குவதிற் பிரயோசன மில்லையென்று தீர்மானித்து, சீக்கிரஞ் சென்று மன்னர் பெருமானுக்கு முன்னுடிச் சொல்லிவிட்டால் இன்னும் வேண்டிய வுபாயந் தேடிக் கொள்வாரென்று எண்ணி வந்து விட்டோம்" என்று நமஸ்கரித்து, வாய்புதைத்து கைகட்டி, புத்தி புத்தியென்று விண்ணப்பம் பண்ணினுர்கள்.

### கர்னன் பாண்டவரிருக்கை இவ்வாறு இருக்குமெனக் கூறுதல்

இப்பாற் பஞ்சபுஷ்ப பாணங்களையுங் கருப்பு வில்லையு முடைய மன்மதனை யொத்த வடிவமைந்த துரியோதன ராஜன், சாரணருரைத்த லோபமொழியைக் கேட்டுக் காதிரண்டுங் குப்பென்றடைத்துக்கொள்ளக் கதறி, உடல் பதறி, இருகரத்தையு முதறித் தன்னருகிலிருந்த சாதுக்கள் முகத்தை நோக்கி, "ஐயா பெரியோரே, இந்தத் தூதர்கள் அவனி முழுதுந் தேடி யலைந்து வந்து உரைத்ததைக் கேட்டீர்களே, இனி நான் செய்யவேண்டிய காரியமின்னதென இயம்புங்

கள். பாண்டுமக்களைவரும் பாஞ்சாலன் தையலுந் துவாதச வருடம் வனவாசம் பண்ணி, தேகமிளைத்துக் களைத்து ஆவியழிந்து போனார்களா அல்லது அஞ்ஞானவிருளைப் போக்கிச் சுஞ்ஞானச் சுடரெரிக்கச் செய்யுந் தவமுனிவர்களினால் மண்ணாசை பெண்ணாசை பொன்னாசைகளை விட்டு மனோதிடம் பெற்று, விஞ்ஞான விளக்கத்தால் வேதாந்தியானார்களா? ஒரு வேளை யாருமறியாம லஞ்ஞாதவாசங் கழித்து, முடிவி லிவ்விடம் வந்து முளைப்பார்களா? யாதுந் தெரிய வில்லை. அதனை உங்களுடைய உள்ளத்திற் செவ்வையாக நிதானித்து யோசித்துச் சொல்லுங்கள்'' என்று கேட்க, சூரியன் புத்திரனாகிய கர்னன் சொல்லலுற்றான்.

ஓ அரவக்கொடி நிலவிய கௌரவகுல முதல்வனே, என் சொல்லுறுதியைக் கேளும். பாண்டவரைவரும் வனவாசம் பண்ணிப் பன்னிரண்டு வருடத்தையுங் கழித்துக் காடுவிட் டகன்று, நாடுபற்றிச் சென்று, கூடுவிட்டுக் கூடுபாய்வதுபோல் மாறுவேடம்பூண்டு, பெயர் வேறுகொண்டு, குலம்வேறு காட்டி, குணம்வேறு நாட்டி, நீதிநெறி பிசகாமல் ஆசாரம் வழுவாமல், பழையசெல்வம்பாராட்டாமல்அடங்கி ஒடுங்கி, ஆயுதங்களை மறைத்துவைத்து, காலத்திற்குத்தக்ககோலமாக ஒவ்வொரு வேலையிலிருந்து, அஞ்ஞாதவாச வருடமுந் தொலைத்து அப்பால் வெளிப்பட்டு, ஆபரண மணிமாலைகள் பிரகாசிக்கு மார்பினையுடையவராய் ஆயுதபாணிகளாய் இறுமாந்து இவ்விடம் வந்து, 'நாங்கள் முன்னஞ் சூதாடித் தோற்ற நாட்டைக் கொடுப்பாயா, அல்லது போர்தொடுப்பாயா' என்று நம்மைக் கேட்பார்கள். இப்படி அவர்களுயிருடன் வருவார்களென்பதற்குச் சந்தேகமில்லை, வேறாக நினைக்க வேண்டாம். இலங்கிய வலம்புரி மாலையைப் பார்த்து அரம்பையராசை கொள்ள விளங்கும் அலங்கார மார்பனே, என் சொல்லை நம்பும்— என்று வீரப்பிரதாபந் தெரிந்த மேலோனும், மந்திரசக்தி வரோதயனுமாகிய அங்கதேசாதிபன் அறைந்தான்.

### துச்சாதனன் கர்னனுரையை மறுத்து, பாண்டவர் தமக்குட் பகைத் திறந்தன ரெனல்

இவ்வாறிசைத்த கர்னன் கருத்தைத் துச்சாதனன் கேட்டு துடித்து, மனங் கொதித்தெழுந்து, கண்ணுங்கருத்துங் காதும்புகையக் கனன்று அண்ணன் கமலவடியிற் பணிந்து, "ஓ மலையிரண்டு திரண்ட வயத்தோள் வள்ளலே ஏழையாகிய என்சொல்லையு மிரங்கிக்கேட்டருளும்: பாண்டவர்கள் நாட்டை விடுத்துக் காட்டையடுத்த போதே செத்தபிணத்தோடொத்தபிணமானார்கள். அவர்கள் இந்நாள் வரையில் உயிரோடிருந்து இனி இவ்விடம் வரப்போகிறார்களென் றெண்ணுகின்றீர்களா? ஐயோ! பாவம்! அவர்க ளெப்போதே கெட்டு மண்ணில் மக்கிவிட்டார்கள். அவர்களைப்புதைத்த இடமும் புல்முளைத் தாயிற்று. ஐவர்பேரும் மறைந்துபோயிற்று. அக்காரியங்களை நிதானிக்காமற் கர்னராஜன் இப்படிச்சொன்னது தப்பே யல்லாது

வேறில்லை இஃதன்றியும், இவர்களுயிருடனிருந்தாற் பாதாளலோக அஞ்சனம்போன்ற நம்முடைய தூதர்களின் கண்ணில் அவர்கள் அகப்படாமற் போவார்களா? இதுவே நமக்குப்போதுமான சாட்சியா யிருக்க, வேறுவேறெண்ணி விவரிக்கவேண்டிய தென்ன? தேவரீர் கட்டளையிட்டருள்வீரானால், காட்டிற் கஷ்டப்பட்டுக் காலங்கழித்த ஐவர் தாறுமாறு யிறந்ததற்குக் காரணஞ்சொல்லுகிறேன். அதைக் கவனித்தருளும்—

"ஓ பாவலர்புகழுங் காவலர்க்கிறையே, பாஞ்சாலியானவள் மர்மம் விட்டுத் தர்மராஜனை நோக்கி, "ஐயோ பாவி, அன்னமில்லாமல் நானழு கின்றேனே! ஆவியொழிகின்றேனே! ஏழையெளியவர்க்கும் பெண் சாதியானவர்கள் எவ்வளவோ செல்வங்களை இன்பமா யநுபவிக்கிறார் களே! கோழையாகிய உங்களுக்குப் பெண்டாகிய நான் ஏழையாய் யாவர்க்குமெளியவளாய்க் கண்டார்சிரிக்கக் கலங்குகின்றேனே! முகத் திற்கு மஞ்சளுண்டா? நெற்றிக்குக் குங்குமமுண்டா? கூந்தலுக்கு மாலை களுண்டா? குட்சிக்குக் கஞ்சியுண்டா? அஞ்சேலென்பவருண்டா? ஆதரிப்பவருண்டா? ஒஞ்சரித்துப்படுக்க ஓலைப்பாயுண்டா? குந்தியிருக் கக் குடிசையுண்டா? வெளுத்த வாய்க்கு வெள்ளிலையுண்டா? ஆ! ஆ! தெய்வமே, சாண்பிள்ளையானாலும் ஆண்பிள்ளைமேலென்பார்கள். நீங்கள் வேலும் வில்லும் வாளும் பூரித்த தோளுமுடையவர்களா யிருந்து என்னபலன் பெற்றீர்கள்? எனக்கென்ன நலம் வைத்தீர்கள்? நீங்களைவரும் ஆண்பிள்ளைகளிற் சேர்க்கைதானா? உங்களைப்போன்ற வர்களைப் பார்க்கும்போது வெட்கமில்லையா?" என்று நாள்தோறுஞ் சலித்துக்கொண்டு பேசி வீணாய் வெறுத்து அவமதித்தேசி, முகங் கடு கடுத்துத் தினமுஞ் சண்டை தொடுத்தாள்.

"அதனால் தருமராஜன் குக்கல்வாய்ப்பட்ட முயல்போல் மனங் கூசி வருத்தமுற்ற நாளையில், தம்பிமார் நால்வருந் தமையனை யடைந்து, வடவைக் கனல்போற் கொதித்துக் கோபித்து, "அடா துரோகி, உன்னுடன் பிறந்து என்னபலன் கண்டோம். பெண் சாதி பிள்ளைகளை விட்டோம். நாடுநகரங்களைச் சூதாலிழந்து கெட்டோம். சகோதரர்களாகிய துரியோதனனாதியரைப் பிரிந்தோம். உண்டு தின்று உறங்கும் பருவத்தில் உண்ணாமல் தின்னாமல் ஓட் டாண்டியானோம். ஒருவருக்கொரு காசுகொடுக்கக் கதியற்றோம். யுத்தமுனையில் வெற்றிபெறுதற்கும் வகையற்றோம். இனி யுன்னிடத் திற் பொருந்தி யிருப்பது தர்மமா? எங்களை யிப்படி இழிவுபடுத்தியது மர்மமா? பாண்டுவுக்குப்புத்திரராகப்பிறந்த கர்மமா? ஒருபிரயோஜனமு மில்லாமல் உனக்கு ஊழியஞ் செய்ய எங்களை யடக்கி வைத்துக் கொண்டாய். ஓ வேப்பம்வித்துக் கொப்பானவனே!" என்று மரியாதை தப்பி யெதிர்த்துக் கொண்டார்கள். தன்னோடொருநாளு மாறுபட்டுப் பேசாத தம்பிமார்கள் வாயில்வந்தபடி பேசிய வருத்தத்தினாலும், திரௌபதி படுத்துந் தொந்தரையினாலும், தனக்குள்ளிருக்குஞ் சில அசந்தர்ப்பங்களினாலும் அகால போஜனத்தினாலும், காட்டுத்தீ வெப்

பத்தினுலும், மலைக்கானலினுலும், பனியினுலும், தன்னைப் பிடித்த சனியினுலும், தனக்குச் சமமான அரசர்கள் பழித்துச் சின்னத்தனஞ் செய்ததினுலும், பாபமும் பழியுமேலிட்டதினுலும், நம்மிடத்தில் வந்து முகத்தில் விழிக்கப் பவிஷில்லாததினுலும், தன்னுற் கூடிய வரையிலுந் தாழ்ந்து குழைந்து விசனக்கினியால் வெந்து, சஞ்சலத்துடன் சலித்து உயிர் விட்டான் தருமராஜன்.

என்றும் பிரியாமலிருந்த தருமராஜனுயிர்பிரிந்தபோது தம்பிமாருந் திரௌபதியுந் தழுவி யழுது, "அந்தோ! பழுது வந்ததே" என்று பரதவித்து, அண்ணனைப் பறிகொடுத்து மண்ணிலிருந்தென்ன வாரிக் கொள்ளப் போகிறோம்! என்றைக்கிருந்தாலும் நமக்கு மிதுவே கதி யெனத் தேறி இறந்து போனுர்கள். அவ்விடமிருந்த கழுகு-பருந்து-காக்கை முதலிய பட்சிகளும் மிருகங்களும் வயிருரத் தின்று, கழித்து விட்ட எலும்புகள் மண்ணில் மக்கி மறைந்து போயின. அவர்களைக் குறித்து இன்னும் பேசுவது வீண். எனக்கு அநேக விதங்களினுல் திருஷ்டாந்தமாயிற்று. அண்ண, நான் திண்ணமாய்ச் சொல்லு கிறேன். கொல்லனுலையிற் காய்ச்சித் தோய்த்த இரும்பி லேறிய சல மானது திரும்பி வந்தாலும் வரும்; காடேறிய பாண்டவர்கள் இனி நாடேறப் போகிறதில்லை. என் சொல்லுக்கு எதிர் எவர் பேசினுலும் அது ஈடேறப் போகிறதுமில்லை"என்றுரைத்த துச்சாதனன் சொல்லைத் தேவர்கள் விரும்புந் திவ்யக்ஞான இச்சாசுதந்தரராகிய துரோணுசாரி யர் கேட்டுப் பச்சாதாபப்பட்டு, புன்னகை விளைத்துப் பாண்டவர் பக்ஷத்தில் வைத்த பக்ஷமும் அன்பும் பண்பும் யாவருக்கும் பகிஷ்கார மாய்த் தெரியும்படி சொல்லத் துணிந்தனர்.

### துரோணுசாரியார் பாண்டவர் நிலைமை கூறிச் துச்சாதனனுரையைக் கடிதல்

ஓ இராஜாதி ராஜனுன சுயோதன மகாராஜனே, கேளும். உம் முடைய தம்பியாகிய துச்சாதனராஜன் க்ஷாத்திரமாகச் சொன்ன ஆத்திர வார்த்தையை யோசித்துப்பாரும். பாண்டவர்களை இலேசாக நினைக்க வேண்டாம். சிறுபிள்ளை உடுத்திய சிற்றுடைபோற் பேசாதீர் கள். முன்பின் எண்ணிப் பாராமல் முழுமோசம் போகாதீர்கள். முறை தப்பான ஆலோசனை பண்ணுதீர்கள். பாண்டவர்கள் எத்தன்மைய ரென்றுல், வேதமுறை வழுவாத வித்தகர்கள்; விண்ணவர் கொண் டாடு மேன்மை பெற்றவர்கள்; யாவருடைய நாவுக்கு மினிமையான வர்கள்; எத்தலத்தவர்க்கு முதன்மையானவர்கள்; மூவாசை யற்ற முனிவராலுங் காணுதற் கருமையான கண்ணுதலாற் பெற்ற பாசுபத முதலிய பாண வலிமையுடையவர்கள்; மிகுந்த சுகந்த கற்பக மாலை புனைந்தவர்கள்; விற்பன விவேக முயர்ந்தவர்கள்;எங்கும் விளங் கும் இளஞ் சூரியன்போல் தேஜசுடையவர்கள்; மந்திரஞானியர்; எப் புவனமு மதிக்கும் ஒப்புவமை யில்லாதவர்; மருதமரத்தை யுதைத்து இரட்சித்துக் குருந்தமரத்திற் குதித்து விளையாடிய பன்னகசயனனுகிய

திருமாலைப் பாண்டவர் சகாயனென்று யாவருஞ் சொல்லும்படி பெற்று இருமாந்திருக்கும் பார்த்திபர்; காலகேயர் நிவாதகவசர்களுடைய உரத்தையும் வரத்தையும் சிரத்தையும் புரத்தையும் போக்கி, தேவர்கள் இடரை நீக்கி, தேவேந்திரனுக் காதிக்கமுண்டாக்கி வைத்து அழியாக் கீர்த்தி படைத்தோர்; கடலினு முயர்ந்த கண்ணருளுடையோர்; அமுதினுமினிய அன்புடையோர்; சற்றும் பிசகாத ஸத்திய ஸம்பன்னர்; வித்தக மநுநூல் மேம்படு மன்னர்; இத்தன்மையராகிய அத்த வுத்தம வேந்தரைச் செத்தன ரென்பது தகுமோ? அத்தினபுரியில் உத்தமர் கூடிய சபையிற் கூறிய உறுதிச் சபத முடிக்காமற்போவரோ? மத்திமர் கூடி வசைபேசும்படியாய்ச்சாவரோ? பாண்டவரை மாண்டவரென்று மனப்பால் குடியாதீர்கள். அவர்கள் பகைவருக்குப் பாசகரென்று யோசிக்கவேண்டியது. தங்களுண்மையை நிலைநிறுத்தும்படி தவணை நாட்கழித்து இன்னுஞ் சில நாட்களி லிவ்விடம் வந்து சேரப் போகின்றார்கள். நாமெல்லோருங் கண்ணுற் காணப்போகின்றோம். தேனொங்கு மாலைதாங்கும் பூமானே, நான் சொல்லியதைச் செவ்வையாகத் தெரிந்து, உமதுள்ளத்திலுறுதி கொள்ளும்'' என்று துரோணசாரியர் சொன்னார்.

### கிருபாசாரியர் பாண்டவர் பராக்கிரமங் கூறித் துரியோதனாதியர்க் கறிவுறுத்தல்

இப்பால் வில்லின்மறை வல்லவராகிய கிருபாசாரியர், ''நல்ல விவேக சுகபோகமுற்ற வேந்தனே, சத்தியம் விட்ட அசத்தியர்களுக்கு மிர்த்தியு கிட்டி வருமேயன்றி, சத்தியந்தொட்ட உத்தமர்களுக்கு உரிய காரிய நிறைவேறுமுன் மிர்த்தியு எட்டிப்பாராது. ஆதலால், உண்மையுள்ள பாண்டவர்கள் மரணமானார்களென்று அகால மரணத்திற்கு இடமானவர்களே சொல்லுவார்கள். புத்திமான்கள் அவைகளை யொருபோதும் ஒப்புக்கொள்ளார்கள். விம்முதலோடும் சென்ற வேந்தர்கள் ஐவரும் நம்மிடத்தி லொப்புக்கொண்ட பன்னிரண்டாண்டுகளையு மெளிதிற் கழித்து, அஞ்ஞாதவாசங் குறித்து அவரவ ருருவ மறைத்து, எந்த நகரத்திலாவது அடுத்து, எடுத்த காரிய முடிப்பதற்கும் தொடுத்த வேலை நடத்துவதற்கும் காலங் கருதிக் காத்திருப்பார்கள். அவர்களைக் கண்டுபிடிப்பவர்களு முண்டோ! ஓ மண்டல துரந்தரா, அவர்கள் மகா சூரர்கள்; தருமறை முதலிய சாஸ்திர மறிந்த வீரர்கள்; சாதுசங்கப் பழக்கமுற்ற தீரர்கள்; தனகனக வஸ்து வாகன தர்மவிசாரணையிற் குபேரன் போன்றவர்கள்; மகா தவம்பெற்றவர்கள்; மேலான மதியுற்றவர்கள்; ஒருமையும் பெருமையு முதலாய்க் கலந்தவர்கள்; அவ் வைவர்களுள் தருமநந்தனர் சதா நிஷ்டர். அவர், வறுத்தலும் பொறுமையும் அழுக்காறின்மையும் நற்குண நற்செய்கையும் புறங்கூறுமையு முடையவர். தம்பிமாரிடத்தி லன்பு தவறாமல், அவர்களிஷ்டப்படி மாறுபடாது நடந்து, காலத்திற்குத் தகுந்த புத்தி யுக்திகளை யெடுத்துக் காட்டி அவர்களைத் தம் வசப்படுத்திக் கொண்டிருக்கத்தக்கவர். அந்தத் தம்பிமார்களோ, தமையன் சொல்லுத்

கிரண்டில்லாம லிருந்து, அவர் கீறிய கோட்டைக் கடவாமல் நடந்து, தமையனைத் தந்தையாக உட்கொண்டு நிந்தைதேடா திருப்பவர்கள். ஆதலால், அவர்களுக் கொருபோதும் பொல்லாங்கு நேரிடாது. அப் பேர்ப்பட்ட அறிவாளிகள் மனவெறுப்பினுல் ஜேஷ்டனைத் தாறுமாறு கப் பேசி, அவரு மிறக்கத் தாங்களும் இறந்தார்களென்பது மாச்சரிய மன்றி ஆச்சரியமல்ல. அந்த நினைப்பை முற்றும் மறந்து எப்படியு மிவ்விடம் வருவார்களென்னும் எண்ணம் வைத்து, அவர்கள் வந்து விட்டால் அதற்கு என்செய்வோமென்று அச்சத்தோ டிருக்கவேண் டும். ஓ மதிகுலவரசே, அவருள் அர்ச்சுனனே, அசகாய சூரன்; அதிரதவீரன்; மூன்றுலகையும் வெல்லுந்தீரன்; சுந்தரத்திற் சொகு சுடைய மாரன்; தேவதாஸ்திரந் தெரிந்த கௌமாரன், பீமனெப்பேர்ப் பட்டவனே? ஊழிக்காலத்து யமன்போல யுத்தம்பண்ணத்தக்க சண் டப்பிரசண்ட கண்டதரன், சாந்தகுண தருமராஜன் சண்டை செய்ய வந்தாலோ திரிபுவனமுந் திக்கென் றெரிந்துபோம். வடவாமுகாக்கினி யும் வாடிச் சாம்பராய்ப் போய்விடும். அவருடைய மகிமையை யாரு மறியார்கள். அறியத்தொடங்கினு லளவிறந் திருக்கும். ஓ அரவக் கொடியோனுய் விளங்கும் அரசனே! இளையவரிருவர் எத்தன்மைய ரெனில், இராம பாணத்திலுங் கொடிய அம்பினை யுடையவர்கள்; பரதன் போலும் இலக்குமணன் போலும் விரதங் காப்பவர்கள். பாஞ்சாலியோ பதிவிரதைகளுக்கெல்லாம் அதிதேவதை யானவள்; சொல்லைக்கடந்து சொற்புகலாதவள்; பல்லைத் திறந்து பலுக்கறியாத வள்; இல்லையென் றுரைத்தல் என்று மில்லாதவள்; வல்லவர் தம்மால் மாறு கொல்லாதவள்; துடிப்பினையுடையவள்; தூற்றலிலாதவள்; நற்குண நற்செய்கை வாய்ந்தவள். இப்பேர்ப்பட்ட எழிலுடைய மானுள் தருமராஜனுடனே வெறுத்துச் சண்டைபோடலாயினு ளென் பது, தவறிலுந் தவறே. இவர்கள் முக்கியமாய் அஞ்ஞாதவாசந் தொலைந்து இவ்விடம் வருவார்கள். உங்களெண்ணத்தைப் பார்த் தால் அநர்த்தம் விளையுமென்பதற்கு ஐயமில்லை. அவர்கள் வெளிப் படுவதற்கு முன் எவ்வகையிலாவது கண்டுபிடித்து, சபையிற் பேசி யிருக்கிறபடி மறுபடியும் வனவாசம் போகச் செய்வோமானுல் நாம் சுகப்படலாம். அப்படிச் செய்யாவிடில், அர்ச்சுனன் கணை அதிக்கிர மித்து வந்து நம்மைக் கொண்டுபோய் நமனுலகத்திற் சேர்க்கும். இஃதன்றியும் வேதியர்க்கு வேதமே கண்கள். க்ஷத்திரியருக்குத் தூதரே கண்கள். ஆகையால், நீங்கள் சாரணரை விடுத்து முன்ஜாக் கிரதைப்பட வேண்டும். நமது யுக்திக்கு மேலான யுக்தியையுடைய வர்கள் பாண்டவர்கள்; ஆண்டவனருளைப் பெற்றவர்கள்; எவர் கண் ணுக்கும் அகப்படார்கள். பகலளவு போனுலொழிய இரவு வாராது. இரவளவு சென்றுலல்லது பகல் தோன்றுது. அதுபோல் உருவ மறைந் துறையும் பாண்டவர்கள் அஞ்ஞாதவாசங் கழித்து வெளிப்படுவார் கள். நமது பலாபலத்தை நாமெண்ணி மெச்சும்போது எதிரிக ளின் பலாபலத்தையு மெண்ணித் துணியவேண்டும். இப்படிக்கெல் லாம் யோசித்து ஒன்றைச் செய்தால், என்றென்றைக்கும் பழுதுண்டா

காது. அதைவிட்டு துராலோசனை செய்வதினுற் பிரயோசன மென்ன ? என்று கூறி முடித்தார்.

### பீஷ்மாசாரியார் பாண்டவருள்ள நகர் இவ்வித இயல்புடையதாமென அறிவித்தல்

இந்தப்பிரகாரந் துரோணுசாரியருங் கிருபாசாரியரும் பேசிய விவ ரங்களைச் சபையிலிருந்த சகலருங்கேட்டு, பெரியோர்களின் கருத்தைத் தங்கள் தங்கள் புத்திக்கிசைந்தபடி யோசித்து முடியப்போகிற காரண காரியங்களை நிதானித்து, வாய்மூடி மௌனம்போலிருந்தார்கள்,அந்த வேளையில் கௌரவகுலப் பிதா மகனுகிய பீஷ்மர் துரியோதனனைப் பார்த்து, ''அப்பா, திருதராஷ்டிரனுக்குப் புத்திரனும் எனக்குப் பௌத் திரனுமான சுகோத்திரனே, நீ தூதர்களை யனுப்பிப் பாண்டவர்களைத் தேடச் சொன்னது ஞாயமே. அவர்கள் தேசமெங்கும் தேடிப்பார்த்துத் திரும்பிவந் துரைத்தது அபாரமே. அதற்காகக் கர்னராஜன் பேசியது நேயமே. உன் தம்பி துச்சாதனன் அறைந்தது உனக்கு அநியாயமே. துரோணுசாரியருங் கிருபாசாரியரு மொழிந்தது காயமே. நீ அந்தப் பாண்டவர்களை எப்படியுங் கைப்பிடியாய்ப் பிடிக்க வேண்டுமென் றெண்ணுவது உபாயமே. இதனுற் காரியமில்லை. பாண்டவர்கள் பன் னிரண்டு வருஷம் வனவாசஞ்செய்து அஞ்ஞாதவாச மோராண்டு தொலைப்பதற்குன்னி, தங்களுருவ மறைந்து, ஒரு தேசத்தி லுறைந்து, முக்காலே மூன்றுமா முக்காணி வருஷமுங் கழித்து விட்டார்கள். இப் போது நீங்கள் ஐவர்களைக் கண்டுபிடிக்குமுன் மற்ற நிகரற்ற மாகாணி வருஷத்தையும் ஒழித்துவிட்டு வெளிப்படுவார்கள். அப்பேர்ப்பட்ட அறிவுடையோர்களை மரணமடைந்தாரென்று பேசினவர்கள் அந்தப் பாண்டவர்களால் மரணமடையத் தக்கவர்களேயாவர். அத்தன்மை யான அவசரப்பேச்சை எத்தன்மையோ னெடுத்திசைத்தாலும் புத்தி மானுகிய நீ எள்ளளவும் நம்பக்கூடாது. ஆனுல் ஐவரிருக்குமிடத்தை நீங்க ளறியவேண்டுமென்னும் முக்கியமுளதாக, முந்நூலாசிரியர்க ளால் அதற்கோர் உபாயமுண்டா யிருக்கின்றது. அந்தக் குறிப்பின் வழியை நான் குறிக்கின்றேன். நீங்கள் நிதானித்துக் கொள்ளுங்கள்'' என்று காங்கேயர் சொல்லத் தொடங்கினுர் :—

''அப்பா துரியோதனு, பிரமாதி தேவர்களேயன்றி முனீச்வரர்களா லும் ரிஷீச்வரர்களாலும் மதித்தற்குரிய தர்மராஜனும்,திரௌபதாதேவி யும், சகோதரர்களும் ஒன்றுய்ப் பொருந்தி வாழ்கின்ற நாடும் நகரமும் மாதமும்மாரிவருஷிக்க வளங்கொண்டிருக்கும்;காடுகரம்புள்ள வனங்க ளெல்லாந் தேன்வாரி கசிந்துகொண்டிருக்கும்; ஆறுகுளத்தி னலைகள் யாவும் நவரத்தினங்களைக் கொழித்துக்கொண் டிருக்கும் ; கழனிகளி லூர்ந்து தவழாநின்ற சிப்பிகள் முத்துக்களை முறைமுறையே ஈன்று கொண்டிருக்கும் ; கருங்கடற் கரைகளிற் சிவந்த பவளக்கொடிகள் படர்ந்திருக்கும்; காடுகள்தோறுந் தேடுதற்கரிய பொருள்வளம் நிறைந் திருக்கும் ; பசுவினங்கள் வேளைக்குப் பத்துபடி பால் கறக்கும் ; வெகு

ஜனங்கள் நடக்கும் வழிகளெங்கும் கரும்பாலை சிறக்கும்; எப்போது முப்போகந் தவருமல் விளையும் ; நித்தியசுபமங்களமாயிருக்கும்; அருந்ததியைப்போற் பதிவிரதையான ஸ்திரீகள் பொருந்தியிருப்பார்கள் ; சாரபயம் வராது; சோரபயமிராது. தெருக்கள்தோறும் தருமக்கொடி நாட்டியிருக்கும் ; போர்முகத்தில் வெற்றிக்கொள்ளும் ஜயக்கொடி காட்டியிருக்கும்; வண்டினம் மதுவுண்டு மகரந்தந் தோய்ந்து காந்தாரம் பாடும்; அந்நகரப்பதியோர் அண்டினபேரை யாதரித்துக் கீர்த்திப் பிரதாபம்பெற்று ஜீவகாருண்யராயிருப்பார்கள்; துர்ச்சோபம்துர்ப்பயங்கரம் துர்மரணம் துர்வியாதி முதலிய தேகபீடை வாரா; யோகமார்க்க நெறிதேடித் தீவினையொழிந் திருப்பார்கள். பொதுச்சாலையில் கட்டிய ஆராய்ச்சிமணி என்றுமசையாது; அசையும்படியான அக்கிரமங்களுமிராது. எளியவரென்றும் வலியவரென்றும் பாராமல் யாவர்க்கும் நடுவு நிலைமையான நீதியொன்ருயிருக்கும். எவர்க்கு மறிவுகுறையாது. சகல கலைக்கியானங்களுந்தவருது. உடனுக்குடனே துஷ்டநிக்ர சிஷ்டபரிபாலனம் நடந்தேறிவரும். ஆசாரபூசாவிதிகள் அதிகமாயிருக்கும். தேவாலயம் விஷ்ணுவாலயம் மிகுதியாய்ச் சிறப்புற்றிருக்கும். பாபத்திற்குங் கோபத்திற்கும் பயந்தடங்கி வாழ்வார்கள். புண்ணியத்திற்கும் பொறுமைக்கும் பொக்கிஷமா யிருப்பார்கள். தைரியம் கல்வி ஞானம் குணம் பெருமை மேன்மை தபம் ஜபம் தானம் நிதானம் வெகுமானம் சன்மானம் வேத மந்திரம் வேள்வி ஓமம் பூரணகும்பம் புண்ணிய போஜனம் நவமணிமாளிகை ஆக இவைகளனைத்தும் எங்குஞ் சிறந்திருக்கும். சுபமங்கள கல்யாண முரசும் தியாகமுரசும் வெற்றிமுரசும் வலம்புரிச்சங்கங்களுமெங்கெங்கு முழங்கிக் கொண்டிருக்கும். காயாமரங் காய்க்கும்; பூவாமரம் பூக்கும்; கமலக்கருணைக் கண்ணனும் மகாலட்சுமியுடன் வாசமாயிருப்பார். இத்தன்மையாகிய உத்தம நகரமெதுவோ அதுதான் புண்ணிய புருஷர்களிருக்கும் பதியென் றுணர்ந்துகொள்ளும். பெரியோர்கள் பேசிய வண்ணம் நானு முண்மையாகச்சொன்னேன். இனிமேலுன்னுடைய வல்லமையினுல் யோசித்து உறுதிசெய்துகொள்ள வேண்டும்''— என்று பீஷ்மர் விளம்பினுர்.

### கிருபாசாரியர் துரியோதனனைச் சொற்சோர்வு படலாகாதெனக் கடிதல்

இவ்வாறு பீஷ்மர் கூறியவனைத்துங் கேட்ட கிருபாசாரியர் மன மகிழ்ந்து வணங்காமுடி மன்னனை நோக்கி, ''ஓ வில்லும் வேலுந் தாங்கிய வேந்தே, உமதெண்ணப்படி முடியும் வண்ணஞ் சுளுவான சூழ்ச்சியை உங்கள் பாட்டனுர் சொல்லிவிட்டபடியால், திண்ணிய தூதரை விடுத்துத் தேடச் செய்வதற் கிதுவே நல்ல ஆதரவு'' என்றிசைத்து ''அன்புடைமையை ஆபரணமாகவுடைய பாண்டவர்கள் இராஜ சபையிற் சொக்கட்டாணுடித் தோற்றநாளில், என்போலொத்தவர்களேற்படுத்திய வாக்கியம் பழுதுபோகாமல், பன்னிரண்டு வருடங் காடுறைந்து ஒருவருடம் நாடுறைந்து காலங்கழிப்பதற்காகத் தங்கள்

தங்கள் வடிவத்தை மறைத்திருப்பார்களென்பதற் கையமில்லை. பூருவ மிந்த இராஜசபையிலுடன்பட்டுப் பேசின பேச்சின்படி சொற்சோர்வு படாமல், விவகாரப்பழுதுவராதபடி தவணை நாளைத்தவிர்த்துக்கொண்டு மெய்வழி நின்றார்கள். ஆதலால், நீர் முன்னம் அவர்களை நோக்கி, "ஓ பாண்டவர்களே, இப்போது பெரியோர்கள் கூறிய இந்தப பதின் மூன்றுவருடமுஞ் சென்றபிற்பாடு நீங்களிவ்விடம் வருவீர்களானால், உங்கள் நாட்டை யொப்புவித்துவிடுகிறேன்" என்று உறுதியுடன் எங்களுக்கு முன்பாக சொல்லியிருக்கின்றீ ரல்லவா? நீர் அப்போதுரைத்த வாக்கியத்தை இப்போது தவறி யேதேதோ பேசுகின்றீர். இன்னும் பாண்டவர்களைக் கண்டுபிடித்துப் பின்னும்பன்னிரண்டுவருடங்காட்டிலோட்டிவிட வேண்டுமென்று மெத்தப் பிரயாசையுடன் சித்தப்பிரமை யடைவது அநியாய மல்லவோ? ஐயோ! தலைபோங்காலம் நேரிட்டாலும் சரீரத்தைவிட்டு உயிர்கெட்டாலும், உம்மைப்போலொத்த உத்தமன் சொல்லைத்தப்பிச் சோர்வடையலாமோ? அப்படி நிலைதவறுவீரானால், உமதரசாட்சி என்ன பிரயோசனத்தைப் பெறும்? உம்மை யார்தான் மதிப்பார்கள்? ஆனால் எனக்கொன்று தோன்றுகிறது. பாபங்களைந்து பாராளும் பார்த்திபரிடத்திற் சத்தியந்தப்பிய குணந் தோன்றுமாகில் அவர்களினரசாட்சி பரராஜர் பங்காய்விடும். அஷ்டலட்சுமியுமகன்று கஷ்டலட்சுமி கலந் துறவாடுவாளென்று வேதத்தில் விளம்பியமொழி யொன்றுண்டு. அதை யுன்னுமிடத்தில் உம்முடைய செல்வமுழுமையுஞ் சத்தியவான்களாகிய ஐவர்களுடையதென்பதற்கு யாதொரு சந்தேகமுமில்லை. இதை நீர் செவ்வையாயோசித்துப்பார்த்து உம்முடைய நாவைக் காத்துக்கொள்ளும். ஓ சந்திரகுலத்தோன்றலே, ஆதிகாலத்தில் நாங்களெல்லோரும் உம்முன் கூடிக் குலாவியிருந்து பேசிய விதமென்ன வெனில்: பாண்டவர்கள் வனவாசம் பண்ணிவந்தால், அவர்கள் நாட்டைக் கொடுத்துவிடுவதெனுந் தீர்மானமேயன்றி வேறொன்றுமில்லை. இப்போது உமக்கிஷ்டமாகிய தம்பிமார் முதலிய பேர்களோடு நீருந் தாறுமாருய்ப்பேசுவது சரியல்ல. அறியாதவர்கள் அப்படி பேசினாலும், பெருமையும் நிலைமையுமுடைய பெரியவராகிய நீர் பேசப் படாது. உங்கள் குணத்தை நிதானிக்குமிடத்தில் நீங்கள் நினைத்த கருத்தை நேரேயறிந்தோம். நீங்களொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைக்குமென்னு நெறி யறியீரோ? நீங்க ளெண்ணிறந்த நாள் தேடினாலும் உங்கள் கண்ணுக்குப் பாண்டவர் அகப்படப்போகிறதில்லை: அவர்களைக் கண்டுபிடிக்குஞ் சாமர்த்தியமு முங்களிடத்திலில்லை. அப்படிக் கல்லவென்று காண்பதற் கெத்தனிப்பீர்களானால், வீணனபழியும் மேலான இழிவுங் குறைவும் நேரிடுமேயல்லது, நிறைவேருது. அவர்களெந்நாளும் நன்னுளாகவே யனுபவிப்பார்கள். ஆச்சுது! அஞ்ஞாதவாசமும் பண்ணிவிட்டார்கள். நீர் கங்கணங்கட்டிக் கொண்டுஇதுவரையிலுந்தேடவிட்டிருந்த தூதராற்பாண்டவரிருக்கும் ஸ்தானந் தெரிந்துகொள்ளாமற்போனீர். இனிமேல் தேடிவிட்டென்ன லாபங்காணப்போகின்றீர்? வீண் ஆலோசனையாற் பிரயோசனமில்லை,

யாதொரு காரியத்திற்கும் முன் ஜாக்கிரதை யென்ப திருக்கவேண்டும். பின் எண்ணிப் பார்ப்பது பேதையர் பக்ஷம். தவணை நாட் கழியுங்காலை யில் தடவிப் பார்க்கத் துணிவது மேன்மையோர் பக்ஷமல்ல. ஆயினும் பாகீரதி பெற்ற கோமுனியாகிய பரிசுத்த ஹிருதயமான பீஷ்மர் சொன்ன குறிப்பின்படி தூய்மையும் வாய்மையும் பொருந்திய தேசம் எவ்விட மிருக்கிறதென்று அதையாகிலுந் தெரிந்து கொள்ளும், அப் பால் மற்ற காரியம் யோசிக்கலாம்'' என்று பூர்வாசாரியராகிய கிருபா சாரியர் பேசி முடித்தார்.

#### தூதர்கள் துரியோதனனுக்கு மச்சநாட்டு வளமும், அந்நாட்டில் நடந்தவிதமுங் கூறுதல்

அப்போது அவரிடத்தில் விசுவாசமுள்ள துரியோதன மகாராஜன் மனம் வருந்தி, மாநிலமெல்லாந் தேடித் திரிந்தலைந்து வந்த சாரணர் களை நோக்கி, ''நீங்கள் பார்த்த தேசத்தில் எங்கள் ஐயா அவர்க ளுரைத்த வார்த்தையின்படி அழகும் வளமும் அன்பும் நோன்பும் நேயமும் நிலையும் நீதியும் நெறியும் மானமும் தியானமும் வண்மை யும் பண்பும் இசைந்திருக்கும் பட்டணம் யாதோ அதைத் தெரியச் சொல்லுங்கள்'' என்று கேட்டான். உடனே வேவுகார ரெல்லோருங் கூடி, அரவக்கொடியோனுடைய அடிமேற் பணிந்து, வந்தே பராக்! பெரிய மூதாதை பேசியபடியே மாதமும்மாரியின் யோகமும், பூதலப் பயிர் பொருந்து முப்போகமும், ஆதுலர்க்களிக்கும் அன்ன முதலாகிய தியாகமும், மற்றச் சீருஞ்சிறப்பும் திகழுநர் செல்வமும், அறம்பொரு ளின்ப மேம்பாடும், நிறந்தரும் பசுக்கள் நெருக்கமும், பரிசுத்தப் பெருக்கமும், பாபச் சுருக்கமும் படையின் வருக்கமும், வாழை கமுகு தெங்கு கரும்பு முதலியவைகள் வளம்பட விளைந்து, பார்ப்பவர் மனத் தையுங் கவர்ந்து, மேன்மேற் சிறந்த நாடு மச்சநாடல்லது மற்ற நாடில்லை. வேறே மாற்றிச் சொல்லுவதற்கும் வகையில்லை. எங்கு மாராய்ந்துணர்ந்தோம். அந் நாட்டின் மகிழ்ச்சியை நாங்களென் னென்று சொல்லுவோம்? ஓ எங்கு மிசைபெற்ற ஏந்தலே, நம்முடைய பிதாமகர் பேசிய வார்த்தை பிசகன்று. அது சத்தியமே; மேலும் அம் மச்சநாட்டில் மற்றோராச்சரியத்தைக் கேளும். யாரோவொரு பெண் ணுனவள் சைரந்திரியென்றும் மாலினியென்றும் பணிப்பெண்ணென் றும் வண்ணமாமகளென்றும் பேர்கொண்டு விராடராஜனுடைய மனைவியினிடத்தில் வந்து சேர்ந்திருக்கின்றாளாம். அவள் பேரிற் கீச கன் ஆசைகொண்டு துரத்தினானும். எவனோவொரு கிங்கரன் குறுக்கே நுழைந்து, அவனைப் பிடித்தெறிந்து வீசினானும். சபையிலிருந்தவர்க ளேசினார்களாம். அந்தக் கீசகனையும் அவன் தம்பிமார்களையும் அன் றிரவில் மோசஞ் செய்து, பொழுது விடியுமுன்னமே சிலர் கொன்று போட்டார்களாம். இவ்விதமாகக் கொன்றவர்கள் யாரென்றுவிசாரிக்கு மிடத்தில், மேற்கூறிய வண்ணமாமகளுக்கு மெய்க்காவலர்கள் விண் ணுலகிற் சஞ்சரிக்கும் கந்தர்வரைவரென்று மண்ணுலகெல்லாம் பேசிக்கொள்ளுகிறார்கள். நாங்களதை நன்றாயோசிக்குங்காலத்தில் அந்

தக் கந்தர்வரைவரும் பாண்டவர்களென்று துணிபாய்ச் சொல்லு வோம்; இதுவே நிச்சயம்'' என்று ஸ்திரமாகச் சொன்னார்கள்.

### துரியோதனன் தூதுவர் சொல்லைச் சன்மானித்துச் சபையாரை வினவுதல்

இப்பால் துரியோதனராஜன் சாரணர்கள் கூறிய ஸ்திர வார்த்தை யையும், பீஷ்மர் மனங்குவிந் துரைத்த சத்தியமொழியையுஞ் சேர்த்து, தன் கருத்துக்கிசையச் சீர்தூக்கிப் பார்த்துக் காரண காரியத்தை யோசித்து, தனது பூரண மனதோடு இதனை பேசத் தொடங்கினன் :

ஐயா, கிருபைக்கடலாகிய பெரியோர்களே, கேளுங்கள். கீசகன் பீமசேனன் சராசந்தன் பகாசுரன் மத்திரராஜன் பலதேவன் இவர்யாவ ரும், இந்திரன் முதலிய பேர்களால் புகழத்தக்க தோள்வலிமை யுள்ள வர்கள். பதினாயிரம் யானைகளின் பலம் படைத்தவர்கள். இவர்களில் ஒருவரை ஒருவர் கொல்லலாமேயன்றி மற்றொருவரால் மடியாரென்று பெரியோர்கள் பேச நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அப்படியிருக்க, கந்தர்வர் வந்து கீசகர்களை மடித்தாரென்பதை யெப்படி நம்பலாம்? அந்தச் சைரந்திரி நிமித்தமாய்க் கீசகர்கள் சங்கரிக்கப்பட்டார்களென் பதை உன்னியோசிக்குமளவில், அவள் சைரந்திரியல்லள் திரௌபதி யென்றும், கந்தர்வரல்லர் பாண்டவரென்றும், அப்பாண்டவரில் பீம சேனனே கீசகர்களை நாசஞ் செய்தவனென்றும், இவர்கள் யாவரும் பெட்டியிற் பாம்புபோலடங்கி விராடபுரத்தி லிருக்கிறார்க ளென்றும் கெட்டியாய்ச் சொல்வதற்கு யாதொரு அட்டியுமில்லை. அதே னெனில் வல்லிரும்பெனத் திருந்திய புயவலி பொருந்திய யக்ஷகர்கள் அமரர்கள் நாகர்கள் அசுரர்கள் இராக்கதர்கள் கந்தர்வர்கள் முதலாகிய யாவரும் அந்தக் கீசகன் வல்லமைக்கு ஆற்றமாட்டாமல், கால்கை நடுங்கி யொடுங்கி யிருந்தார்கள். இவர்களிலொரு பிரிவினராகிய கந் தர்வர் வந்து கொன்றார்களென்பது எனக்கு மிகவும் ஆச்சரியமா யிருக்கின்றது. தேன்றுளிக்கு முடியோனாகிய கீசகனை மடித்தவன் காமனுக்கொப்பாகிய பீமனென்று நினைப்பதற்கு யாதுஞ் சந்தேக மில்லை. வண்டு மொய்க்குங் கொண்டையினையுடைய வண்ணப் பெண் வடிவினுள் ஐவர்க்குரிய தேவியே! இதற்கு ஐயமென்பதில்லை. ஆகையால் பாண்டவர்கள் விராடபுரத்தில் மறைந்திருக்கின்றார்கள். அஞ்ஞாதவாசத் தவணை கழிக்குநா ளின்னுமிருக்கிறபடியால் தாங்கள் வெளிப்படாமல், இரக்சியமாய்ச் சிங்கபல கீசக னுயிரைத் தீர்த்து விட்டார்கள். இதற்குமேல் நடக்கவேண்டிய யோசனை யென்ன? இன்னதென்று உரையுங்கள், பொன்னனைய பெரியோர்களே'' என்று ஐயங்கொண்டாடும் புயங்கக்கொடியோன் கேட்க, சூரியகுமாரனாகிய கர்னன் ஒரு மொழி யுரைக்கலுற்றான்.

### கர்னன் மச்சநாட்டிற் பாண்டவரைக் காண்பதற்கேதுகூற, திரிகர்த்தன் பூர்வ பகை நாடி அங்கு செல்லத் துரியோதனன் யுத்தசன்னத்தனாதல்

''ஓ மணங்காதலிக்கும் வணங்காமுடி மன்னனே, நீர் எண்ணி யதே உண்மை; இன்னுமேன் தாமதம்? மேகமண்டலத் தளாவிய

தேர்விதங்கள், மும்மதம்பொழி யானையினங்கள், குப்புற்றுலாவுங் குதிரைத்திரள்கள், ஆலாலம்போன்ற காலாட்கள் இவைகளுடன் இக்ஷணமே புறப்பட்டு, மச்சநாட்டை வளைத்துப் போர்கொடுத்துப் பசுக்கணங்களைத் தடுத்து நமதூர்புக விடுத்து, கண்மூடிக் கண்திறப்பதற்கு முன்னமே கலகம் விளைத்து விடுவோம். நாம் எண்ணிய வண்ணம் பாண்டவர்களிருப்பார்களானல், விராடராஜனுக்குப்பரிந்து நம்மேற் சண்டைக்கு வருவார்கள்; சும்மா யிருக்கமாட்டார்கள். அவர்களைக் கண்டுபிடித்து நமக்குள்ள விவகாரஞ் செலுத்தலாம். அவர்க ளவ்விடத்தி லில்லாமற்போனல் மடக்கிய பசுமந்தைகளெல்லாம் நமக்கு அடைக்கலமாகும். இதுவே பாங்கு'' என்று அங்கதேசராஜன் சொல்ல, அங்கிருந்த அரசர் யாவரும் பொங்கிப் பூரித்து, சம்மதமென் றிரைந்தார்கள். பெருமையுடைய துரியோதன மகாராஜனும் இக்கருத்துக் கொத்திருந்தான். அந்த வேளையில் திரிகர்த்த தேசாதிபனாகிய சுசர்மா எழுந்து, கரத்தைச் சிரத்திற் குவித்துப் பணிந்து, ''கௌரவ குலாதிபனே, முன்னொருநாள் சேனாபதியாகிய கீசகனுக்கும் எனக்கும் போர் விளைந்தது, அப்போது அவன் விராடன் முதலிய மன்னர்களுடன் வந்து வளைத்து, என்னைப்பிடித்து இறுகப் பிணித்துத் தன் நகரத்திற் கொண்டுபோய்விட்டான். அவன் கையை விட்டுத் தப்பிவரப் பட்ட பாடு தெய்வமறிந்தது. அந்தப் பகைவனை வெல்வதற் கென்னுற் கூடாமையால், அந்நாள்முத லிந்நாள் வரையிலும் நன்னுள் நமக்கெப்போதுவருமென்று நான் காத்திருக்கிறேன். காமாந்தகனாகிய கீசகன் வாசஞ்செய்த மச்சதேசத்திற்கு என்னைப் போகச் சொல்வீரானல், விராடன் முதலிய வேந்தரைப் பிடித்துக் கட்டி, என் மனத்தில் வெந்துகொண்டிருக்குங் குரோதத்தையுங் காட்டித் திட்டி, அந்த விராடன் மைத்துனனாகிய கீசகன் என்னைப் படுத்திய அவமானத்தை இவன்பாற் படுத்தி, அவ்விடத்தி லொளிந்திருக்கும் பாண்டவரைப் பக்குவமா யறிந்து, மச்சராஜன் வளப்பங்களைக் கைவசப்படுத்திக் கீசகன் பலத்தால் நமக்குக் கப்பணங் கட்டாதிருந்த கர்வத்தை யடக்கி; பசுமந்தைகளையு மடக்கி அஸ்தினபுரம் வந்து சேருகிறேன்'' என்று திரிகர்த்தன்சொல்ல, இராஜாதிராஜன்நகைத்து, ''இவன் படையிலு மொருவன் கொடையிலு மொருவன்'' எனப் புகழ்ந்து, ''அண்ணு கர்ணு, சுசர்மா சொல்லிய வாக்கியம் உமக்கெப்படி யிருக்கின்றது?'' என்றுகேட்டான், கர்னன் ''அடடா, இப்பொழுதே யப்படிச் செய்வது உத்தமம்'' என்றுன். துரியோதனன் அப்பொழுதே சேனைகளைச் சேகரிக்கும்படி உத்தரவுசெய்து, சுசர்மாவுக்கு வரிசைகளுந் தாம்பூல மரியாதையும் நடத்தி, அண்டகடாக மதிரும் வாத்தியங்களுடன் சண்டைக்கனுப்பினன். திரிகர்த்தனுனவன் விந்தகிரிக் கொப்பான தேரேறி, பூலோக தேவேந்திரன்போற் புறப்பட்டுச் சிறப்புப் பொருந்திய விராடபுரத்தின்மீது போர்புரியப் போயினன்.

அப்பால் நந்தியாவட்டமாலை யணிந்த நராதிபன் சபையிலுயர்ந்த சாதுக்களை நோக்கி, ''ஓ பெரியோர்களே, பூர்ணஞானப்

புண்யசீலராகிய மூதாதை புகன்ற குறிப்பிற் கிணங்க, நமது தூத ருரைத்த சொற்களினாலும், என்னுடைய நிச்சயத்தினாலும், அந்த விராடபுரத்திற் பாண்டவ ரிருக்கின்றார்க ளென்பது பரிஷ்காரமாய்த் தெரியவந்தது. அதற்குக் காரணமென்னவெனில், கேகயராஜ குமாரனாகிய கீசக னிறந்த காட்சியே சாட்சியாய்விட்டது. இப் போது நம்மிடத்தினின்றும் விடைபெற்றுத் தண்டெடுத்துப்போன திரிகர்த்தனானவன் மச்சநாட்டிற் புகுந்து மாட்டை மடக்குங் காலத்தில், எதிரிகள் சும்மாவிருக்க மாட்டார்கள், எவ்விதத்தி லேனும் அவர்கள் மேல்விழுந்து போர்கொடுத்து மாட்டைத் திருப்பிக் கொள்ளுவார்கள். அப்போது நம்மிடத்தினின்றுஞ் சென்ற திரிகர்த்தன் அம் மச்சநாட்டாருடைய ஆயுதங்களா லடிபட்டு முனை கெட்டு, முறிபட்டு, பிடித்த பசுக்களை விட்டு முதுகிட்டோடி வரும்படி நேரிடும். அப்படி நேர்ந்த பிற்பாடு அவ்விருத்தாந்தத்தைக் கேட்டு, அதற்கேற்றபடி நாம் படையெடுத்துப்போவது நன்மையா, அல்லது இப்பொழுதே செல்வது நன்மையா? இதனை நீங்கள் யோசித்துக் கூறுங்கள்'' என்றுகேட்க, புத்தியிற் சிறந்த கர்னன் மனம்பூரித்து ''ஓ கொற்றவனே, வித்தக விராடராஜன் தன் மைத்துனனாகிய கீசகனை யனுப்பி, அடிக்கடி யுத்தம் பண்ணச்சொல்லி நம்மைத்திடுக்கிடப்பண் ணிக்கொண்டிருந்தானன்றோ? அந்த வஞ்சந்தீர நாம் அவனைத் தண் டிக்கவேண்டும். ஆதலால், உமது பெரியவர்களின் அனுமதிக்கேட்டு பெருஞ்சேனைப் படைகூட்டிப் புறப்பட்டுப் போர் மாட்டு''என்று கழற, அவன் மொழியைத் துரியோதனன் சிவன்மொழியா யுட்கொண்டு பின்னும் பெரியோர்களைப்பார்த்து, நான் நினைத்த நினைப்புக்கென்ன சொல்லுகின்றீர்கள்? உங்கள் கருத்தையு மொளியாமல் வெளியிடுங் கள்'' என்று வினவினான். அப்போது அங்கிருந்த விரதப்பொருளாகிய கிருபாச்சாரியரும் மெய்த்தவ வித்தக பீஷ்மரும், வேத வித்தாகிய துரோணாசாரியரும் படையெடுத்துப் போகவேண்டியதே முக்கிய மென்று சம்மதித்து, போதுபோன பிற்பாடு போவோமென்றுரைத்தார் கள். அந்தமொழியைச் சர்ப்பக்கொடியோன்கேட்டுச் சந்தோஷித்துச் துச்சாதனனை யழைத்து, ''ஓ எனக்கு நற்றுணையாகிய தம்பி, இரதகஜ துரக பதாதிகள் முதலிய சேனைகளைப் பிரயாண பேரிகை அறைந்து புறப்படச்செய்'' என்றான். அவன் அப்படியே செய்வோமென்று போய்ப் பிரயாண பேரிகை முழக்கிவைத்தான். உடனே புள்ளிப்படந் திருந்திய நாகக்கொடி பொருந்திய சுயோதனன் தம்பிமாராகிய அத் துச்சாதனனோடு தொண்ணூற்றென்பதுபேரும், சல்லியராஜன் சௌ பலராஜன் சகுனிராஜன் கர்னராஜன் முதலிய இராஜர்களும் துரியோ தனனுடைய கெட்ட நினைவின்படி யுத்தகோலங்கொண்டிருந்தார்கள்.

### திரிகர்த்தன் பசுநிரைகளை மடக்குவதைக் கண்ட கோபாலர் அவனோடெதிர்த்து இளைத்தோடி விராடனுக் கறிவித்தல்

இவர்கள் செய்தி இங்ஙனமாகக் கொத்துச் சித்திரவேலை பதித்த இரதத்தைச் செலுத்திக்கொண்டு மச்சநாட்டின்மேற்சென்ற திரிகர்த்த



துரியோதனாதியர் விராடராஜனது பசுமந்தைகளை மடக்குதல்

தேசாதிபனுடைய செய்தி யாதாயிற்றெனக் கவனிப்போம். ஓ மகாரா ஜனே! பெருமையிலுயர்ந்த பெரியோர் பேச்சைப் பொருளாகக்கொள் ளாத துரியோதனன் ஆக்யாபித்த வண்ணம் படைசேர்த் தெழுந்த அத் திரிகர்த்தனுனவன் முரசவாத்தியம் பேரி டங்கா பாங்கர் காகளம் சங்கம் தாரை பூரி சின்னம் தப்பட்டை முதலிய வாத்தியங்களைத் திக் கெட்டுஞ் செவிடுபட முழக்கி, கத்தி கட்டாரி கேடயம் ஈட்டி எறிவேல் சூலம் பிண்டி பாலம் வாள் முசலம் தோமரம் குந்தம் சக்ராயுதம் மற்று முள்ள ஆயுதங்களெல்லாம் பளபளவென்று விளக்கொளிபோல் மின்ன, கவச குண்டலம் கிரீடம் மதாணி கடக கங்கணம் தோளணிப் பதக்கம் முதலியவை துலங்க வீரர்களையுந் திடகாத்திரதேக தீரர்களையுந் திசாதிசைகளிற் பாயவிட்டு, ஓரக்குரோணிப் படைக ளுடன் மச்சதேசத்திற்குத் தக்ஷிணபாரிசத்தில்வந்து இறங்கிக்கட்டுக் காவலில்லாமல் யதேச்சையாகத் தின்று கொழுத்துக் கன்றுகளுடன் தழைத்துத் திரிகின்ற பசுமந்தைகளனைத்து மடக்கினுன்.

அப்போது அந்த மாடுகளெல்லாம் காதுகளை நெரித்து, கண்களை யுருட்டி விழித்து, கடைப்பார்வை பார்த்து, தலையேறிட்டுத் தங்களை மடக்கினவர்கள் அந்நியரென் றறிந்து தங்கள் தங்கள் கன்றுகளுடன் பெயர்ந்து, கும்பலினின்றுமுறிந்து கும்மாளமிட்டு நாலுபக்கமும்பிரிந்து அம்மாவென்றலறி, வீறிட்டதிர்ந்து அயர்ந்து பயந்து, செம்மான் பாய் வதுபோற் பாய்ந்து, சும்மா வொருமூலையிற் கொம்பசைத்துக் கூட்ட மாய்ச் சாய்ந்து, வெருண்டு பதறிக் கதறி, கால்தவறிக் கலங்கித் திகைத்து, மயங்கித்தியங்கி யகன்றேடுவதாயின. அப்பசுமந்தைகளைச் சுசர்மனுடைய படைகள் துரத்தித் துரத்தி, மறித்துப் பிரித்து இருப்புக் கண்ணியால் தடுத்தார்கள். அந்தப்பசுமந்தைகளைக் காத்திருந்தகாவ லர்களும், அவைகளை மேய்த்திருந்த கோவலர்களும் ஆக்ரமித்து அதிர்ந்தெழுந்து, மூவுலகதிரும்படி தாவி, மேவலர்சேனைமேல்விழுந்து அஸ்திர சஸ்திர ஆயுதங்களாலும் குடிதடி குண்டாந்தடி சுக்குமாந் தடி வளைதடி கிலுக்குத்தடி முறுக்குத்தடி பாணுத்தடி ஈட்டி எறியீட்டி திருகீட்டி சொருகீட்டி உருகீட்டி குத்தீட்டி குறியீட்டி பாலா பல்லயம் பட்டா பாங்கு சாங்கு கத்தி கட்டாரி பிச்சுவா உண்டைவில் சுண்டுவில் அம்புவில் இத்தன்மையாகிய ஆயுதங்கள் பலவுங் கொண்டெதிர்த்து, கோபமுதிர்ந்து பாய்ந்து, மாய்ந்துபோகும்படி யாய்ச் சிலரை வெட்டியும் பலரைக் குத்தியும், சிலரை அடித்தும், சிலரை மடித்தும், சிற்சிலபேரை யுதைத்தும், பலரை முறித்தும், சில ரைத் துண்டித்தும், சிலரைக் கண்டித்தும், சுற்றியபேர்களைக் குத்தி யும், பற்றியபேர்களை எற்றியும், தங்கள் பசுக்களையெல்லாந் திருப்பி ஞர்கள்.

அப்போது திரிகர்த்தனைச் சேர்ந்த சேனைகள் சித்தம்பிரமித்துஒரு முகமாகச்சாய்ந்து, கணக்குமிதமற்ற கடுங்கணைகளை நாலுமுகத்திலுந் தூண்டி, மும்மத யானைகளை முடுக்கிக் கோட்டை மதில்போற் குறுக்கி வகுத்துச் சிகரம்பெற்ற தேர்களைச் செலுத்தித் திசைகளிலோடிய நிரை

களை வளைத்து, குப்புற்றுப்பாயுங் குதிரையை விடுத்துக் கூட்டமாகிய சேனை நிலைகெட்டழியக் கடுகடுத்து, தன் சொந்தச் சேனைகளாலந்தச் சேனைகளை முறிந்துபோகச் செய்து, மறுபடியும் மந்தையைத் திருப்பிக் கொண்டு கட்டுக்காவ லமைத்து, ஜயம்ஜயமெனச் சிங்கநாத முழக்கி, அந்தப் பசுக் கூட்டங்களுக்காக மேலிட்டுவந்த கோபாலர்களையும் பூபாலர்களையும் வில்லெடுத்து வளைத்து, சரமாரி தொடுத்து, திசைமாற விடுத்து, விசனப்படும்படியாய் மாட்டி வாட்டினார்கள். அப்போது இடையர்களெல்லாரும் உடைந்திடைந்து, கையிழந்தவரும் காலிழந்த வரும் மேலுளைந்தவரும் கீழுளைந்தவரும் முடிபோனவரும் அடிபோன வரும் முனைகெட்டபேரும் நிலைவிட்டபேரும் ஆனவர்களாய், கண்ணீ ராறு கரையின்றிப் பெருகி, மாரிநீர் வழிவதுபோல் வழியவந்து, விராட புரத்திற் புகுந்து முடிவேந்தனுடைய கொலுமுகத்திற்கு முன்சென்று நின்று, "ஓ சங்காழி முகுந்தனைப்போற் சிங்காதனத் திருந்தருளிய எங் கோனே, சுசர்மாவுடன் திரிகர்த்தர்களுங் குருசேனுசகிதராய்ச்சேர்ந்து தென்றிசையில் நிறைந்த பசுமந்தைகளைமடக்கினார்கள். அவர்களுடன் நாங்களும் பகைத்து, எங்களாற் கூடியமட்டும் போரிட்டுப் பார்த் தோம். அவர்களை வெல்ல வல்லபமில்லாம லடிபட்டு வெம்பி வெதும்பி யோடிவந்துவிட்டோம். அறுபதினாயிரம்பசுக்கள் அவர் வசப்பட்டன. இன்னும் நாற்பதினாயிரம் பசுக்களையுங் கைக்கொள்ளப் பார்க்கின்றார் கள். ஓ நாதனே, தேவரீர் ஆலசியம் பண்ணுமல் அமருக்கெழ வேண் டும்" என்றார்கள். இவ்வாறு முல்லைநில மக்கள் மொழிந்ததைக் கேட்ட வல்லவன் நகைத்து, கண்களிரண்டுங் கறுத்து, கையிரண்டும் நெரித்து, பற்கடித்துச் சிரித்து, படைகள் துன்பைப் பொறுத்து, "அமைச்சராகிய அறிஞர்களே, திரிகர்த்தனுடைய விசுவாச மோசத் தைக் கண்டீர்களா? சொப்பனத்திலும் நினைக்கப்படாத அற்பனாகிய இவன் எங்களாற் கட்டுப்பட்டு நொந்து, கால்மேல் வீழ்ந்திரந்து, என் றைக்கும் அடிமையென்று புகன்று, இழிவுபட்டுப் போனதை மறந்து, மூவர் முதலிய தேவராலும்வேறுநினைக்கப்படாத விராடபுரத்திற்கு இப் போது வந்து, மிகுந்த சேனையுடனெதிர்த்துப் போர் தொடுத்து வெகு பேரை கெடுத்து, மாட்டையுமடக்கி யிருக்கின்றானுமல்லவா? நல்லது ஆகட்டும், ஓ சேனாதிபதிகளே, வீரபட்டம் பெற்ற நமது இரதகஜதுரக பதாதி பலமுள்ள ஓர் அக்ரோணிசேனைகளையும் யுத்தசன்னுகப்படுத் துங்கள்" என்று மெத்த முழக்கமாய் வெடிபடச் சொன்னான்.

## விராடராஜன் தன் தம்பிகளோடுந் தனயரோடும் போர்க்கோலங்கொண்டு பிரயாண மாதல்

அந்தச் சொல் செவியிற் புகுமுன்னே கரத்தில் வில்லுங் கழுத்தில் மாலையுந் தரித்த அதிரதர் அநேகர் எட்டுத்திசையிலு மட்டுப் படாத வாத்தியங்கள் முழங்கத் திரண்ட தேரேறி, வெள்ளம் புரண்டு வருவதுபோல் வந்து மொய்த்தார்கள். வெல்லும்படியான நிலக் காவ லர்க்ளெழுந்து, நவமணிகளாற் சிறந்த முடியும், சூரியன் நாணத்தக்க மாணிக்கப் பதக்கமும், ஆணிப்பொன் மதாணியும், நரைவென்றோர்

அணியுந் தும்பைமாலையும், கேயூர மணிகுண்டல கண்டியும், பிரதாப வில்லும், சபதச் சொல்லும் பொங்கமாகக் கொண்டு, சிங்கம்போற் சென்று, பொன்னுலகை விட்டிழிந்த தேவேந்திரனென்னும்படியாய்த் திக்குக்கஜங்களுக் கொப்பாகிய யானையினங்களின் மேலேறி பெரும் புலியெனச் சீறிக்கொண்டு புறப்பட்டார்கள். எண்ணியஎண்ணங்களை நிறைவேற்றுகின்ற திண்ணிய திடபுயகாத்திரதீரர்கள் யாவரும் ஒன்ருகக் கூடி, விராடராஜன் வெளிப்படுமுன்னமே நாம் போய்த் திரிகர்த்தனையும் அவன் சேனைகளையும் வென்று, பசுக்கணங்களைக் கொண்டு விராடனுக் கெதிர்சென்று, "நாங்கள் ஜயித்துவந்தோம். நீங்கள் போக வேண்டியது அவசரமில்லை என்றி சொல்லி உயர்ந்த விருது பெறுவோம்" என்பதாக ஆலோசித்தவர்களாய், ஆணிவில்லை வளைத்து நாண்பூட்டி, அம்புருத்தூணி மாட்டி, வாளும் கேடயமும் வல்லயமும் பல்லவமும் கொண்டு, பகைவர்பட்டார்கள் முதுகிட்டார்கள் அவர்கள் கெட்டார்கள் என்று கர்வித்தெழுந்து, கட்டுக்கடங்காமல் அட்டாள தேசமு முலாவிவரும் பட்டாளக் குதிரைகளின்மீது ஏறிவந்தார்கள். சேனுவீரர்கள் திரண்டு, திக்கென் றெரியச் செவ்விழி காட்டிச் சீறிப் புகைந்து, செம்பொறி சிதறக் காய்ந்து, வீரகண்டையை யாட்டி, வெதுப்பும் வெறுப்புங் காட்டி, ஆயுதங்களைப் பிடித்து, அரைக்ஷணமுந் தரியாமல் துடித்து, அலைபடர்ந்த கடலேழும் அடியோடு பெயர்ந்த அந்நாள் இந்நாளென்று அகில சராசரமும் பேசிக் கொள்ளும்படி பேரோசை முழங்கிப் பெருங்கும்பு சேர்ந்தார்கள். இவ்விதமாகச் சதுரங்கசேனைகள் புறப்பட்ட வீராவேசத்தை விராடனுடைய முதற்பிள்ளை சுவேதனென்பவன் கேள்விப்பட்டு, "நாமிருக்க நம்முடைய தந்தை வருந்துவானேன்?" என்று தனது பிராணனையும் எதிராளியையுந் துரும்பாக மதித்து, பம்பரம்போற் சுழலுஞ் செம்பொற்றேரேறி, வீரலட்சுமியை விவாகஞ் செய்வதற்கு விரும்புந் தீர புருஷனைப்போற் கூரம்புக்கூடுங் கார்முகக் கோடுங் கொண்டவனுய்க் குவலய நடுங்கக் கவலையோ டடைந்தான்.

இரண்டாவது பிள்ளை சதானீகனென்பவன் சங்கதிக ளறிந்து, முகச் சுளிப்புடன் வெளியே வந்து, "அப்படியா, இந்நாள் வரையிலும் பின்னமில்லாத மச்சநாட்டிற் கொஞ்சமேனு மச்சமில்லாமற் பிரவேசித்து மாட்டை மடக்கிய லச்சைகெட்ட திரிகர்த்தனுடைய சேனைகனென்னுஞ் செய்கால் நிலத்தை என் வில்லம்பு கொண்டுழுது, இரத்த நீர் பாய்ச்சி, அவர்கள் உயிராகிய விதையை விதைத்து, அக்கிரமமென்னுங் களையைக் களைந்து, நெற்பயிர் விளைத்து. பூபாரப்பிணம் போற் கட்டி, எமனுக்கு மேல்வாரங் கொடுத்து, என் தந்தைக்குக் கீர்த்தியென்னு நிலவாரங் கொடுக்கிறேன். ஆ! ஆ! ஏதுமற்ற திரிகர்த்தன் இந்த வழிக்கா வந்தான்?" என்று திடுக்கென் றெழுந்து, வில்வளைத்து நாணேசை தெறித்து, பங்கப்படாத சிங்கக்குட்டியானது தங்கக்கிரியில் தாவுந் தன்மைபோல் விசாலமான தேரேறி வீதியில் வந்தான். மூன்ருவது பிள்ளை சங்கனென்பவன் சிங்கநாதஞ் செய்து

எழுந்து, "எங்கள் மாமனாகிய கீசகராஜனிருக்கிறவரைக்குங்கொஞ்சங் கோப்பியமா யிருந்தது. அவன் இறந்த பின்பு மெத்தச் சாப்பியமாய் விட்டது. இனிமேற் பலரும் வசையாயேச, இந்த மொழியைக்கேட்டு நான் உயிரோடிருந்து இன்பமநுபவிக்கமாட்டேன். இதோ வானாயுத மெடுத்துப் புறப்படுகிறேன். வந்தவர் நொந்தழியக் கொந்தித் தள்ளு கிறேன். அவர்களை வெல்லாமலுங் கொல்லாமலும் போவேனாகில், என்னாவி யழிந்து பொன்னுலகம் போய்ச் சேருகிறேன். இதுவே சத்தியம்" என்று சபதங் கூறிக் கவசமணிந்து விரைவுடனோடி, திசை யனைத்துந் திப்பிரமிக்கச் செய்யுந் தேரேறி, தன்னையொத்த தராபதிக் குமாரர்கள் மின்னுக்கிணையான ஆயுதந்தாங்கி வீராவேசங்கொண்டு வரத் தானும் பிரயாணமானான். நான்காவது பிள்ளை வராக கேதென்பவன் நான்கு வேதமுந் தருமசாஸ்திரமுந் தேர்ந்து அறம் பொருளின்பம் வீடென்பவற்றை யறிந்து, பொறுமைக் கவசம் பூண்டு மன்னுயி ரனைத்தையுந் தன்னுயிராய்ப் பரிந்து பாதுகாக்கும் பருவ நாயகன். அவன் குலமன்னர் கூட்டமும் பலமன்னரீட்டமும் காலாட் படைகளும் இரதகஜ துரகபதாதிகளுந் தன்னைச் சூழ்ந்து வரும்படியா கத் திட்டப்படுத்தி, தான் வேற்படை விற்படை முதலியவைகளைக் கைக்கொண்டு "நமது மச்ச தேசத்துத் தக்ஷிண திசையில் லட்சியம் வையாத அந்தத் திரிகர்த்தனை இக்ஷணமே பிக்ஷா பாத்திரனுக்கி வீர சொர்க்கத்தி லேற்றிவிட்டு வேறு வேலை பார்க்கிறேன்" என்று விசித் திரக் கவசம் பூண்டு, தேரேறிப் போரேறுபோற் புறப்பட்டான்.

இந்தப்பிரகாரம் நான்கு பிள்ளைகளும் நால்வகைச் சேனைகளும் ஆரவாரித்தெழுந்து, க்ஷத்திரம் சாமரம் ஆலவட்டம் கொடி குடை பீலிக்குஞ்சம் மகரதோரணம் டால்வகைகள் ஆகிய இவைகளோடு, படை மன்னரும், வாத்திய கோஷமும் பின்னு முன்னும் பெரும் புறக் கடல்போற் பெருகிவர. சிங்கநாதம் சங்கநாதம் எங்குநாதமாய் முழங்க, தேர்நிரை யானைநிரை முதலிய பலமுறையுடன் சேர்ந்த திறத்தினை விராடராஜன் கண்குளிரக்கண்டு, "ஐயோ. இந்நாள் வரைக்கும் என்னைவிட்டுப் பிரியாமலும் போர்முக மறியாமலு மிருந்த அறியாச் சிறுபிள்ளைகள் முன்பின் யோசிக்காமற் போக, நாம் இவ்விடமிருப்பது நியாயமா? அவ்விடம் விளைவது என்ன அபாயமோ ?" என்றெண்ணித் தன் சகோதரர்களாகிய சதானீகனை யும் மதிராசுவனையும் அழைத்து, வாருங்கள் தம்பிமார்களே, தக்ஷண நிரைமீட்சிக்குப் போகின்ற நமது பிள்ளைகளின் போர்த் திறத்தையும் குருசேனையுடன் வந்த திரிகர்த்தனது போர்த்திறத் தையும், நான் பார்க்கவேண்டியிருப்பதால், சீக்கிரத்தில் தேர் கொண்டுவரச் செய்யுங்கள்" என்றான். தமையன்மொழி தவருத தம்பிய ரிருவரும் திடவேகமுள்ள குதிரைகள் பூட்டி இரதத்தை மதிமோகனென்னுஞ் சாரதியுடன் கொண்டுவந்து நிறுத்தினார்கள். அம்மாத்திரத்தில் விராடராஜன் பொன்தகடு வேய்ந்து நவரத்தின மிழைத்த அஸ்திர சஸ்திர திரஸ்கார அவயவக் கவசந்தரித்து, அம்புப்

புட்டிலும் வரிநெருங்கிய வில்லும் வாளும் வேலும் மகுடமும் மகரகுண் டலமும் வாகுவலயமும் கச்சையும் வீரகண்டையும் விரற்சாடு கரச்சா டும் மின்னுதற் பட்டமுந் தரித்து, தம்பிமார்களும் இராஜகுமாரர்களும் மகாப் பிரபல்ய சேனைகளும் புடைசூழ, விருதுமேள வாத்தியங்கள் வெண்சாமரைகள் வெள்ளைக்குடைகள் மயிற்பீலிகள் முதலிய சின்னங் களைப் பலர் புடைதாங்கிவரப் புறப்பட்டு, சேனாதிபர்களும் படைவீரர் களு முன்னடை, கட்டியரும் பட்டுவான்களும் புகழ்பாட, பருவக் கணி கை மங்கையரெதிர்நின்று பரத நாட்டியமாட திருநீறணிந்த திரிநேத் திர தாரியாகிய உருத்திர மூர்த்தி இவனெனச் சாதிக்கும்படியாய்ப் புறப்பட்டு வந்தான். அம்மன்னனைத் தொடர்ந்து வழி விடப்போன தருமராஜனை பீமசேனன் நகுலன் சகாதேவன் ஆகியமூவரும்பார்த்து, "இந்த விராடராஜனானவன் மாடுபிடி சண்டைக்கு நம்மைச் சகாயமா யழைக்காமற் போகின்றானே! இஃதென்ன காரணம்" என்று கண் ஜாடையிற் பேசிக்கொண்டார்கள்,

### கங்கபட்டர் விராடனுக்குப் பலாயனனாதிய மூவர் திறங்கூறுதல்; பாண்டவர்களும் யுத்த கோலங்கொண்டு உடன்செல்ல, உடனே யுத்தம் மூளுதல்

இவ்வாறு சகோதரர்கள் பேசிக்கொண்ட கருத்தையறிந்த கங்க பட்டரானவர் மச்சராஜனை நோக்கி, நமது மடைப்பள்ளியி லிருக் கின்ற பலாயனன், மல்லர்களை வென்றபோதே மகா பலசாலியென்று நீர் அறிந்திரல்லவா ? அவன் மிஞ்சிய மற்போலுங் கொஞ்சம் விற் போரிலும் பழகினவனாகத்தோன்றுகிறது. இதோ நிற்கின்ற தந்திரபால னும் தாமக்கிரந்தியும் போர்புரிவார்கள் போலுமிருக்கிறது. இவர்கள் தருமராஜனிடத்தி லிருக்கும்போது கௌரவர்களுடன் கூடி ஆயுத பரீட்சையிற் பயின்றிருக்கின்றார்கள். சில சமயத்திற் சண்டையிலுஞ் ஜயங்கொண்ட தாஷ்டீகர்கள். இவர்களை இரட்சிக்கும் நீர் சண்டைக் குப் போகும்போது, இவர்கள் உம்மைவிட்டுத் தனித்திருப்பது தரும மல்லவே ; இம்மூவரையும் அம்மூவராகப் பாவித்துக் கூட்டிப்போவது நலமாகும். அப்போது நான் மாத்திரந் தனித்திருப்பது நியாயமல்ல, நீங்கள் யாவரு முன்னாடிச்செல்லுங்கள். நான் நடந்து பின்னாடி வரு கிறேன்" என்று கங்கபட்டர் சொல்ல, அவரிசைத்த மொழியை யன் புடன் கேட்ட விராடன் சிந்தைகளித்து, "இது என் தவப்பயன்" என்றுரைத்து, தம்பியாகிய சதானிகனையழைத்து, "இந்த மகாசுவாமி யாகிய கங்கபட்டருக்கும் மற்ற ஆசாமிகளுக்குஞ் சிங்கமுக லலாடத் தேரும் பங்கப்படாத வில்லும் அம்பருத்தூணியும் தினுசுவாரி ஆபர ணங்களும் ஆயுதங்களும் கொடுத்து, அதிசீக்கிரத்தி லுன்னுடன் கூட அழைத்துவா" என்று ஆக்யாபித்துப் போனான். இப்பால் தருமர் முதலிய நால்வரும் அரசனுத்தரவின்படி சகல வரிசைகளும் சதானிக னிடம் பெற்று தடந்தேரேறி, எல்லோருக்கு முன்னதாய்ச் சென்று, விராடராஜன் தெற்குக்கோட்டை வாசல் தாண்டுமுன்னரே சேனை

யுடன் கலந்துபோனார்கள். அக்காலையிற் பொன்மலையை யொத்த எண்ணாயிரந் தேர்களும் மும்மதம்பொழியும் ஐயாயிரம் யானைகளும் இம்மெனப் பறக்கும் இருபதினாயிரங் குதிரைகளும் பொம்மென நெருங்கிய லக்ஷம் காற்படைகளும் தம்பிமார்களும் சாதுர்யமுள்ள சூரர்களும் மந்திரி தந்திரி மகுடவர்த்தனரும் சுந்தரமைந்தருஞ் சுதந்திர வேந்தரு மேவினார்கள். உடனே கொம்பு கொடி முதலிய சின்னங்களோடு முரசு முதலிய வாத்திய கோஷங்கள் எட்டுத்திக்குஞ் செவிடுபட்டுப் போக, தும்புதூசுகள் அம்பரமட்டுமேக செம்பரத்தப்பூப்போற் சிவந்த கண்களையுடைய படையைத் தூசியணியாக நிறுத்தி, தன் மந்தையை மடக்கிய சத்துரு சேனைகள் மேற்சென்று போர்தொடுக்கத் தொடங்கினான் விராடராஜன்.

இருதிறப்படைகளுங் கைகலந்து, யானையும் யானையும், குதிரையும் குதிரையும், தேரும் தேரும், காலாளும் காலாளுமாகக் கூடித் தொந்தயுத்தம் பண்ணினார்கள். அந்த யுத்தத்தில் யாரை யார் அழித்தார்கள்? யாரை யார் துவைத்தார்கள்? யாரை யார் வதைத்தார்கள்? யாரையார் சிதைத்தார்கள்? எவரை எவர் கொன்றார்கள்? எவரைஎவர் வென்றார்கள்? எவரைஎவர் பொருத்தினார்கள்? எவரை எவர் வருத்தினார்கள்? எவரைஎவர் ஓட்டினார்கள்?எவரைஎவர் மாட்டினார்கள்?ஐயா ஜனமேஜயமகாராஜனே, அவற்றைஇன்னவிதமென்று நான் எப்படிச் சொல்லுவேன்? ஆனாலும் அவர்கள் வரிசையாகப் புகுந்து மாச்சரியத்துடன் உடலைவகிர்ந்து இரத்தவெள்ளம் புரண்டோடச்செய்தபடியால் போரின் பெருமையைப் புகழ்ந்துபேச வல்லவரில்லாமற் போனார்கள். இத்தன்மையான காலத்தில்நூறுநூறாயிரம்இரதங்கள்நீறுநீறாயழிய,பல கதியிற்றேர்ந்த குதிரைகளிறந்துகுவிய, கொம்புள்ள யானைக்கும்புகள் யாவுமொழிய, மாறுமாறாகிய மன்னருடல்களும் வேறுவேறாகிய வீரர் குடல்களுந் தாறுமாறாகிச் சிதைய, மலைநிகர் புஜபல மண்டலேசுவரர்கள் தலைபோயுருண்டு சங்கடமடைய, இதனைக்கண்ட யாவருமஞ்சி இன்சொல்லுரைக்க, திறங்காட்டி வந்த திரிகர்த்தன் சேனைகள் புறங்காட்டி, நொந்து புலம்பியோடும்படியாக விராடன் சேனைகள் மேலிட்டிச் சாடியபொழுது, கோபமா யெழுந்த குருகுலச்சேனைகள் கூறு கூறாய்நிலைகெட்டோடினார்கள். வீறிட்டடர்ந்த விராடன்சேனைகளோ டெதிர்த்துப் போர்விளைத்த குருகுலச்சேனைகள் ஆற்றமாட்டாமல் அஞ்சிப் பயந்தோடுகின்ற அலங்கோலத்தைத் திரிகர்த்தன் தம்பியாகிய திடனென்பவன் கண்டு முகம்வேர்த்து, அண்டகடாகம் பிளக்கும்படி ஆர்த்து, வில்லெடுத்து நாணிபூட்டி இரண்டு பாணங்களை விடுத்து சூரியனுமஞ்சி யொதுங்கத் தேரைச் செலுத்திப் போராடினான். இவன், வாரி நீரை வாரிய மாரிபோற் பொழியும் வாளியின்வல்லமையால் விராடனது நால்வகைப்படையும் அதிரதர்களும் பின்னடைந்து, இரதமுடைந்து, யானை குதிரைகளு மழிந்து, மானாபரணமகிபரு மொழிந்து போனார்கள். இப்படி விராடராஜனோடு வந்த தநுர்வேத சாஸ்திரிகளும் சுவேதனன் முதலாகிய பிள்ளைகள் நால்வரும்,

சதானிகன் முதலாகிய தம்பியரும் வெற்றிப்பெயர்விளக்கும் வீரவேந்தரும் விதரணசாலிகளாகிய பலமாந்தரும் விசைகெட்டழிந்து, திசை விட்டோடும்படி திரிகர்த்தன் தம்பியாகிய திடனென்பவன் மலைந்து ஜெயம்பெறுகின்ற நன்மையைத் திரும்பிப்பாராம லோடிய துரியோதனன் சேனைகள் கண்டு, முன்புவருந்திய தோஷம் போக்கிப்புகழ்ந்து, வாடிய பயிர் மழைகண்டவாறுபோற் புளகாங்கிதத்துடன் மகிழ்ந்து, கடல்முழக்கம்போ லிரைந்து திரும்பி விரைந்தோடிப்புகுந்து, திரிகர்த்தன் தம்பியைக் கலந்து, நான்குபுறமும் பரந்து அணியணியாய்ப் பிரிந்து, வில்லினை இருகுதையும் பொருந்த வளைத்து, கொல்லெனப் பாணங்களைக் குவித்துச் சொரிந்தார்கள்.

விராடன் சேனைகள் வெகுண்டு அரண்டு புரண்டு மருண்டு, மேனியெல்லாம் புண்ணாகிக் கலங்கி கருதாதவெல்லாங் கருதிக் கசிந்துருகி, வியாகுலமடைந்து, அமர்முனைவிட் டோடாநின்றனர். அப்போது அவர்களை விராடனுடைய முதற்புத்திரனாகிய சுவேதன் கண்டு, கோபத்தாற் கொதித்து, மனம்பதைத்து "ஓடாதிருங்கள்" என்று கையமர்த்தி, திரிகர்த்தனையுங் குரு சேனைகளையுஞ் சிதைத்துவிடுகிறேனென்று தேரைச்செலுத்திச்சென்று, வைரவில்லை வளைத்து நாணிபூட்டிக்குணத்தொனிசெய்து, அஸ்திரசஸ்திர முதலிய அளவற்ற பாணங்களை யெய்து, மாறுபடாத யானைப் பெருக்கங்களையும் கூறுபடாத குதிரைக் கூட்டங்களையும் வேறுபடாத மிகுதீரவீரர்களையும், நீறுநீருக நெரித்ததுமல்லாமல், மேவிட்டுவந்த வேந்தரையு மாட்டி, நூறுஇரதங்களை நொடியில் பொடிபடக்காட்டி மற்றோர் திசையில் வளைந்து போர்மூட்டி, சுற்றிய பெருஞ்சேனைகளின் தலைகள் சுழலப் பேய்போலாட்டிப் பின்னிடவோட்டினான். இவனுக்கிளையவனாகிய சதானீகனென்பவன் மன்னவர் மதிக்க வரிச்சிலை வளைத்து, பொன்னுருள்பூண்ட தேர் மேல்வந்த மன்னர்முடிகளைத் தென்னங்குலைபோற் சிதற வுதிர்த்து, கன்னமத முதலிய மும்மதம் பொழியும் யானைவீரர்களை முன்னும் பின்னு முடுக்கி யதிர்த்து வாயுகதி மனோகதியுள்ள குதிரைவயவரைச் சின்னப்பட்டுப் பயந் தொதுங்கும்படியாகத் துன்பப்படுத்தி, பராக்கிரமத்திற் சிறப்புற்ற பதாதிகளையெல்லாம் உறுத்துச் சினந்து, உறக்கச் சிரித்து, மகா உரத்துடன் முனைந்து ஒருதிசை புகுந்தான். அவனுக்குத் தம்பியான சங்கனென்பவன் முன்னவன் காட்டியமுடுக்கைப் பார்த்து, தானொரு திக்கிற்சென்று வண்ணத்தேரோட்டி வரிச்சிலை யிர்த்து, நவமணி பதித்த கிரீடந்தாங்கிய வெற்றிவீரக் கொற்றவரேறிய ஆயிரந்தேர்களை யடித்துக்குறைத்து, அநேகரைமடித்து, பிணமலை குவித்து, ஜயசிங்கம்போல் தாக்கிச் சத்துருக்களை யமனிடம் போக்கினான். இவனுக்கிளையவனாகிய வராககேதென்பவன் வாசமாலைகள் மணக்கத் தரித்து, பூசலுக்குரிய புகழுடனெதிர்த்து, பலம்பெற்றவரும் பதறிக் கதறிச் சிதறி முறியும்படி செய்து, வேங்கைபுலிக் கெதிர்ப்பட்ட மான்போலோடிய பகைவர் யாவருங் கெட்டொழியும்படி நிர்த்தூளியாக்கிவிட்டு, திண்ணியபுயமிரண்டுஞ் செழிக்கப்பொருந்தினான்.

இந்தப்பிரகாரம் பாற்கடலை மந்தரகிரியானது கலக்கிக் கடைந்த வாறுபோல் விராடனுடைய நான்கு பிள்ளைகளும் நால்வகைச் சேனைகளோடு எட்டுத்திக்கும் புகுந்து மிகுந்த போராடியவேளை யில், தந்தையான விராடராஜன் அந்தப் புத்திரர்களின் சாமர்த்தி யத்தைக் கண்டு உற்சாகங்கொண்டு, ஆலமரத்தின் விழுது அம் மரத்தைத் தாங்குமாறுபோல் தனக்குச் சகாயமாய்வந்து வளைந்த தன் மக்களைப் புகழ்ந்து மகிழ்ந்து, தளர்ச்சியில்லாமற் களித்து, ஜயமாலையு முடியுந் தரித்த தானும் வெகுண்டு எக்களித்து, விசித்திர வின்னு ணேற்றி, விபரீத முழக்கங் காட்டி அச்சுடனமைந்த தேரோட்டி, சங்கு களீன்ற முத்தினங்கள் சந்திரனைப்போற் பிரகாசிக்கும் வயல் சூழ்ந்த வளநாட்டுக் கதிபனாகிய திரிகர்த்தன் தம்பியை வளைத்து, பத்துக்கணை களைப் பாயத்தொடுத்து, அவன் விடுத்த பாணங்களை யழியக்கெடுத்து, அவனுடைய கொடி குடை தேர் குதிரை சாரதி வில் வாள் இவை களையு மொழித்து, அவனுடன் கூடவந்த வீரர்களையுங் குறைத்து, நேருக்குநேர் தாராளமாய் நெருங்கி, அவன்மேல் மாறுவேக வடிக் கணை முடுக்கி, சேனைவேறு யானைவேறு தேசராஜர் கூட்டமும் வேறு வேருகச் சிதறும்படி தாறுமாருக முறித்து, தனிப்படப் பிரித்து பெரும் போர் விளைத்து நின்றான். அதனால் திரிகர்த்தன் தம்பியானவன் சிந்தை வருந்தி, தோளுந் துளைபட்டு, வாளுந் தறிபட்டு, சேனையுங் கெட்டு, செருமுகம் விட்டு, ஓடுகின்ற பதாதியருக்கோரடி முந்திப் புலங் கொடுத்தோடத் தலைப்பட்டான். இப்படி புறங்கொடுத்தோடிய புன்மையைத் திறம்படைத்த விராடர்கோன் கண்டு, ஊழிக்காலத் தொருவனாகிய உருத்திரமூர்த்திபோ லுருத்தெழுந்து, வாடிப்போகின்ற குருசேனைகளை மறித்துத் தறித்து மடியச் சிதைத்து, ஒருவருந் தனக் கெதிர்ப்படவொட்டாமல் வதைத்து, பிணக்குப்பையின்மீது சக்கரம் புதையத் தேர் விடுத்துச் சென்றான்.

இந்த விதமாக விராடபூபதியால் நிலையழிந்துவிட்ட குருசேனை யும் திரிகர்த்தன் தம்பியும், பலங்குறைந்து, படைமுறிந்து, நொந்து போனார்கள். அக்காலந்த யுத்தத்தில் இரத்தம்பெருகிஆறுபோலோட, பிணங்கள் மலைகளெனக் குவிந்து கூறுபோற் கூட, காக்கையுங் கழு குங் கலந்து விளையாட, நாயுநரியுஞ் சீறிப்போராட, பேயும் பூதமும் புகழ்ந்து கொண்டாட, எமபடர்களுயிரை யிழுத்துக் கொண்டோட, கூளியும் பருந்தும் விருந்துண்டாட, பைசாசகணங்கள் பாடி நின்றாட, அறுபட்ட தலைகளைப் பூமிதேவி யம்மானையாட புயமுந்தலையும் பொருந் திப் புரள யாவரையும் பொடிப்பொடி யாக்கி, ஒருகோடு சுடுசரங்களை யும் அருகோடிய தேரையுந் தாண்டி, ஜயங்கொண்டு, வருகின்ற விராடராஜனது திடத்தைத் திரிகர்த்தன் கண்டு, வெகுண்டு கொதித்து வில்லை வளைத்து, புரண்டுபோன சேனை வெள்ளத்தைப் போகவொட் டாமல் திருப்பி, சந்திரனைக் கண்ட சமுத்திரம்போற் பொங்கி, அட்ட திக்குக் கஜங்களும் அயர்ந்து நடுங்கி மதம் பொழியும்படியாய் நாணொலி செய்து, வெற்றிப் பாடல்கள் பாடுகின்ற நால்வகைப் படைக

ளுடன் சேர்ந்து, மகமேருவைப் போன்ற இரத்தினத் தேர்மேலிருந்து, கடுவிட நாகக் கணைமழைகளை அமோகமாகப் பொழிந்து, விராடன் சேனைகள் யாவும் விருதிழந்து புறங்காட்டச் செய்து, திக்கெட்டுந் திடுக்கிட்டுத் திக்குமுக்காடி விக்கிட்டோடச் செருவிளைத்து, மத யானைக் கூட்டத்தில் வந்து புகுந்த மடங்கலென்னுஞ் சிங்கத்தைப் போற் பாய்ந்து, தேரனிகத்தையும், யானையினத்தையும்-குதிரைப்பந்தியையும்-காலாட்களையும் பல திசைகளிலும் பதறிச் சிதறிப் போக்கி விட்டு, சோர்வடையாத தோளாண்மை பூண்ட சுசர்மாவானவன் எட்டுத்திசையிலுஞ் சுற்றிச்சுற்றித் துவம்சஞ் செய்வதாயினன். அக் காலையில் விராடராஜன் பிள்ளைகள் வந்து மேல்விழுந்து, கொள்ளைக ளான கொடுஞ்சமர் விளைத்தார்கள். அவர்களையெல்லாம் அத் திரிகர்த் தனனவன் ஆக்ரமித்து மடக்கிப் போராடி, அவர்கள் தங்கள் வெங் கணையாயுதமும் வில்லு மிழந்து கரி பரி தேர் காலாலுங் குறைந்து குடல் கலங்கி உடல் குமுங்கிக் குலைகுலைந்து நடுநடுங்கி உயிரொடுங் கிப் பெருமூச்செறிந்து உடன்பட்டோருடன் திடங்கெட்டோடவும், தேகத்தில் தாங்கிய காயங்களுடன் சேனைகள் மருண்டேங்கவும், பசுக் காவலரும் படைவீரரும் பறந்து பின்வாங்கவும் படாதபாடுபடுத்தி, மச்சராஜனுடைய பசு மந்தையைத் தன்னிச்சையின்படி கைக் கொண்டு நச்சரவக்கொடியை நாட்டி, வெற்றி கொண்டோமென்று ஜயபேரியடித்துச் சிந்தை மகிழ்ந்து, சில தூரத்திற்கப்பால் சேனைகளை யும் பசுக்களையுஞ் சேர்த்து ஜயத்திறம் பேசி யிருந்தான்.

### திரிகர்த்தனல் விராடன் கட்டுப்பட, அதுகண்ட தனயராதியர் கங்கப்பட்டரிடம் முறையிட, அவர் தம்பியரைச் செலுத்தித் தாமுமேகல்

இவ்விதமாக வீரகண்டையுஞ் ஜயவீரப்பட்டமும் பெற்று, விண் மணிமுடியிற் செங்கழுநீர் மாலையுங் கரந்தைக் கோதையும் பொருந் தத் திருந்தியிருந்த பெருந்தகையான திரிகர்த்தராஜனை மச்சநாடன் கண்டு, மதிமுகம் வேர்த்து, தேருட னெதிர்த்து, சிலை வளைத் திழுத்து, முறுக்கு நாணை யிறுக்கி யேறிட்டு, ஐம்மலர்வாளி ஐம் முகவாளி ஐஞ்சிகைவாளி ஐம்பூதவாளி ஐம்பிறைக்கணை ஐஞ் சிறைக்கணை ஐந்தடிக்கணை ஐங்கடுக்கணை முதலிய வேறுவேறு அஸ் திரங்களை விறுவிறென விடுத்து, திரிகர்த்த னேறிய தேரை முறித்து ஸாரதி தலையைத் தறித்து, கொடியைக் குறைத்து, குதிரையை வதைத்து வில்லைப் பிளந்து நாணைத் துணித்து, கவசத்தைப் பொடித்து, கருத்தைக் கலக்கி, அச்சமுண்டாகும்படி பின்னுங் கொத் தாகிய பத்தம்பை அவனுடைய மார்பில் விடுத்தான். அந்த விராடன் விட்ட கணைகளினுல் வருந்திச் சினந்து நேர்புகுந்த சுசர்மாவானவன் தேரழிந்து, சிலைமுறிந்து, சீரொழிந்து பரதவித்து, பின்பு நெஞ்சுர முற்று, "இந்த விராடனை நான் எளிதில் விடமாட்டேன்" என்று சேமத் தேரேறிச் சிலகணைகள் கொண்டு சென்று, நேர்நின்று ஆரவா ரித்து, இருபதுபாணம் இடிபோல் தொடுத்து, அவனது தேரினுடைய அச்சு மச்சு குறுக்கால் கொடுங்கை கொடி குடை குதிரை ஸாரதி

முதலியவற்றைத் தூள்தூளாக்கி, மற்றக் கொடி குடை ஆலவட்டம் தாலவட்டம் பீலிக்குஞ்சம் முதலிய 'சின்னங்களை யெல்லாம் பஞ்சு போற் கொட்டிப் பறக்க விரட்டி, அவனுடைய இடக்கை வில்லினைச் சடக்கெனத் தறித்து, துவச கவசாதிகளையு மழித்துக் கிழித்துச் சாடினன். அப்பொழுது தட்டுக் கெட்டுத் தடுமாறிக் கட்டுவிட்டுக் காவலழிந்து, நிலத்தில் நின்று மலர விழித்த கண்களுடன் வாடி வருந்தினன் விராடராஜன். அவனுடன் வந்த சேனைகளெழுது, "ஐயையோ, நமதரசனுக்கும் வந்ததோ பழுது! ஆ! ஹா! தெய்வமே!" என்று தொழுது, நாவறண்டு, நாணமேலிட்டு, யுத்தமுணவிட்டுச் சித்தம் பிரமித்தோடும்படி யாயிற்று. இப்படி யாவரையுஞ் சிதறவோட்டிய திரிகர்த்தன் பலம் பெற்ற வில்லாளியாகிய விராடன் கழுத்தில் வில் நாணை மாட்டி, தனது இரதக்காலுடன் பூட்டி, ஜயசங்கபேரி முழக்கி, நால்வகைச் சேனையோடு சென்று, நான்குபுறத்தினுங் காவல்கொண்டடர்ந்து பசுமந்தைகள் தொடர்ந்துவரும்படியாக ஓட்டிக்கொண்டு, பணிக்கொடி தரித்த பார்த்திபனை நாடிப்போவதாயினன். அந்த அபஜயத்தைக் கண்ட விராடன் மைந்தரும், பசுக்கூட்டங்களுக்குக் காவலாளரான நந்தரும், படைத்துணைவந்த வேந்தரும், பராக்கிரமவீரமாந்தரும், தங்களாற் கூடியவரையிலும் நேர்ந்து, காலகதியை யோர்ந்து மனநொந்து, நெடுந்தூரத்திலிருந்து யுத்த விந்தையைப் பார்த்திருந்த கங்கபட்டரிருக்குமிடத்திற்கு வந்து, அவர்கால்மேல் விழுந்து, "ஓ மகானுபாவரே, எங்கள் தந்தையை யிழந்தோம், எந்தையாகிய அரசனைப் பிரிந்தோம்" என்றேங்கி யழுதார்கள்.

அந்த வேளையில் தருமராஜனான குருகுலக்கோமகன் "பயப்படாதீர்கள்" என்று அவர்கள் பட்ட பரிதாபத்தைமாற்றி, தம் பக்கத்திலிருந்த பலாயனனாகிய தம்பியைக் கடைக்கண்ணாற் பார்த்தார். அவரது கண்ஜாடையைக் கண்ட பீமசேனன் ஊழித்தீயைப்போலெழுந்து, தன்உடலை மறந்து, யுகமுடிவில் தோன்றுஞ் சர்வசங்காரக் கடவுளாகிய உருத்திர மூர்த்திபோற் பேரோசை கொண்டு, தன் தந்தையான சண்டவேக வாயுதேவனானவன் உயர்ந்த மலைகளையும் உவரி யலைகளையும் உலைத்து மோதிச் சிதைக்குமாறு போல, திரிகர்த்தனுடைய தேர் முதலானவைகளை யெல்லாஞ் சின்ன பின்னப் படுத்தி அவன் படைவீரர்களையுங் கொன்று, பசு நிரைகளையும் விராடனையும் விடுவித்துக்கொண்டு திரும்புதற் கெண்ணினவனாய்த் திடுதிடெனச் சென்றான். யோசித்து யோசித்து எடுத்தடிவைக்கு முன்னே ஏற்றக்கோல் தூரம்போய்விட்ட இளஞ்சிங்கத்தின் ஆத்திரக்குறிப்பைத் தருமராஜனறிந்து, "ஓ! ஓ! ஓ! மோசம் வந்ததே" என்று வருந்தித் தம்பியைத் தனிப்பட வழைத் தணைத்து, "அப்பா, ஓப்பிலாச் சுப்பிரதீபம் போன்ற உத்தமனே, உன் கருத்தை நான் அறிந்துகொண்டேன். என் கருத்தை நீ கண்டு கொள்ளவில்லை. ஆத்திரப்படாதே. நமது அடக்கத்தை விடாதே. இதுவரையிலுங் கழித்த வனவாசத்தைக் கெடுத்துப்போடாதே. இப்போது உதய

மான சூரியன் அஸ்தமன மாகிறவரைக்கும் நாம் இன்னாரென்று எவர்களுமறியப்படாது. ஒருவேளை சத்துருக்கள் நம்மைத் தெரிந்து கொண்டால், நாம் இதுவரையில் பட்டபாடு பாழாய்ப்போம். இதை உன் கருத்தி லிருத்திச் சென்று, பெருஞ் சண்டை விளைக்கும் பீமசேனனென்னும் பெயரை வெளிப்படுத்தாமல், வில்லும் பாண முங்கொண்டு தேர்மேற் சென்று திரிகர்த்தனுக்குன் திறன்காட்டி நின்று, அவனைத் தேருடன் வென்று, நம் விராடராஜனை மீட்டு விடுக'' என்று வேண்டிய புத்தியுக்திகளைத் தருமராஜன் பீமனுக் குரைத்து, அவனுக்கு வீராவேச மேலிடாதிருக்கும்படி எமதர்ம ராஜனுகிய தன் தந்தையைப் பிரார்த்தித்து விடுத்தார். அவ்வாறு அண்ணன் சொல்லுக் கடங்கிய பீமசேனன் கேயூரமணிகுண்டல முதலிய பணிகள் பூண்டு, அம்பறுத்தூணி முதலிய ஆயுதசின்னங் கள் யாவுந் தரித்து, ஆகாயமளாவிய குன்றனைய தேர்மேற் பாய்ந்து வில்லை வளைத்து நாணேற்றி, வெற்றிபெற்ற சிங்கமானது யானைமேல் தாவும் விருப்பைப்போல், விண்ணளாவி வளர்ந்த அடவியைப்பற்றிக் கொண்டு வேகின்ற தீயைப்போலும் மகா உக்கிரபராக்கிரம கோலா கலத்துடன் விரைந்து போகின்றான்.

இப்பால் பீமனுக்குப் புத்திமதி விளம்பி விடுத்த முரசக்கொடியோ னுகிய தர்மராஜன் மனந்தாளாமலும் தம்பியை நம்பாமலும் நகுல சகா தேவர்களாகிய தாமக்கிரந்தி தந்திரபாலர்களைப் பார்த்து, ''அப்பா தம்பிமார்களே, உங்க ளண்ணனுகிய பீமனை யனுப்பியிருக்கின்றேன். அவனோ மிகுந்த ஆத்திரமுடையவன்; அவசரக்காரன்; முன்கோப முள்ளவன். அவன் ஒருவேளை சுசர்மன்பேரிற் பாய்ந்து சுடுசரந் தொடுத்துச் சமர்புரியும் வேளையில், அவனு லிவனுடைய வில்லும் பாணமு முறிந்து மேனிவருந்தி வம்பு நேரிடுமாகில், இவன்தேரை விட் டுக் கீழேகுதித்து, அம்புகள் பறக்கும் கும்பலிற் புகுந்து விற்போற் விடுத்து மற்போர் கொடுத்து, மலைகளை மரங்களை வாரணத் தேர்களை வாரியடித்து மாறுகொடுப்பான். அதனால் இவன் பீமனென்று வெளி யாகி, பாண்டவ ரிவ்விடத்திலிருக்கிறார்களென்று பகைவரறிந்து கொள்வார்கள். அவர்களறிந்தால் மறுபடியும் நாம் வனவாசம்பண்ண வரும். நாம் எண்ணிய எண்ணம் ஒன்றும் நிறைவேறுமற்போய்விடும். உலகம்பழிக்க இடமுண்டாகும்'' என்று தம்பிய ரிருவருக்குந் தனிக்கச் சொல்லி, ''நீங்களிரண்டுபேருங் கூடச்சென்றிருந்து பீமனை மிஞ்ச வொட்டாம லடக்கி, திரிகர்த்தனை மடக்கி யுத்தந்தொடங்கி, பசுக்களை யும் விராடனையும் விலக்கி, வேடிக்கை பார்ப்பவர் தலைகுலுக்கி வியக் கும்படி அமர்முடித்து, ஜயத்துடன் வருவதேபெருமை'' என்று உரைத் தனுப்பினர். இளங்காளைய ரிருவரும் அவருடைய ஹிதோபதேசத் தைச் சிரமேற்கொண்டு அவ்வாறே முடிப்போமென்று அண்ணலைத் தொழுது விடைபெற்று, பொன்மயமான போர்த்தே ரூர்ந்து நடத்தி, கல்லென்றிசைக்குங் கார்முகம் வணங்கி, நூற்றிலொருவன் ஆயிரத்தி லொருவனென்னு மதிரதவீரர் தலைகள் குதிரையின் காலினும் யானையி

ணடியிலு மகப்பட்டுருளும்படியாகச் சேனைகளை நடாத்திப் பாணப்பிர யோகம் பண்ணிக் கண்ணுக்கெட்டியதூரம் பறந்து ஓட்டமாயோடு கின்ற வாயுபுத்திரனாகிய பீமசேனன்மேல் நாட்டம்வைத்து நாடிச் சென்றவர்களாய், திரிகர்த்தன் சேனை வெள்ளத்தை நீந்திப்போய்த் தேருடன் தேர் கலக்கப் போராடினார்கள். இங்கே தேவர்கள் புகழா நின்ற குருகுலச் செயபதியான தருமராஜன் "தம்பிமார் மூவரும் போயிருக்கின்றார்களே! தாழ்ச்சியென்னவோ! சண்டையாதோ!" என்று தாமெடுத்த வேடத்திற்குத் தக்க மரியாதையும் மகிமையுந் தப்பாமல், ஸம்மார காலத்திற் புரண்டெழுகின்ற ஜலநிதிபோற் குணக்கடலு மருட்கடலுங் குலவத் தேரேறி, அக்ஷதை யிறைத்து, கட்டுகளெட்டுங் குச்சுப்பட்டுமுடைய வில்லைத் தொட்டெடுத்து, வாயு வேக மனோ வேகத்துடன் வந்து தம்மைத் தம்பிமார் பார்க்கும்படி சமர்முனையிற் கலந்தார்.

### பலாயனன் திரிகர்த்தனை வென்று தன்தேரிற்கட்டி விராடராஜனையும் பசு நிரைகளையும் மீட்டல்

இவருக்கு முன்சென்ற தம்பிய ரிருவரும் எப்புறத்துச் சேனைகளு மப்புறத்தி லகலாதபடி துப்பறவொழித்து, மன்னர்தம் உயிரை வானுல கேற்றிச் சின்னபின்னஞ்செய்து வருவதானார்கள். இத்தம்பிமார்களின் செய்கையை பீமன் கண்டு மேலாகிய சந்தோஷங்கொண்டு பலம் பொருந்திய தனது வில்லிற் சரங்களைப்பூட்டித் தலம்புரண்டோடத் தாக்கினான். அவ்வேளையில் திரிகர்த்தனனவன் "இவர்களாரடா அப்பா" என்று சென்ற தேரைத் திருப்பி யெதிர்நின்று, வீரலட்சுமி விளையாடுகின்ற தனது வில்லைவளைத்து, பாணங்கள் பற்பல திசையி லும் பறந்திடச் சொரிந்தான். அக்காலையில் அழிவில்லாப் பலம் படைத்த ஆண்சிங்கம்போன்ற பீமசேனன் தன்தேரைத் திரிகர்த்தன் தேருக் கெதிர்முடுக்கி, அயிந்திராஸ்திரங்களை விட்டு மடக்கி, அவன் தொடுத்த கணைகள் யாவையுந் தரித்து, வில்லையு முறித்து, நாணையு மறுத்து சாரதி குதிரைகளின் தலைகளையும் பறித்து, தேரையு முடைத் துத் தியங்கச் செய்தான். அப்போது திரிகர்த்தனனவன் திடதைரிய தீரம் விடாமல் வேறு தேரேறி, மின்னென விளங்கும் வடிவேலையெடுத் துப் பீமன் பேரில் வீசினான். அந்த வேலாயுதமானது பூரணசந்திரனைப் பிடிக்கத் தாவிய செம்பாம்புபோற் புரண்டு திசாதிசையிலுந் தீப்பொறி யிறைத்து வருவதை பீமன்கண்டு, மடமடவென்று பற்களைக் கடித்து நின்று, அதனைத் தனது பிரமாஸ்திரத்தால் ஒடித்தான். வேற்படை முறிந்ததைச் சுசர்மன் கண்டு வெகுண்டு, வச்சிரக்கட்டுகளோடு முட் கட்டுகளுமுடைய ஒரு கதையைச் சுழற்றிக் கரகரவென் றெறிந்தான்; அது விறுவிறெனச் சுழன்று பீமனை நோக்கிவர, அதைப் பார்த்து நெருப்புத்தலை பெற்ற இருப்புக் கணைகளைப் பத்தெடுத்துத் தனக்கு நேர்வருங் கதாயுதத்தை நிமிஷத்திற் பொடித்து அசைவற்றிருந்தான். அப்போது புலவர்கள்புகழும்படிபொடிப்பொடியாயுதிர்ந்தழுந்திய தன் கதாயுதத்தைத்திரிகர்த்தன்நோக்கி, "வந்தவேளை எந்தவேளையோ?"



பலாயனன் திரிகர்த்தனை வென்று தன் தேரிற் கட்டி விராடராஜனையும்
பசு நிரைகளையும் மீட்டு கங்கபட்டரிடம் கூட்டிவருதல்

என்று மனநொந்து வாடி வாளை யுருவி, விண்டலத் துயர்ந்து மண்டலத்திற் பாய்ந்து வீசினன். அவ் வீரத்தை பீமன் பார்த்து மகிழ்ந்து, நாகம்போற் சினந்து, மேகக்கணை யொன்று போக்கி, அவன் தேகஞ் சோகங்கொள்ளும்படி துளைத்துத் தாக்கி, அவனைச் சார்ந்த யானை சேனை பரிவாரங்களையுங் கலக்கி அப்பால் ஓட்டுவித்து, அச் சுசர்மாவையும் அவன் கைபிடித்தவாளையும் அலங்கோலமாக்கி, அவனை எங்கு நிலைக்கவொட்டாமல் இலவம் பஞ்சுபோற் பறக்க அடித்து அவன் தலைமயிரைப் பற்றி யிழுத்தான். அக்காலையில் திரிகர்த்தராஜன் பொறி புலன் மயங்கித் திக்குமுக்கிட்டு, தலையிறக்கத்துடன் தத்தளித்துத் தளர்வுற்றிருந்தான். அஃதெப்படி யிருந்ததெனில், பாண்டவர் வனவாசம் பண்ணும்போது அவர்களை பங்கப்படுத்தவந்த துரியோதனன் சித்திரசேனனிடத்திற் சிக்கிப் புத்திரமித்திர பூவைமாருடன் தாமணிப் பிணியாகக் கட்டுண்டு பரதவித்த தன்மைபோலிருந்தது. யுத்த முகத்தில் மற்றொருவரையும் வெற்றிபெற வொட்டாத சுத்தவீரத் திறமுற்ற திரிகர்த்த தேசராஜனென்னுஞ் சுசர்மாவானவன் சிங்கத்தினிடத்திற் சிக்கிக்கொண்ட மத்தகஜம்போல் வல்லமை குறைந்து, வாயுகுமாரனாகிய பீமனிடத்தி லகப்பட்டுப் போனன். உடனே பீமசேனன் விராடபூபதியைக் கட்டவிழ்த்து, அவனைத் திரிகர்த்தன் தேரினின்று தன்தேரி லேற்றிக்கொண்டு, தான் பிடித்த சுசர்மாவின் தலைமயிரைச் சுற்றிப் பிடித்த பிடி விடாமல் தன் தேர்மே லிழுத்து, இரத்தத்துளி பீறிட்டுச் சுற்றிலுந் தெறிக்கும்படியாய் மடலோடு மடல்சேர மணிக் கயிற்றினல் இறுக்கிக் கட்டி, அவனைத் தன் எதிரிலிருக்குங் குருசேனைகளுக்குக் காட்டி, "இன்னுஞ் சண்டை செய்யச் சமர்த்துள்ளவர்களிருந்தால் வாருங்கள்" என்று அவர்கள்மீது சரமாரி பொழிந்து, கோபாவேசங் கொண்டு நின்ருன். இப்படி நின்ற பீமசேனனைச் சுசர்மாவின் சேனைகள் கண்டு பயங்கொண்டு புறங்காட்டி யோடிப் போனர்கள். அவ் வேளையிற் ஸர்வஸம்மாரகால உருத்திரன்போலுருத்தெழுந்த வாயுகுமாரனை விராடராஜன் நோக்கி, "நமது பங்குத் தெய்வமோ இவ்வுருக்கொண் டெழுந்தது" என்று மிக்வும் மகிழ்வடைந்தான். அப்போது பதினயிரங் குதிரைவீரர்கள் பாய்ந்து கோபாலருடன் சேர்ந்து, திரிகர்த்தராஜன் கைக்கொண்ட பசுநிரைகளைத் திருப்பிக்கொண்டு, "ஜயம் ஜயம் ஜயம்" என்று ஜயக்கொடி நாட்டி, சிறு பறைகொட்டி, பலவித வாத்தியங்களையும் முழக்கிக் கொண்டு, தங்கள் யதாஸ்தானமாகிய மச்சதேசத்திற்குத் தென்புறத்திற் கலந்து முன்போலிருந்தார்கள். கங்கப்பட்டராகிய தருமராஜன் தமது பக்ஷம் ஜயமென் றறிந்து, முந்தியிருக்கும் ஒரு கூடாரத்துக்குப் போய் ஒன்றும் அறியாதவர்போல் தாமிருக்கத்தக்க ஆசனத்திலிருந்தருளினர்.

இப்பாற் சத்துருவாகிய திரிகர்த்தனை வென்று அவனைத் தேர்க்காலில் இறுகக்கட்டிக் கொணர்ந்த பீமசேனனும் விராடராஜனும் அத்தேரை நடத்திச் சென்று விராடராஜனுடைய தம்பியரோடுந் தனயரோடுஞ் சேனைகள் சூழத் தருமராஜனுக் கெதிரிற் போய்ப் பணிந்து

நின்றனர். கங்கபட்டர் அவர்களை ஆசீர்வதித்து, அருகிலிருந்த ஆசனத்திலிருத்தினர். அப்போதுகங்கப்பட்டரை விராடராஜன்பணிந் தெழுந்து, "ஓ ஆண்டவனே, போர் முகத்தில் வீரர்களை எதிர்த்து ஓட்டி, ஊர் முகத்தில் என்னைக் கொண்டுவந்து காட்டி, நிலையாய் புகழை நிலைநாட்டி, எனக்குக் குலதெய்வமாகத் தோன்றிப் பகைவர் கைப்பட்ட என்னையும் என் பசுக்களையு மீட்டு இரட்சித்த பலாயன னுடைய பேருதவிக்கு நானென்ன கைம்மாறு செய்யப்போகின்றேன்? அப்படிக்கல்லவென்று செய்தாலும், இவர்புரிந்த உதவிக் கீடாகாதே; 'இதற்கொத்த கைமாறுளதோ?' என்று யோசிக்குமிடத்தில், இப் புவியிலுமில்லை. அன்றியும், இப் பிறப்பிலும் எப்பிறப்பிலுங் கூட இல்லை" என்றுரைத்துப் பலாயனனை மிக மகிழ்ச்சியுடன் தன் மார்போ டணைத்துக்கொண்டு, "என் மைத்துனனான கீசகனைப் பறிகொடுத்துக் கதியற்றிருந்த என்னை நீங்கள் இவ்வேளையி லடுத்து, எதிரி கையிற் பட்ட சிறையைவிடுத்து,எனக்குயிர் கொடுத்தீர்கள். நீங்கள் இவ்வுதவி செய்யாவிடில் இந்நேரம் என்கதி எப்படியாமோ? அதை நான் அறி யேன். ஆகையால், என்னரசு உரிமையையும், என் பட்டணத்தையும், என் செல்வ முதலாகிய யாவற்றையும், என்னுயிரோடு உங்களுக்கே தத்தமாகக் கொடுத்தேன். உங்கள் பெருமைக்கும், அருமைக்கும், நீங் கள் செய்த நன்மைக்கும், நான் தத்தம்பண்ணியபொருள்கள் தகுதியற் றனவாயிருப்பினும், பக்தி சிரத்தையாகச் செய்கின்ற ஏழையின் பூசை யை எப்பொருட்குமுரிய ஈசன் அங்கீகரித்துக் கொள்வதுபோல், தாங்க ளுந் தயைபுரிந்து ஒப்புக்கொள்ள வேண்டும்" எப்பொழுது மென்னை விட்டு நீங்காமலிருந்து இரட்சிக்கவேண்டும்" என்று பற்பலவிதமாக உபசாரவார்த்தைகளைச்சொல்லிப் பிரார்த்தித்தான். அவ்வரசன்மொழி யைக் கேட்ட தருமராஜனும் மற்றைத் தம்பியர் மூவரு மகிழ்ந்து புகழ்ந்து வாழ்த்தினர்கள்.

### கங்கபட்டர் திரிகர்த்தனைக் கட்டவிழ்ப்பித்து விடுதல்

பின்பு முரசக்கொடியுடைய முதல்வன் மச்ச தேசாதிபனாகிய மன்னனைப் பார்த்து, "ஐயா, பாண்டவர்களிடத்திற் பக்ஷமா யிருந்த நாங்களைவரும் ஒருவரைவிட்டொருவர் பிரியாமல், உத்தமனாகிய உம் மிடத்தில் வந்தடைந்த அந்நாள்முதலிந்நாள்வரையிலும்நன்னாளாகக் கழித்து, அன்னவஸ்திராபரணங்களு மநுபவித்து மகிழ்ச்சியுடன் வாழ்ந்தோம். நாங்கள் வெளிப்பட்டுப் போவதற்கு இன்னுஞ் சிலநா ளிருக்கிறது, அப்படியே நாங்கள் போனாலும் உமக்கெந்நாளுங் குறை வில்லை" என்று உபசாரஞ்சொல்லி, "ஓ பரிசுத்த இருதயம் படைத்த பார்த்திபனே! நீர் அளித்த சகல சம்பத்தையும் நாங்கள் அனுபவித்த தைப்போல் ஆயிரம்பங் கதிகமாக ஆநந்தப்படும்படியாக உமது தேரிற் கட்டுப்பட்டிருக்கின்ற திரிகர்த்தராஜனைக் கட்டவிழ்த்துவிட்டு, அவனை உபசரித்து சன்மான வெகுமானத்துடன் ஓர் இரதமுங் கொடுத்து அனுப்பவேண்டும்" என்றார். இவ்வாறு மகா இரக்கமாகச் சொல்லிய தருமராஜனுடையகருணைமொழியை விராடராஜன்காதாரக்

கேட்டு, மறுவாய் திறவாமல் தானே யெழுந்துபோய்க் கட்டவிழ்த்து விட்டு, ஆபரணவஸ்திராதிகளும் வழங்கி, அழகிய தேருமளித்து, "ஓ திரிகர்த்தனே, முன்னொருநாள் நீ அவமானப்பட்டிருக்கப் பின்னும்வந் தகப்பட்டமையால், மன்னர் முறைமைப்படி உன்னை வாளால் வெட்ட வேண்டும். மகாநுபாவராகிய கங்கபட்டர் உன்னைத்தப்புவித்தார். இவ் ராற் கிடைத்தது உனக்குப் பிராணபிச்சை. இதை யெப்போதும் மற வாமலிரு" என்றனுப்பினான். அத் திரிகர்த்தன் விராடனைப் பார்க்க வெட்கப்பட்டு, மெத்த விசனமுற்று. புத்திமயங்கிச் சித்தப்பிரமை கொண்டு, "சுயோதனன் முதலாகிய கொற்றவர் நமக்குப் பின்னுதவி வந்து கைகொடுக்காமற் போனார்களே; அவர்கள் முகத்தில் நாமெப் படிப்போய் விழிப்போம்?" என்று மனமெலிந்து, ஓடியொதுங்கிப் பதுங்கியிருக்கின்ற தன் படையுடன் கலந்து, கங்கபட்ட ரென்பவ ரைக் கருணையில் தருமராஜனென்று புகழ்ந்து, "பிழைத்தது போதும், போதும்" என்று போயினான். அப்பால் தருமநந்தனன் விராடனைப் பார்த்து "இப்போது திரிகர்த்தன் ஒருவேளை மேற்படை கூட்டிக் கொண்டு வந்தாலும் வருவான்" என்றுரைக்க, அதைக் கேட்ட மதி குல வேந்தனாகிய மச்சராஜன் இரதகஜதுரக பதாதிகளான நால் வகைப் படையையும் பிள்ளைகள் மூவரையும் பேரணி நிறுத்தி, மேற் படைவரு மார்க்கத்தில் வேவுகாரரை யனுப்பிவிட்டு, அன்றிரவு முழு மையு மவ்விடத்தில் முகாம் போட்டுக்கொண் டிருந்தான். முன்பு திரிகர்த்தனா லடியுண்டு முறிபட்டோடிய மூத்தபிள்ளையாகிய சுவே தன் முக்கண்ணனாகிய முதல்வனைப் பூசித்து, எக்காலத்து மெவர் களுக்கு மிளையாமலிருக்கும் உரத்தை வரத்தினாற் பெறக் கருதித் தவஞ் செய்திருந்தான். அக்காற் சூரியனஸ்தமனமானான். அஃ தெப்படி யிருந்ததென்றால் பீமசேனன் திரிகர்த்தனைத் தேருடன் கட்டிய திறத்தைச் சமுத்திர நாதனான வருணன் கண்டு, இன்னும் பாண்டவர்களை வெளிப்படவொட்டாமல் தடுத்திருக்கின்றான் சூரிய னென்று கோபங்கொண்டு தன் மேனியைச் சிவக்கக்காட்டி மேற் றிசைக்குக் கொண்டுபோனதுபோ லிருந்தது.

---

## 5. உத்தர நிரைமீட்சிச் சருக்கம்

### கண்ணன் துதி

அலையெறியும் பாற்கடலின் மத்தாகப்
பொன்மலையை யமைத்து வானக்
கலைமதியை படையாக்கி வாசுகிநா
மத்தானைக் கயிறுப் பூட்டிப்
புலவர்குழாங் கடைபொழுதம்
மலைகடவி அழுந்தாமற் புகழுமாமை
நிலவுருக்கொண் டடிதாங்கி யமிர்தோங்கப்
பகிர்ந்தருளு நெடியோய் போற்றி

ஓ ஜனமேஜய மகாராஜனே, ஒப்பற்ற சித்திரமணித் தேரேறிக் குரு சேனையுடன் கூடிவந்த திரிகர்த்த தேசாதிபனென்னுஞ் சுசர்மாவானவன் விராடபுரத்தின் தக்ஷிணபாரிசத்திற் சேர்ந்து ஆதிசேடனுற் சுமக்கப்பட்ட இப்பூமி யதிரும்படி பெரும்போர் தொடுத்து, விராடனுடைய மாட்டுமந்தைகளை மடக்கிப்பிடித்து ஜயம் படைத்துத் திரும்புங்காலையில் பசுக்காவலரடிபட்டோடி விராடராஜனுக் கறிவிக்க, அவ்வரசன் ஓர் அக்குரோணிச் சேனையுடன் வந்து திரிகர்த்தனுடன் சண்டைபுரிந்து தேரிற் கட்டுப்பட்டு சுயம்பாகியினுல் விடுபட்டு, மறுபடியுந் திரிகர்த்தனைப் பிடித்துத் தேர்க்காலுடன் கட்டி அவமானப்படுத்தி, கங்கபட்டர் சொற்படி விடுத்து, அவன் கைக்கொண்ட மந்தைகளைத் திருப்பிக்கொண்ட விதத்தைச் சொன்னேன்.

இப்பால் திரிகர்த்தராஜனுக்குப் பின்படையாக வர யுத்தசன்னத்தரா யிருந்த துரியோதனுதியரின் பெருஞ்சேனைகள் மச்சநகரத்தின் வடபாரிசத்தில் வந்து அங்கிருந்த மாட்டுமந்தையை மடக்கிப் பேடியினுல் மானங்கெட்டுப் பசுநிறைகளை விட்டோடிய சரிதையைப் பகருகிறேன், கேளும்:—

ஓ குவலயம்புகழும் குருகுலக்கோமானே, திரிகர்த்தராஜன் தன் கைவசப்பட்ட மாட்டுமந்தையை விட்டுத் தானுங்கட்டுண்டு விடுபட்டுச் சேனையுடன் முதுகிட்டுத் திரும்பிய செய்தியைத் துரியோதனன் சில தூதுவர்கூற அறிந்தான். அறிந்ததும் அவன் ஆக்கிரமித்து வியாக்கிரம்போ லெழுந்து, "இந்தச் சுசர்மன் நாம் சொல்லியனுப்பியபடி பாண்டவர்கள் பதுங்கியிருக்கும் பருவத்தைப்பாராமல், பசு நிரையை மடக்கினுன். பின் பக்குவத்துடன் பட்டணம் வந்து சேராமல் விருதா வேலை செய்துவிட்டானே" என்று வெம்பி, "ஐயோ! ஆண்மையுடையவனிவனென்று நம்பி வீண் மோசம் போனேமே! அடா தம்பி துச்சாதனு, நமது நால்வகைப் படையுமெழும்படி விளம்பி, என் வெற்றிமுடியைவிரைவிற்கொண்டுவா" என்றுகிளம்பி, "நாம்திக்கெட்டுஞ் செவிடுபடப் பேரிகை முழக்கிக்கொண்டு பட்டப்பகலிற் புறப்படுவது பக்குவமல்ல" என்றுசொல்லி,விட்டெரிக்கும் கிரணங்களையுடைய வெய்யோன் உதயஞ்செய்யு முன்பாக அட்டகஜத்திற் கிணைப்பட்ட துட்டயானைகளை நடாத்திக் கட்டுக்காவலுடன் மட்டுப்படாச் சேனைகள் புடைசூழப் புறப்பட்ட, விராடபுரத்து உத்தர திசையிற் சென்று நவதானியங்கள் விளைந்திருந்த நாடுகாடுகளை யழித்து, தனது நால்வகைச் சேனைகளையு நிறைத்து, ஊரிலுள்ளோரை யோடவிட்டடித்து, ஓடும்பேர்களை யோடாமல்மறித்து,செழித்துவளர்ந்த கருப்பங்கொல்லைகளைத் தீயிட்டுக் கொளுத்தி, நன்செய் புன்செய்ப் பயிர்களை நாசப்படுத்தி, ஆழ்ந்தகுளங்க ளனைத்தையுந்தூர்த்து, தடங்கள் மடங்களைச் சரிய விடித்து, ஆறுகால் ஏரி அணைக்கரை முதலியவைகளை யழித்து, போராகக் குவித்த நெற்களைப் பொறிபறக்கக்கொளுத்தி, நாடு காடாகக் காடு மேடாகக் கெடுத்து, மாடுகளைப் பிடித்து, அறம் பறந்தேங்கவும் மறஞ் சிறந்தோங்கவும் வில்லைவளைத்து அல்லல் விளைத்தான்.

### கோபாலர் முறையிடக்கேட்டு தாயோடு வருந்திய உத்தரன் கருத்தை விரதசாரணி பிருகந்நளைக் கறிவித்தல்

அக்காலையில் அந்த மந்தைகளுக்குக் காவலாயிருந்த நந்தகோபாலர் வந்தெதிர்த்துப் போர் புரிந்து சிந்தை நொந்து, திறனழிந்து ஊர் புகுந்து, இராஜமைந்தனாகிய உத்தரகுமாரனோடு ஓலமிட்டழுதார்கள். அவர்களை அவ்விரசிளங்குமரன்நோக்கி, ‘‘உங்களுக்கு என்ன துன்பம் நேரிட்டது?’’ என்று கேட்டனன். அதற்கவர்கள் இராஜகுமாரனடி மேல் வீழ்ந்தெழுந்து, இரு கைகளையுங் குவித்து ‘‘இளஞ்சிங்கக் கன்றாகிய சுவாமி பராக்! தென்றிசையில் திரிகத்தன் வந்து புகுந்து, பசுமந்தையை மடக்கிய செய்தியறிந்து, அப்பசுக்குலங்களை மீட்கவேண்டிச் சேனைகளுடன் விராடபூபதி சென்றிருக்குஞ் சமயம் பார்த்து, அரவக் கொடியோனாகிய துரியோதனராஜன் பலம்பொருந்திய படைகளுடன் வடதிசையிற் கலந்து பதாதிகளைப் பிரித்துவிட்டு நாட்டிலுள்ள பலன்கள் யாவையுமழித்து அதாகதஞ்செய்து, மாட்டையுங்கவர்ந்து கூட்டமாய் எதிர்த்த எங்களை மாட்டிப் பிளந்துவிட்டான். ஓ சந்திர குலேந்திரனே, நீர் இத்தருணத்தில் வீட்டிலிருப்பது தகுதியோ?’’ என்று முறையிட்டார்கள். இவ்வண்ணம் உத்தரகுமாரனோடு விணையுரைப்போர் விளம்பிய சொல்லை அக் குமாரனைப்பெற்ற சுதக்ஷணை அறிந்து, ‘‘ஆ! இஃதென்னவிந்தை? யாரேனும் நாட்டில் அரசனில்லாதவேளைபார்த்து வந்து மாட்டை மடக்குவார்களோ? இஃது இராஜநீதிக் கேற்குமோ? பெண்பாலாகிய நான் என்ன செய்வேன்?’’ என்றேங்கித் தன்பக்கத்திலிருந்த பாங்கியரை நோக்கி, ‘‘அடி தாதியரே, இந்தவேளைதப்பித்துக் கொள்வதற்கெந்தவழியுங் காணேம் வந்திருக்குங் குருகுலச்சேனைகள் நமது அந்தப்புரம் புகுந்து தொந்தரை செய்யுமுன்னமே ஜாக்கிரதைப் படவேண்டும். அதற்கு என் சிந்தையிலொரு தந்திரம் தோன்றுகிறது அதைக் கேளுங்கள். எப்பேர்ப்பட்டவர்களும் பெண்கள் பேரிற் படையெடுக்கலாகாதென்று அரசநீதி யிருக்கின்றது. அதைப் பலரறியா விட்டாலும் சிலராயினும் அறிந்திருப்பார்கள். பாவபுண்ணியம் பார்த்து நடப்பார்கள். ஆகையால், நீங்கள் யாவரும் ஆயுதபாணிகளாய்ப் புறப்பட்டுக் கோட்டை மதில்மேலேறிக் கூட்டங் காட்டி, நமது மச்சநாட்டுக்கோர் மறுவுருதபடி கவனித்து வாருங்கள்’’ என்று கூறினாள்.

அவளுரைத்த வார்த்தையைக் கேட்ட உத்தரகுமாரன் நெருப்பில் விழுந்த புழுப்போல் துடித்துப் பெருமூச்சுவிட்டு, பெற்ற தாயை வணங்கி, ‘‘அம்மா, நான் இருக்க நீ என்ன சொன்னாய்? ஓ! ஓ! ஓ! நீ இப்போது உரைத்த மொழியானது மிகவு நன்றாயிருக்கிறது’’ என்று வெருண்டு நகைத்து, ‘‘ஐயையோ! என்னைக் கொல்ல மாட்டாமற் புல்லிய மொழி சொல்லினையே! உனது வயிற்றிற் பிறந்து, சகலகலைகளு மறிந்து, செல்வச் சிறுவனா யிருந்து செழித்து அமுதருந்திய என்னை, மன்னனுக்குப் பிறந்த மைந்தர்களிற் கடைசியிற் பிறந்த மக

னென்னைப் பூரித்து ஆதரித்துவந்த அன்னையாகிய நீ, என்னை யருமை யாக இதுவரையில் வளர்த்தது, சத்துருக்களாற் பகைவந்து நேர்ந்த போது பெண்கள் கூடிச் சண்டை செய்து தாங்குவதற்குத் தானே? இந்த ஸ்திரீகளால் மச்சநாட்டுக்குவந்த வருத்தம் நீங்கிப்போமானால், நான் உனக்குப் பிள்ளையென் றிருந்து பிரயோசன மென்ன? எனக்கு வீரனென்னு மேம்பாடென்ன? நான் கற்ற வித்தைகளினாற் பய னென்ன? நானொருவ னிருக்கின்றேனென்று சற்று மதியாது பய னற்ற வார்த்தைகளைச் சொல்லினையே! தாயே! நான் அந்தச் சத்துருக் களைச் சயிக்க மாட்டேனென்று எண்ணினீர்போலும்? சத்திக்குஞ் சத்த சமுத்திரம் போற் படையெடுத்து வந்து நமது பசுநிரைகளைக் கவர்ந்த பகைவருக் கெதிரில் நானொருவனு முனைந்து, முழுப்போர் புரிந்து, இமைகொட்டு முன்னே யினைத்தோட வாட்டி, விஜயக்கொடி நாட்டி, ஜயபேரி யடித்து, யாவரும் புகழ்ந்து மெச்சும்படி திரும்பி வந்து உன்பொன்னடியைப் பூசிக்கிறேனம்மா, ஆனால், அந்தப்போர் முகத்திற் காலமறிந்து, சமயந் தெரிந்து, மனக்கருத் துணர்ந்து, முகக் குறிப் போர்ந்து, எதிரியின் எண்ணங்கண்டு, எனது தேர்விடுக்கத் தக்கவனாகவும், எனது மனதுக் கொத்தவனாகவும் ஒரு சாரதி கிடைப்பானானால், யாரென்னை வெல்ல வல்லவர்கள், அம்மணி! அப்படிப்பட்ட சாரதி யொருவன் இல்லாக்குறையினால், நீர் உரைத்த பேதைமைச் சொல்லுக்குப் பின்னிட்டுத் தவிக்கிறேன். இப்போது வந் தெதிர்த்திரா நின்ற கர்னராஜன் பீஷ்மாசாரி கிருபாசாரி துரோணாசாரி அரவக்கொடி படைத்த துரியோதனன் இவர்கள் யாவரும் புறங் கொடுத் தோடப் போராடி, அம்புலிக் குலத்தில் அவதரித்திரா நின்ற மகா வீரசிகாமணியாகிய அருச்சுனன்கூட அதிசயிக்கும்படி ஜயித்து, நமது மாட்டு மந்தையை மீட்டுக் காட்டுக் கோட்டிவிட்டு, ஒருகடிகை நேரத்தில் இந்நாட்டில் வந்து அடிவைப்பேன். அம்மா, இதைக் குறித்து வேறொன்றும் யோசிக்க வேண்டாம்'' என்று உத்தரகுமாரன் சொல்ல, அதைக்கேட்ட சுதக்ஷிணை அவனைக் கட்டி யணைத்து, ''என் அப்பனே, நீ இப்போது உரைத்ததெல்லாஞ் சரிதான். உன்னிஷ்டப் படி தேரைச் செலுத்த வல்லவனை நான் எங்கே கண்டு தேடுவேன்? உனக்கு சாரதி தேடுதற்கு முன்னமே எதிரிகள் வந்து கோட்டையைக் கைக்கொண்டு போவார்களே'' என்றுசொல்லி ஏக்கமுறுஞ் சமயத்தில் இக் கருத்தைப் பக்கத்தினின்று கேட்டிருந்த பணிப்பெண்ணானவள் உத்தரனுரைத்த உறுதிச் சொல்லையும், அருச்சுனனைப் புகழ்ந்து பேசிய அன்பையும், தன் சித்தத்திற் குறித்து, சற்று நிதானித்து, சித்திர விற்கொண்டு சிவபெருமானைப் புடைத்து பாசுபதாஸ்திரம் பெற்ற தனஞ்சயனாகிய பேடி யிருக்கும் நாடகசாலையிற் புகுந்தாள். அப்போது மிக்க அவசரமாக வந்த விரதசாரணியின் ஆவலையும் முகக்குறிப்பையும் பிரகந்நளையாகிய பேடி கண்டு ஓடிவந்து, தங்க ளுக்குள் அமைத்துக்கொண்ட சைகையினால் தனித்துச் சென்று, ''இத்தனை விரைவோ டிங்குவந்த காரியம் என்ன'' என்றான்,

அவள் ''ஐயா! சில கோபாலர்கள் வந்து உத்தரகுமாரனைக் கண்டு 'தெற்குத் திசையில் திரிகர்த்தனை யனுப்பிவிட்டுத் திரண்ட சேனை யுடன் வடதிசையிற் புகுந்து மாடுகளை மடக்கினான் துரியோதனன்' என்று கூறினார்கள். அந்த மொழியைக் கேட்ட சுதக்ஷணாதேவி சிந்தை நொந்து, அருகிருந்த தாதியர்களை யழைத்து, 'விராடராஜன் வருகிற பரியந்தங் கோட்டை மதிலின்மேற் கூட்டங்காட்டி நாட்டைக் காத்து வாருங்கள்' என்று நவின்றாள். அப் பேச்சைக் கேட்ட உத்தர குமாரன் மனம் பொறாமல் மாதாவை வெறுத்து, தனது வீரப்பிரதாப வெற்றியைப் பேசி, 'என் மனதுக் கிசைந்தவ னிருப் பானானால் தனஞ்சயனுங் கொண்டாடச் சண்டை போடுவேன். பகை வரைச் சாடுவேன். க்ஷத்திரியத் திறத்தைச் சாதிப்பேன்' என்று சஞ்ச லப்படுகின்றா''னென்று சொன்னாள். அம்மொழி கேட்ட பேடி ஆத்தி ரப்படாமல், தாங்கள் நடத்தவேண்டிய அக்ஞாதவாசத்தவணை நாளைக் கணக்குப் பார்த்து, ஊர்வசியின் சாபமுற்ற ஒருவருடத் தொகையோடு காலபலமுங் கண்டறிந்துகொண்டு, வெளிப்படுங் காலம் இதுதா னென்று மிக மகிழ்ச்சியுடன் திரௌபதியைப் பார்த்து, ''ஓ பெண்ணாய கமே! இவ்வளவுதூரம் வந்து என் காதிலேற்றிய வீரரசமானது விருதா வாய்ப் போகாமல், எப்படியாவது சுதக்ஷணைக்கும் உத்தரனுக்கும் தெரியப்படுத்தி, சாரதித் தொழிலுக் கென்னை யிசைவிப்பது உன் கடமை''என்று ஒருதரத்திற்கொன்பதுதரமாகச்சொல்லிவேண்டினான்.

### விரதசாரணி பேடியை உத்தரனுக்குச் சாரதியா யமைவித்தல்

அவையனைத்துங் கேட்ட வண்ணப் பெண்பாவை அவ்வாறே செய்விக்கிறேனென்று சொல்லி விடைபெற்று வந்து நெருங்கித் திணிந்த தனமும்-சுருங்கிக் கனிந்த மனமும்-துவண்ட இடையும்-சிறந்த நடையுமுடைய உத்தரை குமாரத்திக்குச் சங்கதியாவுந் தெரி வித்து, அவளைத் தன்னோடழைத்துக்கொண்டு சென்று, விராடன் புத் திரனாகிய வீரகண்டை தரித்த அவ்வுத்தர குமாரனைக்கண்டு, ''ஐயா! நானொரு நன்மை சொல்லுகிறேன் ஐயமில்லாமல் அங்கீகரியும் வைய முழுது மும்மை வாழ்த்தும், பொய்யில்லாப் புகழணி பூணலாம். இப் போது சூழ்ந்திருக்கின்ற துஷ்டரை வெல்லுவதற்கு உமக்கிஷ்டமிருந் தால், திருத்தமாகிய தேரைப் பொருத்தமாகச் செலுத்துஞ் சாரதியில்லை யென்று சங்கடப்படவேண்டாம். இந்த உத்தரை நாயகியாருக்கு நட னத்தொழில் பயிற்றிவரா நின்ற பிரகந்நளை யென்னும் பேடிக்கொப்பா கிய சாரதி எப்புவியிலுமில்லை. அவளெப்படிப்பட்டவ ளென்றால், ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியின் தங்கையான சுபத்திராதேவியைத் திருமண முடித்த அர்ச்சுனன் காண்டவ வனத்தை எரித்த காலத்தில், அவ னுக்கு அக்கினித்தேவன் கொடுத்த அழிவில்லா இரதத்தைச் செலுத்தி, யாவருந்துதிக்கத் தேவருங்களிக்க அடுபோர் புரிந்து ஜயம் பெற்றிருக் கின்றாள். நான் பாண்டவர்க்குரிய பத்தினியிடத்திருந்தநாளில், அந்தப் பேடியின் திறத்தை யறிவேன், மெத்த மகிமை பெற்றவள், வீரப்பிர தாபமுள்ளவள், மிக வல்லவள், மேலும் நல்லவள், என் பேச்சை நம்பி

பேரிற் கைவைத்துக் கலேத்தான். அப்போதவனுக்கொரு பொல்லாங்கு மில்லாதிருந்தது. அதையவன் பார்த்து, "அடடா! இதிலென்னமோ மகத்துவ மிருக்கிறது" என்று தனக்குத்தானே பூரித்து, பூமியில் நின்ற பேடியை நோக்கி, "ஓ வீணுன நிஷ்டூரத்திற் காளான விந்தைத்காரி! இந்த மரப்பொந்தில் வைத்திருக்கும் ஆயுதங்களுடன் மலேப்பாம் பொன்று சுற்றிக்கொண்டிருக்கிறது. உன்னுலெனக்கு என்ன தைரியம் நேரிட்டாலும், 'பாம்பென்ருற் படையுநடுங்கும்' என்னும் பழமொழி யுண்டல்லவோ? அதனுல் என்மனம் அளவுபடாமல் வருந்திவாடுகின் றது. அப்படி யிருந்தபோதிலும் பாண்டவர்களின் படைக ளிவ்விடத் தில் வந்த வரலாறும், விஷாக்கினியுள்ள பாம்பொன்று சீறிக்கொண் டிருக்குந் தன்மையும், அவர் களிந்த வன்னிமரத்தி லொளித்துவைத்த காரணமும், இந்தரகசிய முனக்குத் தெரிந்தவிதமும், எனக்கொளியா மல் விவரமாகச் சொல்லுவாயானுல், நானிந்த ஆயுதங்களே யெடுத்துக் கொண்டு கூடவந்து நீசொன்னபடி கேட்டு நடப்பேன். இல்லாவிடில், இம்மரத்தைவிட்டிறங்கமாட்டேன்" என்று உத்தரகுமாரனுரைத்து அம்மரத்திலட்டகாசஞ்செய் தமர்ந்திருந்தான். அந்தமைந்தனறைந்த வார்த்தைகளே அருச்சுனன்கேட்டு, சிந்தைபூரித்துச் சிரித்து மகிழ்ந்து தேர்த்தட்டின்மீதேறி நின்று, "ஓ அடுத்தோரைக்காக்கும் அரசிளஞ் சிங்கமே! பாண்டவர்கட்குரிய படைகளே இந்த வன்னிமரத்தில் மறைத்துவைத்தபோது, 'இருவர் தவிர மற்றவர்கள் கண்ணுக்குப்பாம் புருவமாய்த்தோன்றக்கடவன' என்று தருமராஜனுரைத்த சத்தியவாக் கின்படி சர்ப்பமாகத்தெரிகின்றன. சஞ்சலப்படாதே. அஃதொருபெரிய வில்லென்றறிந்து கொள்ளக்கடவை. அந்தவில்லின் பிரதாபமும் அது கிடைத்த முறைமையையும் கேள்—சிருஷ்டிகர்த்தாவாகிய பிரமாவி னிடத்தில் நூருயிரவருடம், தக்ஷகப்பிரமாவினிடத்தில் பதினுயிர வரு டம், தேவேந்திரனிடத்தில் ஆயிரவருடம், சந்திரனிடத்தில் ஐந்நூறு வருடம், வருணனிடத்தில் நூறுவருடம், மற்றும் பலரிடத்தில் நெடுங் காலமிருந்து, இவர்கட்குண்டாகிய பகைகளேக் களேந்து பின்னும் வருணனிடத்தில் வந்துசேர்ந்து பொன்னுமணியும் பூஜையாகக் கொண்டு, சிலவருஷஞ் சென்றபின்பு கடைசியில் அக்கினித்தேவன் அடுத்துக்கேட்க, அவனிடத்திலாசைவைத்த அவ்வருணராஜன் அதை அன்போடுகொடுத்துவிட்டார். இந்த வில்லினுல் வெற்றிபெற்று வந்த அக்கினித்தேவன் காண்டாவன தகன காரணத்தினுல்அருச்சுன ராசனுக்குக் கொடுத்து, தமக்கு வேண்டிய காரியங்களே முடித்துக் கொண்டார். அதுமுத லிதுவரையிலும் அறுபத்தைந்து வருடமாக அருச்சுனராசன் கரத்திற்கிசைந்து, அநாவிர்தகண்டம் அளாவிர்த கண்ட முதலிய வெண்டிசையும் வென்று, ஜெயமாலே புனைந்து மனே பிஷ்டங்களேக் கொடுத்து, தேவர்களுரைத்தருளிய ஆசிர்வாதத்தினுல் வெகுவித அதிசயவெற்றியைப்பெற்று, காண்டிபமென்னும் அசைவற்ற இசைபெற்றிருக்கும் பேர்கொண்ட வில்லென்றறியக்கடவாய். இந்த வில்லுக்கொப்பாகியவில் இவ்வுலகமுதலிய எவ்வுலகத்திலுமுல்லே. இந் திரநீலம் வைத்திழைத்த எழிலொளிபோற் பிரகாசிக்கும் அதனே நீ

நன்ருய் நிதானித்துப் பார்க்கில், உனக்கே செவ்வையாய்த் தெரியும். அன்றியும் பஞ்சபூதங்களினுலும், பண்ணவர் முதலியபதினெண்கணங்களினுலும், எக்காலத்தும் பழுதுபடாத வியல்பு அதனிடத்துள்ளதால், அதற்குக் காண்டீபமென்னும் பெயருண்டாயது. பூர்வம் அர்ச்சுனனவன் சொர்க்கலோகத்தினுக்குற்ற துன்பத்தினை நீக்கும் பொருட்டுக் காலகேய நிவாதகவசர்களை வென்று யமபுரத்திற்கனுப்பிய திறமையும், இராஜசூய யாகத்திற்காக விஜயம்பெற்றுத் திரவியம் சேகரித்த முறைமையும், சித்திரசேனன் முதலிய கந்தர்வரைக் கண்கலங்கச் செய்து துரியோதனனைக் குடும்பத்துடன் கட்டவிழ்த்து மீட்ட கருணையும், இக்காண்டீபத்தினுலென் றறியக்கடவை. இந்தமட்டு மிது நிற்க; சத்தாகிய பாற்கடலைக் கடைந்த மத்தாகிய மந்திரகிரிபோன்ற, கொத்தாகிய மற்ற வாயுதங்களுடன் கலந்து விளங்குகின்ற வெவ்விய கதையானது பீமசேனனுக்குரியது. மற்றுமுள்ள ஆயுதங்களியாவுந் தருமராஜ நகுலசகாதேவர்களுக் குரியனவாம்'' என்று அருச்சுனன் சொல்லவும், வெற்றிமேற்கொண்ட விராடகுமாரன் தன் மனக்கலக்கந் தெளிந்து, சகல படைகளையுங் கண்ணுற்கண்டு சொல்லுகிருன் :—

**உத்தரகுமாரன் பாண்டவர்க்கு நேர்ந்த சம்பவங்கேட் டவரெங்குள்ளாரோ வென்று வருந்த, பிருகந்நளை இரகஸ்யத்தை வெளிப்படுத்துதல்**

''ஓ கடையேனுகிய எனக்கு இவற்றையெல்லாங் காண்பித்து என்னை ஆளாக்கிவிட்ட காரிகையே! ஓ இஷ்ட தெய்வம்போ லென்னைத் தடுத்தாட்கொண்ட வேந்திழையே! மகா புண்ணியவதியாகிய குந்திதேவியீன்ற மைந்தரைவருந் தங்கள்தங்க ளுயிர்போற் கருதிய ஆயுதங்களை ஒருநாளும் பிரியார்களே; அப்பேர்ப்பட்ட மகாபுருஷர்கள் இந்த வன்னிமரத்தில் மறைத்துக் குறிப்பிட்டு வைக்கவேண்டிய அவசரமென்னவோ? இப்பொழுதவர்க ளெந்தநாட்டில் இருக்கின்ருர்களோ? எந்நகரத்துள்ளார்களோ? எப்படியானுர்களோ? அதையெனக்குணர்த்தவேண்டும், பாக்கியசாலி'' என்று உத்தரன் கேட்க, வாசநிறைந்த மலர்போற்சிறந்தவாள்விழியிணையுடைய பேடியானவள் முகநயந்து புன்னகைபுரிந்து, ''ஓ அன்புள்ள அரசனே! பாண்டவரைவரும் நந்தியாவட்ட மாலையணிந்த நராந்தகனுடைய வஞ்சத்திற்குள்ளாகிச் சொக்கட்டானுடி, அவ்வாட்டத்திலே தோல்வியடைந்து சோர்வடைந்தவராகி, அத்தோல்விக்குப் பன்னிரண்டுவருடம் வனவாசமும் ஒருவருட மஞ்ஞாதவாசமு மவன்போக்க அதற்குடன்பட்டுச் சென்று காட்டிற்கழிக்கு நாட்களைக்கழித்து, நாட்டிலிருக்குநாளை நினைந்து, யாவராலுந் தங்களை இன்னுரென்று அறியாதிருக்கும்படி தங்களாயுதங்களை இம்மரத்தில் மறைத்துவைத்து, வேடமாறி வேற்றுருக்கொண்டு, எவரும் ஐயங்கொள்ளாதிருக்கும்படி அவரவர்க்குத் தக்கதொழிலை மேற்கொண்டார்கள். இப்பொழுதவர்க ளெவ்விடத்தி லிருக்கின்ருர்களோ எனக்குத்தெரியாது'' என்று திங்கள்குலஞ் சிறப்பிக்கப் பிறத்த சிலைவிஜயன்கூற, மறுவில்லா மச்சகுமாரன் பெருந்தகைபேசியவார்த்தையைக் கேட்டுப் பெருமூச்செறிந்து, உடல் படபடத்து, உயிர் துடிதுடித்து,

ஐயோ! தெய்வமே! சத்தியந்தப்பாத சாதுவானவர்கள் அசத்திய துஷ்டராகிய சுயோதனனுதியரால் இப்பாடுபடத் தக்கதேயோ? தரும மவர்கட்குச் சகாயம் பண்ணுமற் போயிற்ருே? கலிகாலமாயிற்ருே? பாவமேலிட்டதோ? நீதி வழுவிக் கெட்டதோ?கொடியோர் களித்திருக் கப் பாண்டவர்கள் துன்புற்றுத் தேம்பி வாடச்செய்தது தீவினையோ? தவத்தைத் தஞ்சமென்று கருதி இவ்வுலகிலுள்ளோர்கள் கொண்டாடு கின்ருர்களே; அந்தோ! இனி யெப்படி தருமத்தை நம்பலாம்? அசத் திய மேலிட்ட அக்கிரமிகளுக்குத் துணை செய்யுமாயின், சத்தியத்தை நம்பிச் சங்கடப்படுவது தகுதியோ? ஓ என் பிரமை தீர்த்த பிரகந்நளைப் பாவாய்! தருமமே சத்தியம், சத்தியமே நித்தியமென்று இருந்த தருமராஜனும், தோள்வலியைத் துணையாகக்கொண்ட பீமசேனனும், திறனுற்ற சிலைபெற்ற விஜயசிகாமணியும், மற்ற இளையவரிருவரும், பெருமையாக வாழ்ந்த புண்ணியர்களன்ருே! அவர்களுக்கு மித்தன் மைத்தான இடையூறுவரலாமா? வாசமணக்கு மலர்க்குழலினையுடைய திரௌபதி யாருடன் எவ்விடத்திலே துன்பம் அநுபவிக்கின்ருர் களோ? எத்தொழில் செய்கின்ருர்களோ?'' என்று வருந்திப் பின்னுஞ் சொல்லுகிருன் :—

''ஐயோ! இவ்வுலகத்தி லொருவர் பற்பல யாகங்கள் செய்து சோடச மகாதானமும் பண்ணி மேலாகிய வாழ்வனுபவித்துத் திரி புவனத்தும் ஜெயம்பெற் றிருந்தாலும், அவ்வாழ்வைக் கீழ்ப்படுத் தித் தாழ்வை மேற்படுத்தி, நல்லாரைப் பொல்லாராக்கிப் பொல் லாரை நல்லாராக்கி, சோரர்களை வீரர்களாக்கி வீரர்களை சோரர்க ளாக்கி, ஜாதியீனரைச் சிரேஷ்டராக்கிச் சிரேஷ்டரை ஜாதியீன ராக்கி, தனவான்களைத் தரித்திரராக்கித் தரித்திரரைத் தனவான்க ளாக்கி, புநிதரைப் பிணியராக்கிப் பிணியரைப் புநிதராக்கி, பொய் யரை மெய்யராக்கி மெய்யரைப் பொய்யராக்கி, இவ்வாறு தலைகீழாகப் பண்ணுவதோ ஊழ்வினைப்பயன்?'' என்றுருகித் தன் மனங்கருகி, கண்ணீர்பெருகியோடக் கசிந்து, பெருமூச்செறிந்து ''ஓ தெய்வமே! பாண்டவர்கள் இப்போது எங்கிருக்கின்ருர்களோ? நல்லவர்கட்குத் தீவினை விளையுங் காரண மென்னவோ?'' என்று உயிர்வேதையுடன் ஏக்கங்கொண்ட உத்தரகுமாரனுடைய உண்மையையும் உறுதியையும் அருச்சுனன் தெரிந்துகொண்டு உள்ளமகிழ்ந்து ''ஓ பள்ளநீர்க்கயங் கள்தோறும் பால்பெருகியோடு மச்சநாட் டிறைவன் மைந்தனே! நிந்தையில்லாப் பாண்டவர்களைக் குறித்து நைந்துவருந்தாதே. அவர்களிப்போது, உன்னுட்டிலும் நகரிலும்-படைவீட்டிலு மிருக் கிருர்களே யொழிய, வேறெங்குமில்லை'' என்று சொன்னுன்.

அவன் வார்த்தையைக்கேட்ட உத்தரகுமாரன் சித்தம் பிரமித்து ''அம்மம்மா, எனது நாட்டிலும் வீட்டிலு மெப்படி யிருக்கின்ருர்கள்? ஐயோ! அந்த விந்தையை எனக்கு விவரமாகச் சொல்லுந் தாயே!'' என்று உத்தரன் கேட்க, விஜயன் ''அப்பா! முதன்மையான குலத்தை யும் முடிவில்லாத நலத்தையு முடையவராய், விராடராஜனுக் கருகில்

ஆசனத்திலிருந்து திவ்வியமங்கள விக்கிரகமாய் விளங்குகிறவரும் விவகார தருமநீதிகளை விளம்புகிறவரும், கங்கபட்டரெனப் பெயர் பெற்றவருமாகிய கருணையாளர்தான் முரசக்கொடி படைத்த தரும ராஜன், நாவிற்கினிய அறுசுவைப் பதார்த்தத்துடன் அன்னஞ்சமைக் கும்படியாக உங்கள் மடைப்பள்ளியிலிருக்கும் பலாயனனென்னுஞ் சுயம்பாகிதான் பீமசேனன். எங்கும் பிரசித்தமாகிய குதிரைக் கூட்டங் களுக் கெஜமானுகிய தாமக்கிரந்திதான் நகுலராஜன். உங்கள் பசு மந்தைகட்குத் தலைவனெனவந்த தந்திரபாலனுனவன் சகாதேவன். உன் தாயாகிய சுதக்ஷணையி னிடத்திற் பணிப்பெண்ணு யமைந்த விரதசாரணியானவள் மகா லட்சுமிக் கிணையான திரௌபதாதேவி. உன் தங்கையாகிய உத்தரைக்கு மத்தள தாள விதத்துடன் தித்திமிதா வென நர்த்தனம் பழக்கிக் கொண்டிருந்த பிரகந்நளை யென்னும் பேர் கொண்ட பேடியாகிய நான்தான் அருச்சுனன். அன்றியும் உன் அம் மானுன கீசகன் திரௌபதியின் மீது காதல்கொண்டு துன்மார்க்கம் நினைத்தமையால், அவனை வசந்த மண்டபச் சோலையிலடித்து அவன் தம்பிமார்களையு முடித்து, கந்தர்வர்பேரிற் பழிவைத்தவன் பீமசேன னென்று தெரிந்துகொள். பீமன் கொன்றுபோட்டுக் கந்தவர்பேரிற் பழிசுமத்திய தேனென்ருல், நாங்கள் கழிக்கவந்த அக்ஞாதவாசத்திற் கிடையூறு வருமென் றஞ்சி அவ்வாறு சுமத்தி மறைத்தோம். இது வரையில் நாங்களறுவரும் உனது மச்சநாட்டிற்ருனே மந்திரத்தால் தடைபட்டிருந்த கிருஷ்ண சர்ப்பம்போ லடங்கியிருந்து, தவணை நாளைக் கழித்துவிட்டோம். நாங்களநுபவிக்க வேண்டிய பதின்மூன்று வருஷங்களும் நேற்ருேடு தீர்ந்து போய்விட்டன, இனிலேலெங்கட்கு இயாதொரு பயமுமில்லை'' என்று உண்மையை விளம்பினுன்.

### உத்தரகுமாரன் அர்ச்சுனன் பெயர்களு மவற்றின் வரலாறுங்கேட்டு ஐயந்தீர்ந்து ஆயுதமெடுத்துத்தரல்

இவைகளனைத்துங் கேட்ட உத்தரகுமாரன் ஆச்சரியத்துடன் புகழ்ந்து, ''இது நல்ல காலமா யிருப்பதால் இவ்வேளையி லின்னுஞ் சில ரகசியங்களை வெளியாக்கிக் கொள்ளவேண்டும்'' என்று விரும்பி, ஒரே மனதாய்த் துணிந்து, ''ஓ பெண்ணுருக்கொண்டுநிற்கும் பெருந் தகையே! தேவர்கள் கொண்டாடாநின்ற பேரழகும், சிவபெருமா னளித்த அருளாண்மையும், சுத்த வீரர்கள் மெச்சுஞ் சிலை விஜயத் திறமும் ஆகிய இவைகளைப் பெற்ற தீரவீர அருச்சுனராஜன் நான் தானென நீர் சொன்ன பேச்சை நான் நம்பமாட்டேன், நீரே நர னென்று ஸ்திரமாகச் சொல்லுவீரானுல், உமக் கெத்தனை பெயர் கிடைத்திருக்கின்றது? அப்பெயர்கள் வந்ததற்குக் காரணமென்ன? நீர் அவற்றை யெல்லாம் என் மனக்கலக்கந்தீரச் சொல்லுவீரானுல், நானுமக்கடிமையாவே னென்பதற்கு யாதொரு தடையு மிராது''. என்று உத்தர குமாரனுரைக்க, சித்திரப்பாவைபோ லிருந்து கேட்ட விஜயன் சிந்தை களித்து, ''ஓ வெற்றிபெற்ற விராடராஜ னளித்த உத்தரகுமாரனே! எனக்குக் கிடைத்திருக்கின்ற பெயர் பதினென்று

அவையாவன:-பற்குணன்-பார்த்தன்-கிரீடி-தனஞ்சயன்-விஜயன்-சுவேதவாகனன்-வீபற்சு-சவ்வியசாசி-சிட்டினன்-அருச்சுனன்-கிருட்டினன். இவ்வாறமைந்த என்பெயரைப் பெரியோர் முதலிய யாரும் பெருமையாகக் கொண்டாடிப் பேசுவார்கள். இப்பெயர் வந்ததற்குக் காரணம் யாதெனில் பங்குனியுத்தரத்திற் பிறந்தமையால் பற்குணனென்றும், என்னை யீன்ற அன்னை பெயர் பிரதையாதலின் பிரதைசம்பந்தம் பெற்றதால் பார்த்தனென்றும், தேவலோகத்திலே புகுந்து தேவேந்திரன் கொடுத்த கிரீடம் புனைந்து சிம்மாசனத்தில் வீற்றிருந்தமையாற் கிரீடியென்றும், இராஜசூயயாகமியற்றிய அந்நாளில் உத்தர குரு கண்டத்துக்குச் சென்று தேவர்கள் கந்தர்வர்கள் முதலியபேர்களை வென்று எண்ணிறந்த தனக்குவையை மகமேருபோற் குவித்தமையின் தனஞ்சயனென்றும், திரிபுரவனத்துமென்னைச் ஜயிப்பவரின்றித் திசைமுற்றும் யானொருவனே வென்று விஜயங் கொண்டமையால் விஜயனென்றும், பரமசிவத்தின் வெள்விடைபோல் விளங்கும் நான்கு சுவேதப்புரவிகள் பூட்டிய தேரேறி நடாத்துகின்றமையாற் சுவேதவாகனனென்றும், என்னைக்கண்ட வேந்தர் யாவரும் பொன்-மண்-பெண் என்னு மூவாசைகளை விட்டுக் கண்ணைப் பிசைந்து கலங்கிப் பின்னிடவும், விண்ணைச் சேரவும் விடுக்குந் திறத்தால் வீபற்சென்றும், இடக்கை வலக்கை இரண்டிலும் பாணந்தொடுக்குந் திறத்தாற் சவ்வியசாசி என்றும், என்னையும்-என்வில்லையும்-என் தமையனையும் இகழ்ந்து பேசுகின்றவர்கள் மட்டற்ற வல்லமை பெற்ற வானவராயினும் மன்னவராயினும் அவர் தலையை நட்டப்படுத்தி நாசஞ்செய்வே னென்று சபதங்கொண்டிருக்கின்றமையாற் சிட்டினனென்றும், மரகதமணிபோற் பசப்பற்ற உடல்கொண்டிருத்தலால் அர்ச்சுனனென்றும், காண்டவவன தகன காலையில் மாதவனும் யானும் வேற்றுமையின்றி மருவியவாற்றாற் கிருட்டினனென்றும், இத்தன்மையா யிசைந்த பதினொருபெயருங் கற்றவராலும்-கொற்றவராலும் நற்றவராலும் தேவர்கள் முதலிய மற்றவராலும் எனக்கு வந்துற்றன.

"ஐயா உத்தரகுமாரனே! பூர்வந் திரிபுரமு நீறெழச்சிரித்தருளிய சிவபெருமான் அநுக்கிரகஞ் செய்த திவ்யாஸ்திரங்களும், பிரமா-விஷ்ணு-இந்திரன்-முதலிய தேவர்களளித்த கூரிய பாணங்களும் பெற்றிருக்கின்றேன். அவைகளை நாங்கள் அக்ஞாதவாசஞ்செய்ய யத்தனித்தபோது, இந்த வன்னிமரப் பொந்தில் வைத்திருந்தோம். இப்போது உனக்குப் பாம்புருவாகக் காணுகின்ற காண்டீபமும்-அக்ஷய தூணியும்-அக்கினிபகவான் அளித்தவை-முப்பத்துமுக்கோடி தேவர்களும் தேவேந்திரனுங் கொண்டாடிக் கொடுத்த தேவதத்தத்துடன் பதினாயிரங்குதிரை பூட்டிய இந்திர விமானத்தை மாதலி யோட்டிய காலையில், அதன்மே லாரோகணித்துத் தோயமா புரத்திற்சென்று, மூன்றுகோடி நிவாதகவசர்களைக் கொன்று ஜெயங்கொண்டு, தேவஸ்திரீகள் ஆலத்தியெடுக்கவும்-புட்பமாரிபொழியவும்-புகழ்ந்துவாழ்த்தவும்-பிரதாபம் பெற்றேன், இரணியபுர வாசிகளாகிய அறுபதினாயிரம்

பேர் காலகேயர்களையும், அவர்கட்குதவியான பதினாயிரம் அரக்கரையும், பாசுபதக் கணையால் மாய்த்து, யான் மந்தாரமாலை புனைந்து வரிசைபெற்றுப் பூலோகத்திற்கு வந்த மேன்மையை நீ கேட்டறியாய் போலும் இருக்கிறது! நல்லது ஓ உத்தரகுமாரனே! ஆயிரம் பேச்சென்னத்திற்கு? ஒரு வார்த்தை சொல்லுகிறேன். சத்துருக்களை யடிப்பதும், அவர்களுயிரைத் தாகத்திற்குக் குடிப்பதும், இவ்விரண்டும் எனக்கு அதிசொற்பமான வேலையன்றி வருத்தமன்று. ஆதலால் நான் அர்ச்சுனனென்பதிற் சந்தேகங்கொள்ளாதே. இதற்குத் திருஷ்டாந்தமாக இப்போது நமக்கு நேராகிய சேனைகளைக் கண்காணும லோட்டடிக்கிறேன். கன்றுகளுடன் கலந்த பசு நிரைகளை மீட்கிறேன். நீ இனித்தாமதஞ் செய்யாமற் புறப்படு'' என்று சொன்னான். அம்மொழி கேட்ட உத்தரன் ஒருவாறுதேறி மகிழ்ந்து, இனி நமக்குப் பயமில்லையென்று தானேறியிருந்த விருக்ஷத்தை விட்டிறங்கி, இரதத்தின்மீது இளஞ்சூரியனைப் பனிமூடியவாறுபோற் பேடியுருவமைந்த பெருமானை வணங்கி, நெடுநாளாகத் தேடிய தேவைப்பணியும் அன்பர்போற் பணிந்து, துன்பமும் துயருந் தொடராச் சுகசொரூபமுடைய திருவடியைச் சிரத்திலும் கண்களிலும் முகத்திலுஞ் சேர்த்து முத்தமிட்டுத் தன்னைத்தான் மறந்து, தனக்குத்தானே திடுக்கிட்டுப் பயந்து, இனியவசன மொழிந்து நயந்து நின்றான்.

அக்காலையிற் பார்த்தனானவன் விரைவிலே தேர்விட்டிழிந்து, பிரியாப் பிரியத்துடன் முகமலர்ந்து, உத்தர குமாரனை உடல் குழைய வணைத்து, 'ஐயனே! இன்னு முனக்கு பயமுண்டா யிருக்கின்றதோ? என்னளவிற் சந்தேக முண்டோ? நீ ஏதொன்றுக்கும் அஞ்சாதே இனி நீ தீதில்லாச் 'செயம்பெற்று வாழ்வாய்'' என்று உறுதிவார்த்தைக ளுரைத்துத் தேற்றினான். அதனா லுத்தரகுமாரன் களித்து முகமலர்ந்து, சிவந்த கைகளைச் சிரத்திற் குவித்து, கண்ணீர்பெருகக் கசிந்து உள்ளுருகி, ''ஓ பாற்கடல்போற் கீர்த்தி படைத்த பார்த்தமகாராஜனே! தேவரீ ரின்னாரென் றறியாமற் கன்னா பின்னா வென்று ஏழைமதியாற் பிதற்றி, அபசாரங்களைப் பெரிய மூட்டையாகக் கட்டிக்கொண்டேன். நான் மஹாபாவியாயினேன். சிறியேன் செய்த பிழையைப் பொறுத்து அருள்சுரந்தாளவேண்டும். ஓ அத்தனே! ஓ என்னிஷ்டமாகிய கர்த்தனே!'' என்று பற்பல வசனங்களினாற் பரதவித்துக்கூறி மேலுஞ் சொல்லுகின்றான்: ''ஓ கருங்கடல் அகடுகிழிய ஒருங்குடனோடிக் கலக்குங் கங்கைநீர் வளம்பெருகிய குருநாட்டரசே! கேட்டருளும் தேவரீர் திருவடி பெயர்த்தருளப் பெற்றுத் தங்கட்குச் சாரதிதொழில் செய்ய எனக்குக் கிடைக்குமா! ஜன்மாந்திரப் புண்யப்பலன் எண்ணிய வண்ணங் கைகூடுமா? என்று வெகுநாளாகக் கவலைகொண்டு மனங்கவன்றிருந்தேன். அண்ணலே! மெத்தப்பிரயாசைப்பட்டுத் தான் கற்ற வித்தையைத் தானே புகழ்ந்து பேசுகிறவர்களைப்போற் பேசப் படாதென்றிருந்தாலும், தமது கருணையானது என்னைப் பேசச் செய்கிறது, அரு

மையறியும் பெருமானிடத்திற் பேசப்போகின்றேன். அரவாபரணம் பூண்ட ஆண்டவருக்கு வேதப் பரிதூண்டிய பிரம்மா விதித்திருக்கின்ற சாரதி நூல்களெல்லாம் பார்த்து, எல்லாவல்லமையிலுங் கைதேர்ந்திருக்கின்றேன். ஓ கருணைகடாட்ச காண்டீபதரனே! அதனுலிவ்வித்தையை தங்களுக்கு உபயோகப்படுத்திப் பேர்பெற வேண்டுமென்பதே யெனது வெகுநாட்கருத்து'' என்று சொல்லிப் பணிந்த ராஜகுமாரனை அர்ச்சுனன் தழுவியணைத்து, ''ஓ என்னிதயத்துக்குவந்த இளஞ்சிங்கமே! நீயும் நானும் நெருங்கிய இஷ்டரானேம். இனி நெருப்பும் காற்றுஞ் சேர்ந்தபின்பு சத்துருவாகிய காடு நீறுபடாதிருக்கக்கூடாது, இன்னும் யோசனைக் கிடங்கொடாது. விரைவிலேறி இம்மரத்திலொளித்து வைத்திருக்கும் நமது காண்டீபமென்னும் வில்லும்-அக்ஷயதூணியும்-தேவதத்தமு மெடுத்துவா'' என்று விஜயன் விளம்பினன். உடனே உத்தரகுமாரன் தடையில்லாமல் ஏறி, உத்தரவின்படி தேவதத்தமும்-காண்டீபமும்-அக்ஷயதூணியும் எடுத்துக்கொண்டு, மற்றவாயுதங்களை முன்போல் வைத்து, மான்தோலாலே கட்டி மறைத்துவிட்டு, மரத்தைவிட்டிழிந்து, அர்ச்சுனராஜனைத் தொழுது கொடுத்து, தனக்குச் சாரதித்தொழில் கிடைத்த சந்தோஷத்தால் திடீரென்று, தேரிற் குதித்துக் குதிரைக் கடிவாளங்களைக் கையிற் கொண்டான்.

### அர்ச்சுனன் சுயரூபங்கொண்டு, இந்திராதியரா லணிமணிக்கலனெடு அனுமக்கொடி படைத்துப் படைமுகம்போதல்

அப்பொழுது அர்ச்சுனராஜன் இந்திரன் முதலிய தேவர்களையும் ஊர்வசியையுஞ் சிந்தித்து, தந்தை-தாய்-தமையன் முதலான பேர்களையும் வந்தித்து, தர்மதேவதையையும் போற்றினன். அவ் வேளையில் விஜயனுக்குப் பாண்டுராஜன் பூருவந்தேடிய பாக்கியம் பலித்தது போற் பேடிரூபம் நீங்கியது. அவன் ஆதிபுருஷ ரூபலாவண்ய வடிவமாயினன். ஆகாயத்திலுள்ள அமரர்யாவரும் வாழ்த்தினர்கள். அர்ச்சுனனைச் சுயரூபத்தோடுங் கண்ட உத்தரகுமாரன் பெண்மையை அவாவும் பேரெழிலாடவ்ரை யொப்ப அவாவினன். கேட்டீரோ ஜனமேஜய் மகாராஜனே! க்ஷணத்திற்கு முன்னம் இருள்மூடிய வாறுபோற் பேடியாயிருந்த அர்ச்சுனன் இப்போது பச்சைமணியினது பிரகாசம் வீசிச் சொலிப்பதுபோல் துலங்கிய தன்மை யெவ்வாறிருந்ததென்னில்-இந்திரஜாலங் கற்றவர்கள் க்ஷணத்திற்குக்ஷணம் வெவ்வேறு ரூபங்காட்டுகின்ற விந்தைபோன்றிருந்தது. அர்ச்சுனனது தேககாந்தியைக் கண்ட உத்தரகுமாரன் மின்னலுக்கெதிரில் விழித்தவர் போற் கண்கூசிக் கவிழ்ந்து, இரண்டு கையினுலுஞ் சேர்த்திருகத் தழுவி, ''ஓ என்னையனே! உமது மாசற்ற திருமேனிக்கு இம் மறுவந்த காரணம் யாதோ? என்று வணங்கிக் கேட்க, விஜயன் ''ஓ இராஜ செல்வமே! முன்னெருபோது இந்திரனேடு சொர்க்கலோகம் போய்த் தேவர்கட்குப் பகையாகிய காலகேய நிவாத கவசர்களை வென்று, வெள்ளை யானையின்பேரிற் பவனிவந்து, அமுதபோஜன முண்டு,



அர்ச்சுனன், உத்தரனால் வன்னிமரத்திலிருந்து தன் ஆயுதங்களை எடுப்பித்து சுயரூபத்துடன் சண்டைக்குப் போகுதல்

அமரர் யாவரும் புடைசூழும்படியாக இந்திராசனத்திலிருந்தேன். அப்படி இருந்த எனக்குச் சந்தோஷமுண்டாகும்படி அத் தேவேந்திரன் நினைத்து, அரம்பை-ஊர்வசி மேனகை - திலோத்தமை - இவர்களால் நாட்டியமாடுவித்தார். அவர்களாடிய ஆட்டத்திலும் பாடிய பாட்டிலுஞ் சிறந்த முகநயமுள்ள ஊர்வசியை நான் மெச்சிச் சிரக்கம்பஞ் செய்தேன். அவணிருந்த தேவர் முதலிய யாவரும் ஊர்வசி இன்று செவ்வையாய் நடித்தனளென்று கொண்டாடினார்கள். அன்றிரவில் எனக்கங்கமைத்த அரண்மனையிற் போயிருந்தேன். நடுராத்திரியில் அந்த ஊர்வசி என்னிடத்திற்கு வந்தாள். அவளையான் கண்டமாத்திரத்தில் எங்கள் பாட்டனுன புரூரவச்சக்கரவர்த்தியின் பத்தினியாதலால் மெத்தப் பயந்து, உடனே எழுந்து அவள் பாதத்தில் விழுந்து நின்றேன். அதுகண்ட ஊர்வசி கொழுந்து விட்டெரியுஞ் சுடர்போற் கொதித்து, 'நானெண்ணிவந்த எண்ணத்தைப் பின்னம்பண்ணியபடியால், மண்ணினில் வாழு மனுக்களில் நீ பேடியாகுக' என்று சபித்துப் போயினள்.

அப்பால் பொழுது விடிந்த பின்பு அவ்வுருவத்தோடு வெளியே வருவதற்கு வெட்கப்பட்டிருந்த என்னைத் தேவேந்திரன் கண்டு விசனமடைத்து, சங்கதி யறிந்துகொண்டு, ஊர்வசியினிடத்திற்குச் சென்று, அவளுக்கு வேண்டிய உறுதிமொழிபுகன்று, எனக்கிட்ட சாபத்தை நிவாரணஞ் செய்யும்படி கேட்டுக்கொண்டார். அதற்கவளிரங்கி, அந்தச்சாபம் நானினைத்தபோது ஒருவருஷம் என்னைத் தொடர்ந்திருக்கவும், நானினையாதபோது என்னைவிட்டு நீங்கியிருக்கவும் அநுக்கிரகித்தாள். அந்த ஊர்வசியநுக்கிரகத்தால் உன்னுடைய விராடபுரத்தில் ஒருவருஷம் பேடியாயிருந்து, அக்ஞாதவாசம் பண்ணும்படி நேரிட்டது. அப்பனே! எனக்குப் பேடியுருவமைந்த வரலாறிது''என்று உத்தரகுமாரனுக்குரைத்துச் சந்தோஷிப்பித்தஅர்ச்சுனன் பின்பு தந்தையான இந்திரனையும் - வம்ஸநாயகனுகிய சந்திரனையும்-திரௌபதியைப் பெற்றவனுகிய அக்கினித்தேவனையும் - சிந்தையிலே துதித்து, வந்தனைபுரிந்து, தனக்குவேண்டிய அணிமணிப்பணிகளைக் குறித்து விரும்பினுன். அவ்வேளையில் தேவேந்திரனுனவன் தன் மைந்தன் பழைய கோலத்தினைக் கொள்ளப்போகிருனென்று மகிழ்ந்து கதிர்மணிக்குண்டலம்-கனககிரீடம்-நவமணியிழைத்த ரத்னுபரணங்களுடன், ஒப்புவமையில்லா முப்புரிநூலுங் கற்பகமாலையுங் கந்தமுந் தந்தான். அவற்றை யெல்லாம் அன்போடு பெற்றுக்கொண்டு, ஊர்வசியம்மனை உள்ளத்தில் நினைத்துப் பஞ்சாயுதனைப்போலும் - செஞ்சிலை மதனனைப்போலும்-அஞ்சனமேனியின் அழகனுயமைந்து விளங்கிய அக்காண்டீபனென்னுங் காளையானவன் அக்கினித்தேவனுல் அநுமக்கொடியும் அசுவகதியும் வரும்படியாகச்செய்துகொண்டு, சகலாபரண பூஷிதனுய்ப் பூரண வலங்கிருதத்துடனிருந்து, உத்தரகுமாரனைப் பார்த்து, ''அப்பா மச்சநாட்டரசே! நமது தேரில் நாட்டியிருக்குஞ் சிங்கக்கொடியையமாற்றி. அண்டமுகடதிர ஆகாயமார்க்கமாய் வந்த அநு

மக்கொடியை அமைத்திடுக'' என்று சொன்னான். அவனுமவ்வாறே யமைத்து, தனது சிங்கக்கொடியை வன்னிமரப்பொந்தில் மறைத்து வைத்தான். அஃதெப்படி யிருந்ததென்றால் அர்ச்சுனனுடைய அநு மக்கொடியை உத்தரகுமாரனுடைய சிங்கக்கொடியானது கண்டு துவண்டு நாமிந்த அநுமக்கொடிக்குச் சரியாகமாட்டோம். இந்த அநு மாரானவர் இராமராவண யுத்தத்திற் சங்கை தீர்த்திருக்கின்றவர்'' என்று தைரியம்விட்டுச் சந்துபார்த்து நுழைந்து ஒளித்துக்கொண்டது போலிருந்தது.

இப்பால் அர்ச்சுன ராஜனும் உத்தரகுமாரனும் ஒருவரையொரு வர் நோக்கிக் கவனித்து, அவ்விடத்திலிருந்த காளிகாதேவியைக் கைதொழுதெழுந்து, இரதமீதேறி. ஆகாயமளாவித் தழைத்த வன்னி மரத்தை வலம்வந்து தொழுது, விஜயகாண்டீப வில்லை நிறுத்தி, வாச மலர்மாலை சாத்திப் பூஜைபுரிந்து, இருகுதையும்வளைய நாணேற்றி டங்காரஞ் செய்தான். அக்குணத்தொனியினால் எங்கு நெருங்கிப் பொங்குங் கடல்போன்றிருந்த கௌரவச் சேனைகளெல்லாம் நின்றநிலை யில் நிலைதவறிப்போய், யானைவீரர்-அச்வதீரர்-அழகியதேரர்-அணி படைக்காவலாளர்-அதிரத மகாரத சமரத அர்த்தரதர் முதலியோர் யாவரும் பேரிடி முழக்கங்கேட்ட பெரும் பாம்பினம்போல் தலையெடுக்க மாட்டாமல் தட்டழிந்தார்கள். அக்காலையிற் கற்பகமாலையணிந்த மற் புயகோலாகல விற்பன விவேக விதரணசாலியான வீபற்சு, யாவரும் திடுக்கிட்டுக் கண்கலங்கும்படியாகத் தேவதத்தத்தை யெடுத்துத் தனது செவ்விய வாயில்வைத்தூதினான். அவன் செய்த சங்கத்தொனி யால் மகமேரு முதலாகிய மலைகளும் அதிர்ந்து, கடலுங் கீழ்மேலாகக் குழம்பி, சப்தமேகமும் பிதிர்ந்து, அஷ்டநாகமுஞ் சிதைந்து, நக்ஷத்தி ரங்களும் உதிர்ந்து, அண்டமுகடுகளெல்லாம் விண்டு கடகடத்தன. இவ்வித சங்கத்தொனியினாலும் வில்லின் நாணோசையாலுந் தேரிற்கட் டிய புரவிகள் பதைத்தன. சாரதியாகிய உத்தரகுமாரனுஞ் சங்கடப் பட்டுத் தலைநட்டுக்கொண்டு கையிற்பிடித்த கடிவாளத்தைவிட்டுக் கண்பொறிகலங்கச் செவிடுபட்டு, உணர்வுகெட்டு ஒடுங்கிவீழ்ந்தான். இவ்வாறு நடுங்கியொடுங்கி நிலத்திற்சாய்ந்த உத்தரகுமாரனைக் காண் டவவனதகன காண்டீபன்கண்டு, தனது நீண்டகைகளால் எடுத் தணைத்து, ஆலவட்டங்களினாலுஞ் சாமரைகளினாலும் வீசி ஆயாசந் தணித்து, வெயர்வுபோக்கி, அயர்வுநீக்கி, பன்னீர்தெளித்து, வெந்நீ ரளித்து, விடாய்ப்பட்டிருந்த களையை யாற்றினான். அப்போது களை தீர்ந்தெழுந்து கண்விழித்துப் பார்த்த உத்தரகுமாரன் நடுக்கமும் கவ லையு நீங்காதவனாய், கும்மென்று காதடைபட்டு ஈனசுரமாய்ப் பேசி னான். அந்தப் பிள்ளையை அர்ச்சுனன் இரக்கமாய்ப்பார்த்து, ''பொருப் பைக்குடைந்து கடைந்து பொருந்திய புஜபூரிப்பைப்படைத்த விராடர் கோனளித்த புனிதகுமாரனே; புகழ்கொள் விநோதனே! நான் செய்த சங்கத்தொனியினால் ஐம்புலாதிகளு மயங்கி அவசமடைந்த உன் பேதைத்தனம் யாதோ?'' என்று கேட்டான்.

அக்கால் உத்தரகுமாரன் சிறிது தலையெடுத்துப் பார்த்து, "ஐயா! சப்தசமுத்திரங்களும் பொங்கிவழிந்து உலகமழியும் ஸர்வஸம்ஹார ஊழிக்கால வோசையென்பது தேவரீர் முழக்கிய சங்கோசையைப் பார்க்கிலும் பெரிதாயிருக்குமோ? எல்லாவுலகினுமெழும் பற்பல வோசைகளியாவும் இப்போதிவ்விடத்தில் உமது வில்லாலுண்டாகிய விபரீத வோசையைப்போல் விந்தை விளைக்கவல்லவோ? இத்தன்மை யாகிய பேரோசையைக்கேட்ட தேவர்களிலுந் திக்குபாலர்களிலும் யார்தான் திகிலடையமாட்டார்கள்? அப்படியிருக்க, உமது கால் மாட்டிலிருந்த நான் பயப்பட்டு வீழ்ந்தது பெரிதல்லவே, அந்தமட்டும் உயிர்தப்பிப் பிழைத்துத் தேவரீருடன் பேசப்புறப்பட்ட நான் மிகவுந் தைரியசாலியல்லவோ? முத்தொழில் நடாத்துகின்ற மூவருநடுங்கு முழக்கத்திற்குச் சித்தப்பிரமை கொண்டு தேறியவென்னை ஆதரித் தருளும். ஓ அர்ச்சுனராஜனே! இனி நானென்ன சொல்லப்போகி றேன்?" என்றிரங்கிய விராடராஜ குமாரனை அர்ச்சுனன் அன்புட னோக்கி, தோளுடன் மார்புதோயத் தழுவி மாதவமுனிவரால் தான் கற்ற மயக்கந்திரு மந்திரத்தை உபதேசித்து, "ஓ உத்தரகுமாரனே! உனக்குங் குதிரைகளுக்கும் இனியொருநாளும் பயமில்லை. ஈரேழுலக முங் குலுங்கினாலும், ஓரேழ்கடலுங் கலங்கினாலும், என்றென்றைக்குங் கவலையில்லா திருக்கலாம். இப்போது விரைவில் தேர்செலுத்தென்று தனஞ்சயன் சொன்னான். அச்சொல்லைக்கேட்ட மச்சராஜன் மதலை யானவன் தனக்கு அர்ச்சுனன் கிடைத்த ஆசையினால் அன்புமே லிட்டு, கையிற் கடிவாளம் பிடித்து, உச்சவான்கதிர்த் தேரிற்பூட்டிய பச்சைமாவோரேழையும் ஓட்டிய அருணனைப்போற் சவ்வியசாசியின் சுவேதவாம்பரிகளை யொப்ப விளங்கிய குதிரையைப் படபடவென்று செலுத்தினான், அப்பொழுது பனியினால் மறைபட்டு ஒளிமழுங்கி உட லொடுங்கியிருந்த சூரியனானவன் தனது ஆயிரங்கிரணங்களோடும் அலைகடன் முகட்டில் உதயமான தன்மைபோல் பேடியுருவால் மறைந்து பெருமை குறைந்திருந்த அர்ச்சுனன், பேசுதற்கரிய தன் பின்னழகும் முன்னழகும் பிரகாசிக்கச் சிறந்திருந்தான். நெடுஞ் சிலையுங் கொடுங்கணையுங் கைப்பிடித்து, கௌரவ முதல்வன் சேனையி லுள்ள நிருபர்களியாவரும் நடுநடுங்கி நாவறண்டு கிடுகிடுத்துப் போகும்படியாக அவர்களுக்கு நேராகத் தோன்றினான்.

### அருச்சுனன் வரவைக்கண்ட துரோணர் துரியோதனனுக்குணர்த்தி அறிவுறுத்தல்

இவ்விதமாகிய அழகிய தேர்மேல்வந்த அநுமக்கொடிக்கதிபனைப் பீஷ்மர் முதலாகிய வீரர்கள் கண்டு, வேறு வேறெண்ணங் கொண்டு, விருதுமுதலிய வீரசின்னங்களெல்லாம் சோர நின்றார்கள். அவ்வேளை யில் நான்மறைக் கொடிபடைத்த துரோணாசாரியார் பாம்புக்கொடியும் நந்தியாவர்த்தமாலையுமுடைய துரியோதனமஹாராஜனைப் பார்த்து "ஓ வணங்காமுடி பெற்ற மகிபனே! இதோ நமக்கெதிரில் இசைபெற்ற விஜயன் ர்வ ஸம்ஹாரகால கடவுள்போற் சலனமில்லாமல் வரு

கின்றான் பார். அவனூர்ந்து வருகின்ற தேர்வேகத்தினால் இந்தப் பூமியைத் தாங்கும் பணாமகுடமுடைய ஆதிசேடன் என்னபாடு படுகின்றானோ? அந்தத்தேரிலிருக்கிற மகாபுருஷன் கைப்பிடித்திருக்கும் வில்லினது நாணோசையால் தேவலோகம் எப்படித் தத்தளித்ததோ? அவன் போர்முகத்தில் முழக்குஞ் சங்கத்தைப்பூரித்த பேரொலியானது எட்டுத்திக்கையுஞ் செவிடுபடுத்தாமல் விட்டுவிடுமோ? ஒண்டித்தேரும் ஒற்றைவில்லுங்கொண்டு ஒன்றுக்கும் அஞ்சாமல் தனிமையாய் வருபவன் எப்படிப்பட்ட வீரனா யிருக்கவேண்டும்? இவ்விடத்தி லிருப்பவர்கள் இன்னாரின்னாரென்றறியாமலும் - நன்மைதீமைகளை நாடாமலும் - நம்மோடெதிர்த்து யுத்தஞ்செய்ய வருகிறவன், அசகாய சூரனென்றுந் திடதைரிய தீரவீரபராக்கிரமமுள்ளவனென்றுந்தேர்ந்தாயோ? எப்போதும் யாதொரு காரியங்களையுஞ் செவ்வையாக நிதானித்து யோசிக்க வேண்டியதவசியம். ஐயா துரியோதனராஜனே! ஜோதிப்பிரகாச குண்டலமும், சுடர்விடு கதிர்மணிமகுடமும், உதயகிரியிலெழுந்த சூரியன் போல் துலங்கும்படியாக வருகிறவன் இந்திரன்மைந்தனென்பதற்குச் சந்தேகமில்லை. அதற்குத் திருஷ்டாந்தமாகச் சந்திரனைப் பாதியாகப் பிளந்ததையொத்த கோரதந்தங்கள்பெற்ற கொடிய இராக்ஷதப்படைகளை அடியோடு மடியப்படுத்திய அநுமக்கொடிக்காட்சியே சாட்சியாக இருக்கின்றது. அன்றியும்-அவன் வருகிற திறத்தை நோக்குங்கள். வெற்றிபெற்ற வில்லைப்பற்றி ஈரேழுலகையும் இன்றேவென்று செல்லுவேனென் றிறுமாப்படைந்து, யாவரையும் ஒருபொருளாக எண்ணாமல் யானைகளை நோக்கித் தாவுகின்ற ஆண் சிங்கம்போல் வந்துவிட்டான். மேல் நடக்கவேண்டியதென்ன? இனிச் சும்மாவிருப்பது காரியமல்ல, அவனே இனி நமது சேனைகளை வீரியங்கெடச் செய்து, சூரியனுக்கெதிர்ப்பட்ட பனிபோலோடப்பண்ணுவான். அல்லாமலும், ஆழ்ந்த பேரறிவுடைய அவ்வர்ச்சுனன் இங்கே சூழ்ந்த நமக்கெதிரில் வந்து வெல்லவேண்டுமென்று வில்வளைத்தானானால், இவ்விடத்தில் நிறைந்த பெருங்கும்பலில் அவனோடெதிர்த்துப் போராடத் தக்கபேர் யாரிருக்கின்றார்கள்? ஒருவேளை அவனுக்குத் தப்பி ஓடிப் பிழைப்போமென்றாலோ அவன் கையிலிருக்கும் அஸ்திரவன்மையால், அதல சுதல பாதாளம்போனாலும் அங்கு வந்து போர்புரிந்து கொல்லுவான். நாம் அறிந்த அர்ச்சுனனே இவன்: வேறல்லன். ஆகையால் நானொன்று நினைக்கிறேன். நம்மோடவன் எதிர்ப்பதற்கு முன்னமே அஸ்தினாபுரத்திற்குப் போய்விடுவோமானால், ஒருவருக்கும் ஒன்றுமில்லை. ஊர் சிரிக்கும் பழியுமில்லை. யோசிக்கு மிடத்தில் வேறு வழியுமில்லை. அப்படிக்கல்லாமல் தானென்னுங் கருவத்தால் தலைகாட்டி நிற்போமானால் அவனை வெல்லும் வல்லமை நமக்கில்லாதிருந்தாலும், இன்றைக்கு நிச்சயமாக நாமவனை ஜயிக்கமாட்டோம். அதேனென்றால், நாம் நாடுவிட்டுப் புறப்பட்டதுமுதல் மாடுமடக்கிய இதுவரையில் நேரிட்ட துர்ச்சகுனத்தினாலும், மனச்சோர்வினாலும், வெற்றிபெறுவது அரிதென்று தீர்மானிக்கவேண்டியதாயிருக்கிறது. ஆதலால், நாம்மடக்கிய பசுக்கூட்டங்களை ஓட்டிக்கொண்டு பட்டினம் போய்ச் சேருவோ

மானுல், நமக்கு லாபமுண்டு. நாம் பயந்து ஓடிவிட்டோமென்று யாரும் பழியார்கள். அதற்கு ஓர் உபாயமு முண்டு. அவ்வுபாய மென்ன வெனில் குருகுலநாயகனுகிய பீஷ்மரும் - கிருபாசாரியரும் - அசுவத்தாமாமுதலியபலரும், நானும் இங்ஙனம்நெருங்கிநின்று, எதிர்வருகின்ற தனஞ்சயனை மறித்து யுத்தஞ் செய்கின்ருேம். நீயும்-உனக்குரிய சில வேந்தரும்-வீரர்களும் - பாதிச்சேனைகளும் - மடக்கிய பசுக்கூட்டங்களோடு இவ்விடம்விட்டுப் பெயர்ந்து, அரவக்கொடிநாட்டிய தேரைத் திருப்பிக்கொண்டு தேசம்போய்ச் சேர்ந்துவிடு. அப்படிப் போய்ச் சேர்ந்து விடுவாயானுல் துரியோதனராஜன் பெரும்படையுடன் வந்து விராடராஜனுடைய பசுமந்தைகளை மடக்கிக்கொண்டு போய்விட்டா னென்று உன்னைப் பலருங் கொண்டாடுவார்கள். "ஆரியக்கூத்தாடினுலுங் காரியத்தின்மேற் கண்" என்பதை யோசிக்கவேண்டும். அப்பனே! நான் சொல்வது உனக்கு ஒப்போ? அல்லது தப்போ? நன்ரு யோசித்துச் சொல்" என்று துரோணுச்சாரியர் கேட்டார்.

அவருரைத்த சொற்சூசகத்தை யுணராத துரியோதனன் பதைத்துக் கூறுகிருன் :—

### துரியோதனன் துரோணர் கூறியதைக்கேட்டு வெறுத்துக்கொண்டு மற்றையரை யுத்தத்திற்கு ஆயத்தப்படுத்துதல்

"வாரும் சதுர்வேத பாரங்கதராகிய தநுர்வேதியரே! பாண்டு புத்திரர்கள் எங்கள் மாமனிடத்திற் சொக்கட்டாடித் தோற்று, நீர்வளனுற்றநாடும் - சீர்நலனுற்ற நகரும் - மற்றும் பற்பல செல்வங்களுஞ் சேனைகளும் இழந்து, பன்னிரண்டுவருடம் வனவாசமும் ஒருவருடம் அக்ஞாதவாசமு மொழித்து, ஒருவருக்குந் தெரியாமலிருந்து வெளிப்படும்படியாக உங்களைப்போல் தேறித்தெளிந்த பெரியோர்கள் நிச்சயித்த நிபந்தனையை ஒப்புக்கொண்ட காலத்தில், மற்ஞெரு விதம் நிர்ணயம் பண்ணியிருந்ததை மறந்து பேசுகின்றீரோ? ஐயரே! ஐவரும் உருவமறைந்து கருவங்குறைந்து அக்ஞாதவாசத்திலிருக்கும்போது அவர்கள் இன்ன இடத்தில் இருக்கிருர்களென்று நாமறிந்தால், அன்றுமுதல் மீட்டும் பன்னிரண்டு வருடம் வனவாசம் பண்ணி ஒருவருடம் அக்ஞாதவாசஞ் செய்யவேண்டுமென்று ஸ்தாபித்திருக்கிற மொழிப்படி சத்தியந் தவராமற் போக்கவேண்டுமல்லவோ? அப்படியிருக்க, அந்த அக்ஞாதவாசத் தவணைநாள் அகல்வதற்குமுன்னே எப்படி வெளிப்படலாம்? என்னுடைய நல்ல காலம் இப்போது வருகிறவன் அர்ச்சுனனுக இருப்பானுனல், நமக்கு மேலான நியாயவழியைத் தருமல்லாமல், தாழ்வான தீமையைத் தரமாட்டாது, ஓ தனுர்வேதியனே! மாறுபட்டுப்போராடும் பெருஞ்சமர் வல்லவராகிய பாண்டவர்கள் இந்த மச்சநாட்டி லிருந்தவாறு தெரியாமலா வந்தோம்? ஏதோ சில காரணங்களால் தெரிந்ததினுலும் விராடபுரத்தின்மீது நமக்கிருந்த வெகுநாளையப் பகையை முடித்துவிட வேண்டுமென்னும் எண்ணத்தினுலும் ஒரே மனதாய்

முன்னடித் திரிகர்த்தனையனுப்பி, பின்னே நாமெல்லோரும் ஆலோசித்து, பஞ்சவர்களின் அக்ஞாதவாசத்தைக் கெடுத்துவிட வேண்டுமென்றுதானே வந்தோம்? ஐயா துரோணரே! இப்படியெல்லாமிருக்க, அர்ச்சுனன் வந்தானென்று ஏன் அதைரியமாகப் பேசுகின்றீர்? ஐயோ நரனென அவன் நமக்கெதிர்நின்றுயுத்தஞ்செய்யத்தொடங்குவானுனல், நாம் அவனுடன் பகைத்துப் போர்புரிய வேண்டிய அவசரமில்லையே; விவகாரமென்கிற கயிற்றினுல் அவனையும், அவனுடைய சகோதரர்களையும், அவனுக்குச் சகாயமான பேர்களையுங் குண்டுக் கட்டாகக்கட்டி யுருட்டிவிடலாம். அவனெவ்விதம் நம்மைவெல்லக்கூடும்? நாம் கைக்கொண்டமாடுகளை அவனெவ்வாறு கைப்பற்றக் கூடும்? அவன் கழிக்கவேண்டிய அக்ஞாதவருஷத் தவணையில் இன்னும் ஒருநாள் போக்கவேண்டியதாயிருக்கிறது. எங்கள் குலமுதல்வராகிய பீஷ்மருக்கு இந்த வித்தியாசங்களெல்லாம் நன்ருய்த் தெரியவரும். அந்த மகாநுபாவரே இந்த விவகாரத்தைக் கண்டறிந்து, மறுபடியும் பாண்டவர்கள் வனவாசம் பண்ணும்படிக்கு ஸ்தாபிக்கப் போகின்ருர். இதற்குள் நீரேன் ஆத்திரப்படுகின்றீர்! யுத்தத்திற்கிளைத்த உலோபரைப்போல் என்னை ஊருக்கு ஓடிப்போவென்று உறுதி சொல்ல வந்தீரோ? என்ன காரணத்தால் இவ்வாறு கூறினீர்? நல்லது. ஓ துரோணரே! நீர் சொல்லிய வண்ணம் ஒண்டித் தேர்மேல் வருகின்றவன் தனஞ்சயனுயிருந்து சண்டை தொடுத்தாலும், அவனுக்குச் சகாயமாகத் திக்குப்பாலர்களடுத்தாலும், தேவர்கள் கந்தர்வர்-அரக்கர்-யக்ஷர்-இயக்கர்-அரசர் முதலியோர்கள் வந்து என்னுடன் போர்தொடுத்தாலும், நம்மை அசைக்கமுடியாது. எப்படியும் நாமெண்ணிய எண்ணம் பழுதுபடாமல் மாட்டுமந்தையை மடக்கி நமது வசம் பண்ணிக்கொண்டோம். நாமும் துணிந்து வந்திருக்கின்ருேம். ஆகையால் இவ்விடம் விட்டுப் பெயராமலிருந்து, ஒரு கை பார்த்து வென்று, வருகிறவீரனைப் புறங்கண்டு, விவகாரமேற்கொண்டு ஜெயபேரி முழக்கி என் தேசத்திற்குப் போவேனல்லது, திருடனைப் போற் பதுங்கி யோடிப்போக மாட்டேன். ஓ நூலுணர்விற்பயின்ற நுண்ணியனே! இதுவரைக்கும் சத்துருக்கள்பேரில் யுத்தம் பண்ண வேண்டுமென்று சொல்லு முன்னமே கண்கள் சிவந்து, கருவிப் புகைந்து, கைதேர்ந்தகாரியவான்கள்போல் மேகமண்டலம் அளாவிய தேர்மேலேறி, ஆயுத தீர ஆரபார வீராவேசத்துடன் அடுத்து, வீரச் சேவகங் காட்டி எட்டுத்திசையிலும் இசையை நாட்டிவந்த உங்களுடைய பகல்வேஷமெல்லாம் மெய்யென்று நம்பி யிருந்தேன். இப்போது வெட்டவெளியாயிற்று. ஐயா! நமக்கெதிரே ஓடிவரும் பகைவரைக் கண்டவுடன் வருந்திமயங்கி வாடி, ஒருவர் முகத்தை யொருவர் பார்த்து நெடுமூச்சுவிட்டு, நீ நாட்டை நோக்கி ஓடிப்பிழை; நான் காட்டைப் பார்த்துப் பிழைக்கிறேன்—என்று கண்கலக்கப் படுவதற்குத்தானே இவ்வளவுபிரயாசை யெடுத்துக்கொண்டுவந்தது? என்னத்திற்காக இவ்விடம் வந்தோம்? புறங்கொடுத்தோடுவதற்கா? இதை நீர் நன்ருய்த்தெளிந்து சீர்தூக்கிப்பாரும். ஓ தேசிகனே! வில்திறமேன்

மைபடைத்த வேந்தர்களானுல்,இந்தவிஜயனுக்கெதிர்நின்றுமேன்மை படைத்துச் சயம்பெறுந்திறத்தை ஒருபொருளாகச் சிந்தையில் நினைக்க மாட்டார்கள். நீர் அத்திறத்தினுக் குரியரல்லாத அந்தணராதலால், அப்பப்பா! அவன் மகாதீரனுச்சே! வீரனுச்சே! ஆவியைக் கொள்ளை கொள்வானே! எப்படி வெல்லப்போகின்றேம்! என்று சொல்லித் தளருகின்றீர். உமதுசொல்லைக்கேட்டு மீதலத்தோரும்-பூதலத்தோரும் கலகலவென்று கைகொட்டி நகைப்பார்கள். இனி உம்மைக் கண்ட கைம்பெண்களும் அலட்சியமாக நினைத்துப் பகைப்பார்கள். ஓ காயத்திரிதேர்ந்த கலைவேதியனே, மற்போரினிறைந்து விற்போரிற் சிறந்த வானவர்கோன் மகன் வருவதைப் பார்த்து வளைத்துக் கொள்ளாமல் மடக்கிய மாட்டை யோட்டிக்கொண் டொதுங்கி மாநகர்க்குப்போனேனுனல், அதனுலெனக்கு வருவது வசையோ? இசையோ? அல்லது வருகிறவனைக் கண்டு பயமில்லாமல் எதிர்நின்று போர்புரிந்து வென்று ஜெயம்பெறுவது, புகழோ? இகழோ? சொல்லும் ஓ மித்ரரை யிகழ்ந்து சத்துருவைப் புகழ்ந்து மகிழ்ந்து பாடாநின்ற நைச்சிகனே! எண்ணிறந்த கோடிகளாக இவ்விடத்திற்கூடிய நமது வீரப்படைக ளெல்லாஞ் சேர்ந்து ஒருவனுகத் தனித்துவராநின்ற வில்லாளியை ஜயிக்க மாட்டார்களென்றுல், ஒற்றைத் தேரோட்டி வருகின்ற ஒருவன் இத்தனைபேர்களையும் எப்படிஜயிப்பான்? வருகிற சுத்தவீரன் தன்பிராணனைத் துரும்பாக மதிப்பவனென்றுல், அத்தன்மையான பேர் நமது சேனைகளிலில்லையோ? ஆகிலும் போர்செய்யப்புகுந்த பேருக்கு பிராணன் பெரிதோ? கடல்சூழ்ந்த உலகத்திற் பெருமையும் மானமும் போனபிற்பாடு, சஞ்சாரப்பிரேதம்போற் பிராணனுட னிருப்பதில் என்ன பிரயோசனம்? ஆ புண்ணியபூசுரனே! இனிநான் பலவாருகப் பேசுவதில் லாபமில்லை. ஒரேவசனஞ் சொல்லுகிறேன்கேளும், இதோ வருகிற என் பகையாளியைக்கண்டு பயந்து அஸ்தினபுரத்திற்குப் போகமாட்டேன். எனக்குபகாரம்போற் சொல்லுகிறவர்களின்பேச்சையுங் கேட்கமாட்டேன். இது அவரவர்கள் புத்தியிற் கெட்டியா யிருக்கட்டும். ஆனுல் இப்பொழுது வருகிறவர்கள் அர்ச்சுனனுடைய சண்டைக்குப் பயந்தவர்கள், ஆவியைக் காக்க ஆசைப்பட்டவர்கள், பெண்சாதி பிள்ளைகள் மீதிலும் - மண் மனையாதிகளிலும் - நிதிநிக்ஷேபங்களிலும் பாசமுள்ளவர்கள், இவர்கள் யாவரும் நன்மையுடன் பட்டினம்போய்ச் சேரலாம். இப்படிப்போக மனதுடையோர்களுக்கு யாதொரு தடையுமில்லை. போகின்றவர்கள் இவ்விடத்தில் வந்திருக்கும் படைகள் அடங்கலையுஞ் சாய்த்துக்கொண்டுபோனுலும் போகட்டும். என்னதிர்ஷ்டம் போகிறதில்லை. ஒருவர்க்கொருவர் துணையென்பதில்லை. அவரவர்களுடைய நல்வினை தீவினையே அவரவர்கட்குத் துணையாய் நிற்கும். ஓ அறிவிலுயர்ந்த வேதியரே! இதனை நீர் நன்ருயறிந்துட்கொள்ளும்''—என்று அடங்காக் கோபங்கொண்டு துர்ச்சாதனன்முதலாகிய தம்பிமார்களையுந் தார்வேந்தர்களையுநோக்கி,விருஷபமுக்காரம்போற்கனைத்து, தணல்நெருப்பைச் சிந்தி, அதிக படபடப்புடன்விரைந்து இதனைச்சொல்லுகின்ருன்: ''ஓ என்னன்பிற்குரிய தம்பி

மார்களே ! ஓ எனக்கு வெற்றியைத்தரவந்தசம்பிரமவீரர்களாகியவேந்தர்களே!பிரமதேஜசுடைய முதற்குலத்தோராயும் விற்குருவாகியுமிரா நின்ற துரோணுசாரியர் நன்னெறிகற்ற பெரியோராயிருந்து, சமயோசிதப்பேச்சைச் சாதுரியமாகப்பேசி, சாப்பாட்டுக்குச் சங்கடப்படமாட்டாமற் காலபோஜனங்கொண்டு காலங்கழித்திருப்பதே காரியமென்று ஆரிய சித்தாந்த முதலிய சாஸ்திரம் யாவும் படித்தவர். அன்றியும் தநுர்வேதத்தி லுள்ளனவெல்லாந் தப்பாமலுணர்ந்து புத்திமான்களுக்குப் போதிக்கத் தெரிந்தவர். வாதித்தெதிர்க்கும் சத்துருக்களைச்சேதிக்கச்சென்று யுத்தங்கண்டு வென்றுவருகின்ற வீரத்திறம் இவருடைய தொழிலன்றென்று நன்ருய்ப் பிரசித்தமானவர். ஆகையால், இப்பேர்ப்பட்டவரை நீங்கள் நம்பியிராமல் வருகிற எதிரியென்னும் போர்யானையின் முனைபுகுந்து, தனிமுகச்சிங்கம்போற் சாதித்திடுங்கள். சண்டைபோடப் பயந்த வைதிகர்களெல்லோரும் அர்த்தரதப் படைக்குப் பின்னுலே நின்று, நமக்கு ஜயமுண்டாகும்படியாகச் செபம்பண்ணிக்கொண்டிருக்கட்டும். உங்கள் வேளையில் நீங்கள் ஜாக்கிரதையாயிருங்கள். ஒருவருதவியைப் பார்க்கவேண்டாம். விரைவில் படைகூட்டிப் போங்கள்'' என்றுரைத்தான்.

### அசுவத்தாமன் தன்தந்தையை நிந்தித்த துரியோதனனைக் கடிந்துகூறுதல்

இப்படியாக துரியோதனன் சொன்ன சொல்லானது அங்ஙனமிருந்தபேர்களின் செவிகளில் நுழைவதற்கு முன்னமே துரோணுச்சாரியர் குமாரனுன அசுவத்தாமன் கேட்டு, நெருப்பில் விழுந்த புழுப்போல்துடித்து, கண்கள் சிவந்து, பொறி பறந்து, புகைமலிந்து, மேருக்கிணையானபுயம்படைத்த அப்புயங்ககேதனனைப் பார்த்து, ''ஆ! ஆ! வணங்காமுடியுடைய மன்னனே'' என்று கூவி மத்தகஜம்போல்தாவி, அன்புக்கொருவராகிய பீஷ்மாச்சாரியரும் கிருபாச்சாரியரும் கர்னமகாராஜனும் துர்ச்சாதனன் முதலிய தம்பிமார்களும் மன்னர்மண்டலீகரும் மற்றுமுண்டான முடிமகிபருங் கண்ணிரண்டு மூடிக் காதிரண்டு மடைத்து உள்ளங்கலங்கி உடல்நடுங்கிட உயிருமொடுங்கும்படி சில வார்த்தைகள் சொல்லத் தொடங்கினுன்.

''ஓ கௌரவகுலாதிபனே! நாம் அஸ்தினுபுரத்தைவிட்டுவந்ததும், விராடராஜனுடைய பசுமந்தையை மடக்கிக்கொண்டதும், கூட்டமாகிய நால்வகைச் சேனைகளை வரிசைப்படுத்திவைத்ததும் ஜயம்பெறுவதற்கோ? அல்லது அபஜெயமடைவதற்கோ? நீர் சொல்லும். அப்படிக்கிருக்க, நீர் வீரலட்சுமி வாசமாயிருக்கும் வெற்றிவேல் பெற்ற துரோணுச்சாரியருடைய மனதுநொந்து நையும்படியாக வசைமொழிகளை வழங்கிவைத்தது தகுதியோ? ஓ கூரிய வேலும்வில்லுங்கொண்ட கோமானே! நீர் பிள்ளையாகப் பிறந்தநாள் தொடங்கி இதுவரையிலும் யுத்தமென்பது செய்து, எங்கே வெற்றியடைந்திருக்கின்றீர்? இந்த விராடபுரத்திற்குவந்து பசுக்காவலாளரை யடக்கிப் பசுமந்தைகளை மடக்கிவிட்டீர். இதுவொரு ஜெயம். முதலில் சுகமாயிருந்த பாண்டவர்

களையழைத்து மோசச்சூதாடிப் பூமிமுதலிய செல்வங்களை அபகரித்துக்கொண்டு காட்டினுக் கோட்டிவிட்டீர், இதுவொரு ஜெயம். இதுதானே நீர் கண்காட்சியாகக் கண்டிருப்பது? இதைவிடவேறுசொல்ல யோக்கியம் உண்டா? என்னவோ பெரிய யுத்தங்களெல்லாஞ்செய்து, இவர்களைவென்று, வெற்றிமாலை பூண்டு, கோட்டை கொத்தளங்களை முற்றுகையிட்டதுபோல் மெத்தமெத்த இறுமாந்து பேசுகிறீர். இதென்ன கட்டுவார்த்தை? இந்த வீரம் ஒரு துட்டுப் பெறுதே. நமது திறத்தை நாமேயெடுத்துப் பேசிக்கொள்ளுகிறதா? இது நன்றாயிருக்கவில்லை. போம், போம், ஓ ராஜனே! இராஜ்சபையிலிருக்கும் பெரியோர்களுக்குக் கடமையென்னவென்றால் காமாதுரர்களாகிய காவலர்க்குக் காரியாகாரியங்களைக் காட்டிக்கொண்டிருக்க வேண்டுமென்பதாக நீதிநூல் முறையிடுகின்றது. ஆதலால் அந்த நீதிப்பழக்கத்தையும் உலகவழக்கத்தையும் அநுசரித்து, உமக்குச் சொல்லவேண்டிய தருமத்தைச் சொன்னாராக்கும். அவ்வாறிடித்துச் சொல்லுந் தருமவாக்கியம் உமக்குச் சம்மதமில்லாமற் போனால், அவருடைய சொல்லுக்குக் காது கொடுக்காமல் வருகிற வீரனுக்கு எதிரிற் போய் நின்று போர்புரியலாமே. அப்படிப்போகிறஉமதுவீரத்திறத்தை யார் தடுத்தவர்கள்? நீரென்ன சண்டைபோடாதவரா? இதுகாறும் நீர் புகுந்த போர் முகத்தில் எங்கேயாகிலும் அடிபட்டும் புறங்கொடுத்தும் ஓடியிருக்கின்றீரா? இல்லையே! கையில் வில்லுங்கணையுமிருக்கச் சத்துருக்கள் கையில் அகப்பட்டுக்கொண்டு சண்டைபோடமாட்டாமற் கட்டுப்பட்டிருக்கின்றீரா? இல்லையே! இப்போதுதானென்ன நீர் தேரேறிப் புறப்படுவதுதான் தாமதம். துரியோதனமகாராஜன் வில் வளைத்தானென்று கேட்டவுனே போர்முகத்திலுள்ள அதிரதவீரர்கள் முதலியபேரும் அபஜயமடைந்து உயிர்விடுவார்கள். அப்பேர்ப்பட்ட வாகைபெறுஞ் சேவகனாகிய பூபதியைப்பார்த்து நீ மாட்டையோட்டிக் கொண்டு ஊர்முகநோக்கி ஓடிப்போவென்று இந்த விருத்தவேதியர் சொல்லலாமா? ஐயோ! அவர் சொன்ன சொல்லானது நீர் இது வரையிலும் பெற்றிருந்த வீரத்திற்கு மிகவும் குறைவாயிற்று. அய்யா அய்யா சுத்தவீரனே! சமர்க்களத்திற் சகல விருதுகளோடு நின்று சத்துருக்களை மடக்கித் தனுர்வேத விதிப்படி யுத்தஞ்செய்து வெற்றிபெறும் விதத்தை என்னென்று நினைத்திருக்கின்றீர்? சகோதரர்களிடத்திற் சூதாடிப் பூமியைப்பறித்து, ஜேஷ்டபிராதுருவின் பெண்சாதியான திரௌபதா தேவியென்னுந் தாயைத் தலைமயிரைப் பிடித்திழுத்து, சபைநடுவே வஸ்திரத்தை உரிந்து மானக்கேடுண்டாக்கி, காட்டுக்கு வழிகாட்டிவிட்ட கதைபோல் நினைத்தீரோ? அல்லது உமது மாமனாகிய இச்சகுனி முதலியபேர்கள் வாய்கொண்டமட்டும்பேசி ஜயித்த வீரமென் றெண்ணினீரோ? ஐயோ! அப்படி ஜயித்த அநியாய ஜயமெல்லாங் கருமபூமியிற் பாபமென்னுங் காணியாட்சியைக் கொடுக்கத் தக்கவை. இப்போது வந்திருக்கின்ற போரை அவ்வளவு எளிதென்று எண்ணுதீர். வருகின்றவன் தனஞ்செயன். அவனுக்கெதிரிலிருந்து வில் வளைத்து பாணந்தொடுத்து யுத்தம்பண்ணியே தீரவேண்டும்.

சூதாடித்தோற்ற அந்த நாளையிலிருந்த அருச்சுனன்தானே யென்று அலட்சியமாய் நினைக்காதீர். இந்தநாளையில் உங்களை எளிதில் விடுவானென்று எண்ணங் கொள்ளவேண்டாம். உனது அம்மானுன சகுனிராஜன் உமக்காகப் பாடுபட்டுச் சம்பாதித்த கருமமானது, சீக்கிரத்தில் திரண்டுருண்டுவளர்ந்து இப்போதுவந்தெதிர்ந்துகொண்டது. இதைக் குறித்து நீரொருவருக்குச் சொல்லவேண்டிய அவசரமில்லை. நீர் யாரையுந் துணைப்பற்ற வேண்டாம். நீரொருவரை விரும்பித் துணைவரக் கேட்பீராகில் யாருந்துணையாகமாட்டார்கள். அந்த ஆசையை விட்டுவிடும். சூதாடி உமக்குச் சந்தோஷமுண்டாகப் பண்ணினவர் இதோ நேராக நிற்கின்றார். இப்போது நேரிடப்போகின்ற போர்முனைக்கெதிரில் அவரைப் போகச்செய்வது ஞாயம். ஆயுதபாணியாய் அவர் போர்மேற் புறப்படும் விதத்தைப்பாரும். நல்லநல்ல ஆயுதங்கள் அவரிடத்தி லிருக்கின்றன. அவ்வாயுதங்கள் எதிர்ப்பவர்களுடைய குடித்தனத்தைக் கெடுத்துவிடும். அப்படிப்பட்ட ஆயுதமிருக்க உமக்கென்ன குறைச்சல்? அத்தன்மையான ஆயுதம் எத்தன்மைப் பேருடையதென்றால், பன்னிரண்டு-எட்டு - இரிக்கால்-தொகை - என்னுஞ் சிறந்த பேருள்ளவை. இவைகளில் கட்டு-வெட்டு-குத்து-பிரித்துவிடு-தனியே ஓட்டிவிடு, கீழேதள்ளிப் படுக்கவை என்று இப்படிக்கெல்லாஞ் சொல்லி விஜயனுக்கெதிராக வெல்லுவார். அந்தப் பார்த்தனை வெல்லும் பராக்கிரமம் எங்களைப்போன்றவர்களா லில்லை. எங்களையல்லாமல் நாகலோகத்தார் முதலிய மூன்றுலோகத்தாரும் நரனுக்கெதிர் நிற்கமாட்டார்கள். நிகரில்லாதவனாய் வருகிற அருச்சுனனைக் கண்டு நான் வெல்லுகிறேனென்று வாய்வண்ணம் பேசுகிற வல்லவர்களுமுண்டு. ஆனால் வாய்ச்சொற் சொல்லுவதற் கென்ன பஞ்சமா? ஓ மதி மரபிற் பிறந்தவனே! பெரியோனாகிய சிலையாரியனை அவமதித்துச் சொல்லத்தகாத சொல்லைச்சொல்லி வெல்லவல்லவர் நீராகையால், இதோ நான் சொல்லுகிறேன் கேளும். இந்த மண்டலத்திலும் அந்த விண்டலத்திலும் அருச்சுனனுக்கு ஒப்புச்சொல்லுவது தப்பு. அவனுக்கெதிரொருவருமில்லை. அவனுடையபோர்முனையில் நீர்தானாவது, இன்னும் எப்பேர்ப்பட்டவர்களாவது, கிட்டி எட்டிப்பார்த்து வந்தாலும்போதும். அதுவே அவனைஜயித்த கீர்த்தியிலும் எண்மடங்கதிகமான பெருமையை யுண்டாக்கும். அவனுடைய போர்முகத்தில் நீர் நேர்முகமாகப் போய் வரமாட்டுவீரோ? உமது கண்ணிற் கண்டு கலங்காதிருப்பீரோ? ஓ நாகக்கொடியோனே! உம்மிடத்தில் விசுவாசம் வைத்த ஆசாரியர் எதிரி இப்பேர்ப்பட்டவன், அவனோடுசண்டைசெய்யவல்லவர் எட்டுத் திசையிலு மில்லையென்று சொன்னால், இந்தப் பேச்சுக்குத் தகாத வார்த்தைகளைப் பேசினீர். அருமையறியாத உம்முடைய யுத்தமுனையில் எங்களைப்போன்றவர்க ளிருக்கமாட்டோம்'' என்று பேசித் தன் தந்தையின் செயலை யெண்ணிவருந்தி, ''ஆ! பகவானே! இந்தத் திறைமுறை தெரியாத துரியோதனராஜனிடத்தில் வீரத்தை விட்டு நாணமுங் கெட்டிருக்கிற இந்தத் துரோணாச்சாரியர் தநுர்மறைக் குருவாயிருந்தும், இவன்பேசிய ஈனவார்த்தைகளைக் கேட்டும், இன்

னும் போகாமலிருக்கின்றார். இவர் இவ்விடத்திலிருந்து சண்டையுஞ் செய்வார்போல் இருக்கின்றது, ஐயோ! அவமரியாதை நேரிட்ட போதே அந்த அரசனுடைய உறவை நீக்கிவிடவேண்டும். அல்லது பேசினவன் பிராணனை அறப்போக்கி விடவேண்டும். இவ்விரண்டிலொன்றும் இல்லாதிருப்பது மனுஷத்தனமல்லவே'' என்று தன் தந்தையை நொந்துகொண்டதுமன்றி, மீட்டும் அரவக்கொடிக் கதிபனைப் பார்த்து, ''ஓ அரசனே! இப்போது நான் சொல்லுகிறதைக் கேளும். எல்லாவுயிரையுங் கவரும்படியான யமதருமராஜனையும், கடல்நீரை வறட்டும் வடவாமுகாக்கினியையும் உருத்திரமூர்த்தியின் கண்டத்தைக் கருக்கிய ஆலாலவிடத்தையும், மட்டுப்படாத எட்டுத் திக்கையும் அட்டமாகயத்தையும் ஒருநொடியில் மடிக்கப்பார்ப்போம், அல்லது ஜயிப்போம். தேவேந்திர குமாரனுன சிலைவிஜயனை மாத்திரம் ஜயிக்கமாட்டோம். நீர் உமது சிந்தையில் இதை விந்தையாகக் கொண்டு, மனவுறுதியோடு நின்று, தெளிந்து பார்த்துக்கொள்ளும்'' என்று கூறினன்.

### கர்னன் துரோணரும் அசுவத்தாமனுங் கூறியவற்றைக் கேட்டு மறுத்துத் தன் பராக்கிரமங் கூறல்

கேட்டீரோ ஜனமேஜய மகாராஜனே! இந்தச் சொற்களை யெல்லாந் துரியோதனராஜனுக்குச் சமீபத்தில்நின்ற கர்னராஜன் கேட்டு, நறநறவென்று பற்கடித்து, வெற்றிமிக்க வீரவேல்பெற்ற பெரியோர்களை நோக்கிப் பேசத்தொடங்கினன்—''ஓ பூலோகபுரந்தரராகிய புநிதர்களே! விராடராஜனுடைய பசு மந்தைகளை மட்க்கும்படியாய் நிதானித்து அஸ்தினபுரத்தை விட்டுப் புறப்பட்ட நாம் வாசமாலைதரித்து வரா நின்ற விஜயனென்னும் வில்லாளியை வியந்து புகழ்ந்து பேசுவது மேன்மையோ? குந்திதேவியின் மைந்தர் தொடுக்குங் கணைக்கஞ்சிப் பயப்படுகிறவர்கள் விருதாவில் இவ்வளவு தூரம் ஏன் வரவேண்டும்? ஐயோ வீட்டிலிருக்கப் போகாதா? அப்படியே வேலையைவிட்டு வந்தவர்கள் எதிரியை செயிக்கத் திறமில்லா விட்டாலும் வாயை மூடிக்கொண்டு சும்மாயிருக்கலாகாதா? திறமைசாலிகளாகிய தீரர்களுக்கு நேரில் வாய்க்கு வந்தமட்டும் பிதற்றுவானேன்? இவ்வளவு காரியத்திற்குப் பெரியவர்களென்று பேர்வைத்துக் கொள்வானேன்? தனக்கு வெல்ல வல்லபமில்லாவிட்டால், தரணியிலுள்ள பேர்களெல்லோரும் வெல்லமாட்டார்களென்று தப்புந்தாறுமாய் வீண்பேச்சுப் பேசவேண்டிய வேலையென்ன? சுத்த வீரர்கள் மனமுறிய மெத்த வருத்தப் படுத்துவானேன்? இருளைக் கெடுத்துவந்த மத்தியானச் சூரியன் போன்ற நானொருவனுமெழுந்து, நெருப்புக் கொழுந்துபோல் வருகிற விஜயனையடுத்து, அச்சமில்லாமல் நாண்தொடுத்து, அபாரமாகக் கணைகள் விடுத்து, என்னிச்சைப்படிக்குப் போர் தொடுத்து, அவனேறிவருந் தேரின் அச்சு-மச்சு-குத்துக்கால் முதலியவைகளையு முறித்து, குதிரை நான்கையும் அறுத்து, காண்டீபத்தையும் அநுமக் கொடியையுங் குறைத்து வெற்றிபெறப் போகின்ற என் வீரத்தை அர்ச்

சுனனைக்கண்டு கொண்டாடுகின்றவர்கள் - அவனுக்கச்சப்படுகின்ற வர்கள் யாவருமிருந்து சாக்ஷியாய்க் காணுங்கள். மேலும்-மண்டலத்தைக்கீறி, விண்டலத்தைப் பீறி, குண்டலமசைய வருந்தேரோனாகிய தண்டதரன் தம்பியைக்கண்டவுடனே எண்டிசையதிர மண்டலாகிர்தியாகிய வில்லைவளைத்து, வருணாஸ்திரப் பிரயோகஞ்செய்து வடவைத்தீ வேகத்தை மாற்றுந் தன்மைப்போல ஒரு கணத்தில் அவன் பலத்தை மாற்றி நீங்கள் யாவருங்கண்டு கண்களிக்கச் செய்கிறேன்.' அந்த விநோதத்தை வேண்டுமானாற் பாருங்கள். இஃதல்லாமல்-அவன் வனவாசம் பண்ணிய பன்னிரண்டு வருடமும் அக்ஞாதவாசமான ஒரு வருடமும் துருப்பிடித்து அழுக்கடைந்து மழுங்கிக்கிடந்த காண்டீபத்தையுங் கணைப்பெட்டியையுங் கைக்கொண்டு, நமக்கெதிரிற் கலங்காமல் வருகின்ற அவனுடைய திடத்தையுந் தீரத்தையுந் தேகத்தையுஞ் சின்னபின்ன மாகும்படி சேதிக்கிறேன். நீங்களெல்லோருங்கூடிப் பார்க்கலாம். பெரியோர்களே! அர்ச்சுனனுக் கெதிரி அங்கர்கோனென்று இச்சகமுத லெங்கும் பிரசித்தமாகப் பேசிக்கொண்டிருக்க, நான் அவனை யெளிதில் விடப்போகிறதில்லை. நானும் ஒரு வில்லைப் பிடித்து மலைபோலெதிர்த்து மலைந்து, போர்த்திறந் தெரிந்த புண்ணியவான்களைப்போற் புகழ் பெறுகின்ற பிரதாபத்தைக் காணவாருங்கள். குளம்படியாற் கிளம்புமண்பொடிகள் விண்ணிலோயாம லெழவருங் குதிரைகள்பேரிலும், அக்குதிரைகள் பூட்டிய தேரின்பேரிலும் கோடி கோடி பாணங்களைச் செலுத்திக் கொல்லுவதல்லாமலும் அவனது ஆஜானுபாகுவாகிய கரங்கள் தறிபடவும், கால்கள் முறிபடவும், விரிந்தமார்பு துளைபடவும், அணிந்த முடியுடன் தலையறுபடவும், விரைந்து போர்புரிந்து நான் வெற்றி கொள்ளப் போகின்ற விந்தையைப் பார்த்து நீங்கள் மகிழுங்கள். இவ்விடத்தி லின்று நானுறுதியாகச் சொல்லுகிறதை யாரும் ஞாபகமாய்க் கேளுங்கள். நானிதுவரையில் நரபதியாகிய துரியோதன மகாராஜனிடத்தில் உண்டு வளர்ந்துவந்த செஞ்சோற்றுக்கடனும், கர்னன் - அர்ச்சுனன் என்று சொல்லப்படும் எங்களிருவரில் வல்லவர் யாரோ வென்று சந்தேகங்கொண்டிருந்த சகலருக்குஞ் சந்தேகந் தீருஞ் சமயமும், இளமைப்பருவத்தில் தநுர்வேத பரீக்ஷை பார்த்தபோது அர்ச்சுனன் தலையையறுத்து அரங்கபூஜைசெய்கிறேனென்று அரசருக்கு முன்னே நான் கூறியிருந்தசபதவார்த்தை முடியுங்காலமும், பற்குணனைவெல்ல வல்லவரில்லையென்று சிலையாரியனும் அசுவத்தாமனும் பேசிய கட்டுவார்த்தை கெட்டோடச் செய்யுந் தருணமும் இப்போதெனக்கு நேரிட்டிருப்பதினால், என் பரமகுருவாகிய பரசுராமர் அற்புதமாகக் கற்பித்து வைத்த அஸ்திர வித்தைகளை நிலைபெறச்செய்து, அவருடைய திருவடிகளைத் துதிக்குங்காலங் கிடைத்திருக்கின்றதை மதிக்கும் விவேகிகளாகிய மன்னவர்களே பாருங்கள். பெருந்தேரிலோங்கி ஒரு சிலை தாங்கி வருகிறவனைக் கண்டேங்கி மயங்குகின்ற ஒருகோடி நரபாலரும் என் சுற்றினிலிருந்து, அவனை நானொருவனே சென்றெதிர்த்து வெற்றி பெறும் வேடிக்கையை முற்றிலும் அறியுங்கள்'' என்று உருத்திர

மூர்த்திக்கொப்பான பீஷ்மர் முதலியபேருக்கும் நன்ருய்க் கேட்கும்படியாகச் சொன்னுன்.

கிருபாசாரியர் கர்னன் கருத்தைக் கண்டித்து உல்லங்கனஞ்செய்ய, அதற்கவ னிந்தித்தல்

கேட்டீரோ ஜனமேஜய மகாராஜனே! இவ்வாறு கர்னராஜன் கூறிய வணத்தையுங் கிருபாசாரியர்கேட்டு மனந்தாளாமல், "ஆஹா! அங்கதேசத்தரசராகிய அறிஞனே! நெடியகடல் சூழ்ந்த உலகத்தை யாளுகின்ற அரசருக்கு, சாமம்-பேதம்-தானம் தண்டம்-என்னுஞ் சதுர்விதஉபாயமுண்டு, இந்நான்கில் நீ தண்டமென்னும் உபாயத்தை அநுசரித்துச் சண்டைசெய்யக் கற்றிருக்கின்ருயன்றி, மற்ற மூன்று உபாயமும் அறியமாட்டாய்போலு மிருக்கின்றது. அவ்வுபாயமூன்றையும் அறிந்து கொள்ளத்தக்க சுயபுத்தி உனக்கில்லாவிடினும், தெரிந்த பெரியோர்கள் சொல்லுகின்ற சொற்புத்தியாகிலுங் கேட்டு நடக்க வேண்டும். தண்டமென்பதைத் தாமதகுணத்தோர் விரும்புவார்கள். சாத்மீககுணமுள்ளவர்களுக்கு மற்றமூன்றுந் தகுதியுடையனவாகும். அஃதெவ்வாறெனில் அரசனுனவன் காரியத்தைக் கருதி யோசியாமற் பகைவர்மேற் செல்லுதல், அப்பகைவரைத் துன்பமில்லாமல் நிலைக்கச் செய்வதாகும். மேலும்-தொழில்வல்லமையையும்-தன் வல்லமையையும்-எதிரி வல்லமையையும்-துணை வல்லமையையும்-ஆராய்ந்து, தன் வல்லமை மேலிட்டிருக்குமாயின் தானெடுத்த காரியத்தை முடிக்கலாம். ஆகையால்-காரியாகாரியங்க ளெல்லாவற்றையுங் கருதி, பிற்பாடு சமராடப் புகுந்தபேர்களுக்கு எவ்வுலகத்தும் எக்காலத்தும் ஒப்பில்லாக் கீர்த்தியுண்டாகுமென்று நீதிநூலோர்பேசி யிருக்கின்ருர்கள். அதுவுமல்லாமல் தன் பலமும் எதிரிபலாபலமும் அறிந்து வீரியமாக யுத்தஞ் செய்யக் கற்ற புத்திமான்களானபோதிலும், 'பெரியாரைத் துணைக்கொள்' என்னும் நீதிவாக்கியப் பிரகாரந் தனக்கு மேற்பட்ட அகண்ட அறிவாளர்களைக் கேட்டு, அவர்கள் புகன்ற புத்திவழி நடக்க வேண்டும். அப்படிக் கேளாது அரசன் உன்மத்தனுயிருப்பானுகில், அவனது சுகதுக்கத்திற் கொப்பப் பொருந்திப் பக்கமிருக்கும் எம்மைப்போன்ற பெரியோர்கள் அவனுக்கு இடித்துச் சொல்ல வேண்டியது கடமை. ஓ திசையளவுநூறும் உதிரப்பசை வீசும் வேலேந்திய கர்னனே! வருகின்றதேர் ஒன்றென்றும், அத்தேர்மேல் வருகிறவன் தனியனென்றும், அவன் கைப்பிடித்த வில் ஒன்றென்றும், அவனெம்மாத்திரமென்றும் வெகு சுலபமா யெண்ணி ஆத்திரப்பட்டுச் சொன்னு யல்லவா? உன்னைப்போலொத்தவன் இவ்வாறுரைத்தால், மாற்றுயர்ந்த பொன்னைப்போன்று வருகின்றவன் உன்னை என்னென்று புகலவேண்டும்? அவனுன்னுவுக் கடங்கினவனு? இலேசானவனு? அந்தோ! இந்தப் பாராளுந் துரியோதனன் முதலாகிய பலபடைமன்னர் கூட்டங்களையும் பீஷ்மர் முதலாகியபெரியோர்களையும், வீரியம்பேசுகின்ற உன்னையும் என்னையும் ஒரு பொருளாய் நினைக்காமல் திரஸ்காரஞ் செய்யத்தக்கவனென்று உனக்

குத் தெரியாதா? ஆண்சிங்கஞ்சீறி யானைக்கூட்டத்தின்மீதேறிப்பாயுந் தன்மையைபோல் வருகின்றானே; அவனுக் கெதிர்நின்று போராடுபவர் களுமுண்டோ? சிவபெருமா னொருவரேசென்று திரிபுரமும் நீறாகக் கண்டு திரும்பினாரென்பதை இதுவரையிலும் நீ கேட்டிருக்கவில் லையோ? அப்படிப்பட்ட அமலனோடேயே அடல்பெற்று வந்தவன், நம்போலொத்தவர்களிடத்தில் ஒருவனாய்வந்து வெற்றியைப்பெறுவது அருமையோ? ஓ செருமுகப்புலியே! சீர்படைத்த பாஞ்சாலராஜ னுடைய பட்டினத்தில் திரௌபதாதேவிக்குத் திருக்கலியாண முகூர்த்தமென்று சுயம்வரஞ் சாற்றியபோது மச்சேந்திர லக்ஷியத்தை முடித்து, இச்சைவைத்துவந்த ராஜரெல்லாரையும் ஓடவிட்டடித்து, கச்சணிந்த பெருந்தனக் காரிகையையுங் காண்டீபத்தையும் கைப் பிடித்து, ஜெயலக்ஷ்மி கலகலவென்று நடித்துவரக் கண்ட காளை வரு கின்றான். அக்கால் அவனுடனெதிர்த்துப் போராடுந் திறனுற்றவர்கள் யாரிருந்தார்கள்? சிற்சிலர் வெளிப்பட்டுப் பட்டபாட்டைமறந்தாயோ? ஓ மாலைபுனைந்த மணிமுடிக் கர்ணா! நீயந்தச் சுயம்வரகாலத்தில் திரௌ பதாதேவியைக் குறித்துப் போயிருந்ததில்லையோ? சகலராஜராலும் வளைக்கப்படாத வில்லை நீ தாங்கி வளைக்கவில்லையோ? அக்கால் நீ யடைந்த அவமானத்தையும், உன்னைப்போல் துணிந்து வளைக்கச் சென்றவர் இளைத்தோடிய எளிதத்தையும், அங்ஙனமிருந்தோர்பேசிக் கொண்ட அவ்விந்தைப் பேச்சுகளையாவது வேடிக்கையாய்க் கேள் விப்படவில்லையோ? இஃதன்றியும், கொடுமையாளராய்த் தொடர்ந்த யதுகுலத்தாரையெல்லாங் குமுக்கிஜயங்கொண்டு, சுபத்திராதேவியை மணம்புணர்ந்து கொணர்ந்த காலத்தினும், முப்பத்துமுக்கோடி தேவர் கள் முதுகுகாட்டியோட ஓட்டி, அஷ்டவசுக்களுடன் அஷ்டதிக்குப் பாலரும்-சப்தசமுத்திரத்துடன் சப்தமேகங்களும் - சலிக்கக்கெலித்து, காண்டவவனத்தை அக்கினித் தேவனுக்கு ஆகாரமாக ஊட்டிவைத்த காலத்திலும், அளாவிர்தகண்ட முதலாகிய உத்தர குருகண்டத்தி லுற்றோரியாரும் முடிவணங்கித் தொழுது, கண்ணீர்விட்டழுது "எங்க ளுக்குப் பழுதுவராமற் காப்பாற்றும், கடைக்கண்பாரும்" என்று உப சாரத்துடன் அநேக திரவியங்கள் குவிக்கப்பெற்ற காலத்திலும், மாயா வரத்துடன்தோயமாபுரத்திலிருந்த காலகேயரையும், இரணியபுரவாசி களாகிய நிவாதகவசர்களையுமடித்து அவர்களுடைய தோள்வலியும்- தாள்வலியும்-உருத்திரதேவனாற் படைக்கப்பட்ட வரத்தின் வலியும் உபயோகமாகவொட்டாம லடித்து முடித்த நாளையிலும், அட்டதிக்கும் புகழ்பெற்ற சித்திரசேனனென்னுங் கந்தர்வராஜனைக் கொட்டமடக்கி, நமதரசனாகிய துரியோதன மகாராஜனையும்-தம்பிமார்களையும்-தர்மபத் தினிகளையும்-கட்டவிழ்த்து மீட்டு மானங்கெட்ட பிராமணனைக் காப் பாற்றிவிட்ட காலத்திலும், இதோ வருகிற கட்டழகனாகிய கிருட்டின னுக்கு யார் துணையாயிருந்தவர்கள்? ஒருவருமில்லை, எந்தக்காலத்தி லும் அவன் தன் கையிற்பிடித்த விஜயகாண்டீபமே துணையல்லது, அவனுக்கு வேறுதுணை கண்டதில்லையே; அப்படி ஏதாகிலும் துணை நாடிப்போய் ஜயித்திருப்பதுண்டானாற் பேசு—

லெடுத்து, அவர்களுடைய திருவடியை அடுத்து. பட்டாபிஷேக சம்பிரமப் பாக்கியங்களையும் பார்த்த கண்களால் இந்தப் பஞ்சையான போரையும் பார்க்கும்படிக் கமைந்ததோ'' என்று பரிதவித்தனர். அப்போது அக்கினித்தேவன் அருட்கண் ணோக்கி, ''அப்பா வாயு மைந்தனே! அடியேனிமித்தம் நீ அர்ச்சுனன் தேரில் அமர்ந்தருளல் வேண்டும்'' என்றுரைய, அவ்வாறே நல்லதென்று அமர்ந்தவர் அவ்வநுமார். ஆனதால், துரியோதனனுடைய சேனைக் கடலைக் கலக்கிக் கடக்கவும், விஜய வீரியன் ஜெயம் படைக்கவும், உதயகிரியிலெழுந்த சூரியன்போற் கோபச்சுடர் விரித்து, கூசாமலெரித்து கோர தந்தந் தெரித்து குறுகுறுத் ததிர்த்து, அர்ச்சுனனுடைய தேர்க்கொடியாடையில் அநுமார் வந்து பிரசன்னமாய் நர்த்தனம் பண்ணினர். இப்பால்-வேடன் கையில் அகப்படாமல் விடுபட்டுப் போன மிருகம் மீண்டும் அகப்பட்டவாறுபோல் அர்ச்சுனன் கையிற் சிக்கிக்கொண்ட அரவக்கொடியோன் இடிமுழக்கங் கேட்ட உரகம்போலேங்கி, தானிருக்குநிலை தனக்குத் தெரியாமல் மயங்கியொடுங்கினன். அர்ச்சுனன் அவனைப் பார்த்துச் சிலவார்த்தை சொல்லத் தொடங்கினன். ''ஓ வணங்காமுடி பெற்ற மன்னனே! நீ எங்கே ஓடுகின்றாய்? ஏன் வாடுகின்றாய்? ஓடவேண்டிய அவசரமென்ன? ஐயோ! உன் கையிற் பருத்த வில்லும்-பக்குவமான அஸ்திரங்களும் போதுமான பலமுமிருக்க, புண்ணியவான்களாகிய பெரியோர்கள் பக்கத்துணையாகவிருக்க, வேண்டியமட்டுந் தனங்களிருக்க, தம்பிமார்களும் - ஏவலாளிகளும் ஏழுகடல் சூழ்ந்த பூமியும் - மாயச்சூதாடு மாமனும்-மகா பிரபலனாகிய கர்னனுமிருக்க, போர்முனை வந்து புறமிட நினைந்து வாயைத் திறவாமல் மயங்கிப் பேய்போலோடிப் போவது திறனே? நல்ல காரியம். நீ இப்படியே அஸ்தினாபுரம்போய்ச் சேர்ந்தாலும், வீரபட்டமுஞ் சிந்தூரப் பொட்டுமிட்ட பட்டத்து யானை மீதேறிப் பவனிவரும் இராஜவீதியில், உன்னைப் பார்ப்பதற்கு ஓடி வரா நின்ற பொற்பாவையைப் போன்ற கச்சணிந்த கனதன மாதர்களோடு கைம்பெண்களுங் கண்டு, இச் சகத்தையாண்ட துரியோதனராஜன் பித்தன் பித்தனென்று இகழ்ந்து பேசிச் சிரிப்பார்களே; இங்கே நீ வந்த காரியத்தை வழியாய் முடித்து வெற்றிகொண்டு போகாமல், விழலனாய்ப் போகலாமோ? இஃதன்றியும், சோடசகலை நிறைந்த மதியம் போல் இலங்கிய சுவேதக்ஷத்திரமென்னும் வெள்ளைக்குடை பிடிக்க, இருபக்கங்களிலும் பால்நுரைபோன்ற சாமரை வீச, வந்தியர் சூழ்ந்து வாழ்த்திப் புகழ, பலராஜர் வந்து பாதமேற் பணிய, தவராஜரும்வந்து ஆசிர்வதிக்க, மகா சிறப்போடு சிந்தைகளித்துச் சிங்காதனமேறி மித்ர புத்ர பந்துவுடன்கூடி வாழ்கின்ற வேந்தர் வேந்தனென்னும் லோகாதிபதியாகிய நீ சண்டை முகத்தில் வந்து சாதிக்கவேண்டுவதை விட்டுப் பெண்டுகள்போல ஓடுவது தீரத்துவமோ? நீ இப்போது என்னிடத்தில் தனித்து அகப்பட்டாய். உன்னையும் உன் சகோதரர்களையும் ஒரு கணப்போதில் என் கணைகளினாலே சல்லடைக் கண்களாகத் துளைத்து, அவற்றிற்கு இரையுமாக்கி விடுவேன். ஆனால் சிங்கக்

கொடிக்கதிபனுகிய என் தமையன் உங்கள் நூற்றுவரையும் கொல்வே னென்று இராஜசபையிற் சொல்லிய சபதம் வீணுய்ப்போமே யென்று உங்கள் வாணுளை விடுத்தேன். பகற்பொழுதை விளக்கிய பானு அஸ்தமிக்கிரவரைக்கும் பார்த்திருந்து அப்பாலே தன்னரசாய் வந்து உடுக்கூட்டங்களென்னு முறவினரோடு சஞ்சலமில்லாமற் பிரகாசிக்க வருஞ் சந்திரன்போல், எங்களைக்காட்டில்ஓட்டிவிட்டு நீங்கள் நாட்டி லிருந்து நல்ல பாக்கியங்களை அநுபவித்துக் காலந்தப்பாமல் புசித்து ஆக்ஞாச்சக்கரஞ் செலுத்தி அரசாண்டு வந்தீர்கள். மறுபடியும் விடியற்காலத்தில் சந்திரனுெளியைத்தவிர்த்துத் தானே பிரபுத்துவஞ் செய்யவந்த சூரியனைப்போல், இப்போது நாங்கள் வெளிப்பட்டோம். சங்கினங்கள் தவழுந் தண்ணிய வயல்சூழ்ந்த கங்கைவள நாடனுகிய பீமசேனமகாராஜன் கையினுல், தாமசமின்றி நாளைக்கே உங்களைக் களப்பலி யூட்டிவைக்கப் போகின்றேம். மேலும் பீமசேனருடைய சபதந்தப்பினுலும் தப்பட்டும். இப்போது பாவியான உன்னைப் பார்த் துங் கொல்லாமல் விடலாகாதென்று ஒரு கடுங்கோபம் எனக்குண்டா யிருக்கின்றது. ஆனுல் இரப்பவர்கள்-யுத்தத்திலிளைத்தவர்கள்-புறங் கொடுத்தோடினவர்கள் - வில்லைப்போட்டுப் புல்லைக்கவ்வினவர்கள் - குழந்தைப் பருவமுடையவர்கள்-இளையவர்கள்-யாவருங் புகழுங் கவி ராஜர்கள்-தவராஜர்கள்-தூதுவர்கள்-நோயாளிகள் - விருத்தர்கள்-பிர மக்கியானமுள்ள பிராமணர்கள்-ஸ்திரீகள் இவர்களைக் கொல்லுவது மகாபாவமென்று பெரியோர்கள்பேசியிருக்கின்ருர்கள். அந்தத் தருமம் என்னைப் பிசகவொட்டாமல் தடுக்கின்றது. இப்போது இளைத்து ஓடிப்போகவிருக்குமுன்னை நானென்னசெய்வேன்? அடாவஞ்சனே! பாவ புண்ணியத்தை எண்ணிப்பாராத நஞ்சனே! நீ எண்ணிய எண் ணஞ் சித்திக்குமென் றிருந்தனையோ? வனவாசஞ்சென்ற பாண்டவர் கள் மறுபடியுந் திரும்பி வரமாட்டார்களென்று மதித்திருந்தனையோ? இனி நீ நோவ வேண்டுவது உன் தலையின் விதியினையே! ஐயோ ! 'வாழ்வாரைப் போலுந் தாழ்வார் - தாழ்வாரைப்போலும் வாழ்வார்' இதைச் சற்றேனும் உன்மனத்தில் வைக்காமற் போனதென்ன? அடா பேயே! எவர்க்குஞ் சதுரர் நாமென்றெண்ணப்போகாது. தரு மத்திற்கொருநாளும் பிசகுவராது. தானென்னுஞ் செருக்குநிலை நில் லாது. ஐயையோ! அதுபொல்லாது. அடா சொல்லாது போகின்ற தூர்த்தனே'' என்று இன்னும் பலவாருக இழியக்குத்தினுன்.

இவ்வாறிகழ்ந்து பேசியபோது துரியோதனராஜன் எதிர்ப் பேச்சுப் பேசாமல் ஆபத்துவேளை இதுவென மனத்தாபத்துடனிருந் தான். அவன் இவ்விடத்தில் இவ்வாறிருக்கும்போது இந்த முக நோக்கித் திரும்பிய வேதக்கொடியுடைய துரோணுச்சாரியர் கிருபாச் சாரியர் - அசுவத்தாமர் - பீஷ்மர் - கற்பகக் காவைப்போல் அற்புத மாகக் கொடுக்குங் கர்னராஜன் - சகுனி - சயிந்தவன் - விகர் னன் - துச்சாதனன் - சாளுவன் இவர்கள் முதலிய சாமர்த்திய வான்கள் எல்லாருஞ் சர்ப்பக்கொடி படைத்த மற்புய மகா

ராஜனுக்குத் துணைவந்து கூடினார்கள். அவ்வாறு வந்தவர்களில் துச்சாதனன் விகர்னன் முதலிய தம்பியரில் சிலரும், முடிவேந்தர் களில் பலரும், வெற்றிமாலையணிந்த சுத்தவீரர்களும், மாமனும் மைத் துனனும் உடல் பதறியோடிவந்து, மதயானைகள்போற் புகுந்து நந் தியாவட்ட மாலைதரித்த நராதிபனைத்தாங்கி ஆதரித்துத் தேற்றினார் கள். இதற்குள்ளாக காரோசை - கடலோசை - இடியோசை - ஏற் றோசை முதலிய வெல்லாம் ஒன்றுசேர்ந்து ஓரிடத்தில்கூடி முழங்கிய வாறுபோல், தேர்களினோசை-குதிரைகளினோசை-நாணோசை - சங்க வோசை-தாரை-பூரி முதலிய வாத்தியவோசை - சரங்களினோசை - ஆகிய இவைகளெங்கு முழங்கப் படையாளர்வந்து குவிந்தார்கள். சப்த சமுத்திரம்போ லிரைந்து ஆர்ப்பரித்து இருபக்கங்களிலுங் கவிந்த இப்படை மன்னர்களைத் துரியோதன மகாராஜன் கண்டு, சற்றுத்திடங்கொண்டு, குனிந்த தலையை நிமிர்ந்து பார்த்தான்.

### கர்னனுக்குங் காண்டீபனுக்கும் யுத்தம்

இப்படி துரியோதனன் பார்த்தபோது, அப்பார்வையின் பரிபவத் தைக்கண்ட கர்னன் பச்சாதாபப்பட்டு, உடனே நறநற வென்று பல்லைக்கடித்து, வெம்பிக் கிளர்ப்பி, வெதும்பிச்சீறி, கனைத்துச் சினந்து, திசாதிசைகளுந் திடுக்கிடத்திரும்பி, சடக்கெனத் தேரைத் தட தட வென்று முடுக்கி,மின்னுடன் மின்மினியும் - வேங்கையுடன் மானும்- சிங்கத்துடன் யானையும்-மலையுடன் மணற்குன்றும் எதிர்க்கச் செல் வதுபோல் விஜயன் தேருக்கு நேர் சென்று நின்று, "ஓ அர்ச்சுனா! என் முகமாகத் திரும்பு. வணங்காமுடி மன்னனாகிய துரியோதனனை வளைத்துத் தகுதியற்ற சொல்லா லிகழ்ந்து கண்டவாறு பேசுவது நியாயமல்ல. நாங்கள் யாவருமிருக்க நராதிபனை எதிர்த்தது வீரமு மல்ல. நீ ஏன் வீணாகக் கிடந்து மயங்குகின்றாய்? இதோ நான் உனக்குமுன் வந்திருக்கின்றேன். என்னுடன் பகைத்துப் போர்புரிவ தற்கு உனக்குத் திறமுண்டாயின் இங்கே திரும்பிப்பார்" என்று அக் கினியிற் பொறியும் புகையுந் திக்கென் றெழுவதுபோல் மொழிந்தான். இவ்வண்ணமாக அங்கதேசாதிபன் சொன்ன வார்த்தையை அர்ச்சு னன் கேட்டதும் குபீலென்று பொங்கி யெழுந்த கோபாக்கினியானது கால் முதல் தலைவரைக்கும் உதிரத்தை முறித்துவிட்டதனால் முகங் கறுத்து, கும்பகரடக் குஞ்சரத்தை மடக்கியடக்கிய யாளியானது சிங் கத்தைக் கண்டு செறுத்துப் பாய்கின்ற செயல்போல் துரியோதனனை விட்டு விட்டு, அறைகூவிவந்த விருந்தினனாகிய அங்கராஜனுக்கு நேரே இரதத்தை முடுக்கி யெதிர்த்தான். அப்போது அர்ச்சுனன் தேருங் கர்னன்தேருங் கிட்டி நெருங்கி ஒருவரோ டொருவ ரெதிர்த்து யுத்தஞ் செய்யப் புகுந்தகாலையில், கர்னனைச் சேர்ந்த காவலர்களும்- ரதகஜதுரகபதாதிகளும் கனைத்துக் கனன்று சிங்கத்தை துரத்திவருஞ் சேங்கன்றுகள்போற் பங்கப்படாத பற்குணனை வளைந்து பற்றினார்கள். இவர்களல்லாமலும் துரியோதனன் தம்பிமாராகிய சித்திராங்கதன், விகர்னன்-சித்திரசேனன் சங்கிராமசித்து-சித்திரவிரதன் - துன்முகன்,

துர்ஜெயன் முதலியவர்களும் - கர்னனுக்கு உப தம்பிமாராகிய ராதை மக்களுங் கர்னனைப் பின்னுக்கி தாங்கள் முன்னுகி, கனகனவென்று காலாக்கினி கதித்தெழுந்தவாறு சேர்ந்து, விசித்திரமான வில்லை வளைத்துச் சரநாணெலி யேற்றி, தங்கள் தங்கள் குருவைப் போற்றி, உடலூடுருவிப் பாய்கின்ற உயர்வடிக்கணைகளைப் பத்துபத்து நூறுநூறு என்னும்படியாகத் தொடுத்து, திக்குத்திசை யெங்கும் அக்கினிமய மாக்கி, அதிக வேகமுங் கோபமுங் கொண்டு யாவருக்கு மடங்காம னின்று அமராடினுர்கள்,

அப்போது சுப்பிரமணியக் கடவுளை நிகர்த்த சுவேதவாகன னுனவன் இவ்வளவு பேருக்கும் இவ்விடத்திலேயே மரணமென் றெண்ணி, திறமிகுந்த செஞ்சிலையைத் திடீரென்று வணங்கி, கட்டுப்படாத சரநாணேசை காட்டினுன். அக்கால் எதிரிகள், தங்கள் இறுமாப்பெல்லா மொழிந்து, தனித்தனி விழுந்து, சரீர மயர்ந்து தங்கள் தேராகிய சயந்தனத்திற் சாய்ந்து, மறுபடியுந் தெளிந்தெழுந்து கண்கள் சிவந்து, போரிற் புகுந்து, தேரிற் சிறந்து. சாணை பிடித்துத் தயிலதூபஞ் செய்த சரங்களை மாரிபோற் சொரிந் தார்கள். அப் பாணத்தைப் பார்த்த பார்த்தனுனவன் இவர் களை எளிதில் விடலாகாதென் றெண்ணி, சோனுமேகஞ் சொரி வதுபோல் நானுவித அஸ்திரங்களை விடுத்து, துரியோதனன் தம்பியரிற் சித்திராங்கதனுடைய வில்லையும் அவனேறிய இரதத்தை யும் அழித்து, முடியையுங் குறைத்து, உடலையுஞ் சல்லடைக் கண்ணுக்கி, மதியூகியான விகர்னனைப் பார்த்து, பிறைமுகக் கணைகளி னுற் பிளந்து, புறங்காட்டிப் போகக்கிளர்ந்து, சித்திரசேன னென் பவனை வளைத்து, அவனேறிவந்த தேரையுமழித்து, அவன் சேனை யையு மொழித்து, இடியோசை கேட்டு இளைக்கும் பாம்பைப்போற் பூமியிற் புரளவிட்டு, அவனுடம்பெங்கும் புண்ணுக்கி, மேலிட்டு வந்த சங்கிராமசித் தென்பவனைச் சலிக்கவடித்து, சரீரம் வலிக்க விடுத்து, துன்முகனேடெதிர்த்துத் துரத்திவிட்டு, துர்ச்சயனைக் கர்ச்சனையோடு நோக்கி, ''அடா நச்சரவக்கொடியோனுடன் பிறந்த நாசகாலர்களே!'' என்று கூவி நலியத் தாக்கினுன். அப்போது நால்வகைத்தானைகளும், நானிலவீரர்களும், ரதகஜதுரகாதிகளும் அதிரத மகாரத சமரதர்களும் சூரியகிரணத்திற்கு முன் பனிநெருக்கம்போற் சூழ்ந்து, நாம் வாழ்ந்த வாழ்வு இம்மட்டோவென்று சோர்ந்து, நிலத்திலாழ்ந்து, சிலர் முன் னேங்கி, பலர் பின்வாங்கி, யாவரும் பலங்குறைந்து அயர்ந்துபோனுர் கள். இப்படி சேனைகளுஞ் சேனைவீரர்களு மயர்ந்துபோனதைக் கர்ன ராஜன் கண்டு கனகோபங்கொண்டு, காண்டீபன் எங்கே? எங்கே? என்று கடுகடுத்து வந்தான். அப்படி வந்தவனை அசுவத்தாமன் குறுக் கிட்டு, ''ஓ அங்கராஜனே! நீ எந்த அருச்சனனை யிகழ்ந்து பேசி னையோ, அந்தச் சங்கிராம விஜயன் இவன்தான். இவனை எவ்விதத் திலுமாட்டி இவ்விடம் விட்டோட்டி, ''எங்கள்முன் நீ ஜெயமடைந்து வரவேண்டும். அபஜயத்திற் கிடங்கொடாதே. அப்பனே! செவ்வை

யான ஆலோசனை செய், உன்பேரில் வெகுநாளைய அடம் வைத்திருக்கின்றான் இந்தக் கிரீடி. நீ இராஜசபையிற் பேசிய சங்கதிகளையெல்லாஞ் சரக்கோவையாய்க் கோத்து வைத்திருப்பான்; அவைகளினால் நீ தப்பிவருவது அருமை, ஜாக்கிரதை, ஜாக்கிரதை'' என்று உசிதமாகச் சொன்னான்.

இவ்வாறு அசுவத்தாமன் சொன்னதைக் கேட்ட கர்னராஜன் மனந்தாளாமல், ''ஒய் அசுவத்தாமா! நான் பிராமண ஜாதியிற் பிறந்திருந்தால் யுத்தஞ்செய்வதற்கு அஞ்சுவேன். அப்பேர்ப்பட்ட நைச்சிக இனத்திற் பிறவாமல் க்ஷத்திரிய குலத்திற் பிறந்தவனாகையால் க்ஷத்திரிய தருமத்தை யநுசரித்துக் கையில் விற்பிடித்த நான் அமருக்கஞ்சுவேனென்று நினையாதே. இப்போதென்னுடன் எவரெதிர்த்தாலும், அவர்களுக்கு இந்தப் பூமியே சமாதியிடமாக அடக்கம்பண்ணித் திரும்புவேன், இதற்கு வேறு திருகில்லை. என் பராக்கிரமத்தையும், நான் செய்யப்போகின்ற யுத்தத்தின் அதிசயத்தையும் நீயே கண்ணாரக்கண்டு, களிக்கப்போகின்றாய்'' என்று சொல்லி வெற்றிக் கொடியும் வாகைமாலையுஞ் சுற்றிலுங் கட்டித்தூக்கிய கொற்றைத்தேரை நருக்கி யுத்தத்திற்குக் குறுக்கினான். இவ்வாறு இவனடுத்த சமயத்தில் இந்திர குமாரனுடைய ரதமுங் கிட்டியது. அக்கர்னனுடைய ரதமும் அதோடு முட்டியது. உடனே அவ்விருவர் தேரிலும் பூட்டிய குதிரைகள் கனைக்கவும், சாரதியிருவருஞ் சப்தித்திரையவும், தேர்ச் சக்கரங்கள் கிறீச்சிட்டொலிக்கவும், சிறுமணிச்சதங்கைகள் கணகணவென்றார்க்கவும், தீரர்களிருவரும் வில்லையெடுத்துப் பிடித்து நிறுத்தி வளைத்து இழுத்து நாணிதொடுத்து, நாரிதெறித்து, டங்காரஞ் செய்தனர். பொன்மலைபோற் பிரகாசிக்கின்ற அவ் வில்லிலிருந்து விறுவிறென்று விடுத்த வேகக் கணைகளின் வீரத்திறத்தாற் சமுத்திரஞ் சுவறி, நிலைதடுமாறி தளதளவென்று கொதித்துக் குறைந்தது பூமியின் பரப்புப் புகையால் மறைந்தது. யுகமுடிவோவென்று உலகத்தோரிறைந்தனர். அஷ்டதிக்குக் காதாரமாகிய எட்டுக்கிரியும் எதிரொலி செய்தன. திசையானைகள் திடுக்கிட்டுவாடின. அஷ்டமாநாகங்கள் அலறியஞ்சின. ஆகாயத்தில் வேடிக்கை பார்க்குந் தேவாதிதேவர்களும், பூபாலராகிய போர்வேந்தர் பலரும் எப்புவனங்களிலும் இதைவிட அதிசயமில்லை என்று அற்புதமடைந்தார்கள். அன்றியும் இருவரும் செய்த சங்கவொலிகள் திக்கெட்டுஞ் செவிடுபட முழங்கின. ஒருவரையொருவர் சீறிக்கூறும் வீர வார்த்தைகள் தாறுமாறான ஒலியோடார்த்தன. இவ்வாறு எண்ணற்கரிய தீரவீர பராக்கிரமத்தோடு தீவுகளனைத்துந் திகைக்கும்படியாகச் சிங்கலலாடத் தேர்க்கிறையாகிய அங்கர்கோனானவன் ஆலால விஷத்திற் கொப்பாகிய அம்புகளைக் கும்பலாய்ப் பொழிந்து, அர்ச்சுனனுடைய வில்-பாணம்-தேர்-குதிரை-சாரதி முதலியவெல்லாஞ் சீர்குலையப் பண்ணினான்.

இப்படி கர்னன் தொடுத்த அஸ்திரங்கள் கதித்து வருகின்ற செயலை அர்ச்சுனன் கண்டு, வாயடித்துச் சிரித்து, தனதடையாளம்

பொறித்த அனலாஸ்திரங்களை அனந்தமாக ஏவி, கர்னன் விட்ட கணைகளையெல்லாம் ஒரு நொடியில் செத்தைப்போலாக்கி வில்லில், மேகாஸ்திரந்தாக்கி வந்தித்து மந்திரித்து, வள்ளலான கர்னன் பேரில் கொள்ளை கொள்ளையாகக் கூசாமலிறைத்தான். இப்படி வெள்ளையானைமேல் பவனிவரும் வேந்தன்மகனுந்திய பாணங்கள் காரிடி-கடலிடி-நீரிடி-நெருப்பிடிபோல் நெறிப்போடு வருதலைக் கர்னன் கண்டு, கடுங்கணைகள் கோடாகோடிகளைப் படபடெனத்தாக்கி, எதிரியுந்திய மேகாஸ்திரங்களைச் சிந்து சிந்தாக்கினன்.

இவ்வாறாக இருதிறத்தவர்களுந் திரண்டபகழிகளைப் பரபர வென்று செலுத்தி, தேரைக் கரகரவென்று சுழற்றி, செஞ்சிலைச் சதங்கைகள் குலுங்க அசைத்து, கொஞ்சமேனும் ஒருவரையொருவர் மிஞ்ச விடாமல் அடர்த்துப் போர்கொடுத்து வரும்போது, கனகக்கொடையாளுகிய கர்னன் கைமிஞ்சி, காய்த்துத் தோய்த்துக் கடைச்சற் பிடித்த பத்துபாணங்களை யெடுத்து உத்தரகுமாரன் பேரிலோச்சி, இரதத்தின் மீது இருபதுகணைகளை யெடுத்துச் செலுத்தி, குதிரைகள் மீது குறி பிசகாது நாற்பது சரங்களைப் போக்கி, விஜயன் பேரில் நூறுகணைகளை விடுத்தான். அம்மாத்திரத்தி லக்கணைகள் அண்டச்சுவரின் அடியைப் பெயர்த்து, எண்டிசை முழுதும் இடியப் பொடித்து பரபரவென இரைந்து, சரசரவென விரைந்து, அண்டரெல்லாந் திக்பிரமை கொள்ள மண்டியெரிந்து வருவதை தனஞ்சயன் கண்டு ஒரு சதுர்முகக் கணைகொண்டு அவற்றையெல்லாம் பிளந்து பொடிப்படுத்தினன். அந்த விபரீதத்தைப் பார்த்திருந்த அமரர்களியாவரும் போர்த்திறப் பார்த்தனைப் புகழ்ந்து கொண்டாடினர்கள். இப்பால் பற்குணன் வெகுண்டு வில்லையெடுத்து, கணைகளைப் பக்குவமாகத் தொடுத்து, கர்னன்மீதும்-அவன் தேரின்மீதும் குதிரைகளின் மீதும்-சாரதிமீதும் பிரயோகித்தான். அந்தக் கணைகளெல்லாம் ஏகமுகமாய்க் கூடி, இந்திர நாட்டைநாடி சப்தமேகம்போ லெழுந்து இரைந்து ரதகஜ துரகபதாதிகளை நாடித் தேடி வருகின்ற வேகத்தைக் கர்னராஜன் கண்டு, காலாக்கினி போன்ற பாணங்களை விடுத்து, அவற்றையெல்லாம் அணுவினும் பரமாணுவாக்கி விட்டான். அவனுண்மையைக் கண்ட யாவருந் துதித்து, இவனுக்கெதி ருண்டோவென்று மதித்தார்கள்.

உடனே இருவரும்பிரிந்து பின்னுமெதிர்த்து, வாசாமகோசரமாய் வடிக்கணைகளைச் சொரிந்து, அமர்புரிந்தார்கள். இருவர் விழிகள் எரியவும், இருவர் மனது பதறவும், குதிரை யினங்கள் கதறவும், சேனைகளெங்குஞ் சிதறவும் கண்கள் கக்குங் கனலும்-தேர்ச் சக்கரங்கள் கக்குங் கனலும்-கணைகள் கக்குங் கனலும்-பொங்கிப் புகைந்தன. ஒருவரை யொருவர் வெகுண்டு புகன்ற உரையினின்றெழுந்த பெருங் கனல் விரிந்து எரிந்து நிறைந்தது. இருவர் தேரும் இடைந்து மிடைந்து இடைவிடாமலுழன்று, குயவன் திகிரிபோற் சுழன்று பாதல பூதலமுழுவதும் பள்ளமாக்கி, மறுபடியுஞ் சேனைகளாலெழுந்த புழுகி

களால் நிறைந்தது. இவ்விதமாகத் தொடர்ந்து தாறுமாறாய் வேறு வேறு பாணங்களை நூறு நூறாகத் தொடுத்துச் சண்டைகொடுத்து நின்றார்கள். அவ்வேளையில் அர்ச்சுனனானவன் அங்கராஜன்செய்த அமர்த் திறத்தைக் கண்டு அதிக கோபங்கொண்டு, "ஆ! கர்ண! எனது சாமர்த்தியமும், நீ செய்யுஞ் சண்டையும், நீ கற்றகல்வியும் இவ்வளவென் றறிந்துகொள்ளும் பொருட்டாகவே இதுவரையிலும் உன்னைப் பிராணனுடன் விட்டு வைத்தேன். இனி நான் தாமதிக்கமாட்டேன். பொறுமைக்கிடங்கொடுத்தால் அது வறுமைக்கிடமாகும். இவ்விடத்திலுள்ள பெரியவர்களும் உரியவர்களும் அறியத்தக்கதாக ஒரு கணையால் உன்னை வாட்டி, கீர்த்தியை நாட்டி, நானடையப் போகின்ற வெற்றியை நீயே நன்று யோசித்துப்பார்" என்று இரண்டு அர்த்தசந்திராஸ்திரங்களை விட்டு, அதிசீக்கிரத்திற் கர்னன் கைப்பிடித்தவில்லைக் கடுக்கென ஒடித்தான். அப்பொழுது கர்னன் கலீரென்று நகைத்து, மலைபிளந்ததுபோ லொடிந்த வில்லைவிட்டெறிந்து, கண்களை யுருட்டி விழித்து காரும் பாரும் கருக நோக்கி, தனது கரத்தில் வேறு விற் கொண்டு, பற்குணன் பேரிற் சிகைவிரிந்த செங்கதிர் வேலெடுத்துச் செலுத்தினன். இப்படி அங்கராஜன் எறிந்த வேலாயுதமானது அண்டங்களதிர வெளிப்பட்டு, சொர்னநிறமாகச் சோபித்து, பூரண சந்திரனைப் பிடிக்கவருகின்ற இராகுக்கிரகம்போற் செஞ்சிலைவிஜயனை நோக்கி வந்தது. அந்த வேலாயுதம் கந்தமாதனமுங் கடலுங்கலக்கித் திரிபுவனமுந் திடுக்கிடவந்த விதத்தைச் சர்ப்பக்கொடிதரித்தகௌரவ குல துரியோதனனும் ரதகஜதுரகபதாதியுடன் கலந்த பல காவலர்களுங்கண்டு, ஓ! ஓ!! அர்ச்சுனனுடைய சௌரியம் இப்போதல்லவோ தெரியப்போகின்றதென்று நிமையுட னிமைகொட்டாமற் கண் விழித்துப் பார்த்துக்கொண்டே யிருந்தார்கள்.

இப்படி எல்லோரும் நடுங்க எதிரேறிவந்த வேலாயுதத்தை அநுமக்கொடிக் கதிபனாகிய அர்ச்சுனன் பார்த்து வலிதிருந்தி மணி பொருந்தி மலரணிந்து விளங்குகின்ற வச்சிரக்கணையொன் றெடுத்து, அசைவற்ற வில்லிலமைத்து அபிமந்திரித்து ஆவேசங் கொண்டுந்தினன். அந்தக் கணையானது பந்துபோலெழுந்து, வந்துமேல் விழுந்து, அந்த வேலாயுதத்தை அரப்பொடியாக நூறி, அந்தப் பொடியை வணங்காமுடிமன்னன் முதலாகிய கௌரவ சேனைகளின் கண்களில் தூவியது. விழித்தகண் விழித்தபடி வேடிக்கை பார்த்திருந்த வேந்தர்களியாவருந் திகைத்து, இதற்கோ இந்தக் கொள்ளையென்று தலையிறக்கங் கொண்டார்கள். அதைக்கண்ட தேவர்கள் அகங்களித்தாடினார்கள். அங்க தேசராஜனாகிய கர்னன் அருமையாய்ப் பெற்றிருந்த அவ்வேலாயுதம் அர்ச்சுனன் கணையால் அழிபட்டுப்போனதைக் கண்டு சற்றுந் தளராமல் மனோதிடங்கொண்டு, வைரவில்லொன் றெடுத்து, அதைத் தீர்க்கமாய் வாங்கிச் சிறு நாணோசைகாட்டி, சிலைவிஜயனுக்கு எதிரில் வந்து அளவுபடாத அஸ்திரங்களை அமோகமாகச் செலுத்திப் போர்விளைத்தான். அச்சமயத்தில்

இந்திரன் மைந்தனுன தனுர்வேத சுந்தர தனஞ்செயன் மகாதேவனே வணங்கி, அர்ச்சனை புரிந்து, சிறந்த பொற்கட்டமைந்த அஸ்திரங் களைத் தெரிந்தெடுத்து விடுத்து, சங்கமுங் குறித்து. சொர்ணமயமாய் விளங்குகின்ற அக் கர்னனுடைய தேரையும்-கவின்பெற்ற கச்சைக் கொடியையும்-நான்கு புரவியையும்-அப் புரவிகளைப் பாங்குற விடுக் குஞ் சாரதியையும் பொடித்து, அவனுடற் காப்பாகிய மணிக் கவசத் தையுந் துணித்து விடுத்து. வீரபட்டத்தையுந் தூளாக்கி, அவனைத் தலை யிறக்கமாய்ப் பூமியினிற்கச் செய்தவனாய் மிக மகிழ்வுற்றுப் புகழ் பெற்ற அந் நரனானவன் சிற்சில வார்த்தைகள் சொல்லலுற்ருன்; "ஐயா கர்ண! இளமைதங்கிய ரிஷபம் போன்ற உன்னை நான் நெடு நாளாக அறிவேன். உன் யோக்கியம் எப்பேர்ப்பட்ட தென்னில், புத்தியில்லாத புரவலர் சேர்ந்த புன்சபையில் என்னை வெற்றி கொள் ளத்தக்க சுத்தவீரர்கள் ஒருவருமில்லை யென்றும் யுத்தத்தில் நான் அதிசமர்த்தனென்றும் விஸ்தாரம் பேசுவாய். நான் நிகரற்றவனென் பாய்! இப்படி புலம்பிக்கொண்டிருக்குஞ் சமயத்தில் உன் பொல்லாத வேளையால் யுத்தம் நேரிட்டால், அற்பபலம் பெற்ற அறிவில்லாரைப் போல் அயலிற் பதுங்குவாய்! ஒருவேளை அடுத்துப் போர் கொடுக்கத் துணிந்து ஆனமட்டும் பார்ப்பாய்! அடிபட்டு ஓட்ட மெடுப்பாய்! இக்குணம் உன்னுடன் கூடப் பிறந்திருக்க, வேறே வா வென்ருல் வருமா? ஐயா! எவர்க ளென்ன கேட்டாலும் இல்லை யென்னுமற் கொடுக்குந் தன்மை உன்னிடத்தி லுண்டென்றும், ஓயாமலீயுங் கொடையாளி யென்றும், இடையெழு வள்ளலி லொருவனென்றும் உன்னை எல்லோரும் போற்றிப் புகழ்கின்ருர்கள். ஆனல் யுத்தகளத் தில் வந்து ஒரு தெப்பை பட்டவுடனே அப்பாவென்று புறங்காட்டி யோடுகின்ற விஷயத்திலும் நீ மிகவும் கொடையாளிதான். நானும் உன்னை மதித்திருக்கின்றேன். வாய்மதம் பேசும் வள்ளலே! போர் முகத்திலே தேர்செலுத்திப் போர் புரிந்து புறமிடாதிருந்து பிராணனை விட்டு விடுவையாகில், இகத்திலுள்ள எல்லோரும் உன்னைப் புகழ் வார்கள். புரத்திலுள்ள தேவர்களும், எதிர்கொண்டு சென்று மகிழ் வார்கள். அரம்பா ஸ்திரீகளின் போகமுமுண்டாம். வீர்சுவர்க்க மடைவாய். இதற்குச் சம்மந்தமில்லாத பக்ஷத்தில் நீ யடுத்திருக்கின்ற அரவக்கொடியோன் கொண்டாடும்படி தப்பு வார்த்தைகளைக் குளறி, உன்-காலத்தைக்கழித்து, நமனுக்கு நாளை யொப்புவிப்பது உத்தமம். இவ்விரண்டு மின்றி நானுமொரு நாயக வீரனென்று அமர் செய்ய வந்து புகுந்து பிறைமுகப்பகழி சொரிந்து போராடுகின்ற வீர புருஷ ரெதிரில் தேரேறி வந்து எதிர்த்தது மதியீனம் ஓ திறனற்றவனே! மேலும், பாஞ்சாலராஜன் பண்ணிய யாகாக்கினியிற் பிறந்த திரௌ பதாதேவியை அத்தினபுரியிற் கூடிய கொற்றவர் சபையிலேற்றி வஸ்திரபங்கஞ்செய்த காலையில், பொறிபுலன் கலங்கி, கண்ணீர் தாரை தாரையாய்ச் சொரிந்து, மெய்சோர்ந்து, நடுநடுங்கி, மானந்தன்ன தென்று மனம் வாதிக்க நின்று, தன்னுற் புடவையைத் தடுத்துக் கொள்ள மாட்டாமல் வஸ்திரத்தைக் கைவிட்டு, தேகாபிமான நீங்கி

ஓ ஹரி வாசுதேவா! ஸ்ரீ கிருஷ்ணு! எனக்குரிய மானுபிமான மனைத்து முன்னுடையதென்று வாழ்த்தி வணங்கி மரம்போல் நின்ற பாஞ்சாலியை, துஷ்டராகிய நீங்கள் பார்த்து நகைத்துப் பரிகாச வார்த்தை பகர்ந்தீர்களல்லவா? ஈன ஜாதியாரும் இவ்விதச் செய்கைக் குடன்படுவார்களா? அந்த வேளையில் எங்கள் தமையனாராகிய தர்மராஜன், "அப்பா தம்பிமார்களே! இப்போ தொன்று முழுகிப் போகவில்லை. இதுவரையிலும் நாம் தருமந்தப்பி நடந்தோமென்னும் பேருமில்லை பழிச்சொற் பெருமற் சகித்திருங்கள்" என்று அடிக்கடி யெங்கட்கு அறிவுறுத்தி, "சுத்தசாந்தமே பத்தினியென்றும்-துய்ய பொறுமையே தனயன்" என்றும் தர்மஞ் சொல்லித் தடைப்படுத்தினர். அவரோதிய மூலமந்திரத்தால் நாங்கள் மகாநாகம் போலடங்கித் தடைபட்டுக் கன்மாநுபவப் பிரகாரங் காலங் கடத்தினேம். ஆ! ஹா! ஹா! வைதிக சாந்தஸ்தராகிய தருமராஜனது அருள் நிறைந்த கடைக்கண் கொஞ்சமசையு மாயினும், எங்களை நோக்காதிருக்கினும் போதுமே. இதுவரைக்குங் கர்னன் துரியோதனன் என்கிற பெயர்கள் இந்தக் காசினியோர் பேசிக்கொள்ளவு மிருக்குமோ? இவர்களுக்குச் செல்வமுஞ் செருக்குமோ? தீரமும் பெருக்குமோ? ஆ! பாவி! அப்படிக்கு நாங்கள் ஒடுங்கி யிருந்தும், அந்தச் சபையில் நீங்கள் நடந்த அநீதத்தால் பீமசேனன் வெகுண்டு மனம் நொந்து, 'துரியோதனன் முதலாகிய நூறுபெயரையும் என் கதையால் நானே நொறுக்குகிறேன்' என்று சபதம் பேசி, இவர்களை முடிக்கிற பரியந்தந் தாகத்திற்குத் தண்ணீர் குடிக்க மாட்டேனென்று கூறினன். அந்தச் சொல்லைக் கேட்ட சமஸ்தமானபேருந் தலை குலுக்கிச் சாய்த்தார்கள். அந்த வேளையில் நானுமெழுந்து, மின்னிய கணையால் உன்னுயிர் போக்குகிறேன் என்று உறுதிவார்த்தை உரைத்திருக்கின்றேனே, அது உனக்கு நன்றாய்த் தெரியவருமல்லவா? என்றைக்கிருந்தாலும் என் பாணத்திற்கு உன் தலை சொந்தமே; அஃதுனக்கிரவலே, இப்போதுமென்ன? ஒரு முழுக்கில் மண்ணெடுக்க வேண்டுமென்னும் அவசரமில்லை. நீ இப்போதிருக்கின்ற கதியை யோசித்துப் பார். உனக்கு என்னுடன் சண்டை செய்யத் தெரியுமானுல் தாராளமாய் வந்து போர் புரிந்து என்னைச் சயிக்கலாம், நான் உனக்கு இந்தப் பூமியை இடம் பண்ணி இருக்கின்றேன்; ஐயோ! பாவம்; நீ எங்கே பிறந்தாய்? எங்கே வளர்ந்தாய்? எங்கே இருந்தாய்? அங்ஙனே இருந்து காலங் கழிக்காமல் அரவக்கொடியோனைக் கெடுக்க இங்கே புகுந்தாய்! ஓ அங்க தேசாதிபனே! இதோ நான் தொடுக்கப் போகின்ற இந்து முகாஸ்திரங்களினுல் தப்பாமல் உன்னுடைய தலை தத்தி விழப் போகின்றது. அதை முன்னதாய் உனக்கறியச் செய்தேன். ஏதோ நீ வீரனுனல் இந்த யுத்தத்திற்குத் தப்பி ஓடிப்போ பார்ப்போம்" என்று உறுக்கி யுரைத்தான்.

இந்தப் பிரகாரம் அர்த்தநாரீச்வரராகிய சிவபெருமான் மழவிடைமேல் எழுந்தருளி வரும்படி தவயோகஞ் சாதித்த தனஞ்செய

ஞனவன் சாற்றிய கடுமொழிகளெல்லாங் கலந்து கர்னனுடைய காதில் புகுந்து கலங்கச் செய்தன. அதனுல் கர்னஞனவன் நெட்டுயிர்ப்பெறிந்து இரத்தினமிழைத்த கடக கங்கணமுந் தோளணியுந் தாங்கிய இருபுயத்தையும் பளபளவென்று தட்டி, இரண்டு கைகளையும் கூப்பிக் கொட்டி, கக்கட கக்கடவெனச் சிரித்து, காதுடன் சிரத்தை யசைத்து, திக்கென்றெரிய விழித்து பக்கத்திற்குப் புறம் பாய்ந் தோடினுன்.

இவ்வாருேடிய கர்னன் மீண்டு மனந்துணிந்து, மலேபோல் திணித்த சேமத்தேரேறி, வச்சிரக் கவசம் உச்சிதக் கவசம்-மணிக் கவசம்-மாமைக் கவசம் இவைகளைப் பூண்டு, விசாலமான மார்பில் முப்புரிநூலும் - முத்தாரமும்-கொத்துச் சரப்பளியும்-பொன்மாலையும்-பூமாலையும் பொலிவுற்று மின்னும்படியாகத் தரித்து. கடலின் அலை போல் துலங்கிய நாரிமாட்டிய வில்லைப்பிடித்து, விசையாயிழுத்து, தடதடவென்று தேரைச்செலுத்தி, சற்றுநேரத்திற்குமுன்னே சண்டை போட்டு இளைத்தோடி வந்த அத்தடத்திற்போய் நின்று, மீசை முனைக்கு மிகுமுறுக்கேற்றி, கண்டபேர் கலங்கக் கனைக்குங் கொண்டல் வாகனன் குமாரஞன கிரீடியை அண்டையில் கண்டு, "அடா அர்ச்சுனு! எங்கே ஓட வழிபார்க்கின்ருய்? ஏன் சண்டை போடச் சக்தியில்லாமல் போகின்ருய்? இதோ நான் வந்திருக்கின்றேன். இப்போ திளைத்துப் போய்விடாமல் என்னை வளைத்துப் போர்புரிய வாடா" என்று யாவருமறியத் தானேடிய நிலைமையை மறைக்கத் தனஞ்ஜெயனேடியவாறுபோல் குறித்து அவனை மடக்கி, "ஏண்டா என்னை இழிவாகப்பேசினை?" என்று தன்னுக்குக்குத் தழும்பேறும்படியாய்க் கோபங்கொண்டு கொடிதான சில சொற்களைக் கொட்டுகிருன்: "அடா பஞ்சவரில் இடைப்பட்ட பஞ்சையே! நீ என்னடா கொஞ்சமேனும் அஞ்சாமல் மெத்தவுங்கற்ற சுத்த வீரன்போல் கர்வங் கொண்டு மிஞ்சிப் பேசுகின்ருய்? தலையறுந்த ஆட்டமாய்த் தனக்குத் தானே சுழன்ருடுகின்ருய்! இவ்வூரில் உலகத்திலுள்ள பெரியோர்கள் - உரியோர்கள் - சிறியோர்கள் - வறியோர்கள் முதலாகிய இவர்கள் யாவரும் உன்னைப்பார்த்து, இவனும் ஒருவீரன் தானுவென்று ஏளனஞ் செய்து சிரிக்கும்படி ஏமாந்து சூதாடி, நாட்டை-நகரத்தை நலத்தை பலத்தை இன்னுமுள்ள எல்லாவற்றையும் பங்காளிகள் கையில் ஒப்புவித்துப்போட்டு, மானம்போனுலும் பிராணனிருந்தாற் போதுமென்று, இருளருக்குப் பிறப்பிடமும் இருப்பிடமுமாகிய வனத்திற் சென்று, கதியற்றிருந்து, கஞ்சிக்கலைந்து வயிறுகட்டி, வாளுளோட்டி, இப்படிக்கெல்லாங் காலங்கழிக்கக் கற்ருயன்றி, போர் முனைக்கண் நேர்புகுந்து வில்லாளரான வல்லாளருடன் விதண்டை விளைத்து வெற்றிபெறுகின்ற விதம் இன்னதென்றறிவாயோ? வீரப் பிரதாபம்பெற்ற விவேகிகளை உணர்வாயோ? நீயும் ஒரு வில் வீரன் என்று வீரபட்டங் கட்டிக்கொண்டு வில்லெடுத்துப் போர் கொடுக்க வந்தாயல்லவா? போதும், போதும். அடா அர்ச்சுனு! அஸ்தினு

புரத்து ராஜகோஷ்டியில் வட்டாடித்தோற்று மரியாதைகெட்டது மன்றி, உங்கள் நாட்டைப் பறித்துக்கொண்ட நரேந்திரனுனவன் உங்கள் பெண்சாதியையும் மயிரைப்பற்றி இழுத்துவந்து சபையி லேற்றி மானபங்கஞ் செய்வித்தானே, அந்தக் காலத்தில் இல்லாத முனையும் முடுக்கும் இந்தக் காலத்தில் எங்கேயடாயிருந்து எழுந்தன ! என்னைக்காணவே கிளைத்தோடி வந்தனவோ? அல்லது முளைத்தோடி வந்தனவோ? மானமும் வல்லமையு மாருதவன் நீ தானே! இது போகட்டும். கீழே கிடப்பவன் கீழேதானே கிடப்பானு என்பதுபோல், ஒருவேளை சூரத்துவம் இப்போதுதான் வந்தாலும், என்னைச் சயித்து இசைபெறப் போகின்றவன் நீ தானே? விஜயகாண்டீபம் எடுத்து வெற்றிவாகை பெறுதற்கு வந்தாயோ? ஆ! பைத்தியக்காரா! இராஜ ராஜேஸ்வரனுகிய துரியோதன மகாராஜன் சமுகத்திற் பேச்சு மூச்சு மில்லாமல் பதறிக்கிடந்த பாண்டவர்களில் பின்னிட்டருந்தநீ, என்னை மிரட்ட வந்தாயா வென்னடா? அடா பேதையே! இதோ இப்போது நான் விடுக்கப்போகின்ற இரவியாஸ்திரங்களால் உன்னுயிர் வெளிப் பட்டு, உடல் முறிபட்டு, உன்போலொத்தவர்கள் நிந்திக்கத் தலைப் பட்டு, நீ நெடுநாளாய்த் தேடிச் சேகரித்த கீர்த்தியுங் கெட்டு, நிஷ்டூர மாகிய வசையேற்பட்டு, பொன்னுடுபோய்ச் சேரும்படியாய் நாளிட்டு வைத்த நன்னுள் வந்து ஒத்துக்கொண்டது. ஐயோ ! இனியென்ன இருக்கின்றது? தாய் - தமையன் - தம்பியர்கள் - தாரம் - தனயர் இவர் முதலிய பேர்களை ஒழித்துவிட்டுத் தனியே சண்டைக்குத் தலை யிட்டு, இவ்விராடபுரத் தெல்லையிற் செத்துப்போக இருக்கின்ற உன் னைக் குற்றமான கொடுஞ்சொல் கூறுவானேன்? அப்படிப் பேசுவதி னுல் எனக்கென்ன லாபம்? ஓ பார்த்தனே! சற்று நேரத்திற்கு முன்னே என்னை வென்று ஓட்டிவிட்டதாய் இறுமாந்து, முன்னு லோசனை பின்னுலோசனை எண்ணுமல், குறைகுடந் தளும்புவது போலும்-நொய்யரிசி கொதி பொறுக்காத் தன்மைபோலும்-சின்னப் பேச்சுகளைக் கொட்டிப் போட்டாய். உன்னுடன் எதிர்த்த என் கை வில்லும் நானேறிய தேரும் ஒழித்து, நானும் போர் முனையிலே தெழித்துப் போனதை இன்னவிதமென்று அறியாமல், வெற்றி யடைந்தோமென்னும் உற்சாகங்கொண்டு உனக்கிசையான மட்டும் பேசினையாக்கும். அப்பா அர்ச்சுனு! யானையைச் சிங்கம் பங்கப் படுத்துவது இயற்கை. அப்படிப்பட்ட சிங்கம் அந்த யானைக்கு ஏதாவதொரு காரணமாக சற்றிடைந்து போமாகில், அந்த யானை சந்தோஷப்பட்டுச் சிங்கத்தைப் பழித்துப் பேசுவதுந் தீரமோ? இதுவு மொரு வீரமோ? நீ என்னவோ மெத்தத் தெரிந்தவனென்று பேசிக் கொள்கின்றுர்களே, உனக்கென்ன தெரியும்? வில்லானது எவ்வளவு துவண்டுவளைகிறதோ அவ்வளவும் வேகத்திற்கிடமென்று தோன்ற வில்லையோ? ஆட்டுக்கடா பின்னுக்கிடைவது இன்னெரு ஆட்டின் தலையோட்டுக் கேடென்றுணராயா? ஏதோ காரியத்தினுல் பின் னிட்ட சிங்கமானது மறுபடியம் பிரவேசித்து மத்தகத்தைப் பிளந்து உதிரமூளையை நிரம்பப் புசிக்குமென்று சற்றேனும் நீ நினைக்காமல்

போனதென்ன? நல்லது இப்போது நானுன்னைச் செய்யப்போகின்ற செய்கையினாலும், காரணகாரியங்களினாலும், என்னை இன்னானென்று அறியப்போகின்றாய். உன்னிடத்தில் விருதாவாகப் பேசுவதிற் பிரயோசனமொன்றுமில்லை. அடா பயனற்றவனே'' என்று உரத்துத் தொனியிட்டதட்டிக் கரத்திலிருக்கும் வில்லை நாட்டி, நாணிபூட்டி, வலுத்த கணைகளை வந்தித்து மாட்டி, வீரலக்ஷணங்காட்டி, மிகுந்த விசையுடன் தகுந்த சரங்களை விறுவிறு விறுவிறென்று பொழிந்தான்.

இப்படிக்குச் சூரியகுமாரனான கர்னன் தொடுத்த சரங்களினாலும் அவன் தூறிப் பேசிய வீரியச்சொற்களினாலும் அர்ச்சுனன் மனம் பதைத்து, அனலாஸ்திரம்-புனலாஸ்திரம்-மினலாஸ்திரம்-மேகாஸ்திர முதலியவைகளை அபிமந்திரித்துப் போக்கிப் பற்பலதேய மாந்தரும்-விற்பனமேயவேந்தரும்-வீரசேனைகளும் பிரண்டு மருண்டு இளைத்துப் போகும்படியாக்கி, கர்னன் பேரிலும் கனக்க மாட்டினான். இவ்வாறு கும்புகும்பாய் உந்திய அம்பினங்களைக் கர்னன்கண்டு, எதிரெதிர் தடுக்கும்படி கோடி அஸ்திரங்களேவிப் போராடி நின்று, மாருடிய தங்கள் சேனையுடனவனை வளைந்து நூருகிய வேந்தருடன் சேர்ந்து, தளைந்து, ஏருகிய கிரீடியைமொய்த்துக்கொண்டு ஈட்டி-கதை-வாள்-வேல்-சூலம் பிண்டி-பாலம்-தோமரம்-கத்தி-கட்டாரி - வாங்கு - சாங்கு-முசிண்டி-முனைசக்கரம் முதலாகிய சஸ்திரங்களை எடுத்தெடுத்தெறிந்து மூடுபனிபோல் சாடினான். அக் காலையில் தனிச் சிங்கமென்ன நின்ற தனஞ்ஜெயனானவன் செஞ்சுடர்க் கணைகளைத் தெரிந்து, சிரத்தையாயெடுத்துப் பரிந்து, பூசைகளநேகம் புரிந்து, காண்டீப நாரியில் வரிந்து கால் தலை தெரியாமற் சொரிந்தான்.

இந்தக் கணைகளெல்லாஞ் சேர்ந்து கர்னன் விட்ட சஸ்திரங்களையெல்லாந் தூளாக்கி, அவனைச் சூழ்ந்த கும்பலிற்போய் விழுந்து தும்பு பறக்கச் சுட்டெரித்தன. அப்போது காவலர் முதலாகிய யாவருங் கடல் முகட்டெழுந்த கதிரவனைக்கண்ட பனிபடும்பாடு பட்டழிந்தார்கள். விண்படரு மேகம்போலடர்ந்த நான்கு படைகளிலும் புண்படாமற் போனவர்களில்லை. இந்தப் பிரகாரம் கர்னனோடு வந்த சேனைகளெல்லாம் கரமுறிந்து, கால்தறிந்து, சிரமெரிந்து, சிலைநெறிந்து சிதைந்தன. இப்படியாகச் சேனைகளெல்லாஞ் சிதைந்த சேதத்தையும்-வதைத்த வேகத்தையும் ஊன்சேற்றின் வருக்கத்தையும், உதிரவாற்றின் பெருக்கத்தையும் பானுகுமாரனான கர்னன் பார்த்து, படபடத்துச் சினந்து, குருசேனையிற் கூடிய பலபடைமன்னரும் அன்பு கூர்ந்து இன்புறும்படியாய் ஆசாரியரான பரசுராமரைப் பணிந்து, அழல்வாளி கோடி அறல்வாளி கோடி அரிவாளி கோடி யெடுத்து ஆகாயமெல்லாம் மறையும்படி தொடுத்தான். அந்தக் கணைகளியாவுஞ் செந்தீ யிறைத்து ஜெகமுற்று நிறைந்து, விண்ணைக் கருக்கி மேகங்களைச் சுருக்கி வேலைநீரை வெதுப்பி வெந்நீராகக்குழப்பி, விண்டலமளாவி மேலிட்டுநின்ற மலையையிடித்து, பெருங்காற்றடித்துப்

பொழியுஞ் சோன மேகம்போற் பரவிச் சற்றேனும் தங்காமல் திரிவ தாயின.

இப்படி பரவித் திரியும் அஸ்திரங்களைப் போர்முக விஜய புருட சிலாக்யன் கண்டு, தனக்குக்கைவந்த இந்துமுகாஸ்திரம் ஐந்துஆய்ந் தெடுத்து, எதிரிவிட்ட பாண முழுமையுஞ் சற்று நேரத்தில் சிதற வடித்து வெற்றி வீரப் பிரதாபத்துடன் திரும்புக என்று விட்டான். அம் மாத்திரத்தில் அவ்வைந்து அஸ்திரங்களும் அவனுந்தியவண்ணம் வந்து, முந்திய கணைகளைப் பிளந்து, மேவலர் கண்டோடக் களைந்து நிற்குங் காலையில், முப்புவனமுங் கொண்டாடக் கொடுக்குங் கொடை யாலெங்கும் பெயர்பெற்று விளங்கும் கர்னனும் நற்றவனாகிய பார்த்த னும் ஒருவர்க்கொருவரெதிர்த்துப் போர்புரிந்தார்கள். இருவர் கணையும் பறிந்து, இருவர் ரதமுஞ்செறிந்து, இடைப்பட்ட சேனைகளும் முறிந்து, ஆகாயமும் பூமியும் நிறைந்தன. சூரியனொளியும் குறைந்தது. வேடிக்கை பார்த்திருந்த மூவருந்தேவரு மறைந்து இடம் பெயர்ந்தார் கள். வாயுதேவனும் உலகிலுலாவுதலொடுங்கி ஸ்தம்பித்துப்போனான்.

இப்படி இவர்களிருவரும் பிரயோகஞ் செய்த பாணவேகத்தினால் வெகுபேர் மாண்டார்கள். அடிக்கடி அபசகுனங்களும் விபரீதங்களு முண்டாய்த் திகிலும்விளைந்தது. யுத்தஞ்செய்கின்ற இருவர்கண்களுஞ் சுழன்று, இருவரெண்ணங்களுமழன்று, சிறப்பாய்வருந் தேருந்தேரும்- நெறிப்பாய் வருங் குதிரையுங் குதிரையும்-உறுப்பாய் வருங் கொடியுங் கொடியும்-ஒன்றோடொன்று தாக்கி அநர்த்த முண்டாக்கிக் கர்னன் கனைத்து, இடம் வலம்-வலம்-இடமாகத் தேரைத் திருப்பி, கர்ஜித்துப் பெரும்புலி யெனப் புகுந்து, "அடா அர்ச்சுனா! அக்ஞாத வாசஞ்செய் யப்போன ஒரு வருஷத்தில் இன்னும் ஒருநாட் கழிக்கவேண்டியிருக்க, அதற்குள் அவசரமாய் வெளிப்பட்ட உன்னால் நீங்களைந்துபேரும் இனி யனுபவிக்கப் போகின்ற வனவாசத் துன்பமானது உங்கள் தலை மேலேறிக்கொண்டது. சபையிற் சொல்லிய சத்தியவசனத்துறுதி அதுவல்லவா? அது தெரியாமல் என்னடா மெத்தத் தத்திச் சுற்றித் தலைகிறாய் விழுகின்றாய்? கற்ற வித்தையெல்லாங் காட்டுகின்றாய்? குற்றமற்றவர்களைப்போல் கொண்டாடி நடிக்கின்றாய்! இதோ நான் விடப்போகின்ற சிலிமுகங்களினால் இறந்து போவாயானால் 'கூண்டோடு போயிற்று குளிருங்காய்ச்சலும்' என்று கூறும் பழ மொழிப்படி மற்றவரை மன்னித்து விடப்படும். சில வேளை என் கணைக்குத் தப்புவாயானால், இன்னும் பதிமூன்று வருடம் வனவாசம் பண்ணவேண்டும். இவ்வாறு அந்த அக்ஞாதவாசந் தோறும் உங்களை யெப்படியாகிலுங் கண்டுபிடித்து, நீங்கள் காட்டுக்கு ஆட்சி யாய்ப் பொருந்த நாங்கள் நாட்டுக்கு அரசாட்சியா யிருந்து எங்கள் காலத்தை இன்பமாய்க் கழிப்போம். உங்கள் காலத்தை உத வாம லொழிப்போம். நீங்கள் பண்ணுகின்ற இந்திரஜாலத்தைப் பசையறக் கரைப்போம்" என்று சிந்தைவெம்பி, தீப்பொறிபம்பிய எட்டுக்கம்பிக்கணைகளை ஒன்றின்பின்னொன்றாகவுந்தி, நிரை நிரையாகக்

சிந்தி, கும்பல்கும்பலாகக் கொளுவி, குப்பையுங் கூளமுமாகக் குவித்து, அர்ச்சுனனையும் - அவன் தேரிற்பூட்டிய குதிரைகளையும் - அவைகளை யோட்டுஞ் சாரதியையும் அலமலங்கப்படுத்தினன்.

அந்தக் கர்னன் சிந்திய கணைகள் ஆகாசபாணம் போலிரைந்து, இராகுக்கிரகம்போல்விரைந்து, எங்கும் பரந்து எரிந்துவந்தன. அந்தக் கோரத்தைப் பார்த்தன் பார்த்து, கண்ணுமனமும் வேகக்கறுத்து, விண்ணுமேகமும் வெடிக்கச்செறுத்து, வின்னுணை விசைப்பட வீக்கி, வேகங்கொண்டொன்றுபட்டோடச் சரங்களைத்தாக்கிப் பானுகுமாரன் விட்ட பாணமெட்டும் பாதிவழியில் பங்கப்பட்டுப் போகப்படுத்தி, பரந்துநின்ற படைவீரர்களை யெல்லாம் பட்டப்பகல்போல் வெட்ட வெளியாக்கிக் கிடத்தி, "அடடா! இந்தக் கர்னனை எதிரியாகக் கொண்டு நாமிவனுக்கு நேராக நின்று போராடுவதும், இவன் நம்மை யடிப்பதும், நாம் இவனை யடிப்பதும், பெருமையா யிருக்கவில்லை. பார்க்கின்ற பேர்கள், இவனுஞ் சுத்தவீரன்தான். இவனால் அர்ச்சுனனும் அடிபட்டான், வெகுநேரம் சண்டைபோட்டான் என்று சொல்லுவதற்கு இடங் கொடுக்கிறது. ஆதலாலிது நமக்குத் தகாது. இவனெடெதிர்த்து வெகுநேரமாகின்றது" என்று நெற்றிவியர்த்து, புருவநெரித்து, சற்று நகைத்து, முற்றப்பகைத்து, உச்சிதமான வஜ்ராஸ்திரந் தொடுத்து, அவனுக்கு உடற்காப்பாகிய கவசத்தையும்-துவஜத்தையும்-உடையையும் பீறிக்கிழித்து, எங்கும் பெருந்துளை போக்கி, உடலைஉதிரமயமாக்கி, அந்தமட்டும் விட்டுவிடாமற் பின்னும் இரண்டு காளமேகக் கணையைத் தூக்கி, வீணாய்ப்பிதற்றும் வாய்மேல் தாக்கி, கச்சைக்கொடியைப் பிய்த்தெறிந் தொடித்து, கண்ணிரண்டிலும் புண்பட வடித்து, நவரத்தினமுடியைத் தவறக்கெடுத்து, வாகுவலயநலங்க விடுத்து அவனது பாரியவில்லைப் படாலென முறித்து, அவனைப்பார்க்கப்பார்க்கப் படீரென வெறித்து, அடங்காவயிற்றெரிச்சலுடன் அனற்கணை யனேக மிறைத்து அவன் இருதோளையுந் தாளையும் அனேக துவாரம்படத் துளைத்து, பகைத்தெதிர்த்த பரிவாரங்களையும் வளைத்து, பஞ்சுபோற் கொட்டிக் குமுக்கிக் குவித்து, இப்படி யெவரையும் குலைகுலைந்தோட வடித்து க்ஷமித்து எதிரொருவரில்லாமல் எங்குந் தனித்து ஊடாடி உலாவினன். அவனை வக்ஷஸ்தலத்தில் மகாலட்சுமியை வைத்தருளிய மாயனும் அவரது திரு நாபிக் கமலத் தெழுந்தருளிய அயனும் பக்ஷத்துடன் - மகிழ்ந்து பரிந்தார்கள். தேவர்களும் மேன்மேலாகப் புகழ்ந்து கொண்டாடினார்கள்.

இப்பால் அங்கதேசாதிபன் அர்ச்சுனனாலடிப்பட்டு, தனக்குஉயிர்த் துணையான வில்லும் ஒடிபட்டு, ஜீவரத்தினத்தை யிழந்த செந்தலை நாகம்போற் சிந்தை தளர்ந்து, பின்னுந் தைரியம்விடாமற் புந்தி கிளர்ந்து, வேறு வில்லொன்றினை யெடுத்துப் பிடித்து, மின்போற் பிரகாசிக்கின்ற நாரியிறுக்கி, திசாதிசைகளும் பிதிர, சந்திர சூரியரும் அதிர, மோனமுனிவரும், ஞானமுனிவரும், முப்பத்துமுக்கோடி தேவர்களும், முக்குண முத்தொழில் விளையாட்டுடைய தேவர்களும் பேரா

னந்தங் கொள்ளும்படியாய் கொஞ்சநேரத்திற் குள்ளாகச் சோணை மேகம் பொழியுங்கொள்கைபோற் கொடிய விஷநெருப்புள்ள காலாக் கினிக் கணைகளைக் கொண்ட மட்டுங் கட்டுக் கட்டாக மாட்டித் தொடுத்தான். இப்படிக் கர்னன் தொடுத்த கணைகளினால் அர்ச்சுன னுடைய தேரும் நான்கு குதிரைகளும் உத்தரகுமாரனான சாரதியும் கலக்கங் கொண்டார்கள். அவ்வேளையில் எங்கும் புகழப் பங்கு வைத் திருக்கின்ற பற்குணனானவன் அமுதாகர னிமிடகரித்திருக்கின்ற அர்த்தசந்திர பாணத்தை காண்டீபத்தில் பூட்டிக் கடுகடுத்தெறிந்து, கர்னனால் விடப்பட்ட காலாக்கினிக் கணைகளையெல்லாம் ஒன்றுபோன வழி ஒன்றுபோக வொட்டாமல் தடுத்துக் கிழித்து, ஒழித்துப் பழித்து, இடியாஸ்திரங்களை முடியப்பரப்பி, வடுவில்லாக் கர்னன் பிடித்திருந்த வில்வளைவை நிமிர்த்தி மளமளவென்று நடுவற முறித்தான். அப்போது துட்டரைக் கொட்டமடக்கும் அங்கதேச பட்டாபிஷேகத்தைத் துரி யோதனனாற் கட்டிக்கொண்ட கர்னராஜன் தன் கையிலிருந்த வட்ட வரிவில்லானது அர்ச்சுனனால் வெட்டுப்பட்டுப் போனபோதே அது கெட்டுதென்று விட்டெறிந்து, எட்டுத் திக்குங் கெட்டயரும்படியாய் ஆர்ப்பரித்து, வஜ்ரக்கட்டிட்ட மலைபோன்ற கதாயுதமெடுத்து விறுவி றெனச் சுழற்றி விட்டெறிந்தான். அதனால் குவலய நடுங்கிப் பின் வாங்க, அலைகடல் நிலைதவறி முன்னேங்க, திசையானை யெட்டுந் திடுக்கிட்டொதுங்க, சக்கரவாளகிரியுந் தலைதாழ்த்திப் பதுங்கலாயின. இப்படியாகக் கலக்கி எங்குமுலாவி யுழக்கிவருகின்ற கதாயுதக்கடுமை யைக் காண்டீபன் கண்டு, வயிரக்கணை யொன்று மந்திரித்தெடுத்து, மலையுடன் மலை மலைவுறுமாறுபோற் கதாயுதம் லருவதைக் காட்டிக் காதுபரியந்தம் இழுத்து மாட்டினான்.

அந்த வயிரக்கணையானது வெளிப்பட்ட மாத்திரத்தில் கர்னன் விசிய கதையை வழி மறித்துக்கொண்டு, அநந்தகோடி சக்கைசக் கையா யுடைத்து, வெற்றி பெறுதற்கு விரும்பி வந்த அவன் சேனை களின் பேரிலிறைத்து, அவர்களையுஞ் சின்னபின்ன மாக்கியது. அதனாற் சேனைகளும் வேந்தர்களும் சகிக்க மாட்டாமற் கவண்கல் லடியுண் டழிந்தவர்களைப்போற் கை-வாய்-சிரம்-உரம்-கால்-முதலிய உறுப்புகளெல்லாம் வருந்தி மடங்கியோடினார்கள். இவ்வாருகத் தன் படைமன்னர்களும் சேனைகளும் அவ்விடத்திற் பொருந்திப் போர் கொடுக்கமாட்டாமல் மாறுபட்டோடினதையும், தானெடுத் தெறிந்த தண்டாயுதமானது உமியுந் தவிடும்போல் முறிந்து பறிந்து சிதறிப் போனதையும், எதிரியாகிய இந்திரகுமாரனும் அவனேறியதேரும் அதிற்பூட்டிய குதிரையும் அதையோட்டுஞ் சாரதியும் அணுவத்தனை யேனும் பழுதுபடாமலிருந்த அதிசயத்தையுங் கர்னன் கண்டு, பெரு மூச்செறிந்து ஏக்கங்கொண்டு, ஏதொன்றுந் தோன்ருமல் இளைத்து நின்றுவிட்டான். அப்படியாக நின்ற அங்கராஜனைச் சங்கிராம விஜ யன் பார்த்துச் சிரித்து, மற்றவீரர்களையு மடித்துச் சத்துப்போக முடித்து, வெற்றிபெறப் படித்திருக்கின்ற பத்துக்கணைகளை ஆராய்ந்

தெடுத்து, பற்பல பூசையும் பண்ணி உபசாரத்துடன் வணங்கி அபிமந்திரித்துத்தெரித்தான். அந்தக்கணைகளானவை பந்தபாசம்போற் பற்றி எட்டுத் திக்கிலுஞ் சுற்றிக் கர்னன் ஊர்ந்துவந்த கனகமயமான ரதமும் அந்த ரதத்திற்பூட்டிய அதிவேகக்குதிரையும் அக்குதிரையின் மனமும் எஜமானனுடைய மனமு மறிந்து தக்கபடி தேர்செலுத்துஞ் சாரதியுஞ் ஒருக்ஷணத்திலழிய ஒழித்து, அக்கம்பக்கத்தில் நிற்கும் படைகளைக் கழித்து அண்டகடாகம்வரையிலுஞ் செழித்து உலாவிக் கொண்டிருந்தன. அப்படியிராநின்ற பாணங்களையும் கலைமதிமுகங் கடுகடுத்துக் கருத்து நிற்கின்ற காண்டீபனையுங் கர்னன் கண்டு, கனல்விசக்காய்ந்து தேர்விட்டிறங்கிப் பாய்ந்து, உதடுமடித்து, முகஞ்சுளித்து, கைவேல் - கதிர்வேல் - வடிவேல் - நெடுவேல் முதலிய பல வேலாயுதங்களைப் போக்கி, பூமியில் நின்று செவ்வையாய் யுத்தஞ் செய்தான். இப்படி பூபதனைப் நான்குபுறங்களிலுந் திரும்பி வளைந்து விளையாடி வருகின்ற செங்கதிர்ச் சேயனைச் சிலைவிஜயன் பார்த்து, இனியிவனை இவ்விடத்திலிருக்கச் செய்யலாகா தென்றெண்ணி, விருதுகட்டிய அம்பொன்றெடுத்து பிரம்மாஸ்திர மந்திரத்தை யுச்சரித்து, ஆசாரிய வணக்கஞ் செய்து அரை க்ஷணத்திலே தூண்டினான்.

அந்தப் பிரம்மாஸ்திரம் புறப்பட்டுக் கர்னனெறிந்த வேலாயுதங்களை யெல்லாம் அதாகதஞ்செய்து, அந்தக் கர்னனுடைய மார்புந் தோளும் புண்பட்டுத் துளைபட்டு மயிர்க்கால்தோறுங் கண்விட்டு இரத்தப் பிரவாகமாகத் தக்கதாய் வருத்தப்படுத்தியது. அந்தக் கர்னனுடைய தேகமுழுமையுஞ் சரங்கள் பாய்ந்து, அம்புப்பயிர் நட்ட செம்பொன் மலைபோற் பாய்ந்து, அனேக துன்பங்களால் வருந்திக் கால் சாய்ந்து, எதிர்த்துப் போரிடுவதற்கு வேறுவகையில்லாம லோய்ந்து, படுகுழியில் வீழ்ந்து பரதவிக்கும் யானைபோற் பரதவித்திருந்தான். அப்படியிருந்த கர்னராஜனைச் சுவேதவாகனன் கண்டு, வேகத்தக்க கோபங்கொண்டு, இரக்கமென்பது எள்ளளவுமில்லாமல் மேலுமேலு மகிமை பெற்ற சரங்களை வாரிவாரிச் சொரிந்தான். இப்படி அர்ச்சுனனவன் அஸ்தலாவகத்தால் அமோகமாகப் பொழிந்த அஸ்திரங்கள் யாவுங் காடாக்கினிபோலெரிந்து, வாடாமல்லி யெனவந்து விழுந்து, கர்னனது நெற்றியிற்கட்டியிருந்த வீரபட்டத்தைத் துட்டத்தனையாய்ப் பொடித்து, அந்தப் பட்டங்கட்டிய நெற்றியிற் பொட்டிட்டதுபோல் முத்திரை யடித்து, அவனுடலெங்கும் ஊசி நுழைவதற் கிடமில்லாம லுருவி, அவனுயிரோடும் ஊடாடிப் போராடலை மருவின. அப்போது கர்னனனவன் யாதொன்றும் யோசிப்பதற் கிடமில்லாமல், பெருமை பெறக் கருதிய சகலவித சாமர்த்தியங்களையும் விட்டு, சண்டை முனையுங் கெட்டு, தானும் புறமுதுகிட்டோடினான். அதுகாலையில் அர்ச்சுனன் தேரிலிருந்த உத்தரகுமாரன் பளபளவென்று இருகர மலரையுங் கொட்டிக் கலகலவென்று கன நகையதுகொண்டு திட்டி, ஓ! ஓ!! ஓ!!! என்றிரைந்து விரைந்து தேர்விட்டான். இங்ஙனம் அஞ்ஞான வஞ்சகத்தில் அனுதினமுங் கருத்தைப் பொருத்திய துரியோதனனும் அவன்

தம்பிமார்களும், குற்றத்திற்கு மெத்தத் திடஞ்சொல்லித் தேற்றுகின்ற சகுனி மாமனும் மற்ற வித்வசிரேஷ்ட மேலோர்களும் அர்ச்சுனன் செய்த யுத்தமுகத்திற் புறந்தந்தோடுகின்ற கர்னனைக்கண்டு, "ஐயை யோ! இக்காலத்தி லிவ்வொருவனுக்கே நாமுடைவதானால் ஐவரு மொன்றுசேரில் இனியெக்காலத்திலும் நமக்கு வெற்றியில்லை; இப்போ திருக்கின்ற அரசாட்சியும் போய்விடும்"என்று ஏங்கித்தளர்ந்தார்கள். சூரியனுக்கொப்பாகிய ஆரியர்களான பீஷ்மாசாரியர் கிருபாச்சாரியர் துரோணாச்சாரியர் முதலிய பெரியோர்களெல்லோரும் முகமலர்ந்து, அகமகிழ்ந்து, புயம்பூரித்து, தேகம்பாரித்து, "ஜெயமுஞ் செல்வமுந் தனஞ்செயனே பெறுவான். இவனே தீரனென்பதற்குத் தடை யேதா கிலு முண்டோ?" என்று வாழ்த்தினார்கள்.

### அர்ச்சுனனுக் கிளைத்துப் புறங்காட்டிப் போகும் கர்னனை அசுவத்தாமன் கண்டேசுதல்

அந்த வேளையில் அதிரதத் தலைவர்களில் யாருமெனக் கிணையாக மாட்டார்களென்று ஆவி பறியப் பறியப் பலகாலும் கூறிக் கூறித் தேறிய அங்கதேசாதிபன் சங்கடப்பட்டு நொந்து, பின்கால் பிடரியில் அடிபட ஓடுகின்றதை அழகிய தேர்மேல் அமர்ந்திருந்த அசுவத் தாமன்கண்டு வெகுண்டு, மகா அவசரத்தோடுந் தன்தேரை முடுக்கிச் சென்று, இந்தக் காலத்திலேதான் அந்தக் கொடையாளியைத் தடுத் துப் பேசவேண்டுமென்று போனான். இவன் தேரோடி வருகின்ற பேரோசையை, கலவரங் கொண்டோடி வருகின்ற கர்னன் கேட்டு, திரும்பிப் பார்க்கச் சாவகாசமுந் திடதைரிய தீரமுமில்லாதவனாய்அர்ச் சுனன் துரத்தி அடிக்க வருகின்றானே என்பதாய் மேன்மேலும் திகி லடைந்து, பின்னு முடுக்காய்ப் பதறிப் பூமிமேலிடறிப் பொத்துப் பொத்தென்று அடிக்கடி தடுமாறி விழுந்தோடினான். இவ்வாறிளைத் துப் பிராணபயங் கொண்டோடுகின்ற கர்னனை அதிவேகங்கொண்டு வந்த அசுவத்தான் வளைத்து "ஓ படையாளியான பாரமார்த்திபனே! நான் அசுவத்தாமன். கண் பொறிகலங்கித் தலைகவிழ்ந்தோடும் நீ என்னை அர்ச்சுனனென்று மதித்து ஆத்திரப்பட்டு ஓடவேண்டாம் நில்லு, நில்லு, ஐயோ! பாவம் சற்றே நிதானித்துப்பாரு. இங்கே வா கொஞ்சம் இளைப்பாறு, ஓ! ஓ! ஓ! இதென்ன கோலம்! ஐயோ! பொல்லாத காலம்! ஏனிவ்வாறோடுகின்றாய்? மண்களில் புரண் டொதுங்கி, கண்களில் சலங்கலங்கி, மார்பும் தோளும் காலும் கையும் நடுங்க ஓடுவானேன்? எதிரிகள் வாயெடுக்க வொட்டாமல் வாயாடு கின்ற உமது வசனம் ஒடுங்கிப் போவானேன்? ஓ காரியவானே! கார ணஞ் சொல்லு. நாமெல்லோரும் கூடி மாடு மடக்கிய அந்தவிடத் தில் சற்றுநேரத்திற்கு முன்னே இதோ ஓடிவருவது ஒரு தேரென்றும், அதன்மேல் வருகின்றவன் ஒண்டிக்காரனென்றும், அவன் கையில் பிடித்திருப்பது ஒரு வில்லென்றும், அவனைச் சயிப்பதற்கு நம்மில் எவ ராலு மாகாதென்றும் நாங்கள் சொல்லியபோது அவன் எனக்கெழ் மாத்திரமென்று ஆணவமாய்ப்பேசி, நீங்கள் யாவரும் எனக்குப் பின்

னின்று வேடிக்கை பாருங்களென்றேசி, வந்திப்பாகிய பல படைக ளுடன் சென்று, முந்திப்போய் நின்று முனைந்து போர் புரியப் போனாயே. அப்பா கர்னா! நீ கையில் பிடித்திருந்த வில்லெங்கே? நீ சயிப்பேனென்று சொன்ன சொல்லெங்கே? அங்கதேசராஜ பட்டாபி ஷேகம் பெற்ற முடியெங்கே? ஆகாயமளவில் பறக்கும் கச்சைக்கொடி எங்கே? கூசாமலோடும் குதிரை எங்கே? குணமறிந் தோட்டுஞ் சாரதி எங்கே? தந்திரசேனை எங்கே? மந்திர உச்சரிப்பு எங்கே? வீரபட்டம் எங்கே? விருதின் திட்டம் எங்கே? மணிக்கவசம் எங்கே? துணிக்கவசம் எங்கே? எனக்குத் தயவுசெய்து சற்றே சொல்லப்பா! ஓ வெல்லப்பாகினும் இனிப்பாய்ச் சொல்லும் சொற்களில் சிறிதும் சோர்வில்லாத வில் சாதுரியனே! உனக்குத் துணைபட்டுத் துள்ளிக் குதித்த வேந்தன் தம்பியாகிய துர்ச்சாதனன் எங்கே? அவன் மச் சான் எங்கே? அன்புள்ள மாமன் எங்கே? ஆ! பச்சாதாபம் பார்க்காத பதிதனே! மாறுபட்டு வரும் பகையாளிகளைப் பேறுபெற்ற ஆயுதங் களினால் கூறுகூருக்கித் தாறுமாருக வேறுலகாளவிட்டு வலம்புரி மாலையணிந்த துரியோதன மகாராஜனை இந்த நிலம்புரக்கப் பட்டாபி ஷேகம் பண்ணிப் பெரும் செல்வத்தை அமைக்கிறேனென்றும், அர்ச் சுனனுக்கு வைரி நானொருவன் தானென்றும் பெருமை பாராட்டி அரு மையாகச் சொல்லிய நீ அந்த அர்ச்சுனனாலடிபட்டு பெருகி வழிகின்ற இரத்த வெள்ளத்தில் நீந்தி, விசனநீர் மாந்தி, இருவகை யேந்தி நிலத் தில் வீழ்ந்து ஆழ்ந்தி நிணச்சேற்றிலழுந்தி நெருங்கால் புதைத்து ஓட வேண்டியதென்ன? ஓ உத்தமனே! எங்களைப் போன்றவர்கள், ஒருவனுடைய அன்னத்தைப் புசித்து, யுத்த நேரிட்ட காலத்தில் எஜ மானை யிகழ்ந்து எதிரியைப் புகழ்ந்து, நன்றிகுன்றி மானங்கெட்டு நாணம்விட்டு நடக்கத்தக்கவர்கள். இதல்லாமலும் தீரத்துடன் சயிக் கப்போகின்ற உன்னைப்போன்ற வீரர்களுக்குப் பக்கத்திலிருந்து நச்சு நச்சென்று லச்சைகெடப் பேசி, சயிப்பவர்களையுந் தடுத்து, அவர்க ளுக்குள்ள திடதைரியத்தையும் கெடுத்து நாங்களும் குப்புறப்படுத்து, எதிரிட்ட பகையை வெல்லாமலும் வெல்லுகின்ற பேர்களுக்கு உற்சா கம் சொல்லாமலும் காரியத்தாழ்ச்சி செய்கின்றவர்கள். ஆதலாற்றான் எங்களை ஊரைநோக்கிப் போகச் சொன்னாய். அப்படிப்போக மனதில் லாதவர்கள், அர்ச்சுனனை யடித்து வெற்றிபெறப் போகின்ற என்னு டைய யுத்த வல்லபத்தைப் படித்து, எனக்குப் பின்னாலே நின்று கண்டு சந்தோஷப்படுங்களென்று பேசினாய். போகட்டும், எங்கள் கதிதான் அப்படிக்கானாலும், வாய்ப்பகட்டுரைத்த உன் கதியை யோசிக்குமிடத் தில் சாதுரியவான்களாகிய பாண்டவர்களுக்குச் சந்தோஷங் கொடுத்து உனக்கு அன்னமிட்டு ரக்ஷித்த துரியோதன ராஜனுக்குத் துன்ப மூட் டையைக் கொடுத்து, நீ வாயால் பேசியிருந்த வரிசையற்ற புகழையுங் கெடுத்து, நன்றியறியாத வென்றி வீரனானாயே! ஆ! ஆ! வீர சுந் தரனே! ஆயினும் இப்போது ஓடுகின்ற நீ ஒருவேளை திரும்பி வருவா யானால் உன்னைக் காப்பாற்றிய துரியோதனனுக்கு என்ன சொல்லு வாய்? பெரியோர் முதலிய பிராமணருக்கு க்ஷாத்திர மில்லையென்று

வைதிகர் சாந்த முடையவர்களென்றும், க்ஷாத்திரமுள்ள க்ஷத்திரிய குலாதிபன் நான் தானென்று மார்புதட்டிப் பேசினுயே; ஓ தராதிபனே! எக்காரியங்களையு மெண்ணித் துணியாமல் விண் பேச்சுப் பேசுகின்ற வீணனே! இத் தருணத்திலேனும் நானிசைப்பதைக் கேட்பாயாக:—

''இவ்வுலகத்தில் மௌடீகர்களா யிருக்கின்றவர்கள் இருந்த இடம் விட்டெழுந்திராமல் வாய்கொண்டமட்டும் வசனிப்பார்கள்; சொல்லிய வண்ணம் நடத்தமாட்டார்கள். விவேகிகளாயினோர் பல முகத்திலுந் திரிந்தாராய்ந்து, தங்களுக்குச் சகல காரியங்களுங் கைகூடி யிருந்தும் வாயடங்கி, தன் பலமும் காலபலமு மறிந்து, சொல்லிய வண்ணம் நடத்துவார்கள். இப்படிக்கெல்லா மில்லாவிடத்து அப்படி நடத்தலா மென்பது சிருஷ்டி 'கர்த்தாவாகிய திசைமுகனுக்கு மாகாது. நீயோ கெடிஸ்தலாதிபனுய் கௌரவகுல முதல்வனுய்த் தனமும்-தான்னிய மும்-சம்பத்து-பசு-பத்தினி-புத்திரர்-மித்திரர் இவை முதலிய வெல் லாப் பாக்கியமும் படைத்து, பொக்கிஷப் பொருளைப் பூரியாகக் கொடுத்து, புகழுடம் பெடுத்துப் பூரித்திருக்கும் புஜபல வலிமையால் முன்பின் யோசிக்காமல் வம்புப் பேச்சுகளைப் பேசிவிட்டாய். உன்பேச் சின்படி முடிப்பதற்கு உனக்கு அசாத்தியமாயது. இன்னும், ஒரு சிங் கத்தைப் பதினுயிரம் யானைகள் வளைத்துக் கொண்டாலும், தங்கத் தைக் குப்பைமேடு மறைத்துக் கொண்டாலும், சிங்கத்திற்குந் தங்கத் திற்கும் பங்கம் வருமென்று உன் சிந்தையிலெண்ணுதே'' என்று பல விதமா யெடுத்துப் படித்துத் தவடையிலு மிடித்ததுபோற் பேசினுர்.

அப்போது சூராதிசூரனும் அஸ்திரசாஸ்திர சாமர்த்தியனுமாகிய கர்னன் ஏதொன்றும் பேசாமல், எதிர்த்து வாயாடாமல் தலையெடுத்துப் பாராமல், சமயத்திற்குத் தக்கபடி சொல்லாமல் அர்ச்சுனனுல் மடிந்த பிணமலைகளுக்குப் பின்னு லொதுங்கி, ஆமைபோற் பதுங்கி அகதி போல் நின்றுன். அவன் கதி அப்படியிருக்க வாசத்தேன் மருவிக் குலவிய வனசத்தார் மாலை நிலவிய, வீரத்தோள் பூரித்திலகிய வில் வேதியர் மகனென மருவிய அசுவத்தாமா வென்னும் அதிரத முதல் வன் பின்னிட்டோடும் விதவை முகத்தைப் பேணவுமாகாது. விழிக்கவு மாகாது, விழித்து வசனிப்பது மிகு பாவம் என்று அவ்விடம் விட்டு நீங்கித் தனது தந்தை முதலாகிய பெரியோர்களிருக்குஞ் சார்பிற் போய்ச் சேர்ந்தான். இப்பால் அர்ச்சுனனிடத்தில் நடந்த அதிசயத் தைச் சொல்லுகிறேன் கேளும்:—

### அர்ச்சுனன் தன்னெதிர்நிற்கும் படைக்கணுள்ள சத்துருமித்துருக்களை உத்தரனுக்குணர்த்தி யறிவுறுத்தல்

ஓ ஜனமேஜய மகாராஜனே! பிற்பாடு விஜயவீர பராக்கிரமத்திற் சிறந்த கிரீடியானவன் பொற்சிகரங்கூடிய அநுமக்கொடியிலகுந் தேர்மீதிருந்து கர்னன் ஓடும்போது கைகொட்டி நகைத்த உத்தர குமாரனை ஆ! ஆ! வென்று அதட்டினுன். அந்த அதட்டலைக் கேட்ட உத்தரகுமாரன் கர்ப்பங்கலங்கி, சர்ப்பம்போல் வளைந்து ஓருவாறுவாடி,

தாயூட்டிய செவ்வெண்ணெயுங் கழன்று, உறங்கி யுழன்று, ஒடுங்கி யழன்றுதேரிற்சாய்ந்தான். இவ்வாறிளைத்த விராடபுத்திரனைப் பாண்டு புத்திரன் பார்த்துப் பச்சாதாபங் கொண்டு மெத்தப் பயந்துவிட்டா னென்று தன்னுடைய சித்தத்தில் தேர்ந்து மகிழ்ந்த முகமும் குளிர்ந்த பார்வையும் கனிந்த சொல்லும் கசிந்த அன்புள்ளவனாய்ச் சொல்லு கின்றான் :—

"ஓ மச்சகுலத்திற்கணியாகிய மணியே! இச்செகத்திற் பிரகாசிக் கின்ற இரவிமைந்தனான கர்னன் என்னுடனெதிர்த்து அதிர்ந்து போர் புரிந்து வெறுங்கை வீணன்போற் பின்னிட்டோடிப் போனான். அவ னோடிவிட்டானென்று நாம் அலட்சியமா யிருப்பதாகாது. இராஜவீரர் கள் யுத்தத்தில் இளைத்து ஓட்டமெடுப்பது முண்டு. மறுபடியும் கிளைத்துவந்து போர்தொடுப்பதுமுண்டு. இவையன்றி அங்கர்கோனை அடித்துத் துரத்தியவாறுபோல் பெருங்காடென்னக் கலந்து நமக்கு நேரில் அடர்ந்து பெருமுழக்கமிட்டிருக்கின்ற சேனைகளுடன் அதிரதர் முதலாகிய வேந்தர்களையும் வென்று ஜெயம்பெற வேண்டி யிருப்பத னால், இவ்விடத்தில் கூடியபேர்கள் இன்னாரின்னாரென்று நீ தெரிந்து கொள்ளும்படி சொல்லுகின்றேன் கேள் :—

"ஓ மாலையணிந்த தோள்வாட்படை மைந்தனே! இதோ நமக்கு எதிரிற் பாரிய தேரினில் வீற்றிருக்கும் வீரியர் நெய்தநிலக் கருப் பொருளாகிய பனையைக் கொடியிலெழுதிப் படைத்திருக்கின்றவர், தெய்வத்தன்மை கொண்டுபெற்ற அஷ்டவசுக்களில் கனிஷ்டரானவர், இவ்வுலக முதலாகிய எவ்வுலகுங் கொண்டாடாநின்ற எங்கள் குலத் தலைவர். இவரது தந்தையாகிய சந்தனு மகாரராஜனுக்குப் பரிமளகந்தி யாருடைய போகநலம் கிடைக்கும்படியாய் விவாகம் பண்ணி வைத் தார். அந்த விவாக முன்னிலையில் இவர் அனுபவிக்க வேண்டிய சகல வைபவ சம்பிரமங்களையுஞ் சிறு வயதில் கைவிட்டு, இராஜயோக மான விரதவழியில் நின்று, பீஷ்மரென்று பேர்கொண்டு மெய்வழி கண்ட மேன்மையோர்களால் மேன்மை பெற்றவர். இவர் எந்தக் காலத்தில் இறக்கவேண்டுமென்று எண்ணுகிறாரோ அந்தக் காலத்தில் எமதர்மராஜன் இவரிடத்திற்கு வரவேண்டு மல்லது, மற்ற ஆத்ம கோடிகள்போற் கருதி வரப்படாது. இப்பேர்ப்பட்ட மேலான வரத் தையும் ஆசீர்வசனத்தையுஞ் சந்தனு மகாராஜனால் அளிக்கப் பெற்ற வர். இவ்வுலகத்தில் இவரெத்தனை நாளைக்கிருந்தாலு மிருக்கலாம். இவர்தானையா எங்கள் மூதாதையாகிய பாட்டன்.

ஓ சத்துவகுண பக்திநுட்பத்தாற்கற்றறிவுடைய உத்தரகுமாரனே! இந்தப் பீஷ்மருக்கு அண்டையில் நான்கு வேதத்தையும் பொறித்த நான்மறைக்கொடி தரித்த சக்கரத் தேர்மே லமர்ந்திருக்குஞ் சுவாமி யவர்கள், தேன்சாறுபாயுமாஞ்சோலைவீறு பாஞ்சாலதேசத்தையாளுந் துருபதராஜன் கொண்ட கர்வத்தைப் பங்கப்படுத்தினவர். அறுபத்து நான்கு கலைஞானங்களும் ஐயந்திரிபில்லாமல் விருத்திப் பொரு

ளுடன் ஆராய்ந் துணர்ந்தவர். தேவாஸ்திரங்கள் முற்றும் ஸ்திரம் பெறத் தேர்ந்தவர். சம்பிரதாயத் தனுர்வேத மோர்ந்தவர். திரவியசம் பன்னர்களாகிய பக்குவர்களுக்குச் சிலைத்திறந் தெரிவிக்கும் விற்குரு வானவர். முடிதாங்கிய தேவர்களும் படியோங்கிய முனிச்வரர்களும் பணியும்படியான பதம் பெற்றவர். உத்தம க்ஷத்திரிய குலத்தி னுற் றவர்போல வெற்றிவாகை படைத்த வீரப்பிரதாபர். மதாணி முதலிய ஆபரணங்களை யணிந்தவர். இவர்தானையா எங்களுக்கு விற்குருவா கிய துரோணாச்சாரியர்.

"ஓ மச்சநாட்டினர்க் குச்சிதப்பேறே! சங்கிராம விற்குருவான துரோணாச்சாரியருக்குங் கங்கா புத்திரனான பீஷ்மாச்சாரியருக்கும் நடுவில் வெள்ளைக்கொடியும்-பொன்னிறமுடியும்-வீரபட்டமும் வேகப் புரவியும் பூட்டிய மேகமளாவிய வெண்கலத்தேரோட்டி யூக்கத் துடன் வந்திருக்குந் தீர்க்கமும், அமுதங்குலாவிய மதிமுகமும் குமுத மனைய சிறுநகையும், குலவிய குறுவியர்வும், பெருமிதவருள் விழியும், பற்பலமணியாற் செய்த ஆபரண அலங்காரமும், பார்த்தவர்களைப் பாதுகாக்கும் பிரம்மதேஜசும், பணைந்த தோளும், வீரகண்டை தரித்த தாளும், சௌந்தரியகாந்தியும், தவமும், ஜெயமும், வரமும், உரமும் உடையவர், தனுர்வேதத்திலும் மனம் பொறுத்தலிலும்- சமர்வேதத்தி லும்-சதுர்வேதத்திலும் வேந்தர். இவர்தானையா இந்தக் குவலய மெல்லாங் கொண்டாடுங் குணநிதியாகிய கிருபாச்சாரியர்.

"ஓ உத்தமகுணத்திற் சிறந்த உத்தரகுமாரனே! இந்தக் கிருபா சாரியருக் கண்டையில் நிற்கின்ற அழகிய தேராளியானவர் பஞ்சபா ணந்தரித்த மன்மதனென்று சிலர்பேச, வேலாயுதந்தரித்த பாலசுப்பிர மணியரென்று பலர் சொல்ல, சோடசகலை நிறைந்த சந்திரனென்று சிலர் துதிக்க, வச்சிராயுதந் தாங்கிய இந்திரனெனப் பலர் மதிக்க, மூதண்ட நடுங்குங் கோதண்டராமனென்று சிற்சிலர் கொண்டாட, பிதிர்வாக்கிய பரிபாலனஞ் செய்த பரசுராமனென்று பற்பலர்வந்திக்க, இப்படிக் கெப்புவனமுங் கொண்டாட ஒப்புவமையில்லாத தோற்றம் படைத்த புண்ணியன்; முப்புரமெரித்த எப்பொருட்கு மிறையான முக் கண்மூர்த்தியின் திருவருட் பயன்பெற்ற காளை; ஒரு க்ஷணத்தில் திரி புவனத்தையு மழிக்கவல்ல குழகக் கன்று போன்ற அசுவத்தாமா எங்கள் குருவான துரோணாசாரியருடைய குமாரன். இவர்தானையா எனக்குரிய அரிய பால்யமித்திரர்.

"ஓ! சாதுசங்க சற்சனர்மேய நேயனே! இப்போது நான் சொல்லிவந்த வித்தக பீஷ்மரும், இரண்டாசிரியரும் அசுவத்தா மாவும் என்னிடத்தில் அருமை பாராட்டி அன்பு வைத்திருக்கின் றவர்கள். இவர்களுடைய குற்றமற்ற வில்திறத்தைக்குறிக்க விண்ண வராலு முடியாது. அப்படிக்கிருந்தபோதிலும், அவர்களுடன் போர் புரியவேண்டிய அவசியந் தற்காலத்திவில்லை. இன்னும் நாம் வெல்ல வேண்டிய வீரர்கள் வேறிருக்கின்றார்கள். அவர்களை முன்பின்

பாராமல் முதலறக்கொன்று வெற்றிபெறுவது நமக்கு மேலாகிய கீர்த்தியாம். இன்று பூர்த்தியாகப் போர் புரிந்து புகழுறச் செய்வோமானுல், அது நமக்கு நல்ல திடத்தையும்-திறத்தையும்-அறத்தையும்-மகிமையையும் விளைவிக்காமற் போகாது. ஆகையால், நாம் வெல்ல வேண்டிய மேவலரைச் சொல்லுகிறேன் கேள் :—

"ஓ உலகமதிக்கச் சிறப்புற்றோங்கிய உத்தமகுலப் பேறே! இதோ உனக்கு நேராக நீலக்கொடியாடை பறக்குந் தேரிலிருப்பவன் வணங்காமுடி மன்னனை மயக்கி, அவனது மதியைக் கலக்கித் தன் வசமாக இணக்கி, இந்திரப் பிரஸ்தத்திலிருந்த எம்மை வரவழைத்து வஞ்சகச் சூதாடச்செய்த கொடும்பாவி! அப்போது அத்துரியோதனனுகிய தன் மருமகனைக் கொண்டு மகாமன்னர்களும் மாநகர ஜனங்களும் ஒன்றுபடக் கூடியிருந்த மகாசபையில் எங்களைக் கண்கலங்கும்படியாய்ச் செய்த பாதகன்! காந்தார தேச வீரன்! சவுபல ராஜகுமாரன்! எங்கள் சமஸ்தானத்தைக் கெடுக்கப் புகுந்த கறுப்பன். கபடமென்பனவற்றை யெல்லா மடைத்து வைத்த குடுக்கை! கடைவால் விஷங் கொண்ட செந்தேள். ஒரு காலத்தும் நம்பப்படாத உரகம்! இவன்தானையா சகுனி யென்பவன்.

"ஓ சுதக்ஷணுதேவி தனயனே! அந்தச் சகுனி மாமனுக்குச் சமீபத்திற் குச்சிதமில்லாச் செச்சைக்கொடியோடு அச்சடித்ததுபோ லுச்சித விற்பிடித்துப் பொற்சிகரத் தேரேறி விசித்திரப்பணி பூண்டிருப்பவன் நச்சரவக் கொடியோனுக்குக் கனிட்டன். இளவரசுப் பட்டங் கட்டிக் கொண்ட அனிட்டன். சர்வதந்திர உபாய சகலசுதந்தரநேயன். பழி பாவத்திற்கஞ்சாத துச்சாதனன்; இவன்தானையா பாஞ்சாலி மயிரைப் பற்றி யிழுத்துக் கண்ணியர்களிருந்த சபைக்கேற்றி வைத்து வஸ்திர பங்கம் பண்ணிய புண்ணியவான்.

"ஓ விவேகத்திற்சிறந்தவிராடகுமாரனே! அதோ ஈசானதிசையிற் பன்றிக்கொடி பறக்கச் சண்டைத் தேரேறித் துச்சாதனனுக்கு அண்டையிலிருப்பவன் துரியோதனன் முதலாகிய நூறு பேருக்கும் மைத்துனன். இவர்கள் தங்கையாகிய துச்சளையைக் கலியாணஞ் செய்துகொண்ட தோன்றல். சிந்துதேச ராஜனுகிய ஜயத்திரதன். இவன் எங்களிடம் பெற்ற வெகுமானங்களையுஞ் சன்மானங்களையு மறந்து நாங்கள் காட்டிலுறைந்து வேட்டை போயிருக்கும்போது முறைதுறை பாராமல் திரௌபதியை யெடுத்துப் போயினுன். அந்தச் சங்கதியைக் கேட்டுவந்த நாங்கள் ஓட்டமாகச் சென்று, இவனைக் கண்டுபிடித்து வாட்டப்படுத்தி இவன் மயிர் முடியை ஐந்து சிகை வைத் தரிந்து, முகத்திற் புள்ளியிட்டு, பேரும் வேறிட்டு தருமராஜனுக் கெதிரில் நிறுத்திக் கட்டவிழ்த்து, வெட்டவெளியில் வேண்டிய மட்டும் அவமானப் படுத்தி விட்டுத் துரத்தினேம்.

"ஓ மச்சராஜன் மாதவப்பேறே! இப்பால் வா! மூலைமடக்கில் பாலசூரியன்போற் பிரகாசிக்கின்றவன் காந்தாரி திரிதராஷ்டிர னென்னுஞ்

சேற்றிற் பூத்த பல தினுசு புஷ்பங்களிற் சிறந்த ஒரு செங்கழுநீர்ப் புஷ்பத்தை யொப்பப் பிறந்திருக்கின்ற விகர்னன். இந்த நீதிமான் நெறி முறை தவருமலுன்னி, பாவபுண்ணியங்க ளெண்ணி திரௌபதி கேட்ட கேள்விக்கு இராஜ சபையில் நியாயஞ் சொல்லிப் பாஞ்சாலி பட்ட சஞ்சலத்தை மாற்றித் தேற்றிவிட்ட தருமவான். இவனை இவ் வுலகத்திற் புகழாதவர்களில்லை.

"ஓ புத்தியிற் சிறந்த புரவலரேறே! இதோ நமது தேருக்கெதிராக நட்சத்திரக் கூட்டம்போற் பற்பல தேர்களின் மேல் விளங்குகின்ற பையல்கள், துரியோதனனுக்குத் தம்பிமார்கள்; காலாந்தகரென்று கருதுவதற்குத் தடையில்லை, கொடிய துஷ்டர்கள். அதோ தத்தித்தா வென ஆடுங் குதிரைகள் பூட்டிய ரதத்திலமர்ந்தவன் சோமதத்தன். இதோ தித்தித்தோமென நீளுஞ் சித்திரவில் வளைப்பவன் அசுவ சேனன். அதோ தன்புற நிற்பவர்கள் யாவரும் தேசராஜ போஜர்கள்.

ஓ விராடராஜன் மைந்தனே! இப்போது நானுனக்குக் காட்டிய இவர்களை யெல்லாம் எதிர்த்துச் சண்டை விளைத்து, திக்குக் கொருவ ராய்க் குலைந்தோட வடித்து, மந்திரகிரியாகிய மத்தினடிபட்ட பாற் கடல் போலுழக்கி, ஒரு கணப்போதில் உருமாறிச் சுழல விட்டுக் கலக்குகின்றேன், நீ சற்றே மனம் கொண்டு காண்" என்று சொல்லி தன்னுள்ளக் கருத்தையும் அவனுக்கு விள்ளும்படியாய் இவ்வாருலோ சித்து உரைப்பதாயினன் :—

யுத்தமுனையி லடிபட்டு ஓடிப்போன கர்னனைக் கண்டு உத்திரன் கைகொட்டி நகைத்தானுதலாலும், இனிமேல் பீஷ்மர்-துரோணர்-கிருபர்-அசுவத்தாமா இவர்கள் நால்வருந் தன்னோ டெதிர்த்துச் சண்டை விளைத்து அடிபட்டு புறங்கொடுத் தோடப் போகின்றார்க ளென்பது தனக்கு நன்றாய்த் தெரிந்திருக்கின்றபடியாலும், ஒரு வேளை அப்படி யோடும்போது இந்தச் சாரதி கைகொட்டிச் சிரிப்பா னாகில் அது மரியாதைக் குறைவாகு மாகையினாலும் குலமுதல்வ ராகிய பீஷ்மர் முதலிய பெரியோர்கள் தங்களிடத்தில் அன்பு வைத்த வர்களென்பதும், அவர்களுக்கு வந்த குறைவும் அவமானமுந் தனக்கு வந்தவை போலாகும் என்பதும், அம் மச்சராஜகுமார னுணரும்படி அச்ச முண்டாகப் பேசி, மற்ற சத்துருக்களையுந் தெரிவித்து, இச் சத் துருக்களை மாத்திரங் கண்டு நகைத்தால் அதனால் தாழ்ச்சி யொன்று மில்லையென்று எண்ணிய தன் கருத்தை உத்தரனுக்குக் காட்டி, பெரி யோர்கள் பேரிலிருக்கின்ற பட்சமும்-துரியோதனாதிய ரென்னும் பகை வர்மேலிருக்கும் அபட்சமும்-வேறு வேறு விதமாகவும் வெளிப்படுத்தி, "அப்பா உத்திரகுமாரா! இப்போது பரிசுத்தவான்களாகிய ஆசாரிய புருஷர்கள் பேரிலெதிர்த்துப் போராட வேண்டிய கருத்தை யொழித்து மற்றவர்கள்பேரில் யுத்தஞ் செய்யவேண்டியிருப்பதால், நமது தேரைச் செலுத்து. ஒரு க்ஷணத்திலவர்களை யெல்லாம் வென்று ஜெயம் பெற லாம்" என்று சிந்தை மகிழ்ச்சிகொண்டு செப்பினன். இப்படி சொல்

லிய சுப்பிர தீபம்போன்ற அர்ச்சுனனது கருத்தை உத்தரகுமாரன் மிகுந்த நுட்பமா யறிந்து, தான் நகைத்ததைக் குறித்து மிகப் பயந் தினைத்து, தன்னிடத்தில் அர்ச்சுனன் கலந்து பேசினனென்று தன்னை மறந்துபோகாமற் சாக்கிரதையாய் மரியாதையுடன் அடங்கி அர்ச்சுன னுரைத்து வாய் மூடு முன்னமே மனோவேகத்திலும் வாயுவேகத்திலு மிஞ்சும்படிக்கு அசுவங்களை முடுக்கி மண்டலமதிர-எண்டிசை பிதிர-அண்டர்கள் ஒடுங்க - மண்டர்கள் பதுங்க - கடலேழுமதிர-கனமேழு முதிர-கதிர்மதி வெருவ,கல்லினமுருவ-கடகட-தடதட படபட மடமட வென்றோட்டி, தடமகுடவரசர் படைகளை யெல்லாஞ் சாய்த்து, மகா உக்கிரபராக்கிரமத்துடன் சக்கரங்களினின்றும் கர்க்கத் தொனியெழும் படியாக விரைவுடன் ரதத்தை விடுத்தான்.

### துரோணாச்சாரியருக்கும் அர்ச்சுனனுக்கும் யுத்தம்

இந்தப் பிரகாரம் உத்தர குமாரனுக்குத் தெளிவுண்டாகும்படி யாய்த் தெரிவித்துப் போர்மேல் வருகின்ற தீரன் கருத்தையும் அவ னேறிய செம்பொன் தேரின்வேகத்தையும்-சேனைகளின் பேரிற் செல் கின்ற மர்மத்தையும்-ஆழ்ந்த கேள்விகளாலுயர்ந்த துரோணாச்சாரியர் கண்டு தம்முள் அருள்கொண்டு, பெற்ற தந்தையாயினேன் பிள் ளையை நாடிப் போவதுபோல் தன்னுடைய தேரைச் செலுத்திக் கொண்டு போய் அருச்சுனன் தேருக்கு நேர் சென்று நின்று மறித்து, ''அப்பா அர்ச்சுனா! நாங்களெல்லோரும் உனக்கு நேராகவிருக்க, நீ எங்களை விட்டு விட்டு எங்கே போகின்றாய்? நீ அப்படி ஒதுங்கிப் போனாலும் நானுன்னை விடமாட்டேன். என்னுடன் யுத்தஞ் செய்ய வா'' என்று வில்வளைத்து நாணி தொடுத்து டங்காரங் காட்டினார். இந்தப்படிக்கு வார்த்தையாடிச் சண்டை செய்யவந்த துரோணாச்சாரி யரை தருமராஜனுக்கிளைய தனஞ்செயன் கண்டு தேர்விட்டிழிந்து அன்புகூர்ந்து சிந்தை மகிழ்ந்து, செந்தாமரைக் கமலம்போன்ற அவர் திருவடியிற் பணிந்து, கரங்குவித்துத் துதித்து, ''ஓ அந்தணர்க்கரசே! தேவரீரனுக்கிரகத்தாற் பன்னிரண்டுவருடம் வனவாசமும் ஒருவருடம் அக்ஞாத வாசமுங்கழித்து வெளிப்பட்டோம். இனிமேல் தர்மாதர்மந் தெரிந்து நடப்பிக்கவேண்டிய கடமை தங்களைப் போன்ற பெரியோர் களுடைய தர்மம். அப்படிக்கிருக்க யாதொரு காரியங்களும் இன்ன தென்றறியாத என்னை எல்லாம் தெரிந்தவனென்ருக்கி, இவனுக்கு மிஞ்சிய செஞ்சிலை வீரர்கள் இவ்வுலகத்தும் எவ்வுலகத்தும் இல்லை யென்று துதித்துப் பல்லோரும் புகழ நல்லோர் கொண்டாடும் படியாய் வில்வேதமும் அஸ்திரசக்தியும்-சஸ்திரசக்தியும்-குற்றமறக் கற்பித்தருளிய சத்தியவுண்மைச் சம்பன்ன தேசிகராகிய தேவரீர் என்னை மறித்து ஒரு பொருளாக மதித்து யுத்தஞ் செய்யப் பகைத்துப் வரத் தக்கதோ? ஐயனே! அடியேன் பயமில்லாமல் வெளிவந்து என் குருஸ்வாமியாகிய தங்களோடு உறுத்து, என் கையிற் விற் பிடித்து நாண் தெறித்து, கணைகள் விடுத்து தேவர்க்கீடாகப் பூசல் புரியத் தக்க விதரணையும் பெற்றிருக்கின்றேனோ? அவ்வளவு வித்தை

களை யான் கற்றிருக்கின்றேனே? ஓ விற்குருவாகிய வேந்தனே! ஓ வேதியகுல சாந்தனே! அப்படிக்கல்ல வென்று என்னறிவீனத்தா லெதிர்த்து அடித்துப் போர் விளைத்து ஆசாரியராகிய தமது திருவடிக் குத் துரோகம் நினைப்பேனானால், அது பஞ்சமா பாதகத்தி லொன் றாகிய பெரும்பாவமல்லவோ? ஓ பாபரகித புண்ணியவானே! என் னுடைய எண்ணம் என்ன வென்றால் தேச ராஜ வீரர்களுடன் சேர்ந்து நால்வகைச் சேனைகளுடன் புகுந்து, விராடராஜனது மாட்டுமந்தைகளை மடக்கிய துரியோதன ராஜனையும் அவன் தம்பி கள் முதலாகிய பேர்களையும் வளைத்துக் கொண்டு, இடியுடனிடி-மின்னலுடன் மின்னல் - மேகத்துடன் மேகம் - எதிர்த்து எரிந்து புகைந்தெழுமாறுபோற் போர்த்திறங் காட்டிப் பார்த்துத் தேவரீர் உபதேசித்தருளிய மந்திரக்கணைகளைத் தொடுத்து, அவர்களுயிரை வதைத்துக் கெடுத்து, எமலோகத்திற் குடிபுகவிடுத்து இணையில் லாமலிருப்பதல்லாமல், தேவரீருடனேயும், கிருபாச்சாரியருடனேயும், தேவரீர் குமாரனாயும் என் சினேகனாயு மிருக்கின்ற அசுவத்தாமா வுடனும், பாட்டனாராகிய பீஷ்மருடனுஞ் சண்டைபோடப்படாதென் பதே. அப்படிக்கொருவேளை சண்டை செய்ய நேருமாகில், அது தர்ம மல்ல, தகுதியான தன்மையுமல்ல, எனக்குக் கொடிய பாவத்தைக் கூட்டிவைக்குமென்று என்றென்றைக்குஞ் சத்தியமாய் எண்ணியிருக் கின்றேன். ஆதலால் ஓ முனிசிரேஷ்டரான மூதறிவோரே! என்பேரிற் கிருபை கூர்ந்து சற்றப்பாற்போகத் தயைபுரிய வேண்டும்'' என்று வணங்கிச் சொல்லினான்.

இப்படியாக அர்ச்சுனன் சொன்ன மொழியனைத்துங் கேட்ட துரோணாச்சாரியர் சற்றுநேரம் வரையிலும் புத்தியில் நிதானித்துப் பேரன்புடன் நிம்மதியாயிருந்து, பின் எம்மதியுந் தோன்றாமல் நன் மதியோடாசிர்வதித்து, ''விண்மதிக்குலத்துவேந்தனான விஜயராஜனே என்னிஷ்ட மெய்ப்பேர்பட்டதெனிற் கேள்—ஒருவனுக்கு யுத்தகளத் தில் உனக்காக உழைக்கிறேனென்று உறுதி சொல்லி அவனுடைய உப்புந் தண்ணீருமுண்டவன் நான்; அவனுடைய நன்மைதீமைகளை யென்னுடையவை யென்று கருதுபவன் நான். சமயம் வந்தபோது அவனுக்கு துரோகம் பண்ணலாமா? அப்படிப் பண்ணாமல் உடன் பட வேண்டுமென்பதே என் விருப்பம். இது காரியம் உனக்குத் தெரி யாமலிராது. ஆதலால், துரியோதன ராஜனுக்குச் செஞ்சோற்றுக் கடன் கழிக்கும்படியாய் அமர் தொடங்கினேன். படுகளத்திற் சிஷ னென்றும் பிள்ளையென்றும் கவனிப்பதற்காகாது. நீ தேவேந்திரன் முதலிய தேவர்களை யெல்லாம் வருத்தப்படுத்தித் திரிலோகத்தையும் பயமுறுத்தி நடுங்கப் பண்ணிக்கொண்டிருந்த காலகேயநிவாதகவசர் கள் மூன்றுகோடி அறுபதினாயிரம்பேர்களை ஒரு க்ஷணத்தில் மடித்து, ஜெயக்கொடி பிடித்துச் சிவசுப்ரமணியக் கடவுள்போல் தேவசேனா பதிப் பட்டமுங் கிரீடியென்னும் பெயரும் பெற்றுச் சிறப்படைந்தா யென்று சில நாளைக்கு முன்னே கேட்டுச் சிந்தை மகிழ்ந்திருந்தேன்,

அந்தத் திறமை யெப்படிப்பட்டதோ? அந்தத் திறமையை இப்போது எனக்குக் காண்பிக்க வேண்டுமென்று வருந்திக் கேட்டுக் கொள்ளு கிறேன். அதற்கு நீயுடன்படாவிட்டால் உனக்குக்கோபம் பிறக்கும்படி யாய் நான் முன்னதாய் உன்னை யடிக்கிறேன் பார்'' என்று மகமேரு வனைய தமது வில்லை இருகுதைகளும் பொருந்த வளைத்து, இந்து முகாஸ்திரம்-இந்திர மோகாஸ்திரம்-கொந்தலர்ப்பழிகள்-கூர்வாயம் புகள்-சதாகதிச்சரங்கள், சகஸ்திரமுக பாணங்கள் முதலியவைகளை யெடுத்து வந்தித்து மந்திரித்து அநுசந்தித்து, செந்தூள் கருந்தூ ளெழும்ப மந்திரவரையனைய தேரை வலமிடமாக மாறிவிடுத்து, வான மும் பூமியும் மழைபோன்றிரையும்படி வாசாமகோசரமாக வாரிவாரி இறைத்து, சாரதி குதிரைகளைச் சற்றுந் தெரியவொட்டாமல் மறைத் துத் தனுர்வேத சாகசமெல்லாங் காட்டினுர். இப்படி தாமே மிஞ்சிக் காட்டிய உத்தமகுணத் துரோணுச்சாரியரைக் கொற்றவர் முதலிய பலரும் மெத்தப் புகழ்ந்து, சித்தமுவந்து கொண்டாடி ''இத்தினம் அர்ச்சுனன் இற்றனன்! அற்றனன்! செத்தனன்'' என்று சிறந்து கூத் தாடினுர்கள். இவை யல்லாமல் ஆகாய நிறைய வேடிக்கை பார்த் திருந்த தேவேந்திரனுந் தேவர்களும் பாண்டு முதலாகிய பார்த்திபர் களும் பரதவித்து, ''ஆ! ஆ! ஆ! துரோணுச்சாரியர் இதுவரையிலும் இப்பேர்ப்பட்ட வில் திறங்காட்டிய வீரத்தின் தரங் கண்டறியோம்; ஐயோ! சீஷனுகிய விஜயனுடன் வேடிக்கையாய்ப் பேசி வினைச் சண்டை விளைத்தாரே'' என்று மேன்மேலும் பேசிக்கொண்டார்கள்.

இவ்வாறு பலம்பெற்ற பாணங்களைப் பொழிந்து யுத்தஞ் செய் கின்ற துரோணுச்சாரியரைச் சுத்தவீரனுன பார்த்தன் பார்த்து, ''சுவாமி! அடியேன் தேவரீருடைய அடிமைப் புத்திரனென்று முடி தாழ்த்தி வணங்கினேன். தேவரீர் என்னை மன்னிக்காமற் சன்னத பின்னலாய்ச் சரவருஷம் வருஷித்து விட்டீர். இனிமேல் தன்னைத் தான் காத்துக்கொள்ள வேண்டியது தர்மமே யாகுமன்றோ? தாமறி யாத காரியமொன்றில்லை. என்பேரில் தப்பிதமுமில்லை. நீர் ஜாக்கிரதை யாயிரும்'' என்று தனிப்புலிபோற் குமுறியிரைந்து புகுந்து விரைந்து தேரூர்ந்து புகழெய்திய பிரதாப வில்லைப் பிடித்து நிறுத்தி நாணி மாட்டி டங்காரங்காட்டி, நானுவிதமாகிய நாராச கணைகளைப் பூட்டி, நாராயண மந்திரமேற்றி, நான்கு குதிரைகளும் நடுங்க முடுக்கி துரோ ணுச்சாரியர் தொடுத்த பாணங்களத்தனையும் கொள்ளைப்போற் குவிந்து எள்ளைப்போல் இடிந்து போகச் செய்தான். அவனது பாணத்திறத்தைப் பார்த்த துரோணுச்சாரியரும் ஆசாரியப் பட்ச மறவாத அர்ச்சுனராஜனும் ஒருவர்க்கொருவர் குறுகி நேரிட்டு, புய மிரண்டும் பூரித்து மேலிட்டு, மலைபோன்ற வில்லானது பிறை போன்ற வளைய நாண்பிகிந்து, ஆகர்ணபரியந்தம் இழுத்து, வருஷ காலத்து மேகம்போல் கோடாகோடி சரங்களை ஒருவர்மீதொரு வர் சொரிந்து கொண்டார்கள். இப்படி கையோயாமல் பொழிந்த அஸ்திரத் தலைவர்களில் பயமுகராகிய துரோணுச்சாரியரும் நயமுக

ஞகிய காண்டீபனும் படபடத்து விட்ட பகழிகளானவை சிடசிடத்தெழுந்து, சிறிப் புகைந்து, தீப்பொறி மிகுந்து சினங்கொண்டு புகுந்து, கதிர்முனையில் கடுவாயு வேகத்தைக் கலந்து, கலகலவென்று நேருக்கு நேர் சென்று முனைந்து, ஒன்றிேனொடொன்று உராய்ந்து, ஒன்றையொன்று பற்றி, ஒன்றையொன்று எற்றி, ஒன்றையொன்று கிழித்து, ஒன்றையொன்று அழித்து, ஒன்றிலொன்று கலந்து, ஒன்ருலொன்று அலைந்து, இதுவெமதுவும் அதுவெமிதுவுமாகப் பிசறிக்கொண்டு போய்ப் பிரித்துப் பேசக்கூடாமல் இருந்ததல்லாமல் அர்ச்சுனன் பேரில் துரோணர் பாணமும் துரோணர்பேரில் அர்ச்சுனன் பாணமும் பட்டதில்லை.

அப்பால் வேதக்கொடியாடிய சூரியன் தேருக்கொப்பான தேர்மேலேறிய துரோணுச்சாரியரும் அநுமக்கொடி சூடிய இந்திர விமானத்திற் கொப்பாகிய இரதத்திலேறிய அர்ச்சுனராஜனும்-கரகரவென்று தேரைச் சுழற்றி, சரசரவென்று மீட்டுஞ் சிலநேரம் சரமாரி பொழிந்து கொண்டனர். பின் துரோணுச்சாரியர் இந்திராஸ்திரம் எடுத்து மந்திரித்துவிட்டார். அர்ச்சுனனும் மற்ருேரிந்திராஸ்திரம் விடுத்து அதைக் கெடுத்தான். துரோணர் அக்கினியாஸ்திரம் எடுத்துத் தொடுத்தார். அர்ச்சுனன் வேருேர் அக்கினியாஸ்திரந் தொடுத்து அதைத் தடுத்தான். துரோணர் சூரியாஸ்திரம் வீசினுர். அர்ச்சுனனும் சூரியாஸ்திரமொன்று எடுத்து உந்தினுன். துரோணரும் சந்திராஸ்திரம் போக்கி அதைச் சிந்தி வருணுஸ்திரமெடுத்துத் தாக்கினுர். அர்ச்சுனன் அதை வருணுஸ்திரம் பூரித்து மாற்றினுன். துரோணர் வாயுக்கணை யொன்று தூவினுர். அர்ச்சுனன் வேருேர் வாயுக்கணை ஏவி அதைக் குறைத்தான். இந்தப் பிரகாரம் மேலுமேலும் கருடாஸ்திரம் - நாகாஸ்திரம்- மோகாஸ்திரம் - பர்வதாஸ்திரம் - மோகாஸ்திரம் - விருக்ஷாஸ்திரம் - கமலாஸ்திரம் முதலிய தேவாஸ்திரங்களை வீசி, தெய்வலோகத்தார் மெய்ப்புளகமுற்று வாழ்த்தும்படி வெகுநேரந் திரிந்து, ஒருவரையொருவர் சிரிந்து, மறுபடியும் பேர்புரியப் பரிந்து ஆர்ப்பரித்துப் பாணந் தொடுத்தார்கள். அஃதேனென்னில் - நல்ல புத்திமான் இடத்தில் கல்வி முதலியவற்றைப் பேசப்பேச ஆசையுண்டாகு மாறுபோல், வீரனுடன் வீரனெதிர்த்துப் போர் தொடுக்கத் தொடுக்க வீராவேசமேறியபடியால் துரோணுச்சாரியர் பிராணபதமான விஜயனைப் புகழ்ந்து, ஒரு சூரியாஸ்திரம் எடுத்துத் தொடுத்தார். அர்ச்சுனன் ஒரு மேகாஸ்திரம் விடுத்து அந்தச் சூரியக்கணையின் வெப்பத்தை ஒடுக்கி, காளகூடம்போல் கறுத்து மின்னல் இடியுடன் வெள்ளம் பொழியப் பண்ணினுன். அந்த விஜயனுடைய பாணத்தின் விந்தையைக் கண்ட துரோணுச்சாரியர் ஒரு வாயுவாஸ்திரத்தை மந்திரித்து விடுத்து மேகாஸ்திரத்தைச் சிதறவடித்தார். ஆசாரியர் ஏவிய வாயுக்கணை அனர்த்தம் பண்ணுவதை அர்ச்சுனன் கண்டு, வாயு பக்ஷணஞ் செய்கின்ற நாகாஸ்திரத்தை எடுத்து நாசம் பண்ணினுன். நரனுந்திய நாகாஸ்திரத்தைத் துரோணுச்சாரியர் பார்த்துநடுங்கி ஒருகருடாஸ்திர

முய்த்து அதனைக் கெடுத்தார். இக்கருடாஸ்திரக் கடுமையைக் காண்டீபன் கண்டு கலகலவென்று நகைத்து, நாராயணாஸ்திரத்தால் அதையடக்கி நன்மையுண்டாகச் செய்தான். இவ்வாறு காண்டீபனெடுக்கிய கதியைக் கண்ணுற்ற தனுர்வேதியரும் அர்ச்சுனனும் பின்னும் வேறுவேறு சத்துரு மித்துருவான அஸ்திரங்களை எறிந்து, உத்தம மத்திம யந்திரமந்திர மார்க்கமுந் தெரிந்து, மனங் களிகூர்ந்து, மறுகாலுந் தேருந்தி, வடமிடஞ் சுழன்று கர்க்கரத் தொனியுடன் கலகலவென்று சப்தித்து, இருவர் தேரும் நெருங்க, இருவர் வில்லுங்குனிய, இருவர் நாரியு மொலிக்க, இருவர் சண்டையுங் கலிக்க, பூமியும் பொருப்பும் கிடுகிடென்றதிர, தாராகணங்கள் பலபலவென்றுதிர, உலகமதிக்கக் கலகம் விளைத்தார்கள். இவ்வாறிருவரு மேவிய பாணங்களெல்லாஞ் சக்கரவாளம் வளைந்த தடமெல்லாம் நிறைந்து, பேரோசை பிறந்து, அண்டச்சுவரடங்கலுமுட்டி, எட்டுத்திசைமட்டு மெட்டி, மட்டுப்படாமல்வாட்டிநின்றன. இவையன்றியும்,முப்புரத்தையெரித்தருளிய தற்பரனுதற் கண்ணில் பிறந்த அக்கினிப்பொறிக்கிணையாகச் சிறந்த அந்தப் பாணக்கினியின் வெப்பத்தினுல் மகரமுதலாகிய மச்சங்களுக் காதாரமாகிய கடலும், பரந்து விரிந்த பாதாளத்தினீரும், மேலுலகடைந்த ஆகாய கங்கையும் வறண்டனவென்றும் எல்லோரும் பேசலாயினர்.

இப்படித் துரோணார்ச்சுனர்க ளிருவரு முனைந்தபோது, ஒட்டம் கோணம் வட்டம் வளைவு திருகல் மாறல் முன்செல்லுதல் பின் செல்லுதல் முதலாகிய தேரோட்டத்தை, அவர்கள் சாரதிகள் காட்டினர். அதனுல் பூமி பிளந்து, ஆதிசேடனுடைய ஆயிரம் பணமகுடங்களு முடைந்தன! திசைகளுந் திக்குமுக்கிட்டசைந்தன! மேருவுங் குலுங்கியது! ஈரேழுலகுமலங்கியது! காட்டிலுள்ள மிருகங்களுங் கலங்கின! நாட்டிலுள்ள யாவரும் நடுங்கினர்! வித்தெனப் பரவிய நக்ஷத்திரங்கள் கொத்துக்கொத்தாய் முத்துப்போலுதிர்ந்தன. இத்தன்மையான யுத்தஞ் செய்தார்க ளென்று யாவருஞ் சொல்லுதற் கிடமில்லாமற் போயிற்று. வல்லமையேறிய வில்லாளர்களும் வல்லாளர்களும் சொல்லாமலோடும்படி நேரிட்டது. அந்த வேளையில் துரோணச்சாரியருடைய சேனைகள் கடல்போலிரைந்து பூரித்துப்பொங்கி உருத்திர சன்னதங்கொண்டு தேவேந்திர குமாரனுகிய சிலைவீரனை வளைத்து, அவனது தேர்ச் சக்கரங்களைத் துளைத்து, ஈட்டி-தோட்டி-துறட்டி-பாலா-பல்லயம்-தண்டாயுதம்-சக்கராயுதம்-வேலாயும் - காலாயுதம் - வாளாயுதம்-சூலாயுதம்-மழுவாயுதம் கொழுவாயுதம் - வஜ்ராயுதம் - பிச்சுவா - கட்டாரி - வளைதடி - குருதடி - குண்டாந்தடி - பாணத்தடி-முறுக்குத்தடி-இரும்புத்தடி-கிலுக்குத்தடி -உக்குலக்கை - செக்குலக்கை இன்னும் பற்பலவாகிய அஸ்திர சஸ்திரங்களுங் கொண்டு மோதி அமராடினர். அப்போது அந்தர வாசிகளாகிய தேவர்கள் ஆச்சரியங் கொண்டு, இப்படி யுத்தஞ்செய்கின்ற சேனைகளின் ஆச்சரியங் கண்டு, இது என்ன காரணத்திற்கோ இப்பேர்ப்பட்ட விபரீதச்

சண்டை யுண்டாயதென்று ஏக்கங்கொண்டு பார்த்திருந்தார்கள். அந்தவேளையிற் கலங்காக் கருத்தினனாகிய காண்டீபனும்-குந்திமா தேவிக்கு நடுப்பிறந்தோனாகிய புத்திர சிகாமணியும்-நாராயணனுக் கொப்பாக்கிய நரனும்-நான்முகனுக்கொப்பாகிய வரனும்-நானிலம் புகழுங் கோமானும் - வானிலமகிழுஞ் சீமானுமாகிய அர்ச்சுனன் சற்று நகைத்து, இதுவுமொரு நிமித்தமென்று பார்த்து, மட்டுப்படாத தன் வீரங்காட்டி. வெங்கனலைக் கொப்பளிக்கும் அம்பினங்களைத் தனது வீரகாண்டீபத்தில் அநுசந்தித்து, ஒன்றின்மே லொன்றாகச் செலுத்தி, உவர்க் கடலூடெரியும் வடவையை யொப்பக் குப்பென்றோங்கி வெகுளிமேற்கொண்டு விரைந்து முன்னின்றான். இவ்விதமாகச் சவ்வியசாசி தொட்ட அஸ்திரமடங்கலும் போய்விழுந்து, துரோணாச்சாரியருடைய நால்வகையான சேனைகளையும்-அச்சேனைகள் செலுத்திய ஆயுதங்களையும் - நலியப்படுத்தி நாசமாக்கி, எங்குமுதிர வெள்ள மோடும்படி யாவரையும் அதாகதஞ் செய்தன.

இத்தன்மையாக எள்ளத்தனைப்போதுந் தாங்காமற் சேனைகளை யெல்லா மடிவித்த முறைமையைத் துரோணாச்சாரியர் கண்டு, அர்ச்சுனன் தேருக்கு நேர்சென்று நின்று, தன் படைகளுக்கு நேரிட்ட இடரை நீக்கும்படியா யோசித்து, நெறநெறன வில்லை வளைத்து, நீண்ட பாணங்களை வேண்டியமட்டும் போக்கி, அர்ச்சுனன் செலுத்திய கணைகளத்தனையையு மண்ணாக்கி, பின்னும் ஈடுக்கீடாகப் பெருஞ் சரங்களேவினார். அச்சரங்கள் அர்ச்சுனனுடைய கணைக்கிடைபுகுந்து இடைக்கிடை நுழைந்து இரண்டிரண்டாகத் துண்டு பண்ண, அதைப் பராக்கிரம விஜயனோக்கி, படபடத்துப் பசையழிக்கும் நாராசக்கணைகளைப் பார்த்தும் பாராமலெடுத்து, வசவசவென்று மொய்த்துக் கொள்ளும்படி வாரிவாரிச் சொரிந்து நேரில்வந்த துரோணாச்சாரியரையும் - அவராலுந்திய அஸ்திரங்களையும் - மாறி மாறித் தாறுமாறாகப் போக நூறுவிதமாகக் கண்டான். இந்தப்படி அர்ச்சுனன் மண்டல முழுதும் பொழியுஞ் சோனமேகம் போற் சோர்வில்லாமலடித்த துணிவையும்-அவனது வீரவில் வேக விந்தையையும்-வண்டுகள்துன்றுந் தாமரைமாலையணிந்த துரோணாச்சாரியர் கண்டு, "ஆ! ஆ! ஈதென்ன ஆச்சரியம்! இவன் செயலைச் சிந்தை செய்யு மிடத்தில் மான்மழுசூலப்படை தரித்தருளிய மகாதேவன் கூட இவனுக் கெதிர்வந்து மலைந்து போராடமாட்டான்போலு மிருக்கின்றதே. அப்படியா? இனி என்போன்றவன் என்ன செய்ய முடியும்?" என்று கண்டுங் காணாதவர்போற் சற்றுநின்று தயங்கி, "ஆதியில் இவனுக்கு வில்வித்தை கற்றுக் கொடுத்துப் பீஷ்மர் முதலாகிய வேந்தர்கட் கெதிரிற் பரீட்சித்து யாவரு மெச்சும்படியாய் லக்ஷ்யம்பெற்ற தனுசாஸ்திரங்களும் - மந்திரங்களும் - அஸ்திரங்களும் - ஆகியவைகளெல்லாம் அப்போதைக்கிப்போது ஒன்றுக்குப் பத்தாய்ப் பத்துக்கு நூறாய் உயர்ந்திருக்கின்றனவே! இத் தன்மையான

வில் திறத்தினுலன்றே முத்தலமும் புகழுங் கீர்த்தியைப் பெற்று வந்தவனு யிறுமாந்து, நம்மை யெங்குமில்லாம லடித்து ஜயித்தான். ஆதலால்-ஜெயவிஜய னென்னும் பேர் இவனுக்கே தக்கது. இனி வேறு பேர் கூறுவதற் கிடமில்லை. ஆனுல்-நாம் ஒரு காரியஞ் செய்தால் உத்தமமா யிருக்கும், அஃதென்ன வென்றுல் - அந்த அர்ச்சுனனுக்கு நாம் தொண்டுசெய்து அவனண்டையிற்காத்திருந்து, அருமையான வில்வித்தையைக் கற்றுக் கொள்வதே நமக்கு நலம் - என்று தம்முள் தாமே கருதி கவலையுற்றிருந்தனர். இவ்வாருக எண்ணிக் கவலை கொண்ட துரோணுச்சாரியருடைய நினைப்பு ஒரு முடிவு பெறுவதற்கு முன்னமே நாரணன் புகழும் நரனுனவன், ஊரோடுயிர்களை வேரோடு களைகின்ற உகாந்தகாலப் பேரொலிநாட்டி உருத்திடித்துப் பயங்கரங் காட்டும் இடியாஸ்திர முதலிய பர்வதாஸ்தரங்களை யேவினுன். அவ்வஸ்திரங்களானவை மளமளவென்று வந்து விழுந்து, ஆசாரியருடைய தேரைப் பளபளவென்று முறித்து, வேதக் கொடியை வெடுக்கென் றெடித்து, குதிரை நான்கையுங் குறுகக் குறைத்து, சாரதி தலையைச் சரியத் தறித்து, அவர் கையிற் பிடித்த வில்லையு முறித்து, வில்லில் மாட்டிய நரம்பையு மறுத்தன. அதனுற் வேறு வில்லுந் தேருங் கொண்டு மாறு கணை தொடுக்க வொட்டாமல் வெட்கப்பட்டு மூதறிவணைத்து மயங்கக் கீதநாத வேதவேதியரான தநுர்வேத முனிவர் புறங்கொடுத் தோடினுர்.

## அசுவத்தாமனுக்கும் அர்ச்சுனனுக்கும் யுத்தம்

இந்தப் பிரகாரஞ் சமர்முனைவிட் டோடுகின்ற தந்தையான துரோணுச்சாரியரையும் அர்ச்சுனன் தொடுத்த தனிப் பாணங்களின் கிளர்ச்சியையும் அசுவத்தாமன் கண்டு சீற்றங்கொண்டு, வெம்பி வெதும்பிக் கண்ணீர் ததும்பி, தனதுதேரைச் சந்தியிலுந்தி, தனஞ்சயனுக்கு முந்தி சண்டை செய்யத் தொடங்கினுன். இவ்வாறு தனுர் வேத சாஸ்திரச் சாலைச் சினேகனும் ஆரிய குமாரனும்-வீரிய நாமனுமாகிய அசுவத்தாமாவானவன் அர்ச்சுனராஜனைத் தடுத்துப் போர் தொடுக்க வந்தது எத்தன்மையை யொத்திருந்த தென்னில், மேன் மேலாக நெருப்புப் பொறி வீசிய பெருந்தீக் கடவுளைப் பகைத்து ஆலாலவிடத்தில் முளைத்த அருங்கனல் வந்தெதிர்த்ததுபோலிருந்தது. இப்படியாக முனைந்த அசுவத்தாமன் அர்ச்சுனனுடைய தேரின்பேரில் ஐம்பது அஸ்திரங்களும், அசுவங்களின்மீது நூறுகணைகளும், சாரதி பேரில் இருநூறு சரங்களும், அநுமக்கொடிமேல் ஐந்நூறம்புகளும், பச்சைநிறப் பார்த்தன்பேரில் ஓராயிரம் பகழிகளும் முன்பின் பாராமற் பிரயோகம் பண்ணி, தனக்குப்பின் பலமொன்றுந் தேடாமல் பங்கப் படாத சிங்கக்குட்டிபோற் சீறி நின்றுன். இப்படியிந்த அசுவத்தாமன் கோத்த அம்புக் கும்புகளைப் பார்த்த தேவேந்திரன் முதலிய தேவர்களெல்லோரும் பார்த்து ஆச்சரியங்கொண்டு, ஆ! சபாஷ் சபாஷ் என்று அதிசயப்பட்டார்கள். அப்போது ஜயவிஜய சௌரிய பராக்கிரம காண்

டபதரனுகிய தனஞ்சயன் அண்டமுகடதிர வருகின்ற பிரசண்டக் கணைகளாகிய ஓராயிரத் தெண்ணூற்றைம்பது பாணங்களையும் ஒரு நொடியில் நறுக்கென்று குறுக்காக வெட்டிக் குறுந்தூளாக்கி விட்டுக் கூர்மையான இருபது சூரியாஸ்திரங்களைக் குறித்துக் கைப்பிடித்து, ஆரியமந்திரம் உச்சரித்துத் தொடுத்து, அசுவத்தாமன் ரதத்தினுட்டிய சுவேதத் துவஜத்தை அடியோடு மாட்டித் திரப்பார்வை காட்டி நின் ருன். அதைக்கண்ட அசுவத்தாமன் கச்சிதமான வச்சிரவாளியைத் தட்சணமேகொண்டு பிரயோகம்பண்ணி, மெச்சிய மேன்மைக்கு உச் சிதமாகிய அர்ச்சுனராஜனது வீரபட்டத்தை யறுத்து, ஓடியாத காண் டபத்திற் பூட்டிய அருதநாணைக் குதை நீக்கித் தளர்த்தி, அனந்தங் கோடி அம்புகளினுல் ஆகாயம் பூமிகள் தெரியாமல் மறைத்து, அர்ச் சுனனுடைய தேரையு மூடினுன். இத்தன்மையாகக் குருபுத்திரன் நடாத்திய யுத்தத்திறத்தை வெற்றிவீரப் பிரதாபவிஜயன் கண்டு புன்சிரிப்புக்கொண்டு, ''ஓ அசுவத்தாமாவென்னுஞ்சிரஞ்சீவியே! என் னுடைய வின்னுணைத் தளர்த்திவிட்டதனுல் உனக்குப் போர்ச் சேவக னென்னும் புகழ் கிடைத்ததுண்டோ? போ, போ; இது வீண் பைத்தி யம்'' என்று தனது வீரதீர காண்டீப வின்னுணை யிறுக்கி, கோரபார சரங்களைக் குறையாமலிறைத்தான். அசுவத்தாமாவும் அதற்கீடாகிய அஸ்திரங்களை அமோகமாய் நிறைத்தான். இப்படி எண்ணற்ற கணை களை இருதிறத்தவருஞ் செப்பிடு வித்தை செய்பவர்போல ஒப்புவமை யுரைப்பதற்கின்றி எப்புவனமும் நடுங்க அம்பு மாரியெனப் பொழி வதைச் செப்புதற்கரிய துரியோதனனுடைய சேனைகள் நோக்கி, தங்க ளுக்கு ஜயகாலமென்று கருதி, சந்திரனைக்கண்ட சமுத்திரம்போல் இரைந்து பொங்கி, ஆசாரியகுமாரன் செய்த அமர்த்தொழிலைப் புகழ்ந்து மகிழ்ந்தார்கள்.

இந்தப்படி ஒருவர்க்கொருவ ரோயாமல், ஒன்று - பத்து - நூறு - ஆயிரம் - பதினுயிரம் - லக்ஷம் - கோடி - அற்புதம் - புற்புதம் என்று சொல்லும்படியாகக் கங்குகரை காணுமல் எங்குமிறைந்து கிடப்ப ஒரு முகூர்த்த பரியந்தங் கணைகளைக் கரகர-பரபரவெனப் பொழிந்த காலையில், தோள் வல்லமையுடைய துரோணுச்சாரியருடைய தோன் றலது அம்பருத்தூணி நிறைந்த அஸ்திரங்களியாவும் வறண்டுபோய், சொற்பதரித்திரன்போல் சோர்வடைந்திருந்தன. அஃதெப்படியெனில் கீழ்மக்கள் மேன்மக்கள் ஆவார்களென்பது கனவிலும் இல்லை. ஒருவேளை தந்தை விந்தெழுந்தகாலத்து முந்திவந்த தொந்தவினையாம் அந்த சம்பந்த வினையினுல் நடுவது பாதி முதலிய நாட்களில் செல்வம் நேரிடலாகும். அவ்வாறு நேரிட்டால் அதைப் பாதுகாத்து, தன்னி லுஞ் சிறந்த சாதுக்களுடன் சாவகாசஞ் செய்து, விற்பன விவேகம் விளங்கக் கற்பனையான கல்வியை யறிந்து, அக்கல்வியிற் கழறிய கருத்தை யுணர்ந்து அந்தக் கருத்திற் கிணங்க அடங்கியிருந்து, முன் பின்னுள்ள உலக முறைமையயுந் தேர்ந்து, அடக்கம் வணக்கம் முத

லியவைகளை அணிகலனுய்ப் பூண்டொழுகி, இரக்கமுந் தயையும் பெற்றிருப்பவர்கட்குச் சம்பத்தென்ப தெந்நாளுந் தவறாடையாது. அப்படிக்கில்லாமல் பற்பல அகந்தைகள் விளைத்து, தலைகால் தெரியாச் சன்னதமாடி இளைத்து, பெரியாரைப் பணியாத பெருமை முளைத்து, வீஷ்மத்தால் திளைத்து, வெறும் பொய்யாய் மளைத்து, விசனத்தாலுளைத்து வெதுப்புண்ணும் அறிவில்லாத அற்பர்க்குச் செல்வம் பகை என்பதற்குச் சந்தேகமில்லை. அதற்கிணங்க இவ் வசுவத்தாமனும் அருமையாய்ச் சம்பாதித்த அஸ்திரங்களடங்கலும் வழிதுறையில்லாமல் வாரி இறைத்துப்போட்டு, கிடைத்திருந்த ஐசுவரியத்தைப் பிரயோசனப்பட வொட்டாமல் போக்கடித்துக்கொண்ட வெறும்வீணரைப்போல் வதங்கிவாடி இருந்தனன். இந்திர குமாரனுகிய அர்ச்சுனனது அம்பருத்தூணியானது, இறைக்கச் சுரக்கு மணற்கேணிபோல் எடுக்க எடுக்கக்குறையாமல் அக்ஷயமாய் எப்போதும் போலிருந்தது. அஃதெப்படியெனில், தப்பிதமில்லாமல் கற்கவேண்டிய ஆசு-மதுரம்-சித்திரம்-வித்தாரம் என்னும் நான்கு கவிகளையும் ஆராய்ந்து தெளிந்த பூரண வித்துவான்களின் விவேக விளைவினுல், கற்பனை அலங்காரங்கள் கணக்கற்றனவாய்க் காணச் சுரக்கும் பாவின் விர்த்தி போலிருந்தது.

### கிருபாசாரியருக்கும் அர்ச்சுனனுக்கும் யுத்தம்

கேட்டீரோ ஜனமேஜய மகாராஜனே! இஃதிப்படிக்கிருக்க குற்றமற்ற வெற்றிபெற்ற கொற்றவனைப்போல் தேரின்பேரில் அசையாமலிருந்த சிங்கக்குருளை போன்ற அசுவத்தாமனது செயலை யறிந்தோ அல்லது திறமாகிய சிலைவிஜயனுடன் போர்புரிந்து ஜெயம்பெற நினைந்தோ அல்லது மைத்துனராகிய துரோணரும் - மருமகனுகிய அசுவத்தாமாவும் இளைத்துப்போனுர்களே, அப்படியே நாமும் இளைத்துப் போவோமென்ன நினைந்தோ, மற்றென்னவோ? சிவந்த நிறமுந் திறமும் படைத்த கிருபாசாரியர் திடீரென்று தம்முடைய தேரைக் கடகடவென்று விடுத்து, கணைகளை வெகுவாய்த் தொடுத்து, தனஞ்சயனெ டெதிர்த்துச் சண்டை விளைத்துத் தடுத்தார். அந்த வேளையில் கடல் நிறங்கொண்ட காண்டீபனுனவன் சாரதியான உத்தர குமாரனைப் பார்த்து, "அப்பா புத்திமானே! அசுவத்தாமன் அம்புக் கூட்டிலுள்ள அஸ்திரங்கள் எல்லாவற்றையும் வாரியிறைத்து வறண்டிளைத்துப் போயினுன். அவனுக்கு நேரிட்ட அவமானத்தை வெளிப்படுத்த லாகாதென்று அவன் நல்லம்மானுன கிருபாசாரியர், நம்முடனெதிர்த்துப் போர்புரிய வருகின்றுர். அவர் வருகின்ற அவசரத்தையும் ஆத்திரத்தையும் சற்று நிதானித்துப் பார்" என்று தனது அருட் பார்வையால் காட்டினுன். அந்தக் குறிப்பை யறிந்துகொண்ட உத்தர குமாரன் தன் தேர்ச்சக்கரங்களில் கர்க்கரத் தொனிகாட்டி, முட்கரமாக வோட்டி, பூர்வாசாரியருடைய தேருக்கெதிர்வந்து வளைத்தான். அதுகாலையில் அர்ச்சுனராஜன் காண்டீபத்து நாணையிறுக்கி. மின்ன

விடி முழக்கத்துடன் மன்னிப்பொழிகின்ற மேகமும் வெட்கப்படும்படி சரசரவென்னச் சரதாரைகளைச் சாய்த்தான். அதைக்கண்ட கிருபாசாரியருங்கிட்டி, ரதத்துடன் ரதத்தை முட்டி, நாலாவிதக் கோலாகல லீலாவினோத பாணங்களைக் கொட்டி, அவனுந்திய கணைகளை வெட்டி அவனுக்கிணையாக வொட்டி யுத்தம் பண்ணினார். இவ்வாறு இவ்விருவரும் போராடிய வல்லமையை இவ்விதமென்று மதித்துச் சொல்ல வல்லவரெவ்விதத்தினுமில்லை. ஆனால் வானத்தில் வேடிக்கை பார்த்திருந்த வானவர் மாதவர் முதலாகிய பிதிர்த்தேவதைகளும் வெகுதூரம் ஒதுங்கிச் சென்றார்கள். பிரசண்ட வாயுவுங் கலங்கி, பிரகாசிக்கு மகமேருவுங் குலுங்கி, எட்டுத் திக்குஞ் செவிடுபட் டொடுங்கிப்போயின. அம்பரஞ் சுழன்று பம்பரம் போலாடியது. அக்கினி மிகுந்து அனற்பொறி மலிந்து வீசியது. அண்டகூடந்தொட்டு அகண்டமும் நெக்குவிட்டுச் சாய்ந்தது. அஞ்சனமேகமும் விக்கி, அந்தர கதியாய்த் தொக்கி, அதனது வாயைப் பெருக்கி, நீரிநெருப்பிடியைக் கக்கி, மலைக்குகைகளிலும் பிலத்துவாரங்களிலும் புகுந்து உக்கி யொடுங்கிப்போயது.

இப்படியாக வில்திறங்காட்டிய விக்கிரமக் கிருபாசாரியரும் பராக்கிரமப் பற்குனனுந் தங்களுக்குத் தெரிந்த சிலைத்திறங்களை - கணைத்திறங்களைச் சீராட்டிப் பாராட்டி, முன்னோட்டம் பின்னோட்டமாகத் தேரையுந்தி, வெகுநேரம்வரையிலும் பகழிகள் நுந்தி ஒருவருக்கொருவர் உதிரம்சிந்தி, உடலெல்லாஞ் சிந்துசிந்தாய்க் கொந்தி, உருத்தூருத்து முந்திப் போர் புரிந்தார்கள். அதுகாலையிற் கிரீடியானவன் கைமிஞ்சி உருத்தி, நிருடிச் சரங்களைச் சரேலெனப் புகுத்தி. புட்பக விமானம்போன்ற சக்கரத்தேரினையும்-வேதவெள்ளைக் கொடியையும்-சாரதி குதிரையையும் - தத்திவீழத் தாக்கி, கிருபாசாரியருடைய உடல் முழுதுந் துளைபோக்கி, மறுபடியும் பாதமுதல் தலைவரைக்கும் பாணங்கள் ஊடுருவிப்போகும்படி நாணைவீக்கி டங்காரஞ்செய்தான். அனைய காலையிற் கிருபாச்சாரியர் மதிமயங்கித் தியங்கிக் கண்கலங்கி, மானந்துலக்கி மண்மேற்கரைந்தார். அந்தக் கிருபாச்சாரியருக்கு இரண்டு பக்கத்திலுந் திரண்டமலைபோலிருந்த சக்கரரக்ஷகர்களில் யந்திரகேது-சுஸேஷணன்-மணிமந்தன்-ஏமவான் முதலிய வெற்றிவீர வேந்தரநேகர் ஆர்ப்பரித்து அர்ச்சுனனை மடக்கி ஜெயம்பெறுமல் விடமாட்டோமென்று ஸ்திரப்போர் விளைத்தார்கள். அவர்களை அர்ச்சுனன் பார்த்து, அதிகோபமாய் வேர்த்து, மறுகிக்கொதித்து மாறிமாறி அவ்வீரக் கும்புகள் பேரில் நூறுநூருயிரம் அம்புகளேவி, அன்னாருடைய ஆயுதங்களையும்-பாணங்களையும்-விற்களையும் -தேரையும் -சிகரத்தையும் - மற்றச் சின்னங்களையும் நொறுக்கிப் பறக்கவடித்து, மலையொத்த புயத்தைக் குறைத்து இடையுந்தொடையும் இடையத்தறித்துக் கரமுங் காலும் புறம்படமுறுத்து, தலையைச் சிதைத்துத் தரணிமேற் குவித்துத் தாவியகாலையில், வீரத்தேரேறித்திரம்விடாதவிருத்தராகிய கிருபாசாரி

யர் மீண்டும் வெளிப்பட்டார். உடனே அவர் நூதனமாகப் பெற்று வந்த வில்லையும்-ரதத்தையும்-சாரதி-குதிரையையும் அழித்து, அவருக்குப் பின்னுதவி வந்த மன்னவர் பலரையுஞ் சிந்தினான்.

இப்படி தமக்குதவியான மன்னரை மடித்துத் தன் கையிலிருந்த வில்லையுமொடித்த, தானேறிவந்த தேரையும் பொடித்து, தானைகள் நான்குந் தவிடாயிடித்துச் சயம் படைத்திருக்குந் தனஞ்சயனைக் கிருபாசாரியர் கண்டு, தாளமாட்டாமல் வருந்தி, உடல் படபடத்துப் பூரித்து, பூமியிலுட்கார்ந்து பாய்ந்து, ஓர் எறிவேலெடுத்துப் பூசை முடித்துப் பற்குணன்மேல் விட்டெறிந்தார். அந்த வேலாயுதம் அதிர்ந்து வருகின்ற ஆர்ப்பாட்டத்தை அர்ச்சுனன் நகைமுகமாகச் சிரித்து, அக்கினியாஸ்திரந் தொடுத்து அவ்வேலாயுதத்தை யுடைத்துத் தள்ளினான். அப்போது கிருபாசாரியர் தாமெறிந்த வேலாயுதம் போன விதத்தையும், அதைமுறித்த அர்ச்சுனது திறத்தையுங் கண்டு, மகா வுக்கிரத்துடன் ஆக்கிரமித்து வெகுண்டு, தமது உடல் மறந்து, சிறந்த ஓர் வாளாயுதமுங் கேடயமுங் கைக்கொண்டு ஒரே வீச்சாய் வீசிவிடக் கருதி விஜயனுடைய தேரிற் பாய்ந்தார். இப்படியாக எண்ணிப்பாய்ந்த பூர்வாசாரியரைக் காண்டவவன மழித்த காண்டீபன் கண்டு, வெந்திடச் செய்யும் இந்துமுகாஸ்திரத்தைச் சுந்தரக் கணைகளுந்தி, அவ்வாளாயுதத்தையும் பரிசையும் நீருகப்படுத்திப் பஞ்சைப்போற் போக்கினான். அதனால் யுத்தமுனையில் வெற்றிபெறக் கற்ற வீரம் பெற்ற கிருபாசாரியர் வேறு போர் புரிவதற்கு விதியில்லாமல் சற்றுநேரம் வரைக்கும் அசைவற்றிருந்து, தமதறிவைத் தாம் நிதானித்து நோக்கித் தமக்குமுன்னே சண்டையி லிளைத்த தாஷ்டீகர்களையும் கருதி கீழ்க்கண் பார்வையாய்க் கிரீடியைப் பார்த்துச் சிறுநகை விளைத்து, திடீரென்றேடி, வீரகண்டாமணி கட்டிப் பிரகாசிக்கின்ற துரோணாசாரியர் புத்திரனான அசுவத்தாமனுடைய தேரின்மேலேறிக் கொண்டார்.

## பீஷ்மருக்கும் அர்ச்சுனனுக்கும் யுத்தம்

இங்ஙனம் முனைவீரங் காட்டிப் போர்புரிந்த கிருபாசாரியர் பின்னிட்டோடி மருமகனுடன் ரதத்திலிருந்த வண்மையை அவரை நம்பிப்போன சேனைகள் கண்டு வாடி, அர்ச்சுனன் பாணத்தால் அடிபட்டோடினார்கள். முன்னிட்டடுத்து யுத்தமுனை யேறிய கிருபாசாரியர் இழிவு தேடிக்கொண்டு பின் முதுகு கொடுத்துப் போனதும், பொற்சக்கரம் பூட்டிய தேர்மேலிருந்த போர்ச்சிங்க பீஷ்மர் புறப்பட்டு, மேகங்களை மின்னுடன் பிடித்துப் பிழிந்ததைப்போல் விளங்குஞ் செஞ்சிலைதாங்கியோங்கிய சேவகத்திறங்காட்டி, பேரணிப்படை புடைசூழ்ந்து வரும்படியாய்ப்பிரவேசித்து,பிரதாபமான சவ்வியசாசியை வளைத்து நாணொலி செய்தார். அந்த குருகுலக் கோமான் தெறித்த குணத்தொனி கேட்ட மாத்திரத்தில் கரை யுடைந்த ஏறி நீர் போலிருந்த சகுனி துச்சாதனன் முதலாகிய சங்கிராம வேந்தர்களெல்

லாம் ஒன்ருகக்கூடி பீஷ்மருடைய ஆதரவின்பேரில் அர்ச்சுனனை நாடி அளவற்ற அம்புகளைத் தொடுத்தார்கள். அவ்வம்புக் கும்புகளைக் கண்ட நரனுனவன் பம்பிய மேகம்போல் நச்சரவப் பாணங்களை யெடுத்து, அவர்கள் தூற்றிய அஸ்திரங்களை யெல்லாம் நாலிரண்டா யொடித்து, நாரியோசை யடித்து, தேவதத்தத்தையுந் தொனி யெழும்பப் பிடித்தான்; அதனொலியால் யாவருமயங்கி மடங்கி நலியா லடங்கினுர்கள். இப்பால் சந்திரகுலத் திந்திரனுகத் தோன்றிய தனஞ் சயன் தானேறிவந்த மந்தரமலை போன்ற ரதத்தைத் தந்திரமாகச் செலுத்தும்படி சாரதியான உத்தரகுமாரனுக்குச் சாற்றினுன். அவ னப்படியேமுடுக்கி, ஒரு நொடிப்பொழுதில் குலக்குரவன் கலக்கவருந் தலத்தில், அவரலக்க கண்மிகப் பெலக்கும் வகைபோய்ச் சார்ந்தான். இவ்விதமாகச் செவ்விசேர்ந்த மன்மத வடிவம்பெற்ற வாசவன் மதலை உலகமுடிவி லெழுகின்ற ஆலகாலம் போலும்-காலகாலன் போலும்-போர்முனையிற் கலந்ததைக் காங்கேயன் கண்டு களிக்கும் காலையில், வாளாயுத வல்லமைகற்ற இடபசேனன் வெறித்து, அர்ச்சுனனைக் குறித்து, கேது ராகு கிரகங்கள்போல் மறித்து பலம்பொருந்திய பாணங் களைத் தெறித்து, கிரமமாகப் பிரித்து, தானும் நெறித்து நின்ருன். இவ் வாறு இடபசேனன் செய்த போரைப் பார்த்த நரனுனவன் ஆங்காரங் கொண்டு, ஸ்தானசரங்களைப் பலமாகச் செலுத்தி யடித்து, அவ னுடைய தேர்-சாரதி-குதிரைகள் முதலிய யாவையும் ஒருகணப் போதிற் போக்கி மடித்து, கைப்பிடித்த வில்லையுங் கரணையா யொடித்து, ஒரு செங்கதிர் சிலிமுகந்தெறித்து அவனது தேகத்தை யுந் துளைத்தான். அந்த அடியினுற்களைத்த இடபசேனன் உட லெரிந்து, உயிர்கரிந்து, பீஷ்மருக்காகப் பரிந்து புகுந்தபக்ஷம் போது மென்று முனைகெட்டழிந்து, முதுகிட்டயர்ந்து முறைபட்டோடிப் போனுன்.

அவனேடுவதை நோக்கிய சிந்து தேசாதிப னென்னுஞ் சயிந்தவனும்-காந்தார தேசாதிபனுன சௌபலச் சகுனியும்-வெம்பு மனத்தராகி, துரியோதனன் தம்பிமார்களோடும் மற்றுமுள்ள மன்ன வர்களோடும் எதிர்த்து விதிர்விதிர்த்து, வெந்தழற் கணைமழைகளை வெகுவாகச் சிந்தினுர்கள். அக் காலையில் மதத்த கஜகேசரியாகிய மாதவி கொழுநன் நகைத்து, மனநொந்து பகைத்து, புரத்தை யெரித்த உரத்த அஸ்திரங்களையுந்தி, அவரவர் பிடித்திருக்கின்ற வில்லையும் பாணங்களையுஞ் சிந்தி, கொடி நாணையுங் குறைத்து, குதிரையையுஞ் சாரதியையுங் தறித்து, குடையையுந் தேரையுமுறித்து, பின்னும் நூறு பெரும் கணைகளைத்தாக்கி, வீறுபட்ட சேனைகள்-தாறுபட்டயானைகள்-கூறுபட்ட குதிரைகள்-மாறுபட்டரதங்கள் இவ்வாறு பட்டனவென்று சொல்வதற் கிடமில்லாமல் வெவ்வேறுபட்டு நீறுபட்டெரிய நிமிஷத் திற் பொடித்து, சேறுபட்ட உதிரவெள்ளத்தின்மீது, தேர்செலுத்தி எதிரிரொருவரில்லாமல் வருகின்ருன். அப்படி வருகின்ற விஜய பராக்

கிரமணிப் பனைக்கொடி பறக்கச்சிறந்ததேர்மேலிருந்தபிதாமகன்கண்டு "அப்பா பற்குன! இதோ நான் காத்திருக்கின்றேன். என்னை விட்டு அவ்வெளியவர்களோடு போராடுவதில் என்னபிரயோசனம்? விரைவி லென்னோடும் ஒரு கைபார்த்துச் செல் பார்ப்போம்" என்று கூவினர். அப்படி யெதிர்த்த பீஷ்மரை அர்ச்சுனன் வணங்கி ஒடுங்கி, "ஐயா! தேவரீருக்கு நானெம்மாத்திரம்? என்னை ஒரு பொருளாகக்கொண்டு சண்டை போடவுஞ் சம்மதமுண்டோ? ஆ! ஆண்டவனே" என்று நிம்மதியாய் நின்று, மேகம்போன்ற காண்டீபங் கொண்டு, மின்னற் கிணையாகிய நாண்பிகிந்து, கரணங்கலங்க நாஞ்ஞலிசெய்து, தீரஜெய வாளி-வீரவயவாளி மகேந்திரபாணம்-உகாந்தபாணம்முதலியவற்றை வாரிவாரி வரிசையாய்ச்சொரிந்தான். பீஷ்மரும் உகாந்தகால உற்பாத காலமழைபோல் வாகார்ந்த வாளிகளை வரிசையாய்ப் பொழிந்தார். இவ்வாறு மலையுமலையு மெதிர்த்து மாருடும் வாறுபோலிருவரு மெதிர்த்துப் போராடினர்கள். இவர்கள் புரிந்த கலகத்தினல் ஏழு சமுத்திரமும் - எட்டுத் திக்குப் பாலகரும் - ஒன்பது கிரகங்களும் - பத்துத் திசையும் - பதினொரு ருத்திரரும் - பன்னிரண்டு சூரியரும் பட்டபாடின்னவென்று பாவாணரும் பகர்வதற் கிடம்படவில்லை. அந்தரவாசிகளாகிய இந்திரன் முதலாகிய தேவர்களும் வேடிக்கை பார்த்து வெருண்டு, அனேக யோசனை தூரம் அகன்றுபோய் நின் ருர்கள். சந்திர சூரியர்களுங் கதிமாறினர்கள். இவர்களிருவரும் உதயமாகி யொடுக்கமாகின்ற உதயகிரியும் ஒதுங்கி நடுங்கியது. கட லுங் கொதித்துக் கனலுங் கதித்துக் களகளவென் றுரைந்தன. எட்டுத் திசை யானைகளுந் தட்டுக்கெட்டயர்ந்தன. இவ்வுலகமும் எவ்வுலக மும் ஏங்கித்தளர்ந்தன.

இவ்வாறு பிரமாத முண்டாகும்படியாய் இவர்களிருவரும் அம ராடிய காலையில், பீஷ்மர் மிஞ்சி, பஞ்சபூதம் போன்ற அஞ்சுகணைக ளைச் சாரதியான உத்தரகுமாரன்பேரில் தாக்கினர். அந்தக் கணைகள் வருகின்ற நிருடியைக் காண்டீபன் கண்டு, ஓர் காலாக்கினிக்கணையை யெடுத்துப் பாய்ச்சிப் பஞ்சுப்பொதியில் நெருப்புப்பற்றியபான்மைபோ லெரித்து, வஞ்சமறியா மனத்தோராகிய பீஷ்மருடைய நெஞ்சு திடுக் கிடும்படி அவர் கையிலிருந்த வில்லையு மொடித்துவிட்டான். இப்படி ஒப்பாரில்லாத தன் பேரனை அர்ச்சுனனல் ஒடிபட்டவில்லை அப்பா லெறிந்து, இப்பாலொரு வில்லை யெடுத்து மலைபோல் வளைத்து, புற்றி லிருந்து புறப்படுங் கிருஷ்ண சர்ப்பங்கள் பேராசை கொண்டு புகுந்த வாறென்ன அஸ்திரமாரியைத் துஸ்தரமாகச் சொரிந்தார், இவ்வாறு பீஷ்மர் தாஷ்டீகமாய்ச் சாய்த்த கணைகள் யாவற்றையும் இணையில் லாத அர்ச்சுனன் திரணமாய்ப்போக்கி, கர்ணபரியந்தங் காண்டீப நாரியை ஊக்கி, அருணோதயம்போற் சில செஞ்சரங்களை மிஞ்சத் தாக்கி, அஞ்சிப் பயந்தோடச் சேனைகளைப் புடைத்து, அசையாக் கீர்த்தி படைத்து அமராடினன். அக்காலையில் எழுகடல் நீருஞ்சுண்ட மலை முதல் யாவுங்குன்ற, உலகிலுள்ள ,யாவரும் பதுங்க, ஊரிலுள்ள

யாவரும் இதங்க, அஷ்டகஜமும் ரத்தங்கக்கி, வதங்க, அமரர்களும் அகடையெக்கி யொதுங்க, பிரளயகாலப் பெருநெருப்பைபோற் சரங் களிரைத்து, பிரமாதிகளுங்கண்டு கலங்கும்படியாய்ப் புலிங்க நிறைத் துத் தகுதியான இவ்விருவருந் தேரைச் செலுத்தி ஓரிடத்திலுந் தங்கா மல் அண்டச்சுவரின் அடிவாரமட்டுந் திரிந்துகொண் டிருந்தார்கள். இவர்களேறிய தேர்கள் வாயுவேக மனோவேக மென்பதைக் கடந்து வட்டமாகச் சுழன்று, ஒன்றுக்கொன்று கிட்டநெருங்கி யுருய்ந்து ஒன்றையொன்று விட்டுப் பிரிந்து பாய்ந்து, நெடுந்தூரமோடி ஓய்ந்து, வலசாரி யிடசாரியாய்த் திரிந்து, சூரியன்றேரைச் சுழலச் செய்தன.

இஃதன்றியும், இந்திரன் மைந்தனான விஜயனுடைய வில்லும்-கங்காபுத்திரனான பீஷ்மருடைய வில்லும்-குலாலன் சக்கரம் போற் கூசாமற் சுழல, அச்சுழலினின்றும் வந்து வெளிப்படுங் கூரம்பு முதலாகிய பாணங்கள் ஒன்றேடொன்று புரண்டு, முடிகளோடு முடிகள், தலைகளோடு தலைகள் இடிபட உடைபடச் சாடியபடி யால் தேரிற்கட்டிய குதிரைகள் பிடிபடாமற் கனைத்துக் கருளித்துக் கலித்துப் பீறிட்டோடின. இருவர் சாரதிகளும் எக்களிப்பிட்டு இரைந்து விரைந்து பரிகளைத்தடுத்தனர். அர்ச்சுனனுடைய அனுமக் கொடியும் பீஷ்மருடைய பனைமரக்கொடியும் ஆகாயமளாவி நீடிய வாயுதேவனுடன் போராடின. வாள்வீரர் முதலாகிய மன்னவர்களெல் லாந் தோள்கள் பூரிக்கவும், நெற்றி வியர்க்கவும், மீசை துடிக்கவும், ரோமஞ் சிலிர்க்கவும், வாள்விழி சிவக்கவும், தீப்பொறி பறக்கவும், அஸ்திரந் தொடுக்கும் விரல்கள் நெளிக்கவும், அமர்வில் பிடிந்த கரங் கள் முறைக்கவும், வீரகண்டை முழங்கவும், வெற்றிப்பட்ட மிலங்கவு மானார்கள். வேடிக்கை பார்த்த வேந்தர்கள் கலங்கினர். மேலுலகத் தோர் வெதும்பி யொதுங்கினர். நாகலோகத்தார் நலிந்து கலங்கினர். நானிலத்தார் நடுங்கிக் குலுங்கினர்.

இவ்விதமாக இருவரும் நிலைத்து ஒருவர்க்கொருவர் ஈடுதாழ்த்தி யில்லாமற் சமராடுகின்ற தன்மையினாலே, மதுசூதனன் மைத்துன னான அர்ச்சுனன் ஓர் யுக்திசெய்து, கொற்றமுற்ற பக்துக்கணைக ளெடுத்துக் கொத்துக்கொத்தாகத் தொடுத்து, வெற்றிப்பனைக் கொடி விறிய பீஷ்மர் தேரைத் தடுத்து வில்லை முறித்தான். வில்லை யெறிந்து வேறுவில்லைப் பீஷ்மரெடுப்பதற்கு முன்னே விஜயன் முனைந்து அட்டகாசம் பண்ணி, அர்த்த சந்திரபாணம் ஆயிரமாக எய்து பாட்டனுடைய தேகத்தைக் கொய்து, செல்லரிப்பது போற் சல்லடைக் கண்ணாய்த் துளைத்துவிட்டான். முன்னமே சிவந் திருந்த பீஷ்மருடைய திருமேனியானது ரத்தத்தினாற் பசத்தது. பாணந்துளைத்த வருத்தத்தினாலவர் களைத்து வருந்தி வாடி, நிலை தவறி நெடுமூச்செறிந்து, கரைபுரண்ட கருங்கடல்போல் தேர் மேல் விழ்ந்து அசைவற்றிருந்தார். அப்போது எஜமானிளைத்ததை யறிந்த தேர்ச் சாரதியானவன் அர்ச்சுனனுடைய போர்முனை

விட்டுத் தேரைச் செலுத்தி, நேர்முகமான திசையிற் கொண்டு போய் நிறுத்தி, அவரைச் சீர்பெறத் தேற்றி, ஔஷதாதிக ளூட்டிக் களை தெளியச்செய்து அன்பு பாராட்டினன். அந்த வேளையிற் பகல் விளக்கான பரிதியினிரதமானது ஆகாயத்தி னுச்சியை யடுத்தது. அதுகாலையில் பீஷ்மர் மத்தியான கருமத்தை முடிக்கச் செல்பவர்போல் யுத்தமுனையை மறந்து மறைந்துபோனர். அவரிடைந்து சென்ற செயலைக் கண்ட துரியோதனன் தம்பிமார்களும்-புத்திரர்களும்-சயிந்தவனும்-சகுனியும்-இடபசேனன் முதலாகிய மற்றப் பேர்களுந் தங்கள் தங்கள் சதுரங்கப் படைகளோடு தயங்கி மயங்கி, தங்களுக் குதவியாய்ப்பின்புறநின்று தாங்குவாரில்லாமையால் தனித்தனியேங்கி, பற்குனன் பாணத்தாற் பங்கப்பட்டு, நிற்பதற்கிடமில்லாம லுழன்று மனமழன்று புறமுதுகிட்டோடினர்கள். ஐயா மகாராஜனே! இந்த பீஷ்மாசாரியார்-கிருபாசாரியர் - அசுவத்தாமா - துரோணசாரியர்-கர்னமகாராஜன்-ஆகிய இவர்கள் பராக்கிரம மெத்தன்மைப்பட்டது? இத்தன்மையான பேர்களுக்குக் கிளைக்காதவனுக்கு விஜயனென்னும் பேர் அமைவது வியப்பாகுமா?

அர்ச்சுனன் செய்த யுத்தபராக்கிரமச் சிறப்பு

அந்த வேளையில் மந்தரபுயத்தோனகிய அர்ச்சுனன் யுத்த முகத்திற் பிரவேசித்து, விசித்திரசரங்களை விதவிதமாய்த் தொடுத்து, துன்னிய சேனைகளைத் தாக்கி மன்னரை வேறுவேருகப் போக்கினன். இந்தப்பிரகார மேலுமேலுங் கோடிகோடி கணைகளை வீக்கிய காலையில், நாலுமூலையிலுங் கோலாகலமா யிருந்த வணங்காமுடி திருந்திய துரியோதனமகாராஜன்படைகளால் பின்னிட்டு மறைந்த இரதங்கள் முன்னிட்டுமுறிந்தன. கொடி மரங்கீழ்ச்சாய்ந்தன. குதிரைகள் காலோய்ந்து வாடின. தேரிற்கட்டிய சித்திரத் துகிலுங் கிழிந்தன. இரதத்தின் சக்கரங்களுமுடைந்தன, அச்சுகள் பிளந்தன. மச்சுகள் சரிந்தன. குற்றுக் காலுங் கொடுங்கையும்வீழ்ந்தன. போதிகையும்பீடிகையுந் காழ்ந்தன. சிகரமுதிர்ந்து சிதறிக்கிழிந்து, திகழ்தட்டனைத்துஞ் சிந்திச்சிதைந்தன. வீறியகுடையுஞ் சுருங்கியது. சாரதி யடலுங் கலங்கி, வரிசை விட்டுக் கிரிசைகெட்டு மாரொடிந்து போனதுமல்லாமல் வஞ்சமனத்தனன துரியோதனனுடைய வெற்றிபெற்ற மத்தகஜ மனைத்தினுக்கும் மத்தகக் கும்பம் பிளந்து, வித்தகத்தந்த முறிந்து, சுளகுபோன்ற காதுகளறுந்து தும்பியாகிய கைகள் தறிந்து, நான்குகாலுங் கமுகனைய வாலும் போய் வறண்டு, நல்ல உடலும் குடலும் ஒன்ருய்ப் புரண்டு, வட்டக் கடலுலகில் மலையெட்டுந் தலைநட்டுப்பட்டு விழுந்தவாறுபோல் ஒன்ருெழியாமல் உயிர்கெட் டொழிந்தன. தெய்வலோகத்தில் இந்திர சிங்காதனமேறிய கிரீடியானவன் நீருடியாய்ச் சிந்திய சரோருகக் கணைகளால் துரியோதனனுடைய குதிரைக்கூட்டங்களியாவும் படைமுறிந்து கழுத்து மயிருதிர்ந்து, கடிவாளக்கயிறு கழன்று, மார்பு கிழிந்து, மன் குளம்பழிந்து, தோல்மடிந்து, மேலொடிந்து சப்பையு முகமும் குப்புற விழ்ந்து சருக்கெனச் சிதறின. நாசக்கொடி படைத்த நராதிபனுடைய

பதாதிகள்சிரஞ்சிதைந்திடைந்தன. கரந்தறிந்தழிந்தன. எலும்பொடிந்துடைந்தன. ஈரல் சரிந்துதிர்ந்தன. நாடியறுந்துமன்றன. நல்லுதிரம் பொழிந்தெழுந்தன. அவைகள் நெற்றியும் புருவமும் நிமிர்ந்து பிளந்தன. புயமும் மார்பும் புண்ணாய்க்கிழிந்தன. குதமும்பதமுங் குறைந்து சுருங்கின. காலுங் கரமுங் கரணையாய் விழ்ந்தன. எவ்விடங்களும் பிணக்குவிய லுயர்ந்தன. இனியொருவர் எதிர்த்தும் போர் கொடுப்பார்களென்று கனவிலு நினைக்காதபடி சவ்வியசாசிவிட்ட சரங்களினால் நால்வகைச் சேனைகளில் தப்பிப் பிழைத்தவர்கள் இப்புவியிலில்லையென்று சொல்ல மாண்டார்கள்.

இப்பால் யுத்தஞ் செய்தவிடத்தில் நெஞ்சுரம்பொருந்த நஞ்சுபோலிருந்த நரனென்னுங் காலாக்கினிக்கு எதிர்பட்ட பூளைப்பூப்போல், துரியோதனன் சேனைகள் எதிர்ந்து-பொடிந்து-பொறிந்து - புகைந்து - பறந்து-புரண்டு போய்விட்டன. மேலும் சிரித்துப்புரமெரித்த சிவபெருமான்போனின்ற செஞ்சிலை விஜயனுக்கெதிரில் திரிபுராதிகட்கொப்பாய் துரியோதனன் படைகள் பட்டார்கள். இன்னும் அனுமக்கொடி படைத்த அர்ச்சுனராஜன் அநுசந்தானஞ் செய்த அஸ்திரங்களினால் ஆறுபட்டோடிய இரத்தவெள்ளமானது சேறுபட்டுச் சிதைந்து செந்தூளாகியது. பின்னும்-அர்ச்சுனனுடன் மாறுகொண்டு மடிந்த பேர்களின் வல்லுடலானது நீறுபட்டு நெரிந்து ஊறுபட்டொழிந்தது. அசைவில்லாமலெழுந்தவிஜயன்கணைகளானவை தங்களிஷ்டப்படி சண்டைபோட்டு, திசையின் கடைசிவரைக்கும்போய் முட்டிப்பார்த்துத்திரும்பி அப்பாலுந் தங்கள் விசையடங்காமற் பூமியைத் துளைத்து, அதுவும் போதுமென்றிராமல்திரிந்தன. மேலும் மாதவிகாதலனாகிய பார்த்தனேவிய வார்கணைகள் திக்கெட்டுங்கிட்டி, திசைப்பாலகர் தலையிலுங்குட்டி அஷ்டகஜங்களைத் தட்டி, அண்டச்சுவரையுமுட்டி, இன்னும் யாராகிலும் பகைவருண்டோவென்று ஆராய்ந்துவிட்டன. இஃதன்றியும் சிற்சில நெருப்புக்கணைகளானவை பற்பல தேர்நிறைகளையும்யானைபெருக்கங்களையும், குதிரை நெருக்கங்களையும் கால்பல வருக்கங்களையுங் கசியக் கரைத்துக் கண்ணுக்கிடு மைபோலரைத்துக் கால்வாய் கொண்டோடுகின்ற ரத்தங்களிற் கரைத்து, கடலிற் பெருங்காயங் கலத்தல்போற் கலக்கிவிட்டிரைந்தன. விடற்சு விளைத்தவினையால் கொற்றவர்களும் மற்றவர்களும் மெத்த வருந்திச் செத்ததல்லாமலும், தலைமேற் குவித்த கரத்தினராய், தறிந்து வீழ்ந்த சிரத்தினராய் தைரியங்கெட்ட உரத்தினராய்த் தங்கள் தங்கள் வாய்விட்டரற்றினராய்ப் போயினர். அவர்க்குரிய பெரிய பெரிய சந்திரவட்டக் குடைகளும் வெண்சாமரைகளும், பல்லக்குகளும், வாகனங்களும், பேரிகை, பூரி, தாளம், மேளம், தவிலடி, காளம், கொம்பு, கொடி, முரசு முதலிய வாத்தியக் கருவிகளும் வில்லும் பாணமும், வேலும், வாளும் வெவ்வேறு யழிந்து பூமியிற்குப்பையாய்ப்பொருந்திக்குவிந்தன. இந்தப்பிரகாரஞ் சண்டைபுரிந்த இந்திரன் மைந்தன் அண்டச்சுவரை யளாவிய சமுத்திரம்போலிரைந்தெழுந்த துரியோதனனுடைய சேனைகளை மகர மச்சம்போற்

குடைந்து வாட்டிவிட்டான். மேன்மேலுந் தெறித்த வெங்கனற்கனைகள் மிதமறப்படர்ந்து வெளியெல்லாமடர்ந்து, காடெல்லாங்கடந்து கடையுகாக்கினிபோ லெரிந்து விரோதிகளைத்தொடர்ந்து, மேனியைப் பிளந்து சேனையைச் சிதைத்து, ஊனினைப் புசித்து, உதிரங்குடித்து, தாராகணங்களைத் தரையிலுதிர்த்து தேவர்கள் நடுங்கச் செந்தீயெரித்துச் சிரித்துக் கலித்துத் திறம்பெற்று நின்றது.

இவ்வாறு மாடுபிடி சண்டை போடுவதற்காகப் புகுந்த வணங்காமுடியோன் முதலாகிய மன்னவர்கள் பேரிற் குறிப்பறிந்து நெறிப்பறிந்து கூசாமலேவிய பாசுபதன் பாணங்கள் ஒவ்வொன்றும் எப்படியிருந்ததெனில், தசரதசக்கரவர்த்தி மைந்தனான தாசரதியானவர் தர்ப்பசயனத்திலிருந்து வருந்தி யழைக்கும்போது வராத சமுத்திர ராஜன்பேரில் வலுக்கொண்டுந்திய வன்னிக்கணை போன்றிருந்தது. ஆண் சர்ப்பக்கொடி நாட்டிய துரியோதனனுடன் பொருந்திப் போர் புரிந்த போர்வீரர்கள்பேரிற் புரந்தர துரந்தன் போக்கிய புங்கவங்கள் எவ்வாறிருந்தனவெனில், தீரம்பெறுஞ் சூரனையும் அவன் சேனைகளையுங் களைந்த சிவசுப்ரமண்யக் கடவுளின் வேலாயுதமொத்திருந்தன. மேலும் கருங்கடல்போற் கவிந்த கௌரவகுல முதல்வன் சேனைகள் யாவற்றையுங் கண்கலங்கப் புண்துலங்கக் கசக்கி வதக்கிக் கருக்கும்படி கேசவன்தோழன் முடுக்கிய கிளைக்கணைகளானவை எத்தன்மையொத்தவெனின், எமதருமராஜனேவி வீசிய தண்டபாசத்திற் கிணையாயிருந்தன. வேந்தர்கள் முடிமேற் கவித்த வெள்ளைக்குடைகள் காம்புமுறிந்து பூமியிற் கவிழ்ந்து காற்றினால் நிமிர்ந்து கலந்து கிடந்தன. அவை எவ்வாறிருந்தனவெனில், சுபத்திரைநாயகன் துரியோதனனுடைய படையைவென்று அழித்துச் செய்யும்யாகத்தில் அவிர்ப்பாகம் பெறவேண்டி சந்திரன்வந்து காலைக் கவிழ்ந்திருப்பதுபோலிருந்தன. வெற்றிவீரமுள்ள வேந்தர்கள் கையிற்பற்றிய வலம்புரிச் சங்கமுதலிய வெல்லாவற்றையும் அர்ச்சுனன் அம்பாலடித்துத் தள்ளியது எவ்வாறிருந்ததென்றால், ஏகசக்ராதிபனாகிய துரியோதனனது கீர்த்தியை வேரறக்களைந்தவாறுபோலிருந்தது. தேர்களிலும் யானைகளிலும் பொருத்தியிருந்த பலதினுசுப்பட்டுக்கொடிகள் பார்த்தன்விட்டபாணங்களால் அறுபட்டு முறிபட்டு தறிபட்டு மாலைமாலையாய் விழ்வது எப்படிக்கிருந்ததென்றால், வெகுநிற மேகங்கள் விண்டலம்விட்டு நீங்கி மண்டலத்தில் ஒரே மொத்தமாய் விழாமல் தனித்தனி வரிசை வரிசையாய் விழுந்தவாறு போன்றிருந்தது.

இஃதல்லாமலும்-மாசற்ற தேசுற்ற வளம்பெற்ற மனதுற்ற தருமராஜனுக் கிளவலாகிய தனஞ்செயனானவன் ஜெயலக்ஷ்மியைக் கல்யாணம் பண்ணிக்கொள்வதற்குத் தனித்தனி யெடுத்துத் தொடுத்த சரக்குவையலானது தூசிப்படைச் சூரர்களின் வீரவில்லை வெடுக்கென்று முறியப்படுத்திய வேடிக்கை எவ்விதமிருந்ததென்னில், ஜனகராஜனுடைய வில்லைச் சீதாபிராட்டியாருக்காகச் செங்கண்மால் வளைத்தொடித்த செயல்போன்றிருந்தது. இஃதன்றியும்-கரும்பைப் பரிந்

தெடுத்துண்ணும் வாயும்-பணைக்கையும் பொருந்திய திடகாத்திர கும்ப கரடதடயானைகளின்பேரில்முழங்காநின்றமுரசவாத்தியங்களை நரனுந்திய நாராசப் பகழிகளுடைத்தது எப்படியிருந்ததென்றால், உயர்ந்த மலைமேலுற்ற பெருங்கற்களைப் பேரிடி விழுந்து பிளந்தவா றிருந்தது. மேலும் வெற்றிப்போரிற் புகுந்த மத்தகஜங்கள் வீரபட்டங் கட்டிய கும்பம் பிளப்புண்டு இரண்டு பக்கங்களிலும் ரத்தம் புரண்டோடும் படியாகத் திரிந்தன. அது எத்தன்மை யொத்ததெனில், சித்திரைப் புயலடிக்குங் காலத்தில் சிவந்த வெள்ளம் பெருகிக் கறுத்தமலைமேற் கால்கொண்டு வழிந்த காட்சியை யொத்திருந்தது. இஃதல்லாமலும் அர்ச்சுனன் அந்த இடத்திற் போர் செய்த திறம் எப்படியிருந்த தெனில், ஒரு யாகஞ்செய்து தேவர்களுக்குப் பூரணாகுதி கொடுத்த செயல்போன் றிருந்தது. அஃதெவ்வாறெனில் மாடுபிடி சண்டை விளைந்த காடும் குடிகொண்டு பரந்த நிலமும் வேள்விச் சாலையாகவும், வீரர் எதிர்த்துப் போர்புரிந்த இடமானது ஓமக்குண்டமாகவும், அவர்கள் பேரிற் பிரயோகம் பண்ணிய பாணாக்கினிகள் யாகாக்கினியாகவும், போர்மேகங்கொண்ட வீரர்களுடைய தேகமானது சமித்துக்களாகவும், அன்னோருடம்பி லிருந்து வழிந்த ரத்தங்கள் நெய்யாகவும், போர்பொர வழைக்கும் வீரப்பேச்சுக்கள்வேதமந்திரங்களாகவும், யாவருடைய உயிரும் அவிர்ப்பாகவும், தேர்ச் சிகரங்கள் பூரண கலசங்களாகவும், அயமேதம்- கயமேதம்-புருஷமேதம்-பசுமேதம் என்னும் யாகத்தை ஒரு நாள் விரதத்தில் அவ்வுத்தமன் செய்ததை ஒத்திருந்தது. மேலும் பிரம சிருஷ்டிக் குட்பட்ட ஆத்மகோடிகளின் கண்ணுக்குள் மணிபோன்ற கண்ணனைப்போல் அந்த யுத்த பூமியைச் சாரிவரும் அர்ச்சுனனைக் கண்ட பாரிய தேர் வீரர்களெல்லோரும் இன்னுந் தங்களை நாடித் தனஞ்செயன் தேடி வருகின்றானென்று தளர்ச்சி யடைந்தார்கள்.

இப்படியாகப் போர்விளைந்த யுத்தகளம் எப்படியிருந்ததென்றால், பருந்துகளிருந்து விருந்துகளருந்த, கழுகுகள் குழுமிக் கொழுநிணங் கொள்ள, காக்கைகள் வீரர்கள் கண்ணைப் பிடுங்க, ஆக்கையை ஓநாய் அடித்துக்கடிக்க, பிணந்தின்னுங் கூளிக் கணங்கள் ஈரலைப் பறிக்க, மூளையைக் குழிநரியிழுக்க, மிகுந்த ஓசையுள்ள பட்சிகளின் இறக்கை நெருக்கத்தினால் வானமும்-மலையும்-மரங்களுமறைய, ஆறுகவும் - சேறுகவும்-மடுவாகவும்- ஓடையாகவும்-கயமாகவும்- காலாகவும் பெருகியோடிய உதிரத்தினாற் கடல்வளைந்த உலகஞ் சிவக்க, பைசாசங்களும் பூதகணங்களும்-பிணங்கி, மறுபடியும் இணங்கி, வராகியை வணங்கி, கைகோத்து ஆடியும் பாடியும் ஓடியுமிருக்க பாம்பாரம்-என்புமாலை-சூலகபாலம்-யாளிவாகனம் - உடுக்கை-பம்பை - இவைகளைக் கொண்டு திரிகின்ற காளிக்கூட்டமும், மணிமுடி யணிந்த மயிடனைத் துணித்த கன்னிப்படையும், குத்துச்சண்டை வெட்டுச்சண்டையில்தேறியகுறளி-கூளிபாரிடம்-இவைகளுங் கூடிக் குலாவிப் போர்க்கள முழுவதும் பொருமித் திரியவுமாயிருந்தது. அன்றியும் ஒரு பேய்ப் பெண்ணானவள் சண்டையிலுருண்ட தரியலர் தலைகளை, அண்டை

யிற் கிடக்கும்யானைத்தலைகளை, குப்பையாய்க் குவிந்த குதிரைத் தலைகளை மலைப்பாம்புடல்களில் வரிசையாய்க்கோத்து, தாலியுரு முதலிய மங்கல சூத்திரமாய்க் கழுத்தில் தரித்து உருவுகள் கோத்துக் கொண்டேனென்று பிரதாபம்பேசித் தன்னைமறந்து வந்து, சற்றே தவறி இரத்தத்தில்வீழ்ந்து ஆழ்ந்து சுழியில்தாழ்ந்து செத்தேனென்று முழுகியெழுந்து திணறிக் கூச்சலிட்டன. அப்போது ஒரு பூதம் ஓடி வந்து ஏற்றக்கோல் போன்ற நீண்ட காத்தைக்காட்ட, "மரத்தைப் பிடித்துக் கரையேறுபவர்"போல் அக்கரத்தைப் பிடித்துக் கரையேறி வந்து, இன்றைக்கொரு தத்தென்று சந்தோஷிக்குஞ் சந்தடிப் பெருக்கமும், அவ்வாறு பிழைத்த அப்பெண்பேயானது தன்னைக் கரையேற்றி விட்ட பூதத்தைப் பிடித்துக்கொண்டு, "எப்போதுமது கைப்பிடித் தேனே அப்போதே உனக்கு நான் பெண்சாதி எனக்கு நீரே புருஷன், இனி வேறு புருஷனை விரும்பேன்" என்று பந்து ஜனங்களுக்குச் சொல்லி, அவர்களனுமதியிற் கலியாணஞ் செய்து கொள்ளுகின்ற ஆரவாரமும், அக்கலியாணத்தில் நிணமாம்சத்தை நிரம்பத்தின்று, மயங்கி, வீழ்ந்து புரளுகின்ற வயிறுதாரிப் பேய்களின் கோஷமும், அர்ச்சுனராஜனுடைய புகழ்ப்பிரதாபத்தைப்பாடி, அவனுக்கு நன்மை யுண்டாகக் கடவதென்று வாழ்த்திக்கூடி, அவனுடைய காண்டீபத் தையும்-அக்ஷயதுணீரத்தையும்-தோத்திரஞ்செய்கின்ற போரொலியும் எங்கும் நிறைந்திருந்தன. இஃதன்றியும் - சோரி வெள்ளமானது வாரிபோலோட, அதில் மடிந்த யானைகள் அவ்வாரியிற்படிந்த திமிங் கலம் போலவும், அதில் வீழ்ந்த குதிரைப் பிணங்கள் திமி யென்னு மீன்போலவும் அதிலுலாவும் வாளாயுத முதலிய மற்றவாயுதங்களெல் லாம் பற்பலவித மச்சம்போலவும், அதிலோடுகின்ற தேர்கள் தேர்த் தட்டுகள் முதலியவை கடல்மேற் செல்கின்ற கப்பல்-கட்டுமரம் - தோணி-படகு இவை போலவு மிருந்தன. பிணங்களாய்க் குவிந்த மேடானது எண்காற் பட்சிகளிருக்கும் பெருமலைபோன்றிருந்தது. மதயானைகள் கொம்பொடிந்து கூக்குரலிடும் ஓசையானது, தீரபுருஷர் ஒருவருக்கொருவர் கூரிய கணையால் குத்திக்கொண்டிரையும் பேரோ சையாலடங்கின. கடையாணி கழன்ருேடுகின்ற சக்கரங்களும் தலை யறுந்துமுண்டமாடும் ஆட்டங்களும் பரதநாட்டிய ஸ்திரீகள் வெட்க முறும்படியா யிருந்தன.

இந்தப் பிரகாரங் கற்பகப்பூமாலையணிந்த பொற்பிரகாசப் பொன் னுலகிற் சிறந்த தேவேந்திரகுமாரனுன பார்த்தன் ஆர்த்து அப்போர்க் களத்தில், யாளிக்கும்-சிங்கத்திற்கும்-யானைக்கும்-புலிக்கும் நிகராகிய வேந்தர் முதலாகிய வீரர்களை, கூளிக்கும், யாளிக்கும், காக்கைக்கும், கழுகுக்கும், அளவில்லாத் தன்கை வாளிக்கும் அவ்வூர்வாழுங் காளிக்கும் விருந்தாக்கித் தேவர்கள் கண்களிக்கும்படி விஜயலட்சுமி யைத் திருமணங் கொண்டருளினுன்.

இந்த வீரப்பிரதாப தீரகாண்டீப யோகவைபோக தியாகமாயோக விஜய மகாராஜன் செலுத்திய வெந்தழற்கணைகளுக்கு யாவரும் பஞ்சு

போற் பறந்து அஞ்சி, பல்லைக்காட்டிக் கெஞ்சி எஞ்சிப்போனார்கள், சிலர் சண்டையைத் துறந்தார்கள். பலர் மண்டைகிழிந்திறந்தார்கள். சிலர் மனம்விட்டவாறே ஓடினார்கள். பலர் மூச்சுவிட்டுத்திணறிவாடினார்கள். இவ்வாறான நிலையைச் சவ்வியசாசி கண்டு வெவ்விய நகையுடன் வெகுண்டு, ஆபத்தினாலோடுகின்றவர்களைப் பாபத்திற்குப் பயப்படாமல் துரத்தி, ''விடாதே! விடாதே'' என்று வெருட்டுவதானான். இஃதல்லாமல், திருதராஷ்டிரகுமாரனான துரியோதனன் துச்சாதனன் - சிந்துராஜமைந்தன் - சௌபலராஜகுமாரன் - குந்திதேவி முதல்பிள்ளையான சூரியதனயன் முதலாகிய வெற்றிவீரர்கள் யாவருந் திசையிலக்கி மதிகலங்கி நிலைகலங்கித் தலைகுலுங்கிப் போகும்படியாய்ச் செந்தீக்கணைகளை முன்னும்பின்னு முடுக்கி, தேர்செலுத்துஞ் சாரதியான உத்தரகுமாரனுந்தானுஞ் சற்றிளைப்பாறும்படியாய்க் கைப்பிடித்த காண்டீபத்தை நாண்தளர்த்தி தோட்புறமாட்டிய அம்பறுத்தூணியை நீக்கி, விரற்பாடு, கரச்சாடு, முன்கைத்தோற்கட்டு பின்கைத்தோற்கட்டு-இவை முதலிய கவசங்களைக்களைந்து இரதத்தின் மீது வைத்து அசுவசஞ்சீவி மந்திரத்தால் குதிரைகளைத்தேற்றி, சாரதியின் சலிப்பையுமாற்றி, தனதாசாரியர்களைப்போற்றி, இன்னமும்பகைவர் ஒன்றுகூடி வருவார்களானால் மெத்தவும் நேர்த்தியென்று பூர்த்தியான தன் சரீரவருத்தந் தீர்த்து முகம்வேர்த்து நின்றான். அத்தருணத்தில் உத்தரகுமாரனுந் தேர்விட்டிழிந்து, குதிரைக்கடிவாளத்தைக் குத்துக்காலுடன் சேர்த்து, குதிரை நடாத்துங் கோலையுந் தேர்மேல் வைத்துக்கட்டி, குதிரைகளைத் தடவித்தட்டி, அர்ச்சுனராஜனைக் கிட்டி, மாடுபிடிசண்டை நடந்த மகத்துவத்தையும் இனிமேல் நடக்க வேண்டிய மார்க்கத்தையும் பேசிக்கொண்டிருந்தான்.

### துரியோதனாதியர் மீட்டுமர்ச்சுனனோடு பொருது அவனது மோகனாஸ்திரத்தால் மயங்கிச் சாய்ந்துபோதல்

ஜனமேஜய மகாராஜனே! இப்பால் பச்சை நிறம்படைத்த பார்த்தனுடன் கொச்சைப்போர்புரிந்து லெச்சைக்கெட்டழிந்து அடிபட்டோடிய பேர்களின்செயலென்னவெனில், இவ்விதமாக ஒவ்வுதலில்லாச் செவ்வியதான சவ்வியசாசி பௌவமாம் படையில் அவ்வவர்மீதிற் கௌரமம்பாய்ந்து எவ்வமென்று வின்னாணிமாட்டி முன்னாகப்பூட்டி இழுத்துவிட்டுச் சற்றிளைப்பாறியிருக்கவும், துவ்வியபாணந் தெவ்வர்களுடைய கொவ்விய பிடரியைக் குறைத்தழித் தொழித்த கொடுமையைக்கௌரவக்குலமகன் கண்டு, செவ்விய கண்கள் செவ்வரக்கினுஞ் சிவந்து, நாப்புரண்டுலர்ந்து, தீப்பொறிமலிந்து, நாடாது நாடி, வாடாதுவாடி, க்ஷாத்திரத்தால் முனைந்து, இந்த நரனுடன் சண்டைவிளைத்து, நலிந்து, மலிந்து, தறிந்து முறிந்து இறந்துபோனாலும் போகிறதேயல்லது, இவனால் என்படைகெட்டு இவ்வளவு அவமானப்பட்டு அஸ்தினாபுரி மட்டும்போய்ச் சேரமாட்டேன் என்று கடகடவென்று பல்கடித்து, மடமடவென்று வில்பிடித்து, படபடவென்று தோளடித்து, கிடுகிடென்று கர்ச்சித்து, தடதடவென்றோடித் தேரேறி,

கடகடவென்றுடப் புரவிசெலுத்தி, படபடவென்று அரவக்கொடி நீட, ஆணவப் பேயாட, அருவினையூடாட, கிராடமராட கர்ணுடர் முதலிய மனனவர்சூழப் படாடம்பங்காட்டி வந்தான்.

இப்படி வராநின்ற துரியோதன மகாராஜனைக் கர்னன் பார்த்து கடுங்கோபங் கொண்டார்த்து, ஆ! தம்பி! நானுயிருடனிருக்கும் போது நீ சண்டைக்குப் போகவேண்டுமா? நில்லு; நில்லு'' என்று தடுத்துத் தன்னுடைய தேரை முன்னே விடுத்து, மன்னவன் ரதத்தைப் பின்னுறவமைத்தான். அன்னகாலையிற் பொன்னணி பூண்ட துரியோதனனுடைய தம்பிமார்களும் பூபாலர் முதலிய பேர்களும் மின்னென வெழுந்து, கர்னனுடன் கலந்து முனைந்தார்கள். பீஷ்மர் துரோணுச்சாரியர் கிருபாச்சாரியர் அசுவத்தாமா நால்வருந் துரியோதனனுடைய மனோபாவமறிந்து தவறு பேசுதல் தவிர்ந்து போனவருடனேர்ந்து புகுந்தார்கள். அப்போது மகமேருக் கொப்பாகிய அத்தினபுரி யென்னும் வெற்றி யானைமீதேறிக் கொண்டு "அர்ச்சுனன் சண்டையை இப்போது அமராடிப் பொடியாக்குவேன். இது எப்போதுந் தப்பாது. எங்கள் பெருமைக்கொப்பேது பாருங்கள்'' என்று விண்டல மேகங்களும்-எண்டிசை நாகங்களும்-மண்டல முதலாகிய அண்டங்களும்-விண்டுதிர்ந்துபோ மென்னத்தக்கதாய் விளைந்திருக்கின்ற இப்போர் முகத்தில், இவனே வெற்றி பெறுவானென்று கொற்றவர் பலரும் மற்றவரெவருங் குறித்துக் கொண்டாடும்படியாய் விகர்னனென்னுங் காளை செண்டென வெழுந்து திரண்ட சேனையுடன் வந்து கலந்தான்.

இஃதல்லாமலும் - பார்த்தன் பாணத்திற்கு அஞ்சி, போர்க்களம் விட்டுப் பிரிந்து, பெண்டு பிள்ளைகள் மேல்பரிந்து பின்னுமுன்னுமாக இரிந்து போன மகுடவர்த்தனர் பட்டவர்த்தனர் முதலிய பேர்களுஞ் சேர்ந்து, எமதர்மராஜன் மேல் எதிர்க்கின்ற உயிர்வகைக் கூட்டம் போல் திரும்பினர்கள். கோபமீறிய குரோதமேறிய நான்குபடைகளும் அதிரதர் - மகாரதர் - சமரதர் - அர்த்தரதர் முதலிய வீராதிவீரர்களும் பொருந்தி, பிருதிவி-அப்பு தேயு-வாயு-ஆகாயம் என்னுமிவ் வைம்பெரும்பூதமும் கலங்கும்படியாய், ஆதிசேடனுடைய பணமகுடமுங் குலுங்கும்படியாகத் துணிந்து, திடதைரிய வீரத்துடன் இளைப்பாறிக் கொண்டு தனித்திருந்து சாரதியுடன் சண்டையின் திறத்தினைப் பேசி நின்ற தனஞ்சயச் சிங்கத்தைத் தட்டியெழுப்பி வளைத்தார்கள். சற்று நேரத்திற்கு முன்னே தனஞ்செயனுல் பட்டபாடும், கெட்ட கேடும், அஸ்திரந்துளைத்த நோயும், பச்சையுதிர மோடிவரும் புண்வாயுங் காயுமுன்னமே ஆயும் அறிவினர் ஆயாசம் பாராமல் போர் புரியப் புகுந்து நாற்றிசையிலும் பரவி நானுவிதமாகிய அஸ்திரசஸ்திர ஆயுதங்களை விஸ்தாரமாக விடுத்து அடித்தார்கள். அவ்வவர்தொடுக்கும் அம்புகும்புகளை அர்ச்சுனன் கண்டு, இரதத்தின் மேற்கொண்டு, எதிர்வந்த பேர்கள் பிதுர்கலங்கிப் போகும்படி விஜய காண்டீபம் வளைத்து நாணொலி வளைத்து, முளைத்த முழுமதிபோல் மதர்த்து

நின்முன். இந்நாயகனை நரன் தேரேறு முன்னமே வாரேறு தனச் சுதக்கணை மைந்தனை உத்தரகுமாரனெனுஞ் சாரதி கனையாறிய குதிரைகளைத் தேறிற் பூட்டி, கலகலவென்று ஒலிக்குஞ் சதங்கைகள் கர்க்கரத்தொனியுடன் கலந்து முழங்க முடுக்கினன். அர்ச்சுனராஜன் தேர் அசைந்தாடி யோடும்பொழுது மணிமுடிதரித்த மன்னர் பலரும் காரிடி - நீரிடி - நெருப்பிடி - பேரிடியென்ன நெடுநாணோசை காட்டி, அளவுபடாத அம்புகளைச் சொறிந்தார்கள். அதுவுமில்லாமல் அக்கினி பற்றி யெழுகின்ற கொழு-மழு-தண்டாயுதம்-சூலம்-அங்குசம்-பாசம் உலக்கை-சக்ராயுதம்-தோமரம்-ஈட்டி-வாங்கு-இவைமுதலிய ஆயுதங் களை முக்கண்மூர்த்திக் கொப்பான பற்குணன் பேரிலும், சாரதிமீதி லும், தேரின்பரப்பிலும், குதிரைகளுடம்பிலும் படும்படியாய் வீசி முடுக்கினார்கள்.

ஈதன்றியும்-யானைமே லிருந்தவர்கள்-தேர்மேல் அமர்ந்தவர்கள்-குதிரைமேற் கொண்டவர்கள்-பூமிமேல் நின்றவர்கள் ஆகிய இவர் கள் தங்கள் தங்களுக் கிஷ்டமானபடி முனைந்து, தனிப்படை கொண்டு ஜாடினார்கள். அப்போது பூண்டுலங்குந் தேரிலிருந்த பாண்டு புத்திரனாகிய பார்த்தன் ஏமந்தருதுக் காலத்தில் மூடுபனி யினால் மறைக்கப்பட்ட சூரியன் போலிருந்தான்; அவ்விதமாகச் சற்று நேரம் ஒளிமழுங்கி உருத்தெரியாமலிருந்து, உடனே யோசித்து விரைந்து, தனக்கெதிர்நேரிட்ட தரியலர்களையும்-அவர்களால் தாக்கிய சரக்கணைகளையும் - சட்டை பண்ணாதவனாய்ப் பட்டங்கட்டிய முடித் தலையாட்டி பகபக நகைத்துப் பற்காட்டி, உடலுமுயிரும் பதைக்க நம் முடன் அடல் விளைக்கவந்த இத்தனைபேர்களும்பட வதைத்துவிட வேண்டுமென்று பதறி நினைத்து, மறுபடியும் பொறுத்து, விஜயகாண் டிபத்தை யெடுத்து நிறுத்தி வளைத்து, நாணேற்றி, பூர்வத்தில் தனக் குத் தேவேந்திரன்கொடுத்திருந்த இந்திராஸ்திரத்தையேந்தி மந்திரஞ் சொல்லி வணங்கி இந்திரத் திக்கினிலுந்தி, யமாஸ்திரத்தை எடுத்துப் பூசித்துத் தென்திசையிற்செலுத்தி, வருணாஸ்திரத்தைவணங்கி மேற் குத்திக்கில் முடுக்கி, குபேராஸ்திரத்தைக் கைக்கொண்டு கும்பிட்டுப் பணிந்து வடக்குத்திக்கில் விடுத்து, இந்திரன் முதலாயுள்ள அஷ்டதிக் குப்பாலர்களையுந்துதித்து. நான்குதிக்கிலும் பாங்குடன் நடந்து திரும்பி நாண் தளர்த்திய காண்டிபத்தையும் அம்பருத்தூணியையும் இரதத் தின்மேல் வைத்துவிட்டு அக்கால் நடக்கின்ற விந்தையான வேடிக் கைகளைப் பார்த்துக்கொண்டிருந்தான். இப்படி செருக்கிநின்ற தனஞ் செயனையும்-அவனுலேவிய சாயகங்களையும், அந்தச் சாயகங்கள் தங் களைத் தடைப்படுத்துகின்ற தந்திரங்களையும் - அவன் கற்றிருக்கின்ற தநுர்வேத மந்திர சுதந்திரங்களையுந் துரியோதனன் படைவீரர்கள் தெரிந்துகொள்ள மாட்டாதவர்களாய், பண்டாட்ட மாவதே கொண் டாட்ட மென்னக் குறித்து, சப்தமேக மெழுந்ததுபோற் கவிந்து, மின்னலிடியும் விரிட்டவாறுபோல் முழங்கி விற்பிடித்து கல்வரு

ஷம் பொழியுங் காட்சிபோல் அஸ்திரங்களைச்சொரிந்து, வேண்டிய மட்டும் பரிந்து சலிப்பில்லாமற் பாடுபட்டார்கள்.

இவ்வாறு தம்மாற் கூடியவரையிலுந் தாட்சியில்லாமல் முடுக்கிப் பிரயோகித்த சரங்களையெல்லாம் அர்ச்சுனன் விட்ட நான்கு தேவ தாஸ்திரங்களும் அப்பாலிப்பாற் செல்லவொட்டாமல் முடுக்கி, அவ் வர்ச்சுனன் பேரிற் போகவொட்டாமல் மடக்கி, அப்பாணங்களின் வேகத்தையும் அடக்கி, ஆவெனத் திறந்த வாயால் அமுக்கி முறுக்கி, வாரியடித்து நொறுக்கி, தாறுமாறாய் வேறுவேறாய்க் கூறுகூறாய் நீறு நீறாய்ச் செய்யுந் தன்மையை மந்தரமலைபோ லுயர்ந்த தோளிணையு டைய பீஷ்மர் துரோணாச்சாரியர் கிருபாச்சாரியர் அசுவத்தாமா முத லிய சாந்தரும் துரியோதனராஜன் முதலாகிய மாந்தரும் பார்த்துத் தலை கவிழ்ந்து குனிந்து, மதிமயங்கி நினைந்து, "ஐயோ! இந்த அர்ச் சுனனால் முன்னாடி அடிபட்டு இடைந்தோமே, அதனுடன் போய் விடாமல் திரும்பியெதிர்த்தும் வெல்லமாட்டாமல், இப்போது துரியோ தனனுடன் அடிபட ஆளானோமே, ஓ! ஓ!! வெகுநாளைக்கு நிலை நிற்கும்படியான அபகீர்த்தியை யடைந்தோமே! இதுவரையிலும் நாம் பெற்றிருந்த சுபகீர்த்தியை யிழந்தோமே! வீணாக வேசாறி நொந் தோமே! பூணாரம் பெற்ற புரந்தரன் மைந்தன் செய்வனவற்றைச் செய்து மெய்வருத்த மில்லாமல் விசாலமுற்றிருக்கிறானே! நாம் இதற் கென்ன செய்வோம்! என்று வெட்கப்பட்டு வெந்து வெதும்பி யொதுங்கிப் போனார்கள். இப்பால் வானத்தினின்று வேடிக்கை கண்ட வானவர் மாதவர் முதலாயினோர் மகிழ்ச்சி மேற்கொண்டு, மாதவி கொழுநனைப்புகழ்ந்து, மலர்மழை பொழிந்து வாழ்த்தினார் கள். சரஸ்வதி நாயகனான சதுர்முகப் பிரமனானவர் சாக்ஷாத்கார மான சங்காழி முகுந்தனுடைய தனியருளென்று சந்தோஷங்கொண் டாடினார். அமராபதிக் கதிபனாகிய தேவேந்திரன் காலகேயரை வென்று நமராயுளளித்த விஜயன் நவநீத சோரநாதன் மைத்துன னென்று நாடிப்புகழ்ந் தாடினான். அளகாபுரிக்கிறைவனான குபேரன் சந்திரசேகர சடாதரனருளால் இந்திராதிப ரெவர்க்கும் முந்திய முதற் காரணமாகி வந்தவதரித்த மரகத நிறத்தனே அர்ச்சுனனுமனென் றானந்தங் கொண்டான். பாண்டு பூபதியானவன் மற்றப் பார்த்திபர் பலரோடுங் கலந்து, நமது காண்டீபன் வெகுண்டு தூண்டியசரத்தாற் செத்தழிந் தொழிந்த சேனையும் யானையும் இத்தனைகோடி யென்றியம் பப்படாமையால் நல்ல புத்திரப்பேறு பெற்றன மென்று மெத்தவும் பேசி மேன்மையடைந்தனன். அமரர்-சித்தர்-அசுரர் தைத்தியர்-கரு டர்-கின்னரர்-நிருதர்-கிம்புருடர் - கந்தர்வர் - இயக்கர் - விஞ்சையர்- பூதர்-பைசாசர்-அர்த்தரதர்-முனிவர்-உரகர் - ஆகாயவாசிகள்- போக பூமியர் - ஏகாதசருத்திரர்-துவாதசாதித்தர்-அஷ்டவசுக்கள்-இவர்கள் முதலாகிய பேர்களியாவரும், இந்தச் சவ்வியசாசியின் சாதுரியத் தைக் கண்களாற் கண்டு களித்துத் தங்களாலுந் தாங்கமாட்டாமல் ஓங்கிய மலைக்கண் ணுவப்புற்றிருந்தனர்.

இவ்வா றெல்லோருங் கொண்டாடிக் கொண்டிருக்கின்ற அந்த வேளையில் விபற்சு என்னும் பெயர்பெற்ற விஜயன் மறுபடியும் வில்லை யெடுத்து நாண் தொடுத்து, தானினைத்த காரியஞ் சித்தியாகும்படி கருதி மோகனாஸ்திரம் பிடித்து, பூசாவிதிகள் முடித்து, பிரணவ மந்திரம் படித்து, பிரதாபராமன்போல் விடுத்தான்; அதனால் பெருங் கும்புகளெல்லாந் தும்புகளெழும்படியாய்ச் சிதறவாடி ஓடின. அவர் கள் படும்பாட்டை விஜயன் யோகபுருஷன் போல் நாடிப் பார்த்துக் கொண்டிருந்தான். இங்ஙனம் நின்றெழுந்த மோகனாஸ்திரமானது தியாகம் வாங்கச்சென்ற தெரிவைபோற் சென்று பிராணத்தியாகம் பண்ணுவதற்குப் பின்வாங்காமல் முன்னேறி மற்போர் விளைக்கும் பற்பல வீரர்களையும் விற்பன விவேகிகளையும்-சொப்பனங் காண்பவர் போற் சோர்வுறச்செய்து மயக்கியபோது, சண்டை செய்ய வந்த திறமும் தாங்கள் புரிந்த மறமும் தேகநிறமும்-துறந்து மறந்து, மடிந்தவர்களைப்போற் பூமிமேற் படிந்து போனார்கள். இஃதன்றியும் தேர்மே லிருந்தவர்கள் தேரின் மேலும், யானைமேல் வந்தவர்கள் யானையின் பேரிலும், குதிரைமீது வந்தவர்கள் குதிரையின் பேரிலும், நிலத்தின்மேல் நின்றவர்கள் நிலத்தின்பேரிலும் இருந்திருந்தபடி பெருந் திகிலடைந்து, இந்தலோகம்-அந்தலோகம் எந்தலோகமோ வென்று நிலைதவறித் தலையுதறிப் பொறிசிதறிப் புலன்பதறிச் சாய்ந்து விட்டார்கள். அவர்கள்படும் பாட்டைப்பார்த்த பார்த்தனானவன் மன திற்கிசைந்த சாரதியான உத்தரகுமாரனுடைய சித்திரமுகத்தைப் பரிந்துநோக்கி பிரயோசனமற்ற ஒருநகை புரிந்தான். பிரயோசனமில் லாத நகையாதெனில்-இரும்புக்கு விழுகின்ற சம்மட்டியானது நெருப் புக்கும் விழுவதுபோல, துரியோதனாதியர் படப்போகின்ற அவமானத் தைத் துரோணர் முதலிய பெரியோர்களும் படப்போகின்றார்களே என்று வெறுப்பினால் நகைத்த வெறுநகை என்று சொன்னோம்.

### அர்ச்சுனனேவலால் உத்தரகுமாரன் தன் தங்கைக்குத் தரணிபர் தலையாடை பறித்துவருதல்

இப்படி யாதொரு சந்துஷ்டியு மில்லாமல் வெறுப்பாய் நகைத்த தனஞ்செயனானவன் விராடகுமாரனைத் தழுவி, "அப்பா உத்தரகுமா ரனே! உன் சகோதரியான உத்தரை சொல்லிய சங்கதி ஞாபகத்தி லுண்டோ இல்லையோ? மறந்துவிட்டாயோ? ஜெயங்கொண்ட தன் மையால் மகிழ்ந்துவிட்டாயோ?" என்று கேட்டான். அவ்வசனங் கேட்ட உத்தரகுமாரன் கண்களிருண்டு, மனமருண்டு, சிந்தைகலங்கி, தீரம் விலங்கி, திடுக்கிட்டலமலங்கித் தியங்கி, ஒன்றுந் தோன்றாமல் மயங்கி, உறக்கமுந் துன்பமும் ஒருவாறடைந்து, இப்பேர்ப்பட்ட மகா புருஷனுடைய அருமைபெருமை தெரியாமல் நமது தங்கை என்ன சொன்னாளோ? ஏது காரணமோ? என்று பெருமூச்செறிந்து, பற்குன னைப் பணிந்து, பயம்விட்டுத் துணிந்து "என்னிஷ்ட தெய்வமான ஏந் தலே! அர்யாதவளான சிறியாள் குறியாமற் பேசிய கொடுமொழிக

ளேதேனு முண்டாயின், அம்மொழியை என்னைப்பற்றி மன்னிக்க வேண்டும்''என்று வாய்பொத்திக்கைகட்டி மனநடுங்கிச் சொன்னான். அவனது அடக்கம், ஒடுக்கம், நடுக்கம், வணக்க முதலியவற்றைக் குறிப்பினு லுணர்ந்துகொண்ட நரனனவன் உத்தரகுமாரனுடைய முது கைத்தட்டி, ''அப்பா குழந்தாய்! மற்றொன்றுமல்ல! நீ வாய்வறளாதே; மனந்தளராதே; மதிபுரளாதே. ஓ வல்லவனே! இப்போது நாம் போக் கிய மோகனக்கணையால் அயர்ந்து விழுந்த யாவரும் இன்னமொரு முகூர்த்தத்திற்குள்ளாக மயக்க நீங்கி யெழுந்திருப்பார்கள். இதற்கு முன்னே நீ அவர்களிடத்திற்குப் போய், அவர்கள் கிரீடத்திற் சம்பிர தாயமாய்க் கட்டிக்கொண்டிருக்கின்ற வஸ்திரங்களையும் விருதுகருதித் தொடுத்த இரத்தினச்சிலைகளையும் பக்குவமாய்ப் பரித்துவருவாயானுல், உன் தங்கை கேட்டுக்கொண்ட வண்ணம் பொம்மைகட் கணிந்து விளையாடக் கொடுக்கலாம்'' என்று புகன்றான். உத்தரன் இதைக்கேட் டதும் பத்தரைமாற்றுப் பசும்பொன்போலச் சித்தமுவந்து தேர்ந்து, சிந்தைதெளிந்து ஜயமென்றெழுந்தான்.

அப்படிச் செல்லவெழுந்த உத்தரகுமாரனைப் பராக்கிரமக் கொடி படைத்த பார்த்தனழைத்து, ''விராடபதி குமாரனே! இராஜாதிராஜ னை துரியோதனமகாராஜ னணிந்திருக்கும் வஸ்திரமானது கருத்த மணிகள் பொறுத்த நிறத்தையுடையது. அசுவத்தாமாவுந் துச்சாதன னும் தரித்திருக்கும் வஸ்திரம் நவமணிகளழுத்திய கோலத்தை யுடை யது. கொடையாளனாகிய கர்னராஜனுடைய சிரோவஸ்திரமானது நான்குபுறமும் நவமணிபதித்து மரகதநிறத்தை மாற்றியிருப்பது. மறு வேதமறிந்த தனுர்வேதிய ரிருவருந் தரித்த கலையானது சுற்று முத்து வைத்துக் கோத்த குற்றமற்ற வெண்பட்டாற் சமைந்தது. இன்னு முள்ள மன்னவர் துணிகள் பன்னிறவன்னமா யிருக்கும், அன்னவை களில் உன் கண்ணுக்கிசைந்தனவெல்லாங் கழற்றிக் கட்டிக்கொண்டு வந்துவிடு. அப்படி வரும்போது எங்களையாவாகிய பீஷ்மரிடத்திற்குப் போகாதே; அவரது கலை மெத்தச் சிறந்திருக்கும். அதன்பேரி லாசை வைக்காதே, அவரிந்த மோகனுஸ்திர மயக்கத்தில் மூழ்கமாட்டார். நீ யொருவேளை அவரைக் கிட்டிப் போவாயானுல் அவர் ஒரே வெட் டாய்வெட்டியெறிவார். ஆகையாலவரை எட்டிப்பாராதே. மற்றவர்க ளிடத்தில் தாராளமாகச்சென்று அவரவர்களுடைய தலைத் துணியைக் கைக்கொண்டு விரைவில்வந்துவிடு. மேலும் நீ கால்நடையாகச் செல் லாதே. அவர்கள் படும் பாட்டைக்கண்டு ஒன்றுஞ்சொல்லாதே. கண் மூடிக்கலங்கிக் கசங்கிக்கிடப்பவரைக் கொல்லாதே; அவர்களுன்னைக் கண்டு விட்டால், ஐயோ! அது பொல்லாதே; நீ யவ்விடங்களில் தாம சப்பட்டு நில்லாதே. நமது தேரைச் செலுத்திக்கொண்டுபோய்ச் சீக்கி ரத்தில் வரக்கடவாய்'' என்று சொல்ல உத்தரன் அந்தப்பிரகாரமே செய்வேனென்று ரதமூர்ந்து சென்று, கால்மாடு தலைமாடாக விழுந்து உறங்கி யிருக்கின்ற பகைவர்களைக் கண்டு, அவரவருடைய தலைத் துணியைப் பாய்ந்து பரிப்பதாயினன்.

அப்போது மாய்ந்தவர்போற் சாய்ந்து கிடக்கின்ற வேந்தர்களெல்லாரும் விழியைத் திறக்காமலிருந்தார்கள். சிலபேர்கள் விழித்த பார்வையுடன் விரைத்தாற்போ லிருந்தார்கள். ஆவெனத்திறந்த வாயர்கள் சிலபேர். ஓவென ஒலிக்கும் பேர்கள் பலபேர். ஊவென ஓசையிட்டுளறினோர் சிலபேர். ஏயெனவேங்கி யெண்ணமிட்டோர்பலபேர். நாக்கைக்குழப்பி நலிந்தோர் சிலபேர். வாக்குளறி வலிப்போர் பலபேர். நழுவாமற்பிடித்த எழுவாயுதத்துடன் விழுவார் சிலபேர். விழுவாரையெல்லாம் விழியாரக்கண்டு அழுவார் பலபேர். கால்தவறி மண்ணைக் கவ்வுவோர் சிலபேர். மேல்சுவறி ரத்தவெள்ளத் துழலுவோர் பலபேர். இஃதன்றியும் கைகாலசைவது குறியாமலும், மெய் சாய்வதினையறியாமலும், வாயில் ஈப்புகுவது தெரியாமலும், நோயில் தீப்படுவது தரியாமலும், பல்லைக் காட்டிப் பரதவித்து, வில்லைநாட்டி விலவிலத்து, பலவித ஜாலமாய், தலைவிரிகோலமாய், யாவருங் பதைபதைத்திருந்தார்கள். இப்படியா யிருந்த பேர்களைப் பார்த்த உத்தரகுமாரன் பையநடந்து, என் செய்வோமென்று அர்ச்சுனன் சொன்ன சைகையை மறந்து, அவனது ஆதரவைப் பூரணமாக நினைந்து கையுங்காலும் கடகடவென்று குலுங்கி, நடுங்கி, மெய்யும் வாயும் படபடவென்று அலமலங்கி யொடுங்கி, பேய்போற் பதறிப் பின்னுமுன்னும் போகத் தொடங்கி, பீஷ்மர் இருந்தநிலையிற் போய்ப்பார்த்தான். மெய்விரதசீலராகிய பீஷ்மரானவர் கண்ணையுருட்டிக் காட்டி விழித்து,வீரர்பார்வை நாட்டியிருந்தார். அவரைக்கண்டமாத்திரத்தில்ஒருதரம்வேர்த்து. பயங்கரத்துட னூர்த்து, நான்குபுறமும் பார்த்து, சித்திரச்சிலைவிஜயனைச் சிந்தித்து திட தீரத்துடன் கனைத்து, வந்த காரியத்தை நினைத்து வஸ்திரம் பறிக்கத் துணிந்து, வெற்றி வீரர்களின் பட்டுத் துணிகளில் ஒன்றையும் விட்டு விடாமல் தொட்டுப் பறித்துப் பெருமூட்டை கட்டித் தேர்மேலேற்றி, காற்றைப்போலிரைந்து செல்லும் குதிரைகளை முடுக்கிக் கணப்போதில் வந்து சேர்ந்தான். இந்தப்படி அச்சமில்லாமல் சென்று மச்சராஜன் மைந்தன் கொண்டுவந்த துணிமூட்டையைப் பச்சைமேனிப் பற்குணன் கண்டு, அவனை மிகவும் கொண்டாடி மகிழ்ச்சி யடைந்து புகழ்ச்சியாய்ப் பார்த்திருந்தான்.

### மன்னவர்யாவரும் மயக்கம்நீங்கி பீஷ்மரால் தங்கள் தலையாடைபோனதறிந்து உடனே அத்தினபுரிக்குப் பிரயாணமாதல்

இப்பால் அர்ச்சுனன் கணையால் அடிபட்டு நொந்து, மெலிந்து கிடந்த கெடிவிர வர்க்கமும் படியாளு மன்னரும் நஞ்சொழிந்த நாகம்போல் நெளிந்து, தங்களைத் தாங்களே யறிந்து, தலைக்கேறிய மயக்கந் தெளிந்து தத்தித்தடுமாறிச் செறிந்து, மெத்தனவெழுந்து பித்தர்போல் விழுந்து, எக்காலு நீங்காததுக்கமும்-துயரமும்-வெட்கமும்-நாணமும் விசனமும்கொண்டு, "ஏதேது? இனி தலையெடுக்கப்போகிறதில்லை" என்று சொல்லும்படிக் கிருந்தார்கள். சுப்பிரதீபம் போன்ற அர்ச்சுனராஜனை எண்ணி மதித்து அவனுக்கெதிர் வரமாட்டாமல் தியங்கி சிவனுக் கெதிர்செல்ல நாணுந் திரிபுராதிகளைப்போல் திடமற்றவர்

களாகி, திகிலடைந்த மனமுற்றவர்களாய், திறலழிந்தவர்களாய், வறண்டுபோன நெஞ்சும் நாக்கும் - சுருண்டுபோன ஈரலும் குடலும், துன்பப்படாமல் சிறிது ஜலமுண்டு நனையச் செய்துகொண்டு, இணங்கினேரை இன்பமுடன் காக்கும் கருணைக்கடலாகிய கங்கா புத்திரரை நோக்கி, "ஓ காங்கேயனே! இதற்கென்ன செய்வோம்? மயக்கமெங்களைவிட்டு மாயவில்லையே தியக்கமெங்களைவிட்டுத் தீர வில்லையே" என்று ஏங்கினர். மதனுக்கிடங்கொடாத மகாவிரத பீஷ்மர் உடனே எப்புவனத்தும் ஒப்பில்லாத மற்புயவல்லவனை சுயோதன பாக்கியவானுக்கெதிர் சென்று நின்று, "ஓ யோக்கியவானே! என்வாக்கியத்தை இனியேனுங்கேள். இப்போது எல்லாருயிரையும் வல்லான் கைப் பம்பரம்போலாட்டி வாட்டவந்த இவ்வர்ச்சுனனேடு பகைத்துப் பதறிப்போ யெதிர்த்து யுத்தம் பண்ணுவதற்கு தேவர்களாலும் அத்தேவர்களைப் பெற்ற மூவர்களாலும் ஆகாது. இனிமேல் யுத்தகளை நாடி வெற்றிப் போர் புரிவோமென்று என்றென்றைக்கும் எண்ண வேண்டாம். அப்பா துரியோதனு! நீயாவது மற்றும் யாராவது இனி ஒருவேளை கிரகசார சாமானியத்தாற் சண்டைபோடக் கருதுவீர்களானல் மெய்யாகவே பிராணன்பெற மாட்டீர்கள். அஃதென்னத்தினு லென்ருல், அவனுந்திய மோகனஸ்திரத்தால் நாமெல்லோரும் உயிர்சிந்தியவாறுபோலயர்ந்து தலைசாய்ந்து கிடந்த சமயத்தில், ஏதோ ஒருநினைவுகொண்டு தன்சாரதியையனுப்பி, அவரவர் தலையை விரைவிற் கொண்டுவாவென்று அனுப்பி விடுவான். அந்தச் சொல்லுக் கிரண்டில்லாமல் இதுவரையில் நமது பிராணன் போயிருக்கலாம். அதற்குச் சாட்சியாதெனில் சற்றுநேரத்திற்கு முன்னே செத்தவர்போலொடுங்கிக் கிடந்த நம்மைச் சுற்றிப் பார்த்து வரும்படியாய் உத்தர குமாரனை யனுப்பினுன் போலும். அவன் நமது தலையிலிருந்து தனக்கு வேண்டியவற்றைச் சுற்றிக் கொண்டு போனுன். அதற்குத் திருஷ்டாந்தம் உங்களுங்கள் தலையிலிருப்பதைத் தடவிப் பாருங்கள்" என்ருர்.

அப்போது வேந்தர்கள் தங்கள் தங்கள் தலையைத் தடவிப்பார்த்து மல்லாமல் ஒருவர் தலையை யொருவர் பார்த்து உன் தலைத்துணி யெங்கே? என் தலைத்துணி யெங்கே? என்று பெருங்கூச்சலிட்டு "ஐயையோ! தலைத்துணியை கொண்டுபோன சாதுரியனுக்கு நமது தலையைத் தறித்துக்கொண்டுபோவது முடியாத காரியமா? ஓ! ஓ!! ஓ!!! வெகு சுளுவில் முடித்துக்கொள்ளலாம். அந்த மட்டும் நம்மைச் சும்மாவிட்டுப்போனது நமது மனைவிமார்களின் மாங்கல்யபலமே யாகும். ஆ! ஆ! ஹா! என்ன ஆச்சரியம்!" என்று மகிழ்ந்து பீஷ்மரைப் புகழ்ந்து தேவரீர் சொன்ன வார்த்தைக்கு வேறில்லை யென்ருர்கள். அப்போது பீஷ்மர் "இப்படியே என்சொல்வழி நிற்பீர்களானல், நாமெல்லோருஞ் சௌக்கியம் பெறலாம். அஃதெப்படியெனில் - கடல் நிறம்பெற்ற காண்டீபனனவன் உயிர்ப்பிச்சை கொடுத்தானென்று உரக்கக்கூவி, மங்களகரமுண்டாகும்படி அவனை

வாழ்த்தி, நம்முடைய படை முழக்கத்தைத் தாழ்த்தி, அஸ்தினு புரத்தை நோக்கிப் போவதே நேர்த்தி'' என்று கூறலும், உடனே மன்னன் முதலிய தம்பியர் பலரும், கர்னன் முதலிய நண்பினர் சிலருஞ் சத்தியஞ் சத்தியமென்று திரும்பி, பகீரதி புத்திரனுரைத்த புத்தியை விரும்பிப் போனர்கள். அத்தருணத்தில் அரவக்கொடிக் கதிபனுன துரியோதனனுடைய சகோதரர்களில் விகர்னராஜனென்பவன் அத்தினபுரியென்னும் பட்டத்துயானை மேலேறி, தன் தமையனை முன்னடத்தி, அவனை மறைத்துக்கொண்டு தான் பின்னுகப்போனன். இரதகஜதுரக பதாதியர் முதலிய மன்னர் மண்டலீகர் யாவரும் பெருங்காற்றிற் பறக்கின்ற இலவம்பஞ்சுபோல் திசா திசைகளை நோக்கிப் பறந்து, கரத்தை சிரத்திற் குவித்துச் செறிந்து, துரியோதனன் மீது மனமுறிந்து மெய்விரதன் தம்பியான விஜயனைப்புகழ்ந்து, உயிர்ப்பிச்சை யளித்தான் உத்தமனென்று மகிழ்ந்து ஊர்முகநாடி யோடினர்கள்.

### அந்தினபுரிக்குச் செல்லும் துரியோதனனை அர்ச்சுனன் அவமானஞ் செய்தனுப்புதல்

இப்பால் அர்ச்சுனன் தொடுத்த பாணங்களினுல் அழிந்தவரொழிய, ஓடி யொளிந்த சேனு சயினியங்களுந் துரியோதன மகாராஜனுந் திரும்பிப் போவதை ஆண்மையிலுயர்ந்த அர்ச்சுனன் பார்த்து, அடிவயி றெரிய ஆர்ப்பறித்து, வேர்த்து, தேவர்கள் முதலாயினேருந் திடுக்கிடும்படியாய் ஆர்த்து, அவனஞ்சும்படியான அவமானச் சொற்களை யெல்லாங் கோத்து, ''ஓ கௌரவகுல முதல்வனே! ஓ கீர்த்தி படைத்த மூர்த்த புண்ணியனே! ஓ கெடிஸ்தலாதிபனே! ஓ வணங்காமுடி மன்னவனே! ஓ அரவக்கொடியானே! ஓ நந்தியாவட்ட மாலை தரித்த நரேந்திரனே! ஓ துரியோதன மகாராஜனே! ஓ அவனியையாளும் நேயனே! ஓ அபத்தம் பேசும் வாயனே! மாயச் சூதாடக்கற்ற வஞ்சகச் சகுனிமாமனிருக்க, மகாபதி விரதைகளை வஸ்திரமுரியக் கற்ற துச்சாதனத் தம்பி யிருக்க, வாயாடக்கற்ற தேர்ப்பாகன் வளர்ப்புப்பிள்ளையான கர்னனிருக்க, உனக்குப் போதுமான புத்தியிருக்க, சத்துருக்களை வெல்லுஞ் சமர்த்திருக்க, சத்தியந்தவறி, வாயாடிப் படிக்குஞ் சாதுரியமிருக்க, இத்தனை பலமும் அபல மாகும்படியாய் ஏன் ஓடுகிருய்? பூர்வம் அரசர்கள் கூடிய அஸ்தினுபுரத்து ராஜ சபையில் இரத்தின முடிபொறுத்த உன் தலையாட, உன் காதிலணிந்த குழையாட, உன் வாயிலடங்கிய நாவாட, கட்டுரை பேசி வாதாடிச் சொக்கட்டானுட்டத்தில் எங்களை வென்று காட்டிலோட்டிவிடக் கற்ற நீ, இப்போது சண்டை நேர்ந்த இவ்விடத்தில் வில்திறங் காட்டி வெற்றிபெற மாட்டாமல் தலை கவிழ்ந்து தலைத்துணி யிழந்து உயிர்கொண்டு போவது பொல்லாது இதைப் பார்க்கிலுஞ் சாவது மேல். ஓ காவலனே! யுத்தத்திற் செத்துப் போவது மெத்தவும் புகழ்ச்சி யல்லவோ? மானங்கெட்ட பிற்பாடு பிராணனிருக்க வேண்டுமோ? ஆ! மன்னவனே! அரவக்கொடியும்

அணிமணி முடியும் - வெள்ளைக் குடையும் - வேண்டிய படையும் - சங்கத்தொனியும்-எங்குமுழங்கிநெருங்க இந்தவிராடபுரத்திற்கு வந்து, சுத்தவீரக் கர்த்தனைப்போற் பசுமந்தைகளை மடக்கினையல்லவா? நீ யோட்டிய மாட்டுமந்தையை எதிரிகளிடத்தில் விட்டுப்போட்டு, நீ கூட்டி வந்த சேனைகளிலும் பாதி மடியக்கொடுத்து, உயிரிழந்தபிணம் போல் ஊரைநோக்கிப் போகின்றாயே. இதுவுமொரு வீரந்தானா இஃதல்லாமலும்-இப்போது நீ போய்ப் பட்டினஞ் சேர்ந்தவுடனே உன்னைக் கலந்த மங்கைமார்கள் என்ன செய்தியென்று எதிர்நின்று கேட்டால், அந்த உரியவர்களுக்கு என்ன சொல்லப்போகின்றாய்? ஐயோ, அப்பா! பெரியதனம் படைத்த பேயா? அப்பேர்ப்பட்ட பெண்களுக்கெதிரில் நாணாமல், தலைகோணாமல் மானம்விட்டு நடப்பாயோ? அடா பாவி! இப்போது நீ யாளும் பூமியையும் உன்னுயிரையுந் தீங்கில்லாமல் வாங்குவதற்கு என் தமையன் பீமசேன மகாராஜன் காத்திருக்கின்றாரென்றெண்ணி, இன்றையதின முன்னைக் கொன்றுவிடாமல் வெற்றிமாத்திரம் கொண்டேன். இஃதன்றியும்-பொறுமையாக உன் பிராணனையும் விட்டேன்! இல்லாவிட்டால்-நீயும் உன்னைச் சார்ந்த படைமன்னரும் எனக்கோர் லக்ஷியமோ? எப்போது மலக்ஷியமே! அது உனக்கு விலக்ஷணமாகத் தெரியுமல்லவா? ஓ குலக்ஷயம் பண்ணப்பிறந்த கோமானே!'' என்று வெகுண்டு நிந்தையான வார்த்தை புகன்று நிஷ்கடூரம் பேசியகாலையில், இராஜாதிராஜன் அர்ச்சுனன் சொன்ன மொழியைக் கேட்டுங் கேளாத செவிடனைப்போல் இரு தோளும் வாடி, பூரிப்படங்கி, துன்ப இருளால் மூடப்பட்டு, ஆமை போலடங்கி ஊமைபோற் போனான். அந்தச் சமயத்தில் பச்சைநிறம் பெற்ற பற்குனனானவன் வஜ்ரகண்ட வாளியொன்றேவி, விகர்னனேறிச்சென்ற வீரப்பட்ட யானையை வெட்டிமுடக்கி, துரியோதனன் வெட்டவெளியாய்த் தெரிய மடக்கி, மீட்டும் பாரிய வில்லிற் கூரிய முனைப் பகழி யடுக்கி, அரவக்கொடி தரித்த துரியோதனனுடைய வணங்காமுடியிற் பொறுத்த கிரீடத்தை யுடைத்து முடுக்கி, மொட்டைத்தலையுடனிருந்த அத்துட்டனைப் பார்த்துப் பொட்டென நகைத்தான். அதுகாலையில் துரியோதனனுடைய முகமானது சந்திரனைக் கண்ட சரோருக மலர்போற் குவிந்து கரிந்து பொறிந்து செறிந்த கண் கலக்கமுள்ளவனாய், ஒட்டத்தின்பேரில்நாட்டம்வைத்துப் போயினான்.

### அர்ச்சுனன் அத்தினபுரிக்கேகும் ஆசாரியற்கு அச்சந்திர வந்தன விடைபெற்று உத்தரனோடு வசனித்திருத்தல்

இந்தப்பிரகாரம் பொல்லாங்குக்கு இருப்பிடமான வஞ்சக நெஞ்சனைச் சேர்ந்த பூபாலர்களும்கோபாலர்களும் யுத்தமுனைதொட்டுப் புறமுதுகிட்டுப் போராசைவிட்டுப் பேராசை கெட்டுப் போகுங்காலையில், கற்பகக்காவைப்போற் கருணையும் பிரக்யாதியும்பெற்ற மகா வாதையுடைத்தாய்த் தேர்மீதிருந்த செஞ்சிலைவிஜயன் மச்சகுலாதிபன் முகத்தைப் பார்த்து, ''ஓ சித்தசனுக் கொப்பான உத்தரகுமாரனே! நமது மச்சதேசத்திலுள்ள மாட்டை மடக்கி வெற்றிக்கொண்டு போகவந்த

வேந்தன் முதலாகிய வீரர்கள் யாவரும் யுத்தம்பண்ணி நம்மைச் செயிக்கச் சத்துமற்றவர்களாய்ச் செத்தவர்போக மற்றவர்கள் மெத்த நொந்து, சிந்தைநைந்து, உயிர்மாத்திரங்கொண்டோடுகின்றூர்கள். நம் முடைய காரியம் ஜயமாய்விட்டது. இந்தமட்டிலு மிவர்களை விட்டு விடாமல் இன்னமு மேல்விழுந்து தொடர்ந்து துரத்தி யடிப்போமா? அல்லதவர்கள் கெட்டார்கள் பஞ்சைகளென்று விட்டு பெரிய மனசு பண்ணி விராடபுரத்திற்குப் போவோமா? இன்னுஞ் சற்றுநேரம் இவ் விடத்திற்றுனே யிருப்போமா? உன் கருத்தென்ன? அதனை விரைவில் திருத்தமாகச் சொல்லு'' என்று கேட்டான். விராடகுமாரன் காண்டீ பனை வணங்கி, ''ஓ வீரியவிஜய வெவ்வேலவனே! சீரியமதிகுலச்செஞ் சேவகனே! அடியேன் உமது திருவடிக்கடைக்கலம்! அடைக்கலம்! ஐயா! காரியங்குறியாக் கடையேன் சிறியேன்! பாரிய யுத்தம்பண்ணி யானறியேன். ஆயினுமையா, அவர்களெல்லோரும் செத்தபிணத்தோ டொத்த கனம்போல், தத்துவங் கெட்டுத் தளர்ந்தோடினுர்கள். ஆன கால் இளைத்தோடுகின்றவர்களின்மேல்கணை தொடுப்பீராகில், தேவரீர் இதுவரையிலும் பெற்றிருந்த புகழ்ச்சி இகழ்ச்சியாய்விடும். மேலும் - இன்னும் ஆகவேண்டிய காரியம் பின்னிட்டிருப்பதால், அப்போது பார்த்துக் கொள்ளலாம். நாம் இப்போது விராடபுரம்போய்ச் சேரு வோம். ஓ பலஞ்சுரந்து பொங்குந் தோளினையுடைய பார்த்திபனே! இதுதான் எளியேனுடைய கருத்து, அப்பால் தேவர்சித்தம் சிறி யேன் பாக்கியம்'' என்று உத்தரகுமாரன் சொன்னுன்.

இவ்வாறு உத்தரகுமார னுரைத்த உத்தரத்தைப் பார்த்தன் உற்றுக்கேட்டு, உத்தரதிசையை விட்டுத் திரும்பிக் களித்து, வில் நாணைத் தளர்த்தி, அம்பறுத்தூணியையும் வீழ்த்தித் தேர்மேலிருத்தி, ''அப்பா! இளஞ்சிங்கமே! இளைத்தபேர்களைத் தொடரப்படாதென்னும் என் எண்ணப்படிக்கே நீயுஞ் சொன்னுய்! நம்மிருவர்மனசும் ஒருமை யானதே பெருமை, நீ யுத்தகோலங் கொண்டு புறப்படும்போது உன் னைப்பெற்ற தாயான சுதக்ஷணுதேவியானவள் மிகுந்த வியாகூல மடைந்திருந்தாள். விரைவில் போய்ச் சேராவிட்டால் இன்னமும் எப் படியோவென்று எதிர்பார்த்துக் கொண்டிருப்பாள். ஆகையால், நாம் இவ்விடத்தில் வந்த சத்துருக்களை ஜயித்து, ஒன்பதுகோடிப் பசுக் கூட்டங்களையும் மீட்டு வனத்தில் அனுப்பிவைத்த சங்கதிகளை நாமே ருசுவிற் போய்ச் சொல்லி, அவள் மனக்கவலையை ஆற்றல் வேண் டும்'' என்று, தேவர்கள் மதித்துக் கொடுத்திருந்த தேவதத்தத்தை எடுத்து உலகம் மயங்கும்படியாய் முழங்கினுன். அந்தச் சங்கத் தொனியைகேட்டபீஷ்மாச்சாரியர்-துரோணுச்சாரியர்-கிருபாச்சாரியர் அசுவத்தாமா முதலிய பேர்களெல்லாரும் பார்த்தன் பின்றொடர்ந்து ஆர்த்து வருகின்றுனே அல்லது இன்னமென்னவோ என்னும் பயத் தால் திரும்பித் திரும்பிப் பார்த்தார்கள். அப்படிப் பயந்து பார்க்கும் பேர்களை அர்ச்சுனனும் பார்த்து, தேர்விட்டிறங்கி, தகுதியுடைய பெரி யோர்களைத் தலைவணங்கிப் பணிந்து, நானிம்மட்டும் போர்விட்டு

விடைகொள்கிறேனென்னுங் குறிப்பைக்காட்டித் திரும்பி, மறுபடியுந் தேரேறி, மிகுந்த சந்தோஷத்துடன் உத்தரகுமாரன் விடுத்த இரதத்தின் மேற்சென்றான்.

இப்பால் கடல்சூழ்ந்த உலகைப்பரித்த அரவக்கொடி தரித்த துரியோதன மகாராஜன் அணிந்திருந்த அழகிய நவமணி முடியும்-ஒளிவிடும் ரத்தினாபரணங்களும்--அது சங்கிராம ஜயவிஜயனது அஸ்திரங்களினால் அறுப்புண்டு, பிளப்புண்டு, தவறுண்டு, தள்ளுண்டு கிழக்குத்திசையிலுதித்த சூரியகிரணங்களால் மேற்றிசையில் தோன்றிய சந்திரன்போல் ஒளிமழுங்கி, இன்னமும் ஏதேதுசெய்ய வந்திருக்கின்றானோ ஏதேதாய் முடிப்பானோ-என்று ஏக்கங்கொண்டு அட்டதிக்கும் பரவிய சேனைகளுடன் பட்டப்பகலிற் பட்டணம்போக மாட்டாமல் வெட்கப்பட்டு, சகல ஆட்டபாட்டங்களுமடங்கி, அஸ்தினபுரியிலுள்ள யாவரும் நித்திரைபோன பிற்பாடு கோட்டைமதில் வளைந்த ராஜபாட்டையில் புகுந்து, ஓட்டமும் நடையுமாய் ஊர்போய்ச் சேர்ந்தான். பெரியோர் முதலிய உரியோர்களும் பாதிராத்திரியிற் பேய்போற் போனார்கள். இவர்களிப்படி யிருக்க, மாடுபிடி சண்டையை வென்று ஆடுகொடியுடன் திரும்பிய அர்ச்சுனராஜன் மேடுபடும் பாலைநிலத்தில் காடுபடப்படர்ந்துநீடிய வன்னிமரத்தைச்சார்ந்து, அம்மரப்பொந்தில் முன்னிருந்த வண்ணம் ஆபரணவலங்கார முடியும் - அனுமக்கொடியும்-தேவதத்தமும்-வில்லும்-அம்பறுத்தூணியும் வைத்து, பழையபடி மான்தோலிட்டிறுக்கி, மச்சகுமாரனையுமிறக்கி, முச்சகங்கொண்டாடா நின்ற தனது முன்னழகையும் பின்னழகையுமாற்றி, இனிமேல்நடக்க வேண்டிய முறைமைகளையுந் திறமைகளையும் யோசித்து, பழையபடி பேடியுருவை நினைத்து, அவ்வடிவில்லாத வடிவமைந்து, பொன்மயமான தேரில் உத்தரகுமாரனது சிங்கக்கொடியை நாட்டி, குதிரைக் கயிறும் கோலுந்தாங்கிச் சாரதியாகிச் சயிந்தவ முந்தினான்.

இப்படி தேர்முகத்தில் குந்தி யுந்திய முந்திய பேடியுருவைக் கண்டு உத்தரகுமாரன் கோவென்றழுது, ஓ வென்றிரைந்து, "ஐயா! பொய்யாமொழிப் பொறையன் சகோதரா! இப்போது சொல்லும் மெய்யான என் மொழியைச் சற்றே தயவுசெய்து கேளும். இனி நான் செத்தாலும் தேரேறமாட்டேன். இனிச் சற்றேனும் நாயகனா யிருக்கமாட்டேன். ஆ! ஆ இஃதென்ன கொடுமை? தேவரீருடைய காலடிப் புறத்திலிருக்கத் தக்கவரிற் கடைப்பட்ட நாயேன், நடுநாயகத் தட்டிற் பொருந்து நலம் பெறுவேனோ! ஆ! தெய்வமே!" என்று சிந்தை சிந்தி நொந்துநைந்து தேம்பினான். அத்தன்மையாய்க் கலங்கிய உத்தரகுமாரனைத் தேற்றி, அவனது விசனத்தை மாற்றி, பிரிய வசனங்களினால் பேடியாகிய கிரீடிபேசத்தொடங்கினான் "ஓ விராடன் தவத்தாலுதித்த வீரசிங்கமே! எனக்கு மூத்தவர்களும் இளையவர்களுந் தங்களுடைய எதாருபமெடுத்து வெளிப்பட்டார்களோ, இன்னும் வெளிப்பட வில்லையோ, என்னை எதிர்பார்த்துக்கொண் டிருக்கின்றார்களோ, அது இன்னதென்று எனக்குத் தெரியவில்லை. அஃதப்படி யிருக்க-நான்

மாத்திரம் நிசரூபங்கொண்டு நடக்கலாமோ? தமையன் கருத்தைத் தள்ளி நடக்கப்போமோ? அப்படி தப்பி நடந்தால் பின்னுல் பாபம் பிடிக்காமல் விட்டுவிடுமோ? தருமவிருத்த னென்னுந் தாழ்ச்சிபெறுவே னல்லவோ? அப்பனே! உனக்கு மெனக்கும் ஒரு பேதமுமில்லை. உள்ளன் பென்பது ஒன்றுமே போதும். என் வார்த்தை தட்டாமல் இந்தத் தேரிலேறுக'' என்றவனை யொருவாறு தேற்றி, அவனை அதிரதராஜனுகப்போற்றி, விற்பாணங்களும்விரகண் டையும் பூட்டி, குதிரைக்கயிறுங்கோலுந் தாங்கித் தேரைச் செலுத்தி, சற்றேனுங்குந்த மனம்பெருத உத்தரகுமாரனேடு பலவாருக வார்த்தை யாடிக்கொண்டு, விராடபுரக் கோட்டை மதிலுக்கு வடமேற்காகச் சென்று அங்கு குளிர்ச்சியும் பசுமையுங்கூடிக் குலாவுஞ் செழுச்சி யாகிய சிங்காரத்தோப்பில் வந்திறங்கித் தேகவெப்பத்தைத் தீர்த்துக் கொள்ளவேண்டிய சிந்தையைக் கொண்டிருந்து, ஒருவருக்கொருவர் பரிந்து, பாண்டவர்களாகியதாங்கள் பன்னிரண்டு வருடம் வனவாசம் பண்ணிய துன்பங்களையும், ஒருவருடம் அக்ஞாதவாசஞ் செய்வதற் காக வடிவமாறிய துயரங்களையும், அவன் தந்தையான விராடராஜ னிடத்தில் தாங்கள் செய்துவந்த தொழில் விதங்களையும், அவ்வத் தொழிற்கேற்ற வேறுவேருகிய மாறுபெயர் வைத்துக்கொண்ட மார்க் கங்களையும், அமுதரசம் பொழிவதுபோல் உத்தரகுமாரனுடன் சொல் லிக்கொண்டிருந்தான் விஜயகாண்டீபதரனுகிய அர்ச்சுன மகாராசன்.

### தக்ஷிணநிரை மீட்டுவந்த விராடன் உத்தரகுமாரன் சேதிகேட்டு வருந்தி பின் கங்கபட்டராலுங் காண்டீபன் தூதராலுந் தேறி, அமைச்சராதியரை அழைத்துவர விடுத்தல்

கேட்டீரோ ஜனமேஜய மகாராஜனே! இப்படி யிருவரும் ஆசோதை பெற்றிருக்கின்ற வேளையில், விராடபுரத்திலிருந்து சில தூதர்களோடிவந்து க்ஷேம விசாரணை செய்தார்கள். அந்தத் தூதர் களைக்கண்ட அர்ச்சுனன் ''சாரணர்களே! நீங்கள் விராடபூபதியைக் கண்டு, பேடி தேர் செலுத்தச் சென்ற உன் புத்திரனை உத்தர குமாரன் எதிர்த்துவந்த மன்னருடன் அதிர்த்துப் போர்புரிந்து கோடி தேராளிகளை வென்று குப்புற்றுப் புறமிடக்கண்டு, நமது மந்தையை மீட்டுவிட்டானென்று சீக்கிரத்திற் சென்று சொல்லுங்கள். தாமதஞ் செய்யாதீர்கள்'' என்று கூறி அவர்களை யனுப்பிவிட்டு, விராடகுமார னுடன் பேசிக்கொண்டிருந்தான். இவர்களிவ்வாறிருக்க இதற்கு முன் னுல் தென்திசைக்குப்போன விராடராஜன் திரிகர்த்தனை வென்று, அன்றிரவு முழுவதும் அங்ஙனம் மேற்படை வருமென்று கங்கப்பட்டர் முதலான பேர்களுடன் தூக்கமில்லாமற் சேனைகளுடன் காவலிருந்தன னன்றே? அப்பால் மேற்படை யொன்றும் வாராமையால், மறுநாட் சூரியோதயமானபின்பு பந்துவர்க்கங்களும் மன்னரினங்களும் மைந்த ரனைவரும் மற்ற பரிசனுதி சேனைகளுந் தாம்தாமென்று சங்கீதமுழங்க விராடபுரம்வந்து சேர்ந்தார்கள். அவர்களோடு ஜயப்பிரதாபத்துடன்

மச்சநாடு வந்து சேர்ந்த விராடராஜனை விஷமுமமுதுங் கலந்த வேற் கண்ணுளாகிய சுதக்ஷணாதேவி இச்சைகொண்டு எதிர்சென்றுகண்டு, மச்சகுலாதிபனை வணங்கித் "தேவரீர் தக்ஷிணநிரைமீட்சிக்குப்போயி ருந்த சமயத்தில் பீஷ்மாச்சாரியர் கிருபாச்சாரியர் துரோணாச்சாரியர் அசுவத்தாமா - கர்னராஜன் முதலானவர்களோடு தம்பியருந் தானை வெள்ளங்களும் புடைசூழத் துரியோதனன் வந்து, நமது விராடபுரத் தின் வடதிசை புகுந்து வளைந்து மாட்டுமந்தையை மடக்கினான். அந் தச் செய்திகேட்ட தங்கள் திருமகனாகிய உத்தரகுமாரன் நமது சித்திரப் பதுமைபோன்ற உத்தரகுமாரத்திக்கு நாட்டியங்காட்டி ஆட்டி வைத் திருந்த பேடியைத் தேர் செலுத்த ஆக்யாபித்து, தான் யுத்தகோலங் கொண்டு வெற்றிபெறப் போயிருக்கின்றான்" என்று விளம்பினாள்.

இப்படி தனது மனைவி கூறிய சங்கதியைக் கேட்ட விராடன் உயி ரொழிந்த உடம்போ லொடுங்கி, உணர்வடங்கி, உருகி வீழ்ந்தான். உடனே பக்கத்திலிருந்த பேர்கள் வாரியெடுத்து மார்போடணைத்து, சீதள சந்திரகாந்தக் கிண்ணங்களிற் பொருந்திய சுண்ணங்களையுஞ் சந்தனபாளித குங்குமக் குழம்புகளையும் பூசி பனிநீர் தெளித்துச் சயித் தியோபசாரஞ் செய்து, சிற்றாலவட்டம் பேராலவட்ட முதலிய விசிறிக ளசைத்து விராடராஜனைத் தேற்றினார்கள். இப்படி எவ்வித வுபசாரங் கள் செய்யினுந் தேறாதவனாய்ச் சோர்வடைகின்ற தோன்றலை நித்திய விதிகூறு நின்மலனாகிய கங்கபட்டர் பார்த்து, "ஓ மகாராஜனே! நீர் என்னத்திற் கிவ்வண்ணம் வருத்தப்படுகிறீர்? வாரேறுங்கனதனப்பேடி யானவள்-தேருரும்படியாய்ச் சென்றிருப்பாளாகில் இன்னுஞ் சற்று நேரத்திற் சம்பிரமவெற்றிபெற்று உமது மகன் வரப்போகின்றான். அவ னைக்குறித்து நீர் சித்தங் கலங்கவேண்டாம்" என்று சொல்லித் தேற்றி னார். இப்படிசொல்லிய தருமப்பிரபுவின் வாக்கியத்தினால்விராடராஜன் நிறைந்தபாக்கியம் பெற்றவனைப்போல் தேறித்தெளிந்து சிறப்புற்றிருந் தான். பின்னுஞ் சற்று நேரத்திற்குள் ஏதேதோ தன் மனத்துள் உன் னினவனாய், "ஓ கங்கப்பட்டரே! என் பாக்கிய மெப்படியாமோ? உமது வாக்கிய மெப்படி போமோ? நானறியேன். ஆகிலும் நால்வகைப் படையுங்கொண்டு நாமே எதிர் நோக்கிச் சென்று நம்மாலான உதவி யுஞ் செய்தால் அவ்வறியாச் சிறுவனுக்கு அனுகூலமா யிருக்கும் என்று என்மனம் நாடுகின்றது" என்று விராடராஜன் விளம்பினான். இம்மொழிகேட்ட கங்கபட்டரானவர் அவ்வரசனை நோக்கி, "ஐயோ! நீரிப்படி துணைப்படுவீரானால் கனம் பெற்றுவருகின்ற உமது குமார னுக்கு அவமானத்தை விளைக்கு மல்லது, வெகுமானத்தை விளைக்க மாட்டாது. ஆகையால் இன்னும் கொஞ்சநேரம் நீர் செவ்வையாக நிதானித்து, சில காரியஸ்தரை யனுப்பி எதிர்கொண்டழைத்து வரச் சொல்லும்" என்று கங்கபட்டர் சொல்லினார்.

அதற்கு விராடராஜன் உடன்பட்டிருக்குங் காலையில், திறம் படைத்த துரியோதனன், பீஷ்மர், துரோணாச்சாரியர், கிருபாச்சாரியர், அசுவத்தாமா, கர்னன் இவர் முதலாகிய பேர்கள் புறங்கொடுத்



விராடராஜன் தருமராஜனோடு பாச்சிகையாடல்

தோடிப் போயினுரென்றும், அவர்களால் மடக்கப்பட்ட மாட்டுமந்தை யணைத்தும் மச்ச நாட்டைச் சார்ந்த காட்டுப் புறத்தில் வந்ததென்றும், ஒரு தேரும் ஒரு வில்லுங்கொண்டு முனைந்து யுத்தம் புரிந்து வெற்றி பெற்று வருகின்ருர் உமது புத்திர சிகாமணியாகிய உத்தரகுமார னென்றும், முன்னம் அர்ச்சுனனுப்பிய தூதரோடி வந்து தொழு துரைத்தார்கள். அவர்களுரைத்த அமுதரசத்தைச் செவி வழியாகத் தெவிட்ட அருந்தி, கொதிப்பாறிக் குளிர்ந்த குளத்து நீர்போலும் - குமுதநாதன் கிரணத்தையுண்ட சகோரம் போலும் சோபதாபத் துயரமாறிச் சிந்தைகளித்து இச்சேதி சொன்னவர்கட்கும் அவர்கள் பந்துஜனங்களுக்கும் சுபபோஜன சுகந்தபரிமள சந்தனுதிகளும் பற் பல வெகுமானத்தோடு கொடுத்து, மந்திரிமார்களையும் மற்ற மன்னவர் களையும்நோக்கி, ''நீங்கள் யாவரும் ரத-கஜ-துரக பதாதிகளாகிய நால் வகைச் சேனைகளுடன் பல விருது சின்னங்களும் விநோத வாத்தியங் களுங் கொண்டு சென்று, ஜெயப்ரதாப முடைய என் சிறிய குமார னைச் சீக்கிர மழைத்து வாருங்கள், வீதிகளெல்லாம் அலங்கரிக்கும் படியாய்ப் பறைசாற்றச் செய்யுங்கள். பந்தலடைத்து மகரதோரண முதலியவை கட்டுங்கள்'' என்று ஆக்கியாபித்தான். கேட்டீரோ ஜனமேஜய மகாராஜனே! இந்த விராட ராஜன் கொண்ட சந் தோஷ மெவ்வகைப் பட்டதெனில் ஒருவன் மனைவியானவள் அயலா ரிடத்திற் சோரத்துவஞ் செய்து பெற்றுக்கொண்ட பிள்ளையைத் தனக் குப் பிறந்த பிள்ளையென்று உள்ளங்களித்து முத்தமிட்டு, மடிமேலுந் தோண்மேலும் வைத்துத் தாலாட்டி, கொஞ்சிக் குலாவி, ஆசை வைத்து உருகுகின்ற அறிவில்லான் தன்மையை யொத்திருக்கின்றது. இங்கே விஜய பராக்கிரம விக்கிரமன் வெற்றிபெற்றிருக்க, அதனை விராடன் தெரிந்துகொள்ளாமல் உத்தரகுமாரன் வெற்றிகொண்டா னென்று உண்மையாய் நம்பி உடல் பூரித்திருந்தான். இவனுக்யா பித்த ஏவலைக்கொண்ட காரியஸ்தர்கள் வீதிகள் திருத்திப் புழுதிக ளடக்கி, செம்பொற் கலசங்கள் பொருத்தி, 'வாழை-தாழை-கரும்பு-கமுகு-பனை-பலா - தெங்கு - தேமா - கூந்தற்பனை-கோங்கு இவைகளை நாட்டி, மாணிக்கத் தீபங்கள் வரிசையாய் வைத்து கொடி-குடை-ஆலவட்டம்-தாலவட்டம்-மகரதோரணம்-மாமணித்தோரணம் இவை களை வரிசைப்படவமைத்து, ஏழுப்பரிகையுயர்ந்த மாடமாளிகை கூட கோபுரமுள்ள வீடுகளை யெல்லா மலங்கரித்து, விதவிதமாய்ச் சிங்கா ரித்தார்கள். மன்னவர் மந்திரிமார் முதலான பேர்கள் சகல விருது வாத்தியங்களோடு நால்வகைச் சேனைகளும் புடைசூழ உத்தரகுமார னிருக்கும் உத்தரதிசையை நாடிச் சென்ருர்கள்.

**விராடன் தன் குமாரன் வருமளவுங் கங்கபட்டரோடு வட்டாடலிற்புக, அதனுலிருவருக்கும் வாதாடல்மிக, விரதசாரணி தன்றலைவனுதலில் வடுவாடல் கண்டு வருந்தல்**

இவ்விடத்தில் விராடராஜன் தர்மராஜனைப் பார்த்து, ''உம் முடைய ஆசீர்வசனத்தின்படி எனது உத்தரகுமாரன் ஜெயப்பிர

தாபத்துடன் வருகிற வரையிலும் நாமிருவருஞ் சொக்கட்டாடுடு வோம்'' என்றான். அவருமப்படி ஆகுகவென்றார். உடனே அங் குள்ள காரியஸ்தர்கள் பவளம்-நீலம்-மரகதம்-புஷ்பராகம் இவை களினலாகிய காய்களை வச்சிரப் பாச்சிகை முதலியவைகளோடு கொண்டுவந்து வைத்தார்கள். உடனே இருவருங்கூடி யாடினார்கள். அவ் வாட்டத்திற் கங்கபட்டர் வென்றார். தோற்றுவிட்ட மச்ச ராஜன் வெட்கி, ''ஐயா கங்கபட்டரே! இவ்வாட்டத்தில் நான் சற்று அஜாக்கிரதையா யிருந்து விட்டேன். மற்றோராட்ட மாடுவோம் வாரும். இந்த ஆட்டத்தில் என் மகனாகிய உத்தரகுமாரன் வெல்ல அவனுக்கீடுபட மாட்டாமல் யுத்தமுனை கெட்டோடிய வெற்றிவீரர் களைப்போல் உம்மையான் ஓடவிட்டடிக்கின்றேன் பாரும்'' என்று பிரதாபமாகப் பேசினான். அவ்வாறுரைத்த விராடராஜனைக் கங்கபட் டர் தடுத்து, ''ஓ மன்னர் மன்னனே! பேடியாகிய ரதசாரதியானவள் ஜயம்கொண்டு வருகின்ற பெருமையைப்போல் உம்மை நான் ஜயங் கொள்வேனென்று பேசுவீரானல், அது எனக்குச் சம்மதமாகும். நீரப் படி சொல்லாமல் உத்தரன் வென்றதைப்போல வென்று தப்புரை செப்புவதினல், அதற்கு நான் ஒருகாலும் ஒப்பமாட்டேன். அதே னெனில் பிரகந்நளை யென்னும் பேதையைப் பேடியென்றெண்ணாதீர். அவள் பூர்வங் காண்டவவன மழித்தகாலைக்குத் தேரூர்ந்து தேவர் களுக்குப் பகையாகிய ராக்ஷசர்களை வென்று தேவசகாய விஜய னென்று பேர்பூண்டு திக்குத் திகாந்தம் வரைக்கும் அதிசொற்பத்தில் ஜயங்கொண்டு திரண்ட கீர்த்தி பெற்றிருக்கின்றவள். ஆதலால் அவளை இலேசாக மதிக்காதீர்'' என்று கங்கபட்டர் சொல்லினர். உடனே மச்சராஜனுக்கு மிச்சமாகிய கோபம் பிறந்தது, மனங் கறுத் தது, மதியுஞ் சிறுத்தது, கண் சிவந்தது, கனற்பொறி பறக்க, அவன் கங்கபட்டரைக் கனைத்துப்பார்த்து, ''ஓ பெரியவரே! இப்போதிங்ஙனம் வந்த தூதர்கள் என் குமாரனுகிய உத்தரன் பேடி தேர்விடச்சென்று, கோடாகோடிகுருசேனைகளை நீடாதடித்து நிமிரக்கெடுத்து,என்பிள்ளை யொருவனுமே யாவரையும் வென்று, பகைவர்மடக்கிய பசுமந்தைகளை யும் கைக்கொண்டு திரும்பி வருகின்றானென்று சொல்லப் பிரத்தி யக்ஷத்தில் கேட்டிருந்த நீர், ஒரு கூனனைக்கூடக் கொல்லவும் வெல் லவுமாட்டாத அதிசொற்பமான ஒரு பேடியைக் கொண்டாடி ஸ்தா பித்துப் பேசுகின்றீர். ஈதென்ன பிடிவாதம்? ஈதெவர்கள் சொல்லு கின்ற பக்ஷபாதம்? ஓ பிரமக்கியான முணர்ந்த பேரறிவாளரே! இப் படிப் பேசாதீர்; வாய் மூடும்'' என்று கடுகடுத்து மொழிந்தான். அந்த மொழியைக் கேட்ட தர்மராஜன் சிறுநகை நகைத்து, ''நான் சொன்ன வார்த்தை பழுதல்ல, இன்னுஞ் சற்று நேரத்தில் நீரறியப்போகின்றீர்'' என்றார்.

இதைக்கேட்ட விராடராஜன் மனந்தாளாது முகஞ் சுளித்து ''ஓ விஸ்தாரங் கற்றிருக்கும் வேத முனியே! இனியென்னத்தை யறிகிறது? கைப்புண்ணுக்குக் கண்ணாடி வேண்டுமோ? பேடிக்குங் கிரீடிக்கும்

பேதமறியாதவர் நீர், கிரீடிபெற்ற செயத்தோடு அக்கிரீடிக்குத் தேர் விடுத்த பேடியையுங் கூட்டிப் பேசினீர். இதனாலேயே உம்மை ஏது மறியாதவரென்றுகண்டுகொண்டேன். ஆ! ஆ! போதும், போதும். இனி இப்படி வீண் வாது பேசாதீர். தீதில்லா மன்னரானவர் ஏதேனுமோர் புன்மைபுகன்றாலும் அச்சபையிலுள்ளவர்கள் நன்மைநன்மையென்று நாளுஞ் சொல்லி ராஜனுக்கிதம்படப் பேசவேண்டுமல்லாமல், அவன் தயவுக்குக் காத்திருந்து ஜீவனஞ் செய்பவர்கள் மன்னன் கருத்துக்கு மறுத்துப் பேசுவது முண்டோ? காலசமய மறிந்து கலந்துகொள்ள வேண்டாமோ? நீர் நான்கு வேதங்களையும் நன்றாயோதிய ஞான வானாயிருந்தும், இராஜர்களோடு பேசவேண்டிய விதிமுறை யறியா மல், விருதாவார்த்தைசொன்னீர்'' என்றுரைத்தான். இப்படிவெறுத்து மமதைகொண்டு பேசிய மச்சராஜன் பேச்சுக்குக் கங்கபட்டர் இடங் கொடாமல் தடுத்து, ''ஓ விராடராஜனே! நீர் கொஞ்சம் நிதானியும். கொடையாளியான கர்னராஜனென்ன, படையாளியான பீஷ்ம ரென்ன, தநுர்வேத சம்பன்னரான துரோணாச்சாரியரென்ன, வித்வ மகத்துவமுடைய அசுவத்தாமாவென்ன இப்படியான சுத்தவீரர்களை உண்டைவிற் பிடித்து விளையாடிக் கொண்டிருந்த உமது பிள்ளை வெல்ல வல்லவனென்று நீர் சொல்லமாட்டுவீரோ? ஓ நிருபனே! நில் லும், நில்லும், இதோ எல்லாச் சங்கதியும் வந்துரைக்கப் போகின்றார் கள். அப்போது என்சொல்லுக்கு நீர்மறுத்துக் கூறியவனைத்தும் மனத் தப்பென்று உமது மதி உமக்கே ஒப்புச்சொல்லும். இப்போது நானுமக் கென்ன சொன்னாலும் அது தப்பாகவே தோன்றும். இனி மெய்ப்படும் போது, பெருமை யடைந்தது துப்பாத் திருமேனி படைத்த பேடியே யென்றுணர்வீர்'' என்று தர்மராஜன் பேசினார். இச்சொல்லைக்கேட்ட விராடராஜன் இருகண்களுஞ் சிவக்கக் கோபச் சிரிப்பாகச் சிரித்து, ''ஓ! ஓ! ஓ! ஐயா, மெத்தமெத்தக்கற்ற வேதியரே! வில்லாண்மையி லுயர்ந்த என் குமாரன் சொல்லாண்மையிற் சிறந்த பகைவரையோட் டிப் பாரமார்த்தியமாய் வருகின்ற வீரப்பிரதாபத்தைப் பார்த்த தூதர் வந்துநேரில்சொல்லக் கேட்டறிந்திருந்தும், எவ்வளவுமெண்ணிப்பாரா மல் எதிரியையும் மதியாமல் என்னையடுத்து ஜீவனஞ்செய்து வருகிற இயற்கையையு மோராமல் பலதரமு மென்னையலட்டி வாதுசெய்கிறீர். சொற்பமான பேடியைப் புகழ்ந்து பேசுகின்ற நீர் என் பிள்ளையைக் கொண்டாடிப் பேசப்படாதோ? உமக்கு என் பிள்ளையின்பேரில் அவ் வளவு பொறாமையும், பேடியின்பேரில் அவ்வளவு அக்கறையும் வந்த காரணமென்ன?'' என்று கொல்லும்விடங் கொண்டெழுந்த நல்ல பாம்புபோற் சீறி, தன் கையிலிருந்த பாய்ச்சிகையை நிலத்தில் விட்டெறிந்து மகா கடூர நகைநகைத்தான். அவ்வாறு அதிக கோபத் தால் வீசிய பாச்சிகையானது பூமிமேற்பட்டுத் தெறித்து நேரி ருந்த கங்கபட்டர் நெற்றியிலடித்து, குங்குமக் குழம்பாற் படிந்த திலகம்போற் குன்றிமணியத்தனை இரத்தங் குபீரென்ன கொப் பளித்தது.

அப்போது உத்தரகுமாரனது க்ஷேமத்தைக்குறித்து ராஜசபையில் என்ன பேசிக்கொள்ளுகிறார்களோ, அதனையறிந்துவா போவென்று சுதக்ஷணை தேவியினால் அனுப்பப்பட்ட பணிப்பெண்ணானவள், சபை கூடிய அவ்விடத்திற்கு வந்து, சங்கதியாவும் விசாரித்துக்கொண்டிருக்கின்றாள். அச்சமயத்தில் தர்மராஜனெற்றியிலுண்டான துளி இரத்தத்தைத் திரௌபதி கண்டு, நீர்வற்றிய தடாகத் தாமரைமலர்போல் நிறங் குன்றி, நெஞ்சம்வெருண்டு மருண்டு, கூசிக்குலைந்து, அந்தத் தருமனுடைய உதிரத்தொரு துளி பூமியில் விழுமாகில், விராடராஜனென்னும் தருவில் தழைத்திருக்கின்ற பந்துக்களென்னும் பல கிளைகளும் புத்திர பௌத்திராதியரென்னும் புட்பங்களும் மித்திரர் முதலாகிய மென்காய் கனிகளும் புகழ்ப் பிரதாபப் பெருமணச் சிறப்பும் அழகும் வாழ்வும் அமைந்த மூலமும், தாங்களாறுபேரும் அக்ஞாதவாசஞ் செய்யவந்தடுத்து ஒதுங்கியிருந்த நீழலும் அன்றேகெடுமென்றோ, அல்லது தனக்குரிய நாயகனென்னு நேயத்தினாலோ, அல்லது யாவருக்கேனும் இடையூறுண்டானால் உபசாரஞ்செய்ய வேண்டுவது எல்லோருக்கும் பொதுவென்பது பற்றியோ, அல்லது அர்ச்சுனன் முதலிய பேர்களுக்கு உத்தரஞ்சொல்லவேண்டுமென்பதை நத்தியோ அல்லது பெரியவரென்னும் பத்தியோ, அந்தப்புண்ணியவதியின் சுபாவப்புத்தியோ ஓ மகாராஜனே! அவள் கருத்து இன்னவிதமென் றெனக்குத் தெரியாது உடனே கைகால் நடுங்கவோடி, கண்ணீர் துளித்தழுது, கடகடவென்று உடல்நடுங்கத் தொழுது, 'ஐயோ பழுதுபடாத சத்திய தரும பூசுரனுக்கும் பழுதுநேரிட்டதே' என்று வெகுநேரம் வரையிலும் ஒத்தியகையெடுக்காமல் தருமபத்தினிபோலிருந்தாள். அப்படியிருந்த வண்ணப்பெண்ணின் மரியாதையையும், அவளுடலின் துடிப்பையும், அவளாவிபடும் பரிதாபத்தையும் விராடன் பார்த்து விசனப்பட்டு 'இஃதென்ன ஆச்சரியம்! இதுவரையிலு மில்லாத கோபம் நமக்கு இப்போது நேரிட்டதென்ன மாச்சரியம்? என்று எண்ணமுஞ் செயலும் வேறாகி, 'ஐயோ இதற்கென் செய்வோம்? ஏது சொல்வோம்?' என்று தன்னைத்தானே நொந்து, பின்னாலறியப்போகின்ற பெருமை தெரியாதவனாய், 'ஆ! ஆ! ஆ! கோபம் மகாசண்டாளமென்னும்' வாக்கியத்திற்கு நாமே இலக்காயினோமே' என்று தான் கொண்ட மனமகிழ்ச்சி குறைந்து வீழ்ந்தான். இந்த விராடராஜனுடைய மனோதுக்கத்தைக் கண்டு மனந்தாளாத ஆயிரங்கிரணக் கதிரோனாகிய சூரியன் அஸ்தமனகிரியை நோக்கி அடைவதாயினான்,

### உத்தரகுமாரன் பட்டினமீண்டு கங்கபட்டருக்கு நேர்ந்த கடுமையைக் கண்டு வருந்துதல்

கேட்டீரோ ஜனமேஜய மகாராஜனே! இப்பால் முன்னம் விராடராஜன் தன் பிள்ளையை யெதிர்கொண் டழைத்து வரும்படி ஆக்யாபித்த வண்ணம், அமைச்சர் முதலாயினோர் போய்ச் சந்தித்ததும், உடனே உத்தரகுமாரன் அவ்வமைச்சர் முதலானவர்களோடு அநேக நகரமக்கள்-அந்தணாளர் - மடைத் தொழிலர் - மருத்துவக் கலைஞர் -

நிமித்தகப் புலவராகிய பரிவாரங்கள் புடைசூழ்ந்து நெருங்க, வீரவாத்திய மேளமுழங்க, விருது-டால் கொடி குடை-இவைகள் விதவிதமாய் விளங்க, பாலா-பல்லயம்-சவளக்கோல்-கத்தி-கட்டாரி-ஈட்டி-கேடயம்-இவைகள்-மின்ன, எங்குஞ் சங்கத்தொனி பொங்கித் தழங்க, பட்டத்து யானைகளும்-ஆட்டக் குதிரைகளும்-உன்னதத் தேர்களும்-துன்னிய காலாட்களும் இருபக்கமும் நெருங்கிவர, தேவேந்திரலோகத்திலிருந்த ஜெயமுள்ள காளமேகன் தேர்மேலேறிப் பூலோகத்தில் வருமாறுபோல் பேடி தேர்செலுத்த, வண்டு மொய்க்கும் அம்மலர்க்காவைவிட்டு நீங்கி, வாகைமாலை தாங்கி, மணிப்புயமோங்கி, நீடிய கீர்த்தியோடு விராடபுர வீதியில் மேவினான். இந்தப் பிரகாரஞ் சத்துரு ஜெயஞ்செய்து வருகின்ற உத்தரகுமாரனை வேதியர்களும் மாதர்களும் கண்டு அன்புகொண்டு ஆலஞ் சுழற்றி திருஷ்டிகழித்து-மங்களலாலிவாழ்த்தி-கொப்பிகள் முதலிய பாடலைப்பாடி ஆசீர்வதிக்க பரதநாட்டிய ஸ்திரீகள் அபிநயங்காட்டி யாடித்துதிக்க, கட்டியர் புகழ ஜெட்டியர்மகிழ, பட்டுவான்கள் போற்ற சந்திரவட்டக்குடை நிழற்ற, வெண்சாமரைபோட, அட்டதிக்கும் கொண்டாட, இராஜ சின்னங்களுடன் மகன் வருகிற மகிமையை விராடராஜன் கேள்விப்பட்டு, வரைபகவெறிந்த வள்ளிமணாளனைச் 'சிலைமதனைச்செற்ற சிவபெருமானெதிர்கொண்டு சென்று கண்டதுபோல் ஆநந்தங்கொண்டு சென்று கண்டு, தேர்மேலிருந்த சிறுவனைச் சீக்கிரந்தழுவி அணைத்தெடுத்து, தன் சித்தங் குளிர முத்தி கொடுத்துக் கீழே விடுத்தான். உடனே உத்தரகுமாரன் அத்தந்தையை வணங்கி ஆசிபெற்று பின்புத் தந்தை முதலிய யாவரோடுந் தடதடவென்று கொலுமுகவாசற் சென்று, அங்குத் தனியா யெழுந்தருளியிருந்த வேதவித்தாகிய கங்கபட்டரை வணங்கித் துதித்து, அவருடைய திருவடிகளைச் சிரத்திலுங் கண்களிலும் பொருந்தி, பற்பல ராஜகூட்டங்களும் பார்க்க அவருடைய பொற்புயத்தைப் புகழ்ந்து, அற்புதக் கருணை முகத்தையும் நோக்கினான்.

அப்போது அவ்விற்பன விவேகியானவர் கடாட்சத்துடன் சொற்பலவாய் ஆசீர்வதித் தருளினார். அக்காவலர் நெற்றியிலிருந்த வடுவை உத்தரன் பார்த்து உடனே முகம்வியர்த்து, அண்டரண்ட சராசரங்களும் அதிரும்படியாய்க் கூவி, "ஓ என்னாண்டவனே! விபூதி ரேகை பிரகாசிக்கின்ற தமது லலாடஸ்தானத்தில் அபூர்வமான காயம் படுதற்குக் காரணம் யாது? யாவன் வடுச்செய்தவன்?" என்று கார்முகங் கைக்கொண்டு கடுகடுத்து நின்றான். அங்ஙன நேர் முகமாய்நின்ற விராடராஜன் நடுங்கி, முன்னடந்த காரியங்களைப் பக்குவமாய்ப் பேசினான். அவ்வார்த்தைகூறிய தந்தையைச் சினந்து, தன் சிந்தை வருந்தி நொந்து, கைக்கொண்ட வில்லையொடித்து, பல்லைக் கறகற வென்று கடித்து, "ஆ! ஆ! நல்லகாரியஞ் செய்தீர் போம்! போம்" என்று வெறுத்து, "நீர் இந்த மஹானுபாவருடைய சொல்லை இகழ்ச்சி செய்தேனென்றபோது, ஐயோ! என்னுடல் நடுங்குகிறதே! அதை

நினைக்குந்தோறும் என்னுடலைவிட்டு உயிர் வெளியோடுகிறதே அந்தோ! பிரம சிருஷ்டியினுலாகிய பெரும் பொறைக்கடலை ஆடையாயுடுத்த அவனியினிடத்திற் பாரியமணிமகுடப்பட்டந்தரித்த வீரிய வேந்தருக்கு வேந்தாகிய வேந்தே! இவருக் கொப்பாகிய பேர் எப்பாரிலு மில்லையே! இவரையாரென் றுணர்ந்தீர்? ஓ பின்னமேற் கொண்ட மன்னனே! என்னெதிரில் நீர் நிற்கச் சகியேன்! சற்றப்பாற் போம்?'' என்றதட்டிப் பூசுரனுகிய புண்ணியனைப் பார்த்து, "அத்தனே! அன்புநீங்காப் பரிசுத்தனே! எங்களை யாண்டுகொள்ளுங் கர்த்தனே! 'சிறியோர் செய்த தீமைகளனைத்தும் பெரியோராயிற் பொறுப்பது கடனே' என்று தாங்களே செலவுகொடுத் திருப்பதினுல், விவேகமற்ற என் தந்தையின் பேரில் தேவரீர் கோபங் கொள்வது ஞாயமன்று'' என்று அக் கங்கபட்டருடைய அடியில் தாழ்ந்து, மீட்டுந் தந்தையை நோக்கி 'பெரியோர்கள் திருவுள்ளம் பேதித்தாலெப் பொருளும் பேதியாதோ?' என் று மேலோர் சொல்லிய மெய்ம்மொழியைச் சிறிதும் யோசியாமற் பழிக்காளாயினீர்'' என்று கூறி அவ் விராடராஜனையும் வீழ்ந்திறைஞ்சச் செய்து, பின்னும் பின்னுந் தானிறைஞ்சி, கடுத்துப் பேசவறியாத தாக்ஷண்யபரராகிய தருமபுத்திர னென்னும் மோனவானுடைய துக்கத்தை மாற்றிவிட்டான்.

### உத்தரகுமாரன் தன் தாய் தந்தையரோடு கங்கபட்டராதியர் கரவை வெளிப்படுத்துதல்

அப்போது தருமநந்தனர் நீர் கிழிய வெய்த வடுப்போலக் கடுப் பாறி, சாஸ்திரங்கற்று மாட்சிமை பெற்றுப் பெருமையையுங் கருணையும் பொருளெனக்கொண்ட தமது சித்த மகிழ்வோடு அவ்விராடராஜகுமாரனுக்குத் தகுந்தபடிவாழ்த்தி, உத்தர நிரை மீட்சிக்குப்புகுந்து வெற்றியடைந்துவந்த அவன் பெருமையைக் கொண்டாடினுர். மச்சராஜனும் இச்சையுடனதனைக் கேட்டு மகிழ்ந்தான். மனங் கலந்த உரியோர் பலரும் சினங்குலைந்த பெரியோர் சிலரும், புடை நெருங்கிப் பூரித்தார்கள். இவர்களெல்லோருந் தன்னைப் புகழ்வதை உத்தரகுமாரன் கேட்டு, ஒன்றுஞ் சொல்லாமல் வெட்கி, தன் தந்தையைத் தனியே அழைத்துக்கொண்டு அந்தப்புரம் போனுன். அங்கே ஜெயங்கொண்டுவந்த மைந்தனைச் சுதக்ஷிணை கண்டு, தவமிருந்துபெற்ற அப் பிள்ளையின்மீது ஈன்றபோதிருந்த பேராசையைவிட என்மடங்கதிகமான இன்பமடைந்து எடுத்தாள்; முத்தங் கொடுத்தாள்; கரஞ்சுற்றி நெரித்தாள்; நமது கர்ப்பஞ்செய்த புண்ணியமென்று பூரித்தாள். இவ்விதமாகச் சோடச கலைகணிறைந்த சந்திரனெழுச்சி கண்ட சமுத்திரம்போல் அத்தாய் தந்தையரும் அங்குள்ள மற்றவரும் புகழ்ச்சியாய் பூசித்து மகிழ்ச்சி யடைந்து கங்குகரை காணுமற் பொங்கிய பேரானந்த வெள்ளத்தில் மூழ்கி, பெருமையாகிய பள்ளத்திற் படிந்து, ஜெயமென்னுஞ் செய்தியால் தேறி யிருந்தார்கள். அச்சமயத்தில் உத்தர நிறை மீட்சிக்குச் சென்ற உத்தரகுமாரன் கௌரவர் சேனைகளைக்கண்டு பயங்கொண்டு

புறங்கொடுத் தோடியபோது, அந்த ராஜகுமாரனைத் தேற்றி அவன் திகிலையாற்றிச் சாரதித் தொழில் செய்யும்படி தேர்மேலேற்றித் தனக் கெதிர் நின்று உத்தரிக்க மாட்டாமலோடிய துரியோதனாதியரை வென்ற அர்ச்சுனனானவன், இரதத்தின்மீது வைத்திருந்த எதிரிகளின் சிரவேஷ்டி மூட்டையைப் பேடிரூபங்கொண்ட தன் தலைமேற் சுமந்து வந்து உத்தரகுமாரத்தி கையில் கொடுத்து, உத்தர குமாரனைப் பெற்ற உத்தமியான சுதக்ஷிணைக்குப் பின்பக்கத்தி லொதுங்கி ஒடுங்கித் தலை வணங்கி நின்றான். அவனின்ற கோலத்தைக் கண்ட உத்தரகுமாரன் கைநெரித்து, கலீரெனச் சிரித்து, தேம்பி விம்மித்திகைத்து, திகி லடைந்து துக்கத்தினால் விக்கித்துயருழந்திருந்தான். அவன் குறிப்பை யறிந்த அன்னையுந் தந்தையும் ஆசையுடன்தழுவி, ''அடா அப்பனே! ஐயனே! அதிசயமென்ன?' நீ இப்பேடியைக் கண்டு கைநெரித்துச் சிரித்த காரணமென்ன? உடனே திகிலுந் தேம்பலுங் கொண்டு துயருழந்த காரணமென்ன? அவற்றை யெங்களுக் கையந்தீரச் சொல் லுக'' என்று பல முறையாகக் கேட்டார்கள்.

அப்போது உத்தரகுமாரன் ஆயாசந்தீர்ந்து, அடிவயிற்றிலிருந்து எரிந்தெழுந்த அக்கினித்தனல் நீங்கும் வழியைத் தேடி, அப் பேடி முகத்தை நாடி பேசாமல் வாய்மூடி மீண்டும் பெருமூச்சு விட்டு, நானென்னத்தைச் சொல்வேனென்று தந்தைதாய் இருவரையுந்தனித் தழைத்துச்சென்று, ''இனி நாம் பிழைக்கும்வித மெப்படி? எக்காலத் தில் புனிதராகப் போகின்றோம்! இப்போது நீர் விளைத்துவிட்ட பகை யானது எப்போது நீங்கும்? சமுத்திரம்போல் புரண்டு, சதுரங்கமுந் திரண்டு நமது மந்தை மாடுகளு மிரண்டுபோக வந்து மடக்கிய கௌரவகுலாதிபர் நொந்து போகச் செய்த அடமும் அவர்களுடன் சினந்து போர் புரிந்த மூர்த்தண்ய திடமும் மந்தைப் பசுக்களை மீட்ட மார்க்கமும், வீண் சண்டைக்கு வந்த பேர்கள் சோர்ந்து விழும்படி மோகனாஸ்திரப் பிரயோகஞ் செய்து அவர்களணிந்திருந்த தலைத் துணிகளைப்பிடுங்கி மூட்டைகட்டிக் கொண்டுவந்த மொய்ப்பும் இவை கள் யாவும் என்னாலான வல்லமையல்ல, என்னாலாகு மென்பதுமில்லை. எங்கள் முன்னாலொருவர் வென்றதுமல்ல, சொன்னாலுங்களுக்கு நன் ருய்த் தோன்றும், ஓ என் அன்னாய்! ஓ என் அத்தா! அந்த விநோதத் தைச் சொல்லுகிறேன். சற்று நிதானித்துக் கேளுங்கள். தேவரீர் தக்ஷிண நிரை மீட்சிக்கு சென்றவேளை கண்டு சத்துருக்கள் மொய்த்து உத்தரதிசையிலொருமிக்க வந்து, மந்தைகளை மெத்த வருத்தப்படுத்தி மடக்கினார்களென்று சித்தம்நொந்து ஒற்றரோடிவந் துரைத்தார்கள். நான் அவ் வார்த்தையைக் கேட்டு, இத்தாயைத் தொழுது, அம்மா! எனக்கொரு சாரதி கிடைப்பானானால் பழுதுவராமல் செயிப்பேனென்று சொன்னேன். அக்கால் நமது உத்தரைக்கு நாட்டியம் பழக்கி வருகிற பேடி மெத்தவும் உத்தமமான சாரதி என்று பணிப்பெண் சொல்ல, அது கேட்கவும், அவளைச் சாரதியா யமைத்துக்கொண்டு தேரேறிச் சென்று, கடல்போல் கவிந்த சேனையைக் கண்டு கண் கலங்கி, மனம்

விண்டு தேர்விட்டிழிந்து, ஊர்முகமாக ஓடிவருவதாயினேன். அப்படி பயந்தோடிவந்த என்னை ஊர்வசியின் சாபத்தால்பேடியுருக்கொண்ட தனஞ்சயனென்னும் புருஷோத்தமன் விடாமல் தடுத்துப் பிடித்து என்னைத் தனக்கு சாரதியாக்கித்தேற்றி என் பயத்தை மாற்றி, தேர் மேலேற்றி, வன்னிமரத்தில் மறைத்து வைத்திருந்த விஜய காண்டீப வெம்படை தாங்கி, அனுமக்கொடிநாட்டி, யாவரும் மெச்சும்படியாகிய அர்ச்சுன உருவமும் காட்டி, தேவதத்த முழக்கி, அரவக்கொடிக்கதிப னுடைய சேனைகளில் புகுந்தபோது அவ்விடத்தில் நடந்த விந்தையை நான் சொல்லத்தரமோ? ஓ நராதிபனே! சூரியனுக் கெதிர்பட்ட பனி போலவும், சுடருக்கெதிராகிய இருள்போலவும், சிங்கத்திற் கெதிர்ப் பட்ட யானைகள் போலவும், நெருப்புக்கெதிராகிய விட்டிற் பூச்சிபோல வும், இடிக்கு நேரிட்ட பாம்புகள் போலவும், எமனுக்கெதிர்ப் பட்ட உயிர்கள் போலவும், சிவனுக்கெதிர்ப்பட்ட சிலைமதன் போலவும், தீச்சலுக் கெதிர்ப்பட்ட பயிர்க்கால் போலவும் யாவரும் அழிந்து ஒழிந்தார்கள். ஐயா! அப்போது நான் பயந்து இந்த அர்ச்சுன ராஜனை விசாரிக்குமிடத்து தேவரீரிடத்தில் உண்மையாய் உயிர்க்குயி ராய் தர்மாதர்ம முதலிய நீதிகளைத் தெரிவித்துக் கொண்டு கங்கபட்ட ரென்றிருக்குந் தயாளுவானவர் சந்திரகுலத் தோன்றலான தருமராஜ ரென்றும், வாசமலரோடு பூசுதல் முதலாகிய புனுகுஞ் சாந்துஞ் சம் பங்கித் தயிலமுந் தரித்த கூந்தல் விரித்த வண்ணமகள் பாஞ்சால ராஜ கன்னிகையான திரௌபதாதேவி யென்றும், மல்லர் களை மாட்டிக் கீசகர்களை வாட்டி மடைப்பள்ளியில் சமையற் கூட்டி வாரா நின்ற வல்லமையாளன் பீமசேனனென்றும், குதிரைச்சேவகத்தி லமைந்தகோமான் நகுலராஜனென்றும், பசுமந்தைகளுக்கெஜமானனு யிருந்த பாக்கியவான் சகாதேவராஜனென்றும், வேலாயுதம் பிடித்த வீரர்களை மடித்த பட்டத்துயானை படைத்த இப் பாண்டவரைவரும் பாஞ்சாலியும் அக்ஞாதவாசம் தொலைப்பதற்காக இந்த மச்சநாட்டில் மறைந்திருந்துகாலங்கழித்தனரென்றும், நேற்றைய வரையிலும் அவர் களுக்குண்டாகிய தவணை நாளைப் போக்கிவிட்டு இன்றுமுதல் வெளிப் படவேண்டிய நாளென்றும் கேள்விப்பட்டேன். இனி இதைக்குறித்து நாம் யோசிக்கவேண்டி யிருக்கின்றது. இதுவரையிலும் நம்மாலிவர்க ளுக்கு என்ன குற்றம் குறைகள் நேரிட்டிருக்கின்றனவோ ? அவை களில் ஏதொன்றும் எனக்குத் தெரியவில்லை, இப்போது பிரத்தியட்ச மாய் வடுவில்லாத தருமராஜனுக்கு நெற்றியில் வடுவுண்டாக்கி வைத் திருக்கிறீர். ஐவருக்கும் அன்பாகிய பாஞ்சாலியை ஆசைப்பட் டணைத்து நேசமுறத் தொடர்ந்த கீசகன் முதலாகிய தம்பிமார்களும் நாசப்பட்டுப் போனார்கள். இவ்விரண்டினாலேயே பெரிய மோசம் வந் திருக்கின்றது. இவைகளை யெல்லாம் தக்கபடி யோசியுங்கள்'' என்று உத்தரகுமாரன் சொன்னான்.

இம்மொழியனைத்துங் கேட்ட விராடராஜனுஞ் சுதக்ஷிணையந் தன் குமாரனை புதைத்திருந்த பொருள் குதித்து வெளிப்பட்டதுபோற்

கண்டு, ஆ! ஆ! ஆ! அப்பா காதலனே! பாண்டவர்களா யிவர்கள்? பாஞ்சாலியா பணிப்பெண்? ஐயோ! ஆண்டவனே என்ன காரியம் செய்துவிட்டோம்? என்னவிதமாய் மதியிழந்தோம்'' என்று அங்ஙனே யயர்ந்து, நிலத்திற்சாய்ந்து, உயிருடன் மாய்ந்து மூர்ச்சையானார்கள். அப்போது உத்தரகுமாரன் அவர்களையணைத்து சோபத்தையும் மனஸ் தாபத்தையும் தணித்து, "இனி துக்கப்படுவதிற் காரியமில்லை, சீக்கிரம் இதற்குவேண்டிய பரிகாரங்கள் தேடுங்கள். எனக்கொன்று தோன்று கிறது. அஃதென்னவெனில் மன்மதனுக் கொப்பாகிய வடிவமும் மயில்வாகனனுக் கொப்பாகிய வெற்றியும் உமாமகேசுவரரைப் பூசிக் கும் புத்தியும் விருஷப குஞ்சர சிங்கவிராட்டின் சத்தியுமுள்ள பார்த் தனாகிய பரந்தாமன் மைத்துனனுக்கு எனக்கிளைய உத்தரகுமாரத்தி யைக் கொடுத்து, நம்முடன் கலந்து வாழச்செய்யுங் கருத்தைக் கடைப்பிடிப்போமானால் தெரிந்தும் தெரியாமற் செய்த தீமைகளும் சிதறிப்போம். இதனைத்தான் என் சிந்தையில் நினைத்தேன்'' என்றான். இவ்வாறியம்பிய மைந்தன் வார்த்தையை மனமகிழ்ந்துகேட்டு தந்தை யுந் தாயுஞ் சிந்தைகளிகூர்ந்து, "அப்பாமைந்தனே! உந்தன் மனதின் படியே எங்கட்கு மவ்விச்சை மிச்சந்தான்'' என்று சொல்லி அன்றிரவு வந்து விடியுமளவும் அச்சத்துடனொடுங்கி அசைவற்றிருந்தார்கள். உத்தர நிரைமீட்சிக்காகப் பார்த்தன் பண்ணிய சண்டையிற் செந் தூள் கருந்தூள் பறந்து படிந்து மறைந்த தன் மேனியைச் சுத்தம் படக் கழுவிக்கொள்ளுவதற்குப் போனவன்போல் உடனே சூரிய னவன் மேற்குச் சமுத்திரத்திற் போய்க் குளித்தான்.

இப்பாற் பெருமையி லுயர்ந்த பாண்டவர்களும் பாஞ்சாலியும் விராடனுடைய அரண்மனை விட்டு நீங்கி, அம்மச்சநாட்டின் புறம்பில் தங்களாயுதங்களைச் சேமித்து வைத்திருக்கின்ற வன்னி விருக்கச் சோலைக்கருகிற் சென்று, கூடுவிட்டுக் கூடுபாய்கிறவர்களைப் போல் தாங்கள் கொண்ட வடிவத்தை மாற்றி, பழைய ரூபங்கொண்டு, எம தர்மராஜனைத் தோத்திரம்பண்ணி வணங்கி, மேற்றிசையடைந்த சூரிய பகவான் கிழக்குத்திசைக்கு வருங்காலத்தை நோக்கிக்கொண்டிருந் தார்கள். அந்தவேளையிற் கோழி முதலிய குருவிகளெல்லாந் துயி லொழிந்து, ஓ பாழியபுயம்படைத்த பாண்டவர்களே, நீங்கள் நீடூழி வாழி! வாழி! ஆழியினலையுடன் மாநில நடுங்குவதாற் சூரியன் வரப் போகின்றான் என்று சொல்லுவதுபோற் கூவின. அதுகாலையில் மேற் றிசையில் மறைந்த வெய்யோன் மீண்டும் கிழக்குத்திக்குக்கு வர எத்த னித்து, பாண்டவர்களின் சங்கதியெல்லாந் தெரிந்துகொண்டோம். இனித் துரியோதனாதியர்களின் கருத்தையு மறிவோம் என்று மகமேரு வைச் சூழ்ந்து வந்தவனைப்போல் உதயகிரியில்வந்து, தனது கிரணக் கதிர்நீட்டி, தாமரை மலர்க்கரங்காட்டி, தன்மதி முதலிய துட்டரை யோட்டி, சத்திய நிலைபெற்ற தர்மராஜனது ஆக்ஞா சக்கரத்தை நிலக்கு நாட்டியதுபோல் உதயகிரியினுச்சிமே லெழுந்தான்.

---

## 9. பாண்டவர் வெளிப்படும் சருக்கம்

### கண்ணன் துதி

வானமாமதி பூதராசி தோறுலாய மாயனை
ஞானமாகி மறையினுச்சி நண்ணிநின்ற கண்ணனை
மோனமார் முனிக்குமா முணர்ந்தமூத்தி வித்தினை
யானுமுன்ற பிறவிதீர எண்ணியெண்ணி வாழ்த்துவாம்.

ஐயா ஜனமேஜய மகாராஜனே! விராடபுரம் விட்டு நீங்கிய பாண்டவர்களும் பாஞ்சாலியும் ஒரு மாஞ்சோலை சூழ்ந்த வனத்தூடமைந்த பொய்கையில் மூழ்கி, அருணோதய மானவுடனே ஜப தப விதிகள் யாவற்றையு முடித்து, சூரிய நமஸ்காரஞ் செய்து, ஸ்ரீ வேத வியாசரையும் எமதர்மராஜனையுந் திக்குநோக்கிப் பணிந்து, பாண்டவ சகாயனது பாதபதும நினைந்து, பருதியினொளியினும் மேலான பழைய வடிவஞ் சிறந்து மகாலட்சுமிபோன்ற பாஞ்சாலியுடன் பாண்டவ முதல்வன் வீற்றிருக்கும் பொழுது, வாயுகுமாரனுன பீமசேனனும் - தேவேந்திர குமாரனுன செஞ்சிலை விஜயனும்-ஆயுள்வேதிய ரளித்த நகுல சகாதேவரும் தங்கள் குலத்திற்கும் குணத்திற்கும் நலத்திற்கும் நன்மைக்குந் தகுதியான முரசக்கொடிபடைத்த முன்னேனைத் தொழுது, அன்னே னருளிய ஆசிமேற் கொண்டு பெரும்புகழ் பிரகாசத்துடன் அவரைச் சார்ந்திருந்தார்கள்.

### தருமநந்தனர் நெற்றியில் தழும்பு கண்டுடன்ற தம்பியரைச் சில தருமவாய்மை கூறித் தணிவித்தல்

இவ்வாறிருக்குஞ் சமயத்தில் நிகரற்ற வில்தாங்கிய தனஞ்சயன் தருமராஜன் முகத்தைச் சந்துஷ்டியாய்ப் பார்த்து, அவர் நெற்றியிற் செந்தூரத் திலகம்போற் சிவந்த புண்ணைக் கண்டு, "அண்ணு! தேவரீருடைய நெற்றியில் வடிவுக் கிடமானவாறு யாது?" என்று திடுக்கிடக் கேட்டனன். அதற்குத் தருமராஜன் சிறுநகை புரிந்து, யாதொன்றுஞ் சொல்லாமலிருந்தனர். அப்போது மின்னலைப் பழித்த மேனிபடைத்த பாஞ்சாலி, "விராடராஜனுக்குந் தருமராஜனுக்குமுண்டான ஒரு வாக்குவாதத்தினுல் வந்த தீது ஈது" என்று சொல்லினள். அதுகேட்ட அந்நேரமே, அர்ச்சுனனெழுந்து இன்னமும் தாமசமாவென்று நெருப்புபோ லெரிந்து, நெடுமூச் செறிந்து, அண்ணன்மேற் பரிந்து, "ஐயோ! நான் பிரிந்திருந்ததின் துன்பமிதுவோ, இப்போதே விராடபுரம் வேகக்கொளுத்தி மச்சநாடன் தலையை வாங்கிவைக்கிறேன்" என்று நச்சரவம்போற் சீறி, வெட்சி மாலையணிந்த ஆகமுந் தேகமு மலற நடுங்கிப் பற்கடித்து, கையில் விற்பிடித்து, அவனுக்கிச்சையான குலத்தை இன்னிமிடத்திற் பச்சடி பண்ணுகிறேனென்று புறப்பட்டான். நெருப்புடன் காற்று நேசமானதுபோல் பீமனும் வெகுண்டு விறிட்டெழுந்தான். நகுல சகாதேவரிருவரும் வியாகூலத்தோடு நடுங்கி, விராடராஜனுக்கின்று விநாசகாலமாவென்று மெய் மறந்து விட்டார்கள்.

இத்தன்மை வாய்ந்த தம்பிமார்களின் கடுங்கோபத்தைத் தரும ராஜன் கண்டு, ஓ! ஓ! மோசமாச்சுதே யென்று பூசிதவார்த்தைகள் புகன்று, ஆ! நேசவிசுவாசிகளே! அப்பா ராஜகுல சிரேஷ்டர்களே! நிஷ்டுரம் வேண்டாம்.

> "ஒன்றுதவி செய்யினு மவ்வுதவி மறவாமற்
> பின்றையவர் செய்பிழை பொறுத்திடுவர் பெரியோர்
> நன்றி பலவாக வொருநசை புரிவரேனுங்
> கன்றிடுவதன்றிமுது கயவர் நினையாரே"

என்றிருப்பதால் கொஞ்சம் யோசனை செய்யுங்கள். ஒருவருடைய ஆபத்துக்காலத்தில் இன்னொருவர் உதவி செய்தால், அவ்வுதவியை ஆயுசுள்ள வரைக்கு மறக்காமல், நன்றி குன்றாமையென்னும் நீதியை யும்-தருமத்தையும் நிறைந்துநாடி அவ்வுதவிசெய்த பேர்களால் என்ன பிழைவந்த போதிலும் அதைச்சகித்து, மனம்பொறுத்து, நன்றியிற் பிழையாமல் நன்மையைச் செய்பவர்க ளெந்நாளும் பெரியவரென்று நானிலம் புகழ்வதுண்டு. "நன்றிமறப்பது நன்றன்று நன்றல்லதன்றே மறப்பது நன்று" ஏன்று சாதுக்களும் சாஸ்திரங்களிற் பேசியிருக்கின் றார்கள். பற்பல நாளும் ஒருவன் நன்மை புரிந்து சொற்பமாக ஒரு நாளில் குற்றஞ்செய்ய நேரிட்டால், அச்சொற்ப குற்றத்திற்காக நன்றி குன்றி, மனங்கன்றி பொல்லாங்கு செய்ய நினைப்பது புகழல்ல, பூணல்ல, பொருளல்ல, அது புலமை கெட்ட கீழ்மக்கள் செய்கை யாம். "எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை, செய்ந் நன்றி கொன்ற மகற்கு" என்று வேதம் முறையிடுகின்றது. ஓ புண்ணிய குலத்திற் பிறந்த புனிதர்களே! ஒருகாலொரு நன்றி செய்த பேர்களை உள்ளத்தில் வைத்து, மறுகாலவர்களே செய்த பிழை நூறுனுலுஞ் சான்றோராகிய பெரியோர் பொறுப்பர். கயவராகிய மூடர்களுக்குப் பலகாலும் பலநூறு நன்றிசெய்து ஒருகாலொரு தீதா மாகில் முன்செய்த பல நூறு நன்றிகளும் பாழாய்க் கெட்டுப்போம். ஆகையால் காடாக்கினி மூண்ட காட்டில் பன்னிரண்டு வருஷம் கஷ்டப்பட்டு, பதின்மூன்றாவது வருஷத்தில் இந்த விராடராஜ னுடைய நிழலிலிருந்து, அவனது உப்புந் தண்ணீரு முண்டு. நாம் எண்ணிய வெண்ணம் பின்னமில்லாமல் அக்ஞாதவாசங் கழித்தோம். எத்தேசத் தரசர்களிலும் இத்தேசத்தரசன் மெத்தவுஞ் சரசன் நாம் எங்கிருந்து அக்ஞாதவாசம் பண்ணலாமென்று முன்னம் நான் வினவியபோது, நீங்கள் விராடபுரத்திற்கு மிஞ்சிய நகர மில்லை யென்றும் அவ்வரசனுக்கு நிகரான ராஜனும் இல்லையென்று சொன்னீர்கள். உங்கள் சொல்லை நம்பி இங்குவந் தடுத்தபோது, நமக்கிவன் ஊழியன் போலவும், இவனதரசாட்சி நமதரசாட்சி போலவும், காலங்கடத்தி னேமே யல்லாது, நாமிவனுக்குத் தாழ்ந்து நடுங்கி நடந்ததில்லை. நம்மையிவன் அதிகாரஞ் செய்ததுமில்லை. ஏதோ கோப பாபமென் னுங் கொள்கையாலும், நமது தீவினை வசத்தாலும், ஒரு சிறிய குற்றம் நேரிட்டது. அதற்காக நாம் கடவுளை நேர்க்கி மன்னிப்புக் கேட்டு,



பாண்டவர் சுயருபங்கொள்ள விராடராஜன் சபைக்கு கிருஷ்ணமூர்த்தி வருதல்

இவனுக்கொரு பொல்லாங்கு நேரிடாமல் காக்கவேண்டிய கடமை நம்முடையதாயிருக்க, நீங்களவனைக் கோபித் தெழுவது குணமல்ல.

" தம்மையிகழ்ந்தமை தாம் பொறுப்பதன்றி மற்
றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தால்—உம்மை
எரிவாய் நிரையத்து வீழ்வர் கொல்லென்று
பரிவதூஉஞ் சான்றோர் கடன் "

என்று மேலோர்கள் கூறி யிருப்பதைச் சன்மானிக்க வேண்டியது. நம்மைத்தொழுது பாதுகாத்த தோன்றலின் மேல் பழுது நினைப்பது மகாபாவம்; மகாபாவம்; பார்த்தனே! பதருதே" என்று தருமராஜன் தடுத்தார்.

### பாண்டவராயுதபாணியராய்ப் பழைய கோலங்கொண்டு கொலுக்கூடம் வர, விராடன் வரிசை வைத்து வணங்க, தருமரவனைச் சன்மானித்தல்

இப்படி சொன்னதின்பேரில் பீமார்ச்சுனரிருவரும் நகுலசகாதேவரும் மூத்தவர் மொழிந்த முறையிற் பிறழாமல், மச்சராஜன்மேல் வைத்த கோபமாறி. தருமராஜ னுத்தரவின்படி வன்னிமரத்திலேறி, அவரவராயுதம் கைக்கொண்டு, அந்தப் பாலை நிலத்தி லமர்ந்த கோலாகலி-நீலி-சடாதரி-லீலாவதி-சூலி-கலாதரியென்னுங் குண்டலி குமரி சாமுண்டியைப் பணிந்து, வன்னிமரத்தை வலம்வந்து வணங்கி, எங்கள் தாயினது கர்ப்பம்போல் ஆயுதங்களைக் காத்தளித்த தமனியத் தருவேயென்று சந்தோஷப்பேரிட்டுச் சம்பிரமங் கொண்டாடி, விராடராஜனுடைய கொலுமுகச்சாவடியில் கூசாமல்புகுந்து, ஐந்து தேவேந்திரர் ஒரு இந்திராணியுடன் வந்திருந்த வாறுபோல் சிங்கத்தவிசேறி இருந்தார்கள். அந்தவேளையில் செந்தழல் வளர்க்கும் அந்தணர்-முனிவர்-மந்திரிமார்-சாமந்தர்-தந்திரியர்-பிரதானிகர்-சுற்றத்தினர்-காப்பாளர்-நகரமக்கள்-படைத்தலைவர்- இவுளிமறவர்-யானைவீரர் - சேனபதியர்-தூதர்-கருமாதிக்காரர்-நட்பாளர்-மடைத்தொழிலாளர்-மருத்துவக் கலைஞர்-நிமித்திகப் புலவர் - இவர் முதலிய யாவருஞ் சேர்ந்து வந்து, குந்திதேவியார் தந்த மைந்த ரைவருங் குருகுலம் விளங்கப் பிரகாசித் துதயமாகிய குமுத நண்பன்போற் சிங்காசனத்தி லிருக்கக் கண்டு, தங்களால் தாங்கப்படாத சந்தோஷங் கொண்டு, விராடராஜனுக்கு விரைவில் தெரிவித்தார்கள்.

அச்செய்தி கேட்ட மச்சராஜன் இச்சைமேற் கொண்டு, ஐயோ! நாமென் செய்தோம்? இனி என் செய்வோம்? என்று மன வருத்தங் கொண்டு, சந்தனம் - தாம்பூலம் - புட்பம் - பனிநீர் -மஞ்சள்- குங்குமம்-வாசனைத் திரவியம் - தேங்காய் - வாழைக்கனி - மாங்கனி - பலாக்கனி - பற்பல அப்பங்கள் - பருப்புவர்க்கங்கள் - இவை முதலியவைகளைத் தட்டுத் தட்டா யெடுப்பித்துக்கொண்டு, பட்டுப்பட்டாவளிகள் - கட்டுக்கட்டாகிய கட்டுவர்க்கங்கள்-முட்டுப்படாத முத்து முதல் நவரத்தினங்கள் முதலானவைகளும்கொண்டுவந்துகாணிக்கை

வைத்து, புத்திரனுடனுந் தானும் தருமபத்தினியும் பாண்டவர்களின் பொன்னடியில் விழ்ந்து, புழுதிடப் புரண்டு, ''ஓ பூரணநிதியே! ஓ பொறுமைக்கரசே! எளியேங்கள் செய்த பிழையைப் பொறுத்தருளும்'' என்று துதித்து, பூமியை விட்டெழுந்திராம லிருந்தார்கள். அம் மூவரையுந் தருமராஜன் எழுப்பி விட்டான். பின் விராடனையும் உத்தர குமாரனையும் மார்போடணைத்து, அரசனைப் பக்கத்தில் வைத்து, ''ஆதிசேடன் முடிமேல் தாங்கிய இப்பூமியில் உம்மைப் போல் யாரிருக்கிறார்கள்? நீர் மெத்தவும் உத்தமர். புண்ணியசாலி பொறுமைக்கு வேலிபோன்றவர்'' என்று புகழ்ந்து மகிழ்ந்தார்.

இவ்வாறு கொண்டாடிய குருகுலக்கோமானது குளிர்ந்த வாசகத்தால் மச்சகுலாதிப னெழுந்து, ம்றுபடியும் பணிந்து. ''ஓ வேந்தாகிய சாந்த மூர்த்தியே! தோத்திரமென்பது தம்மைப்போன்றவர்க்குத் தகுமல்லது, எங்களுக்குத் தகாது, நாங்கள் அவ்வளவு பாத்திரமும் க்ஷேத்திரமும், கோத்திரமும் பெற்றவர்களல்ல. ஆதலால், அடியேன் மிகவும் பேயன். விவேகமற்ற சேயன். முன் கோபத்தாற் பதறிப் பேதிக்கின்ற வாயன். அப்படிக்கிருந்தபோதிலும், தங்களுக்கு நான் தகுந்த நேயனெனப் பாராட்டி, என்னால் நேரிட்ட குற்றங் குறைகள் யாதிருந்தாலும், அவைகளை மன்னித்து ஓட்டி, தீர்க்கவைர நாட்டாமல், சில காலத்திற் சொல்லிக்காட்டாமல், ஓ பார்த்திபரேறே! தீனனான என்னை ஆண்டருள் செய்யவேண்டும்'' என்று வேண்டிக்கொண்டான். அந்தப் பிரகாரம் புகன்று அடைக்கலம் புகுந்த விராடராஜனை வேந்தர் வேந்தாகிய தருமராஜன் பார்த்து, இரக்கமுள்ளவராய் இஷ்டபூர்த்தியாய் இதனைச் சொல்லத் தொடங்கினார் :—

''ஐயா விராடபூபதியே! உமது பட்டணத்தில் நாங்கள் வந்து சேர்ந்த பிற்பாடு துன்பமென்பவை யில்லாமல், எங்களுக்குரிய நேசம் போலவே, எங்கும் பிரக்யாதி யுண்டாகும்படியாய் வேற்றுமையின்றி விற்றிருந்து வாழ்ந்தோம். உன்னுமிடத்தில் உம்மிலுயர்ந்த உற்ருருமில்லை, பெற்ருருமில்லை, மற்ருருமில்லை, ஓ மாசற்றமரபோய்! உம்மை விட எனக்கு வேருெரு உதவியுமில்லை. நகங்களிதுவரையிலும் குறைவில்லாதநுபவித்துவந்த உமது பட்டினத்தின் பதவியைவிட வேருெரு பதவியுமில்லை. நீரும் உமது சகோதரரும்-உமது புத்திர-மித்திர-பௌத்திராதியரும்-நால்வகைச் சேனைகளும் ஆகிய யாவரும் எனக்குப் படைத்துணை வந்து என் பக்கத்தில் நிற்பீர்களானால், துராங்காரமாய் எங்களை வஞ்சித்த சத்துருக்களையும், அவர்களுக்கு உடன்பட்டுவந்த சேனைவேந்தர்களையும் ஒரு நிமிஷத்தில்யமலோக மேற்றிவைக்கிறேன். இது மெய்யென்று பறைசாற்றி வைக்கிறேன். இதனையுமது கருத்தில் ஐயமற உட்கொள்ளும்'' என்று வையகம் வாழ்த்து மரபினன் சொல்ல அதனால் மச்சராஜன் தேறி மனத்துயர்மாறி மகிழ அதுகண்டுமாதொடு மகனுந் தீதகன்றுற்றார்கள்,

### உத்தரன் வேண்டுகோளின்படி உத்தரையை அபிமன்னுவுக்காகச் சம்மதித்த பாண்டவர் கருத்தறிந்து விராடன் பந்துக்களாதியர்க்கு ஓலை விடுதல்

இப்பால் உத்தரகுமாரன் நமக்கு உறுதி தேடிக்கொள்ளுந் தருண மிதுதானென்று துணித்து தந்தைதா யிருவரையு முன்னிட்டுக் கொண்டு தருமராஜனைப் பணிந்து, வாய்பொத்தி நின்று, "ஓ சமுத்தி ரத்தை ஆடையாகத் தரித்தருளிய இவ்வுலக முழுமையும் ஒரு வெள் ளைக்குடை நிழலில் அடக்கியாளும் விதரண வேந்தே! யான் தக்க பக் குவமாகப் பேசவறியாச் சிறியேனுனாலும் யான் செய்துகொள்ளும் விண்ணப்பத்திற்குத் தேவரீர் செவிகொடுத் தருளல்வேண்டும். இந்த விராடபுரம் இதனது பூவளம் பொருள்வளமுள்ள யாவுந் தேவரீருக் குரியவையேயாம் நாங்கள்யாவரும் உங்களுடைய ஏவற்பணிவிடைக் கேற்றவர்களே, எங்களுக்குச்சுதந்தரமான ஆறுவிதப்படைகளுந்தங்க ளுடையவைகளே யாகும். ஈதல்லாமல் என் தங்கையாகிய உத்தர குமாரத்தியும் அர்ச்சுனராஜருக் குரியவளே, ஓ எங்களாண்டவராகிய பாண்டு நந்தனரே! தயவுசெய்து எங்களையாண்டுகொள்ளவேண்டும்" என்றுவேண்டி விளம்பினுன். இவ்விதமாக உத்தரகுமாரன் சொல்லக் கேட்ட விஜயகாண்டீபதரன் அவனை நோக்கி, ஆ! ஆ! ஹா! என்று கையமர்த்தி "ஓகல்வியின்சாரமும்-செல்வியின் அபாரமும்-கைப்படை வீரமும் விற்பன விவேகமும்-காமன் மயமும்-சேமன் ஜெயமும்-காரிய சித்தியும்-சூரியபுத்தியுமுடைய காவலன் மகனே! உன் தங்கையாகிய உத்தரகுமாரத்திக்கு நான் சிலகாலம் நாட்டியம் பழக்கி வைத்தபடி யால், அவள் எனக்குப் பெண் மரியாதையாம். நீ இப்போதுகொண்ட நினைப்பை நீக்கிவிடு. அல்லது உன்னிஷ்டப்படி தப்பாமல் உறவு கலக்க வேண்டுமானுல், உனக்கிளையவளாய் நன்னலம் நற்குணம் வாய்ந்திருக்கின்ற அவ்வுத்தரப்பாவை பொன்னில முதலிய நன் னில மன்னவர் புகழும் பெரும்பேர்படைத்த என் மைந்தன் வாளபி மன்னனுக்கு உரியவளாகட்டும்" என்றுன். இப்படி அற்புதமாய் விளம்பிய பற்குனன் மொழியைக் கேட்ட மாத்திரத்தில் அவ் விடத்திலிருந்த சாஸ்திர சம்பன்னருடன் தருமராஜன் விராடராஜன் முதலிய சகலமான பேரும் "சதாஸ்து" என்று சம்பிரமங் கொண் டாடினுர்கள். உடனே விராட பூபதியானவன் கலியாண முரசவாத் திய முழக்கி வைத்து, பந்துமித்திராதியர்களுக்கெல்லாம் பாண்டவர் கள் விராடபுரத்தி லிருக்கின்ருர்களென்றும், அப்பாண்டவரில் நடுப் பிறந்தோன் பிள்ளையாகிய சிரஞ்சீவி அபிமன்னகுமாரனுக்கும் எனது பெண்ணுகிய சௌபாக்கிவதி உத்தரை குமாரத்திக்கும் கலியாணம் நடக்கப்போகிற தென்றும் ஓலைகளெழுதி, தூதர் வசத்தி லனுப்பி அறிக்கை யிட்டான்.

### ஸ்ரீ கிருஷ்ணபகவான் பந்துக்களோடு அபிமன்னனையும் சுவேதனையு மழைத்து வருதல்

ஓ ஜனமேஜய மகாராஜனே! ஈதிப்படியிருக்க - விராடராஜனு டைய முதற்குமாரன் சுவேதனென்பவன் கைலாசபதியைக் குறித்துத்

தவஞ்செய்யப் போனுனென்று முன்னமே சொல்லி யிருந்கின்றே னல்லவா? அந்தச் சுவேதனுனவன் மனுேபக்திமாரு பல வைராக்கிய நிலையை வகித்து, மகாதேவனைக் குறித்துத் தவமிழைத்து, தாழ்ச்சி யில்லாத காட்சியும்பெற்று எந்த ஆயுதம்பிடித்துப் போர்புரிந்தாலுந் திரிபுவனத்தையும் ஜயிக்கும்படியான அருளுற்று, மற்றெவருந் தனக்கெதிரில்லாமல் யாவரையும் வெற்றிபெறும்படியான சித்தியைப் பற்றினுன். அவன் பற்றியிருக்குஞ் சித்தியை முத்திக்கு வித்தாகிய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி யறிந்து, "இனிமேல் நாம் குருக்ஷேத்திரத்திற் கூட்டி வைக்கப்போகின்ற யுத்தத்திற்கு இவனெருவனிருக்கின்றுன். இவனை விட்டுவிடுவது யுக்தமல்ல. எவ்விதத்திலு மிவனைக்கொண்டு போகவேண்டும்" என்று நினைத்து அவனிருந்த இடத்திற்குப்போய், பிரிந்துபோன உம்மைப் பார்க்க இத்தனை நாட்சென்றதென்று உப சரித்துப் பரிந்தழைத்துவந்து, தனக்குண்டாயிருந்த பகைவர்களை யெல்லாம் அவனுற் போக்கிக்கொண்டு, துவாரகாபுரிக் கழைத்துப் போய்ச் சுரேசனு மெச்சும்படியான விருந்து செய்வித்து அளவற்ற வெகுமதி யளித்து,கேளிக்கை முதலாகிய சம்பிரமங்களிற் காலதாமசம் பண்ணிக்கொண்டு, பாண்டவர்கள் வெளிப்பட்ட சமாச்சாரம் இன் றைக்குவருமோ நாளைக்குவருமோ வென்று தமதிதயத்தில் எண்ண முற்றிருந்தார். அச்சமயத்தில் தூதர்கள் ஓலைகொண்டுவந்து வணங் கினுர்கள். அந்தச் சுருளையவர் அவிழ்த்துப் பலபத்திரருக் கெதிரிற் படித்துக்காட்டி "அண்ணு!நமதுபாண்டவர்கள் அஞ்ஞாதவாசமகற்றி வெளிப்பட்டார்களாம். அல்லாமலும் உமது மருமகன் அபிமன்னனுக் குத் திருக்கலியாணம் நடக்கப்போகின்றதாம்" என்று சொல்லி மகா விருப்பத்துடன் நீருண்ட கருமேக நிறங்கொண்ட கோபாலனுனவர் பலராமர் சாத்தகி, கிருதபன்மன், கிருதவீரியன் இவர்களும், இவர்கள் குடும்பங்களும், வண்டு செறிந்த மதுமாலை யணிந்த சுருட்கருங் கொண்டை சிறந்த தங்கை சுபத்திராதேவியும், அயிலாயுதம்படைத்த முருகையனுக்கொப்பான அபிமன்னனும் கூறியவேற்படைகொண்ட சுவேதனும், குடிப்படை முதலியோருஞ் சூழ்ந்து வரும்படி அட்டிக் கொண்டு விராடபுரம் வந்து சேர்ந்தார்.

இந்தப்பிரகாரம் மேகவண்ணனுன கண்ணனும் அவரண்ணனும் வருகின்றுர்களென்று சோகநீங்கிச் சுகம்பெற்றிருந்த பாண்டவர்களும் விராடராஜனும் தூதுவரால் கேள்விப்பட்டு, அவ்வேத நாயகனைக் காணவேண்டுமென்று எதிர்கொண்டு சென்று கண்டு, இருவர் தேக மும் ஒன்றென்று சொல்லும்படியாய் ஒருவரையொருவர் இறுகத்தழுவி யணைத்து, ஆகாயமளாவிய சிகரகோபுரஞ் செறிந்த பேரவையி லழைத்துவந்து, பலராமர், சாத்தகி, மற்ற யாதவகுமாரர்கள் முதலிய பேர்களுக்கும், அரவணைப்பள்ளி நீங்கிய ஆதிமத்தியாந்த ரகிதனேடு வந்த பெரியோர் முதலிய உரியோர் யாவருக்கும் தகுதியாகிய சன்மா னமும் வெகுமானமுங் கொடுத்துப் பிரியவசனங்கள் பேசிக்கொண் டார்கள். மந்திரி பிரதானியர் சிலரும் வந்த யாதவர் பலரும் மரியாதை

குறையாமல் வணங்கி நின்றார்கள். சுபத்திராதேவியும், யாதவ ஸ்திரீ களும், ஸ்ரீ கிருஷ்ணருடைய அஷ்டபாரியர்களும், தேவகி தேவியா ரும், உரோகினி தேவியாரும், மற்றுமுள்ள தாய்மார்களுந் திரௌ பதாதேவி யிருந்த அந்தப்புரம் போய்ச்சேர்ந்து, சகலவித மரியாதை யுடன் உபசாரமும்பெற்று, சுபங்கொண்டாடி யிருந்தார்கள். இப் பால் அபிமன்னனெருங்கி, வெகுநாளாகப் பிரிந்திருந்த தந்தை யரை வணங்கிப் பாஞ்சாலியைப் பணிந்து, மாஞ்சோலையிற் குயில் கூவும் வளனுடைய மச்ச நாடனுக்கும் வந்தனந் தந்தான். அவர்கள் யாவரும் அவனை யாலிங்கனம் பண்ணி ஆசீர்வதித்து, ஆண்மை யுடைய பாண்டவர் பக்கத்தில் இளஞ் சிங்கம் வீற்றிருக்குந் தன்மை போல் இருக்கச் செய்தார்கள். அப்போது அந்தப் பிள்ளையைச் சபையிலிருந்த பெரியோர்கள் கண்டு மிகவுமகிழ்ந்து, வியப்புடன் புகழ்ந்து, நயந்து வியந்து, பாண்டவர்கள் பூர்வஞ் செய்த புண்ணிய நலமே இப்பிள்ளையாகப் பிறந்ததென்று கொண்டாடிக் கொண் டிருந்தார்கள். அப்போது தரும சொரூபியாகிய யுதிட்டிரர் தமது விடாத கடாக்ஷவீக்ஷண்யப் பார்வையால் வீரப்பிரதாபத் தோள் பூரித்த அபிமன்னனை நோக்கி, அவனோடு சில ஸ்திரமான வார்த்தை களைப் பேசி, அதற்கவன் சொல்லுக்குச் சொல் சாஸ்திர யுக்தமாய்ச் சொல்லுந் துணிவைத் தேர்ந்து, ஆசைமேலிடச் சிறந்து அகமகிழ்ந் திருந்தார். இவ்விதமாகப் பெரிய தந்தையினிடத்தில் பேசிய அபிமன் னனை மாமனாகப்போகிற விராடராஜனும் மைத்துனனாகிய உத்தர குமாரனும், சுவேதன் முதல் மற்றுள்ளோரும் சுதக்ஷணா தேவியுங் கண்டு கண் களிகூர்ந்து, செவிகுளிர்ந்து, முகமலர்ந்து, அகமகிழ்ந்து, ஆனந்தங் கொண்டாடினார்கள்.

இப்படியாக விருக்கின்ற சமயத்தில் ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய திருவருள் பயனால் விராடபுரம் வந்துசேர்ந்த சுவேத னென்பவன் தன் தந்தையான விராடனையும், சிறிய தந்தைமார்களையும், தரும ராஜன் முதலிய பேர்களையும் தாயாகிய சுதக்ஷணையையும் பணிந் தான். இவர்களெல்லோரும் அவனையேந்தி முத்தமிட்டார்கள். அவ ருள் மச்சராஜன் இச்சைமேலிட்டெழுந்து, மைந்தன் பேரில் விழுந்து, ஆ! என் விவேகக் கொழுந்தே யென்று மார்போடணைத்து, புஜத் துடன் புஜமொத்தி, முகத்துடன் முகஞ் சேர்த்து, இருகரத்திலும் எடுத்துப் பிடித்து உச்சிமோந்து, கருத்தினால் களித்து, கண்ணருள் தழைத்து "அப்பா என் கண்மணியே! நீ இதுவரையில் எங்களைவிட்டு எந்த இடத்திலிருந்தாய்? தந்தவண்ணனுக்கிளைய நந்தகுமாரன் உன்னை எங்கே கண்டார்? இவருடன் கூடி நீ எப்படி வந்தாய்? எவ் விடத்தில் நீங்களிருவருஞ் சந்தித்தீர்கள்? இது எனக்கு நல்லகாலம் ஆதலால் என் மனங்குளிரச் சொல்லுக" என்று கேட்டான். அதற்குச் சுவேதனருகிலிருந்த கடல்நிற வண்ணக் கண்ணன் "ஓ விராட பூபதியே! உமது குமாரன் அருந்தவ மிருந்து சிவனருள் பொருந்திப் பெருந்திறல் படைகளும் பெருமையும் பெற்றான். இத்தன்மையாகச்

சித்தி பெற்றிருக்கிற திடத்தை யானறிந்து, இந்த உத்தமனை யழைத்துக்கொண்டு துவாரகைக்கு வந்து, எனக்கு அசாத்தியமா யிருந்த சத்துருக்களை யெல்லாம் இவனுலொழித்துவிட்டு, இவனுக்கு விருந்து முதலிய உபசாரங்களெல்லாஞ் செய்து, என்னிடத்தில் வைத்துக் கொண்டிருந்தேன். அப்போது நீங்களெழுதி யனுப்பிய ஓலையைக் காணவும், உடனே பிரயாணமாகி இம் மச்ச நாடடைந்தோம்'' என்று கோபாலன் சொல்ல, விராடராஜன் பக்ஷமேலிட்டு, மகன் பக்கத்திலிருந்து, தவம்புரியப் போனதுமுதல் வந்தது வரையுஞ் சாங்கோபாங்கமாய் க்ஷேமலாபங்களை விசாரித்து, பகைவரென்னும் யானைகளைக் கொல்லுகின்ற சிங்கம்போன்ற பாண்டவருடன் மற்றப் பெரியோர் யாவரையும் பணிவித்து, சபாமண்டபத்திற்குனே அவனைத் தழுவி யிருத்தித் தானுமுடனிருந்தான். அக்கால் விராடராஜனுடைய மற்றய பிள்ளைகள் யாவருந் தமையனுன சுவேதனைச் சாஷ்டாங்கமாகத் தொழுது, அவனு லுபசரிக்கப்பட்டுத் தருக்கி யிருந்தார்கள். அன்னையாகிய சுதக்ஷணுதேவியுந் தன்னைப் பணிந்த சுவேதனை வாழ்த்தி, பொன்னுக்கிணையாகிய தன் புத்திரியின் கண்ணுக்கினிமையான கணவனையும் பார்த்துக் களிப்போடிருந்தாள்.

### பாஞ்சாலர் குந்திபோஜர் இவர்கள் முதலாயினேரும் தெளமியாசாரியராதியரும் வருதல்

அதுவேளையில் பாஞ்சாலதேச ராஜனும், சோமகாளும், அவர்களுக்குரிய நால்வகைச் சேனைகளும், இளம் பஞ்ச பாண்டவர்களும், திர்ஷ்டத்துய்மன் முதலாகிய பேரும் வந்தார்கள். அவர்களை விராடராஜனும் பாண்டவர்களும் எதிரேசென்று கண்டு ஒருவரை யொருவர் தழுவிக்கொண்டு, தகுந்த மரியாதைகளுடன் புகழ்ந்து சபாமண்டபஞ் சேர்ந்திருந்தார்கள். இப்பால் குந்திபோஜ குலராஜர்களும், மத்திர தேசாதிபர்களும், புத்திரவர்க்கங்களும், மித்திர வேந்தர்களும், பாண்டியநாட்டரசரும், சோழராஜ சிகாமணிகளும், சேரபூபதிகளும், மகத தேசாதிபதிகளும் இன்னும் பற்பலதேசத்திறைவர்களும் வன்னவன்ன வாகனமேறிவந்தார்கள். அன்னவர்களையெல்லாம் பல வரிசைகளோடு உபசரித்து ஆசனத்தி லமர்த்தினுர்கள். வந்த வேந்தர்கள் சிந்தை யுவந்து பாண்டவர்களைப் பார்த்து ''அந்தோ! நீங்கள் பன்னிரண்டு வருடம் காட்டில் வாசம் பண்ணவும் நாங்களுங்களைப் பிரிந்திருக்கவும் நேரிட்டதல்லவா? ஆ! ஆ! இஃதென்ன வினை?'' என்று சொல்மன நொந்தார்கள். தம்மைக்குறித்து வெம்மையடைகின்ற தராதிபர்களைத் தருமராஜன் நோக்கி, ''ஓ சகல சாஸ்திரங்களுங் கற்றசம்பன்னர்களே! மேல்வினை எவரையும் மீறவிடாது. மேதினில் பிறந்தோன் வேதனுனலும் வினைக்குப்புறம்பாய் மீளுவதற்கியலாது. ஆகையால் நடந்துபோன காரியத்தைப்பற்றி விசனப்படுவதில் யாதொரு லாபமுமில்லை. இனி நடக்கவேண்டிய காரியங்களை நன்காராய வேண்டும்'' என்று சாந்தமாகப் பேசிப் பின்னுஞ் சொல்லுகின்றுர் :—

"ஓ தரணீச்வரர்களே! தாமரைச்சேக்கையிற்படுத்த அம்ஸங்கள் அம்மலர்த்தேன்களால் நனைந்த இறகுகளை வானத்தில் விரித்துவரச் செய்கின்ற வண்மையும், தானத்தைப் பொழியுந் தந்தாவளத் திண்மையும், நீர்வள நிலவள நன்மையு முடைய இந்த மச்சராஜன் வசந்த கால மன்மதன்போன்ற மகாராஜன். வெகு தேஜன். இவருடைய நாட்டிற்கு நாங்களெப்போது வந்தோமே அப்போதே காட்டில் திரிந்த வருத்தமும், எங்களை மாட்டி வருந்திய தீவினைப் பொருத்தமும் கேட்டையடைந்து போய்விட்டன. இந்த அன்பருடைய பேருதவியால் துன்பமகன்றிருந்தோம். முன்பு நான் மாட்டிக்கொண்டதெவ்வாறெனில், சுரலயபேதங்களாகிய ஸ-ரி-க-ம-ப-த-நி-என்னும் சப்தசுர தாளத்துடன் சேர்ந்த குரல்-துத்தம்-கைக்கிளை-உழை-இளி-விளரி-தாரம்-இவை முதலிய ஏழிசைப்பாடலுக்கு விரும்பி வந்துருகிற அசுணப்பட்சிகள், பறையடியோசைகேட்டுச் சிறையடியாதயர்ந்து ஒருவன் கைக்குள்மாட்டிக் கொள்ளுமாறுபோல், விண்ணுக்கிறைவனென நீண்டு மண்ணுக்கொருவனென ஆண்ட திருதராட்டிர மகாராஜனெனும் எமது பெரிய தந்தையின் வார்த்தையால் மயங்கி, துரியோதனன்-சகுனி-துச்சாதனன்-கர்னன்-இவர்கள் கூடி எண்ணிய வஞ்சனையில் மாட்டிக்கொண்டு வருந்தினேன். இனி நான் செய்யவேண்டிய காரியமென்ன? நீங்களியாவரும் என்னைக் காக்கும்படி கண்ணுக்கிமைபோற் கலந்திருக்கின்றீர்கள். உங்கள் சித்தம் என் பாக்கியம்" என்று மெத்தவும் வருந்தியுரைத்த உத்தமன் சொல்லைக் கேட்டகொற்றவர் பலரும் பதைபதைத்து, "இப்போ திவ்விடத்திற் சேர்ந்திருக்கின்ற நாமெல்லோரும் இதுவே பயணமாகப் புறப்பட்டு இன்றைக்கே சண்டைவிளைத்து, துரியோதனன் பண்டையோலையைக்கிழித்து, அவனுக்குத் துணைவேந்தர்களைக் கொன்று கழித்து, ஜெயம்! ஜெயம் என்ன வென்றுவருவோம் வாரும்" என்று தருமநந்தனன் கருத்திற்குப் பொருத்தமாக வற்புறுத்திச் சொன்னார்கள்.

இன்னவாறு மன்னர் மன்னர்கள் முன்னிட்டுரைத்த மூர்த்தண்ய மொழியை விராடர்கோன் கேட்டு மகிழ்ந்து, "உங்களுடைய பூர்வத்தியான கிருபை கீர்த்தியிற்சிறந்த இப்பாண்டவ பூபதிகளுக்குச் சீர்த்தியாகவிருக்கும்போது, இன்றைக்கும்-மற்றென்றைக்கும் - என்ன குறை?" என்றுபசாரங் கூறிச் சபையை விட்டெழுந்து, யாவருக்குஞ் சாஷ்டாங்கமாக விழுந்து, கோபால கிருஷ்ணனைச் சிந்தித்து பூபால வேந்தரைச் சந்தித்து, இருகரங்குவித்து வந்தித்து, "ஓ இந்நிலங்காக்குமிறைவர்களே! நான் கூறும் விண்ணப்பத்தைச் செவிகொடுத்துக் கேளுங்கள். மலைகள் மதித்துத் துதித்து வணங்கப் பூரித்த புயமும், நீதிசாஸ்திர நெறிமுறைப் பயனும், சொற்பொருணயமும், விற்பன வினயமும் சௌந்தரியமும், கூர்வேல்தாங்குந் தைரியமுமுடையபாண்டவ சுபுத்ரனென்னும் அபிமன்னராஜனுக்கும், என் தவக்கொழுந்தாகிய உத்தரையாளுக்கும் நடக்கும் கலியாணவைபவங் கண்டருளிய பிற்பாடு, வாளைகள்பாய-கமுகம்பாளைகள் சாய-வனிதையரு'டி-மழை



அபிமன்னனுக்கும் உத்தரைக்கும் கலியாணம்

நீருங்கூடி நீடிவிளையாடும் வளநாடாகியகுருநாட்டைச்சண்டையிட்டு வாங்கப் புறப்படுவோம். அதுவரையில் நீவிர் யாவரு மனம் பொறுத் திருக்கக் கேட்டுக்கொள்ளுமென்னை மன்னிக்க வேண்டும். மேலும், மாயனுக்கு மருமகனாக வாய்க்கின்றமையால் பற்பல தேசாதிபர்கள் யாவரும் ஏககாலத்தில் ஒருமிக்க வரும்படிக்கு முற்பிறப்பிற் செய்த தவம் இப்பிறப்பிற் கைவல்லிய மாயதென்று சிறப்புற்றிருக்கின்றேன். மாலைதாங்கிய வண்புயமோங்கிய மன்னவர்களே! சீக்கிரத்தில் முகூர்த் தம் நடக்கும்படிச் செலவு கொடுத்தருள வேண்டும்'' என்று சந்தன பாளித புஷ்ப தாம்பூல பலாதிகள் யாவற்றையும் தட்டுத் தட்டாய் வைத்து, முட்டுப்பாடில்லாமற் கைகட்டிக்கொண்டு விராடராஜன் கேட்டான். அதன்பேரி லெல்லோருஞ் சம்மதித்து, தருமராஜனது அருட்பார்வையு நோக்கி அவ்வாறு நடத்துவதே உசிதமென்றுர்கள். அப்போது அன்புக்கொருவித்தாகிய தருமராஜன் முதலான பாண்டவ ரும், ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியும் புஜங்கள் பூரித்து, அகமுமுகமு மலர்ந்து ஆசைமேலிட்டார்கள்.

இப்பால் பாண்டவர்கள் அஞ்ஞாதவாசம் பண்ணப்புகுந்த காலை யில் பிரிந்த தௌமியரும் பன்னீராயிரம் பிரமஞ்யானிகளும் வந் தார்கள் அவர்களை ஐவருங்கண்டு அன்புமேற்கொண்டு, ''ஓ சுவாமி களே! யாங்கள் செய்யவேண்டி யிருந்த ஒருவருடத் தொண்டும் அகன்றது'' என்று புகன்று சரண்மேற் பணிந்தார்கள். அவ்வாறு உபசரித்துத் தொழுத ஐவர்க்கும் அவர்க ளாசிர்வதித்தான பின்பு, திரௌபதாதேவி வேதிகை சுபத்திரை இரேணுமதி விஜயை இவர் களும் பணிந்தார்கள். அவர்களுக்கும் மங்களாசனஞ் சொல்லி, உடனே பணிந்தெழுந்த இளம்பஞ்சபாண்டவர்கள், வன்சகாதேயன், அபிமன்னன், நிர்மித்திரன், ஜெயக்ஷேத்திரன் முதலிய புத்திரர்களையும் வாழ்த்தி, எத்திக்கும் புகழும்படி கீர்த்திபெறுங்களென்றிசைத்து, தரும நந்தனரைப் பார்த்து, ''ஓ தனிகரே! எம்மை விட்டு நீங்கி அஞ்ஞாத வாசத்திற் கிசைந்த ஒருவருடம் வரையிலும் நடந்த சங்கதியாவும் உரைத்தருள வேண்டும்'' என்று கேட்டார்கள். இப்படியாகக் கேட்ட தௌமியர் முதலிய மகான்களும் மன்னவர்களும் மகிழ்வுறும்படியாய் நிறைவுறுஞ் செய்திகளைக் குறைவறக் கூறினர் தருமநந்தனர். அவை யனைத்துஞ் சொல்லக்கேட்டுச் சந்தோஷித்த முனீச்வரர்களையுந்தௌ மியாச்சாரியரையுந் தருமநந்தனரும் விராடராஜனும் பார்த்துக் கை குவித்து, ''ஓ வேதவேதியர்களே! நமது வாளபிமன்னனுக்கும் உத் தரை குமாரத்தியாருக்கும் பாணிக்கிரகண முகூர்த்தம் நடக்கவேண் டியதா யிருப்பதால், இதற்குத் தகுந்த நன்னாள் நியமிக்கவேண்டும்'' என்று விளம்பினர்கள்.

### விராடன் முகூர்த்த நாள் வைத்துப் பாண்டவரை உபலாவியத்திருத்தி, மணவினைக்குரிய தொழில்யாவு முடித்தல்

இவ்வாறு கேட்டுக்கொண்ட அவர்களெண்ணப்படி நக்ஷத்திரம்- இலக்கினம்-திதி-ஓரை-யோகம்-கரணம்-பொருத்தம் ஆகிய இவை

களையெல்லாந்திருத்தமாக விவாகச்சக்கர முதலியதோடுஞ் சோதித்து, தாங்கள் கற்றுணர்ந்த தருமசாத்திரத் திறங்களெல்லாங்காட்டி, தகுதியான பலங்களுட்டி, ஒரு முகூர்த்தநாள் வைத்தார்கள். அந்தக் கலியாண நாள்வரைக்கும் பந்தர் முதலியன பல அலங்காரங்கள் பண்ணவேண்டி யிருந்ததால், விராடராஜனனவன் பாண்டவர்களையும் அவர்களுக்கு வேண்டியவர்களையும் உபலாவியத்திற் கனுப்பிவைத்து, அவ்விடத்திற் சௌக்கியமா யிருக்கும்படி செய்து சகல சாமக்கிரியைகளும் உடையாதி உசிதங்களுங் கொடுத்து, ஒரு நாளைப்போல் பலநாளுஞ் சலிப்பில்லாமல் விசாரணைசெய்து வந்தான். இவ்வாறு பாண்டவர்களுக்கு உபலாவியத்தி லாகவேண்டுங் காரியங்களில் தடையற நிறைவேற்றிவரும் விராடராஜன் தனது நகரவலங்காரஞ் செய்யும்படியாய்ப் பேரி முழக்கிவைத்து கருங்கடற் கலையுடுத்த காசினியை யாளுங் காவலர்க்கெல்லாங் கலியாண ஓலையும் தூதும் ஒருமிக்க விடுத்து, விராடபுர முழுவதும் விநோதமான பவளக்கால் நாட்டி, தவளவிட்டம் பூட்டி, மரகத ஓலைகள் நீட்டி, வச்சிரப்பதுமை மாட்டி, மாணிக்க மலர் மாலை தூக்கி, முத்துக்கொத்து வடங்கள் வீக்கி, ஆணிப்பொன் ரேகை யமைத்து, அற்புதக் காட்சிகள் சமைத்து, தொங்களி வட்டஞ் சுவரொரு வட்டங்களிருத்தி தூங்காவிளக்கு, தோரண விளக்குகள் பொருத்தி, வாழை, கமுகு, மாங்கனி, பலாக்கினி, தாழை, இளநீர், சரக்கொன்றை, ஈந்து, பாளை, கரும்பு, கூந்தற்பனை, பற்பலமலர், இரசிதக் குண்டுகள், ஜாலர்கள், சடைமாலைகள், தமனியப் படங்கள், நீலக் கண்ணுடிகள், நிலைக்குங் கண்ணுடிகள், முத்தினத்தூண்கள், ரத்தினப் பூண்கள், வேதக்கை மான்கள், விநோத ஆண்கள் வாரணக் குதிரைகள், வஸ்திரசித்திரங்கள், தோரணநிறைகள், ஜோடித்த வரைகள், மேல் விதரணங்கள், விதவிதக்கொடிகள், பலவிதக் குடைகள், பைம்பொன் மேடைகள், வேதிகைச் சாலைகள், மென்மலர்ச் சோலைகள், கும்பக்குடங்கள், குடமாடங்கள், விம்பவேடங்கள், வெயில் மணிச்சிகரங்கள் எண்டிசையண்டருங் கொண்டாடச் சமைத்து, சாந்து சந்தனத்தினுல் தரையெலா மெழுகி, முத்துச் சுன்னத்தால் மொக்கெலாமிட்டு, கலியாண மண்டபக் கலசந்திருத்தி, மணவறை நிறைய மாலை பொருத்தி, மதுகர நிறைந்த பூமாலை - மகிழ்ச்சி சிறந்த பொன்மாலை - வாடாப்பவள மலர்மாலை - தேடாப் படிகத் திரண் மாலை - ஆணிமுத்து மாலை - இரத்தினமாலை - அரிமரகதப் பசுமாலை - அரவின் மாணிக்க மாலை - வச்சிரமாலை - பசுச்சிலைமாலை முதலிய மாலைகளை யெல்லாம் புகழ்கொண்ட பூவுலகோர் கண்டு கொண்டாடும்படி சோடிப்பித்தான். இப்பால் கலியாண வாசலில் சால்-கரகம்-முளைப்பாலிகை-தழல் வளர்க்கு மேடை-குடவிளக்கு-அரசாணிக்கால்-மாவிலை -தருப்பை- அறுகு-மஞ்சள் - குங்குமம்-சந்தனம் - தாம்பூலம்-வாழைப்பழம்-தேங்காய் - புஷ்பம்-வெல்லம்-அக்ஷதை-சாம்பிராணி-கூடம்-சமித்து-நெய்-பால்- தயிர் - நவதானியம்-பொரி இவை முதலிய யாவு மமைத்து, நாளைய உதயத்தில் பத்து நாழிகைக்கு

முகூர்த்தமென்று பாண்டவர்களுக்குத் தெரிவித்து, தன்னுடு முத லிய பன்னாட்டுக்கும் பறைசாற்றுவித்தான்.

### அபிமன்னன் உபலாவியத்திலிருந்து விராடபுரத்திற்கு மணக்கோலமாய்ப் போதல்

இச் சங்கதியைக் கேட்ட மாத்திரத்தில் தருமராஜன் முதலியோர் பந்துவர்க்கத்துடன் ஜெயமென்றெழுந்து சிந்தை மகிழ்ந்து, சிவா லயம் விஷ்ணுவாலயங்களுக்குச் சிறந்த பூஜைகள் செய்வித்து திங் கள் மரபில் தோன்றிய தங்கள் சிறுவனைத் திருமணக் கோலமாகக் கொண்டுபோக வேண்டுமென்று தமக்குள் நினைத்து, பொங்குந் தடத் துப் புனித நன்னீரைத் தங்கக்குடத்தில் தாமெடுத்துவந்து, சங்கையில் லாத சாஸ்திரம் பாராட்டி, ஓங்கிய புதல்வனையுவந்து, நீராட்டி வெண் துகிலால் நீர்துவட்டி, சிங்காதனத்தி லேற்றி சிகைசீவி வகிர்ந்து, சில பணி புனைந்து, தேவமல ரணிந்து, திரிபுண்டரந்தீட்டி, திலகமுங் காட்டி, குண்டல மாட்டி, பச்சைக்கல் முருகிட்டு, முத்தார முதலிய பத்தாரங்களோடு வித்தாரப்பதக்கங்களுந் திருத்தி, திருமுடிபொருத்தி தங்கக் கச்சந்தரித்து, பாஜிபந்து, தோளணி, நாககங்கணம் கடககங் கணம், கணையாழி இவைகளைப் பூட்டி, அரைப்பட்டிகை அரை ஞாண் வீரகண்டை முதலியவைகளும் வீக்கி, திவ்ய வேஷ்டிகளால் அலங்கரித்தார்கள். அப்பால் உயரமுஞ் சுற்றும் உன்னதமாகி ஏழுறுப் பும் பூமியில்படிந்து, கிம்புரிப்பூண் கொம்புகளுக்கிட்டு முகபடாமதனை மொய்ம்புறச் செறிந்து கவுட்குழி கன்ன மகரிகை பொறித்து கும்பக் கலசம்-கொடியுட னமைத்து வெண்கவரி செங்கவரி தூக்கி ஒன்பது வகை இரத்தின வவுதா வமைத்த அரசக் களிருகிய பட்டத்துயானை மேல் அபிமன்னனை ஏற்றி அந்தணர்க்கும் ஆதுலர்க்கும் தானம் கொடுத்து, முத்துக் குச்சுடன் பவளமமைந்த சந்திரவட்டக் குடை கவிக்க, வெள்ளைக் கொடிகள் பிடிக்க, ஆலவட்டம் சுருட்டி பீலிக் குஞ்சம் பவளச்சவளம் விருது-டால்-கருடடால்-அருகு ஒருகு மயிற் பீலி-வெண்சாமரம்-மேற்கட்டி தோரணம் முதலியன நெருங்க இளம் பாண்டவ ரைவரும் பஞ்சவர்ணக் குதிரை ஏறிப் பக்கத்திற் பிறங்க, மத்தகஜத்திலமர்ந்த மற்றப்பிள்ளைகள் சுற்றுநடக்க, பல்லக்கிலேறிய பார்த்திபர் முடுக்க, மல்லர்கள் சிலம்புவரிசை முன்கொடுக்க, மாதவர் வேதியர் வாணர்க ளடுக்க, கீத நாதக் கிளரொலி தொடுக்க, நரகஜ பேரி நடனமுன்னடிக்க, துரகஜ துந்துமி சுரஜதியடுக்க, ஐந்து கருவி யும் முந்தி முன்னேங்க, பந்திபந்தியாய்ப் பந்துஜனந் தேங்க, மத்தள தாளமேள முழங்க, வித்தக சங்கதங்கள் கழங்க, நாட்டிய மாதர்கள் நடிக்க, நற்கீத மாதர்கள் படிக்க, கட்டியக்காரர் மன்னர்களைச் சுட் டிக்காட்டிக் கொண்டாட, பட்டுவான்கள் வேந்தர்களின் பிரதாப விருதுகளை விண்டாட, குலமுறை வந்திப்போர் தலைமுறையடுக்க, நல முறைப் புகழ்வோர் நற்சீர் தொடுக்க, இந்திர வாத்தியந் தும்தும்தும் மென, இணையில் நாற்சேனை திம்திம்திம் மென நந்தகோபாலருந் தந்தவண்ணனும், கொந்தலர் கூந்தலார் வந்தவர் பலருந் தேரின்

பேரிலும் வண்டிகள் பேரிலுஞ் சென்றார்கள். திரௌபதாதேவி சுபத்திராதேவி அஷ்டலக்ஷ்மிகள் ஆயமாதர்கள் ஆகிய யாவரும் நவரத்தினங்களிழை லமைத்த சித்திரப் பல்லக்கேறிச் செல்ல ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியுங் கூடச் சென்றனர்.

இப்படியாக இவர்கள் வரவும், ஆரியர்களுஞ் சீரியர்களும் பூமாரி பொன்மாரி மணிமாரி நவதானியமாரி இவைகளை அக்ஷதையுடன் வாரிச் சொரிந்து வாழ்த்தினார்கள். மங்கிலியப்பெண்கள் மகிழ்ந்து மஞ்சள், குங்குமம், தாம்பூலம், தேங்காய், வாழைக்கனி, மாங்கனி, தேங்கனி இவைகளை வருவார் போவாராகிய மங்கையரை பூசித்து விசுவாசித்துக் கொடுத்துப் போற்றினார்கள். தண்ணீர், வெந்நீர், தகிநீர் இவைகளை உண்ணீருண்ணீரென்று உபசரித்து வழியிளைப்பு மாற்றினார்கள். இவ்வாறாகிய எக்களிப்புடன் விவாகமுரசங்களும் தியாகமுரசங்களும் முழங்கின. தோரண மாடங்களிலும் வாரண கூடங்களிலும் பூரண கலசங்கள் நிறுத்தினர். பவளப்பட்டையும் முத்துப்பட்டையும்பத்திப்பத்தியாய் அடித்திராநின்ற சுவர்களுந் திண்ணைகளுந் தெருவாசல்களும் பன்னீர் தெளித்துக் கோலமிட்டுத் தீபமேற்றி வைத்து முத்தாலாத்தி பவளாலாத்தி நீராலாத்தி எடுத்துக் கண்ணெச்சில் கழித்து மங்களம் லாலி சுபசோபனப்பாடல் வாழிப்பாடல் இவைகளைப்படித்து கையைச் சுழற்றி மடக்கிக் கன்னத்தில் நெட்டையொடித்தனர். இப்பேர்ப்பட்ட கணவன் நமக்கிசையாமல் போனானே என்று கன்னியர் கலங்கிக் கவலைகொண்டு துடித்தனர். கட்டிளமாதர் காதல்கொண்டு நடந்தனர். இவ்வாறாகப் பலவிதச் சிங்கார வலங்காரங்களையுடையவிராடபுர வீதியிற் பவனிவருகின்ற பரந்தாமன் மருமகனானவன், ஆடவரும் மகளிரும் ஆனந்தங் கொண்டுபணிந்து புகழும்படியாய் வீதிகளெல்லாம் கடந்து விவாகமண்டபத்தின் முன்முகப்பிற்கு வந்தான். இவ்வண்ணந் திருமணக்கோலங் கொண்டுவந்த அபிமன்னனுக்குச் செவ்வண்ணமேனித் திர்ஷ்டத்துய்மனுந் திருமாலும் பெருமன்னர் குழுவுங் கைகொடுத்தனர். மனமகன் மேகம்விட்டிழியு மின்னொளிபோற் பட்டத்துயானை விட்டிழிந்து, அந்தணர், அருந்தவர், பாவலர் பூவலர் கோவலர் முதலிய எவரையும் பணிந்து, குருசுவாமியார் பெண் கொடுக்கவரு மாமியார் இவரிருவரையும் போற்றி, அவர்களன்புற வளித்த அருண்மொழியும் பெற்று, சம்பிரமமாகச் சதிர்சாலையிலிருந்தான். உம்பர்கொண்டாட உயர்பொன்னளித்து, ஓங்கிய தருமதானம் புரிந்து, உற்றார், பெற்றார், கற்றார், பரிந்து உடனிருந்து விருந்து அருந்தச் செறிந்து வருந்தி உபசாரவரிசை யளித்துவரும் வண்மையைக் கண்டு மகிழ்வுற்றான். முகூர்த்த சமயமென்று சொல்லித் தௌமியர் முதலிய முனிசுவரர்கள் அபிமன்னனை அழைத்தார்கள்.

### திருக்கலியாணச் சிறப்பு

உடனே கலியாணப் பிள்ளையானவன் இராஜ வைபவத்துடன் கைலாகுக் கொடுக்குங் காரியஸ்தர் பக்கத்தில் நெருங்க, மணப்பந்தலில் வந்தான். அப்போதங்கிருந்த வேதவேதிய ரியாவரு மெழுந்து

வேதநான்கு மொழிந்து, மன்மதனுந் தலைசாய்க்கும் வடிவமைந்த மால்மருகனை அறுகாற்பீடத்திலேற்றி, மந்திராக்ஷதையுடன் வாழ்த்தினர். மான்போலும்விழிபடைத்த உத்தரகுமாரத்தியைத்தேன்போலுஞ் சொல்லமைந்த சேடியர் ரதிதேவியைப்போற் சிங்காரித்துச் சகலவித மேள சம்பிரமங்களோடுங் கூட்டிவந்து நாயகனுக்கு வலப்பாகம் வைத்து, திரையால் மறைத்து, நலங்கு முதலிய சடங்குகள் புரிந்தனர். பின்பு வானமாதர் வாழ்த்தொலிசெய்ய, அந்தணர் வேதமந்திரமோத, சந்திரகுலத் திந்திரர்சேர, சுந்தரக்கனல் ஜோதியாய் வளர, நந்தகுலாதிபர் வந்தனைசொல்ல, கந்தனைக் கணேசனைக் கமலனைப்பூசித்து, இந்திராதியரை யேத்தி வணங்கி மாசுதீர்ப்போனல் மறைவிதி முடித்து, பிரமசாரி விரதங் களைந்து ஸ்நானஞ் செய்வித்து வைதிகச் சடங்கு மார்க்கங்காட்டி, கங்கணங் கட்டி, காலாழி மாட்டி, கரத்திலுரத்த கதிர் வாள் அளித்து, கருணையாளர்க்குக் கனகமேற்கொடுத்து, மேற்பட்டுடையை விரித்து மேன்மூடி, விதிமுறைசெவியில் இதம்படவுரைத்து தேங்காய், வாழைப்பழம், குங்குமம், புஷ்பம், அக்ஷதை, மஞ்சள், தாம்பூலம், கண்ணாடி, சந்தனம், திருமங்கில்யம் இவைகளையெல்லாம் பொற்றும்பாளத்திலிட்டு, நற்றவர் முதலிய கற்றவர் பலரும் உற்றார் பெற்றார் உறவினரெவரும் இருகரத்தாலும் பரிசித்து இஷ்டதெய்வப் பிரார்த்தனையுடன் வாழ்த்தவும், தாய்தந்தையிருவருந் தத்தம் பண்ணவும் மாப்பிள்ளை குருவைத் தந்தையை வாழ்த்தவும், செந்தீயில் நெய்யைச் சிதருமற் கொட்டவும், திரைச் சீலையைத் தாழ்த்திச் சற்றே பிடிக்கவும், ஜனசமூகங்கள் ஜெயஜெயவென்னவும், பொன்னுலகத்தினோர் பொன்மாரி பொழியவும், மண்ணுலகத்தினோர் மலர்மாரி சொரியவும், பங்கஜமுகமாதர் வாழ்த்தவும், அங்குஜவயமள்ளர் போற்றவும் எங்கணும்பருணிதர்க ளேத்தவும். திங்களும் பகலுமருளூற்றவும், நரகஜ துந்துமி யொலிக்கவும், சுரஜதிதாளங் கலிக்கவும், சங்குமுழக்கந் தழைக்கவும், திங்கட்குலத்தார் செழிக்கவும், தம்பர்வீணை யிசைக்கவும், சல்லதியாதிக ளசைக்கவும், புல்லாங்குழலிசை பிடிக்கவும், புகழ் யாழ்வகை மிகமுடுக்கவும் மற்றக் கருவிகளெல்லா மிரையவும், தாரை-பூரி-வீரி-சின்னம்-தடாபம்பை - காளம் - முரசம்-முழவம் இவைகளெல்லாம் கோஷிக்கவும், மறைவாணர் கலைவாணர் முதலியோர் கூடிச் சோமசூரியாக்கினி சாக்ஷியாகத் தாழ்ச்சியில்லாக் காக்ஷியுடன் கலியாணம் கண்டருளினார்கள்.

இப்பாற் பெண்ணும் பிள்ளையும் வலமிடமாக மாறியிருந்து ஓமவிதி நடாத்தி, அக்கினியிற் பொறியிரைத்துப் பூரணாகுதி கொடுத்து, பிரதக்ஷணம் வந்து பணிந்து, மாலைமாற்றி மறைவாணரைப் போற்றி, மாமுனிவரை யேத்தி, மங்களாசனங் கொண்டு, சுண்டுவிரல் மாட்டி. நின்று நிறைகுடம், வெண்சாமரம், கண்ணாடி, யானைக்குடாரி, மணிமுரசு, விளக்கு, விருதுக்கொடி, இணைக்கயல் என்னும் அஷ்டமங்களங்களும் கண்டு, அம்மிமிதித்து, அருந்ததியைத் தரிசித்துப் பூசித்து, அரசாணிக்காலையும் நைவேத்தியத்துடன் தொழுது, மற்றப் பேர்களை

யும் பணிந்து, திருவணிய மாத ரெடுத்துவரா நின்ற திருவிளக்குத் துணையுடன் சிற்றறைக்குட் போந்தனர்.

இவ்வாறு ராஜவிவாகச் சடங்கின்வண்ணம் யாவு முடித்து மறுநாள் பஞ்சநீர் வசந்தமாடி, மஹோற்சவங் கொண்டாடினார்கள். குந்திதேவியின் மைந்தராகிய பாண்டவர்கட்கும் மற்ற வேந்தர்கட்கும் பிராம்மண ஸ்திரீகள் ராஜஸ்திரீகள் முதலிய யாவருக்குஞ் சம்பந்தத் தட்டுடன் மரியாதைத் தாம்பூலமும் வைத்து, எம் மன்னருங் கண்டு சந்தோஷப்படும்படியாய்ச் சகல காரியங்களுஞ் சம்பிரமமாய் நடத்தினர்.

## ஸ்திரீதனச் சிறப்பு

கேட்டீரோ ஜனமேஜய மகாராஜனே! இப்பால் விராடராஜனுனவன் தன் குமாரத்திக்கு ஸ்திரீதனங்கொடுக்க யத்தனித்து நவரத்தின கசிதபணிகள், முகபடாம், வீரதண்டை, அவுதா இவைகளுடன் சேர்ந்த யானைகள், துராமுதலிய முத்துக்குச்சுகள், கழுத்துக்குப்பிகள், துமிச்சிப்பிள்ளைகள், பாதசரவண்டயங்கள், பின்கவரி, முன்கவரி, கல்லணை இவைகளுடன் கூடிய குதிரைகள், பொன், வெள்ளி, பட்டு இவை முதலியவற்ருலாகிய பெரிய ரதங்கள், கால்பலங்கள், தாதிகள், சேடிகள், தோழிகள், நல்ல ஆளடிமைகள், பால்பொழியும் பசுக்கள், மேலுயர்ந்தவீடுகள், வளப்பமுள்ள மாடுகள், இளப்பில்லாக்காடுகள், ஜோதிப் பிரகாசம்பெற்ற ஆபரணத் தினுசுகள், பலவித வஸ்திரப் பட்டுகள், தேவேந்தர் நாட்டிலும் பூவேந்தர் நாட்டிலும் அகப்படாத அருமையான வஸ்துக்கள், சித்திரப்பஞ்சணைகள், சித்திரப்பொம்மைகள், விசித்திரப் பஞ்சணைகள், பெட்டி பேழைகள், தங்கக்கட்டிகள், பஞ்சலோகப் பாத்திரங்கள், அவள் படித்த சாஸ்திரங்கள் முதலிய யாவும் பற்பல வாத்தியங்களுடன் கொடுத்தான். அதைக்கண்ட ராஜராஜர்களெல்லாருஞ் சிரக்கம்பஞ் செய்தார்கள். இஃதன்றியும் இந்தக் கலியாணத்துக்கு வந்த காசாம்பூவண்ணன் முதலாகிய காவலர்களுக்கும், குந்திதேவியின் புத்திரர்களான பாண்டவர்களுக்கும், விராடபுரத்திலுற்ற சகலருக்கும், வேறுவேருய் அவரவர்களின் ஆசாபூசாவிதி குலமுறைக்கடுத்தபடி விருந்துபோசனமும், வெகுமதிகளும், சந்தன தாம்பூலங்களும் தாழ்ச்சியில்லாமற் கொடுத்து மரியாதை செய்து பூசித்தான்; மிகவன்போடு நேசித்தான்; வெகுநயமாக விசுவாசித்தான். இப்பால் விராடராஜனுனவன் க்ஷத்திரிய விதிப்பிரகாரம் ஐந்துநாளும் ஓமம்செய்து, கங்கணவர்ச்சிதமுங் காட்டி, மங்கள ஸ்நானமும் ஆட்டி, நல்ல சுபமுகூர்த்தத்திற் கூட்டி, கர்ப்பாதானமுஞ் செய்தான். பின்பு நற்பயன்சேர்ந்த நலம்போற் செறிந்த விற்பன விவேகிகளாகிய பெண்ணும் பிள்ளையுஞ் சொற்பழுதுருமல், அற்பமேனும் ஒருவரைவிட் டொருவர் பிரியாமல், கற்பனை அலங்காரம் போல் கலந்து வாழ்வுற்ருர்கள்.

இக்கலியாணத்தில் மந்திராலோபங் கிரியாலோப மில்லாமல் வளர்த்திய ஓமாக்கினியாகத்தால் முப்பத்து முக்கோடி தேவர்கள்

அஷ்டவசுக்கள், திக்குப்பாலர்கள், துவாதசாதித்தர்கள் முதலாகிய தேவர் யாவருந் திருப்தியடைந்து களித்தார்கள். பூசித்தன்புடனளித்த பெரும்பொருட்குவையால் வேதவேதிய சாதியர் யாவரும் வெகு வாய்க் களித்தார்கள். கனிந்து நற்கவி சொல்லுங் கவிவாணர்க ளெல்லோரும் கனகக்கொடையாற் கலிநீங்கிக் களித்தார்கள்.

காசினிக்குரிய காவல்வேந்தர்கள் கலியாணச் சம்பிரமங் கண்டு களித்தார்கள். பூமியிலுள்ள தேவர்களெல்லோரும் போசன சௌக்கி யத்தாற் புகழந்து களித்தார்கள். தரித்திரர் யாசகர் முதலிய சகலருந் தனத்தாற் கனத்துக் களித்தார்கள். ஸ்ரீ கிருஷ்ணதேவராகியஎன்னுண் டவனும் பாண்டவர் முதலிய மற்றியாவரும் உத்தரகுமாரத்தியின் சற் குணத்தாற் களித்தார்கள். வரைபகவெறிந்த வள்ளிமணாளனையொத்த அபிமன்னன் உத்தரையுடன் சுகமாக வாழ்ந்திருந்தான். மற்ற அரசர் கள் யாவரும் இஷ்டப்படி யிருந்து செலவு பெற்றுக்கொண்டு தங்கள் தங்கள் பட்டினம் போய்ச் சேர்ந்தார்கள். பிள்ளையும் பெண்ணும் பாண்டவர்களும் திரௌபதாதேவியும் சுபத்திரையும் இன்னுமுள்ள ஆண்பாலார் பெண்பாலார் யாவரும் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியோடு உப லாவியஞ் சேர்ந்து வீற்றிருந்தார்கள்.

பாண்டவர் வெளிப்படும் சருக்கத்தோடு
விராடபர்வம் முற்றிற்று.

———




திருமகள் அச்சகம், சென்னை-79: 1988

## எங்களிடம் கிடைக்கக்கூடிய

# இதிகாச புராணங்கள்

---

ஸ்ரீ மகா பாரதம் வசன காவியம்; 4-வால்யூம்; 18-பர்வங்கள்; ஆப்டோன் படங்களுடன் உயர்ந்த கிளேஸ் காகிதம், காலிகோ கட்டடம்

ஸ்ரீமத் கம்பராமாயணம் வசன காவியம்; பெரிய எழுத்து அநேக ஆப்டோன் படங்களுடன் 2-வால்யூம், காலிகோ கட்டடம்

ஸ்ரீ ராமர் அஸ்வமேதயாகம்; பெரிய எழுத்து, அநேக படங்களுடன்

ஆதிபர்வம் வசன காவியம்; பெரிய எழுத்து, அநேக படங்களுடன்

ஸ்ரீ மகா பக்த விஜயம்; பெரிய எழுத்து படங்களுடன் முதல் பாகம் (6 தாசர்கள் சரித்திரங்கள்)

ஷை இரண்டாம் பாகம் (1[illegible]-தாசர்கள் சரித்திரங்கள்)

ஷை மூன்று, நான்கு, ஐந்து, ஆறு பாகங்களடங்கியது (65-தாசர்கள் சரித்திரங்கள்)

பெரிய புராணம் வசனம்; பெரிய எழுத்து 64-படங்களுடன்

திருவிளையாடற் புராணம் வசனம்; பெரிய எழுத்து 64-படங்களுடன்

வில்லிபாரதம் வசனம் அல்லது மகாபாரத சங்கிரகம் அநேக ஆப்டோன் படங்களுடன்

விராடபர்வம் வசனம்; பெரிய எழுத்து படங்களுடன்

---

விபரங்களுக்கு எழுதவும்:—

B. இரத்தின நாயகர் அண்ட் சன்ஸ்

[illegible], வெங்கட்[illegible]ய்யர் தெரு, கொண்டித்தோப்பு

[illegible] போஸ்ட் சென்னை-79.